கலைஞரின்

# தென்பாண்டிச் சிங்கம்

கலைஞர் மு. கருணாநிதி



**திருமகள் நிலையம்**

55, வெங்கட் நாராயணா சாலை,
தி.நகர், சென்னை - 17.
தொலைபேசி : 434 28 99 / 434 15 59
தொலைநகல் : 434 15 59

உரிமை : தமிழ்க் கனிப் பதிப்பகம்
சென்னை.

முதற் பதிப்பு : ஏப்ரல், 1983.
இரண்டாம் பதிப்பு : ஏப்ரல், 1985.
மூன்றாம் பதிப்பு : மே, 1990
நான்காம் பதிப்பு : ஜூலை, 1996
(திருமகள் நிலையம்)
ஐந்தாம் பதிப்பு : மே, 1998
ஆறாம் பதிப்பு : மார்ச் 2000

விலை ரூ. 105.00



முகப்பு ஓவியம் : ஜெயராஜ்

ஒளி
அச்சுக்கோர்வை : ஏகம் கம்ப்யூட்டர்ஸ்,
78, எல்லீஸ் ரோடு,
சென்னை-2.
தொலைபேசி : 854 85 99

அச்சிட்டோர் : சென்னை மைக்ரோ பிரிண்ட் (பி) லிட்.
34, நெல்சன் மாணிக்கம் ரோடு,
அமைந்தகரை, சென்னை - 600 034.
தொலைபேசி எண் : 3741188, 3741199

# கதை பிறந்த கதை!

சொல்லுக்குச் சுவை கூட்டிக் கதைக் கருவூலங்களைப் படைக்கும் எனது இளவல் தென்னரசு, கடந்த காலத்து உண்மை நிகழச்சிகளுக்கும் நிகழ்காலத்து உண்மை நிகழ்ச்சிகளுக்கும் சிறுகதை அல்லது பெருங்கதை வடிவம் தருவதில் ஆற்றல் மிக்கவர். அவர் எழுதிய "செம்மாதுளை" எனும் நூல் மொண்ணூறு பக்கங்களே கொண்ட ஒரு உணர்ச்சித் தொகுப்பு. "நாட்டாரய்யா" என்று தமிழ் கூறும் நல்லுலகத்தினரால் அழைக்கப்பட்ட ந. மு. வேங்கடசாமி நாட்டார் அவர்கள் எழுதிய கள்ளர் சரித்திரத்தில் காணப்பட்ட சில குறிப்புகளின் துணையோடு, காது வழி கேட்டறிந்த பழங்காலச் செய்திகளைத் தொகுத்து இராமனாதபுரம் பகுதியில் சிவகெங்கை, திருப்பத்தூர் வட்டாரத்தில் பாகனேரி நாடும் - பட்டமங்கலம் நாடும் எப்படி மோதிக் கொண்டு பகை பாராட்டி இரத்தம் சிந்தின என்பதைச் சித்திரிக்கும் அந்தச் சிறுகதையைத் தமிழக விடுதலைப் போராட்ட வீரர்களின் வரலாற்றுப் பின்னணியோடு, வீரமும், காதலும், பாசமும் பெருக் கெடுக்கும் கற்பனைப் பெட்டகமாக உருவாக்க விரும்பினேன். அந்த விருப்பத்தின் விளைவு; குங்குமத்தில் தொடர்கதையாகத் "தென்பாண்டிச்சிங்கம்" வெளிவந்து, பல்லோரின் பாராட்டைப் பெற்றது. விரிவான நூல் வடிவாக வெளியிட "அபிராமி பப்ளிகேஷன்சார்" விழைந்தனர். இந்நூலின் உரிமை பெற்ற "தமிழ்க்கனி"ப் பதிப்பகத் தாரிடம் நான்காம் பதிப்பு வெளியீட்டு உரிமை பெற்று உங்கள் கரங்களில் வழங்கியுள்ள நண்பர் திருமகள் நிலையம் இராமநாதன் அவர்கட்கு நன்றி! இதோ, இப்போது நீங்கள் தென்பாண்டிச் சிங்கத்தைச் சந்திக்கப் போகிறீர்கள்.

அன்புள்ள

15-5-90 மு. கருணாநிதி

சென்னை.

# பதிப்புரை

தமிழுக்குக் கிடைத்திருக்கும் வரலாற்றுப் புதினங்களில் தனிப் பெருமைக்கு, உரியது இந்தத் 'தென்பாண்டிச் சிங்கம்.'

தமிழன வரலாற்றில் ஒரு தனி அத்தியாயத்துக்குரிய தலைவனாலேயே படைக்கப்படும் பேறு இப்புதினத்துக்குக் கிடைத்த நல் வாய்ப்பு.

தமிழகத்தின் வருங்கால வரலாறுதான் கலைஞரால் எழுதப்படக் காத்து நிற்கிறது என்றால், முன்னே சென்றிட்ட பழம் வரலாறும் இவரால் உயிரூட்டப் பெற்று நம்முன்னே ஒளிவீசும் அற்புதத்தை இங்கே காண்கின்றோம்.

வரலாற்றுப் புதினம் என்பது ஒரு இனத்தினுடைய, ஒரு காலகட்டத்தில் நிகழ்ந்த சம்பவங்களைச் சான்றுகளு டனும், கால, புள்ளி விவரங்களுடனும் கூறுவது மட்டு மாகாது. சரித்திர ஆராய்ச்சியாளர்கள் தருகிற புள்ளி விவரங்கட்குப் பின்னே ஒளிந்திருக்கிற அந்த இனத்தின் வீழ்ச்சிக்கான தன்மைகளையும், சூழ்நிலைகளையும், எப்படித் தாழ்வுற்றார்கள், எங்ஙனம் உறங்க வைக்கப்பட்டார்கள் என்பதனையும் நிகழ்கால சமூகத்திற்கு எடுத்துக்காட்டி விழிப்படைய வைப்பதே ஒரு நல்ல வரலாற்றுப் புதினம் - அத்தகைய புதினங்களைப் படைப்பது எப்படி என்பதற்குக் கலைஞரவர்கள் இந்நாவலின் மூலம் இலக்கணம் வகுத்துத் தந்திருக்கிறார்கள்.

இத்தகு நாவலைத் தமிழன்னைக்கு அணிவிக்கும் வாய்ப்புத் தந்த கலைஞரவர்களுக்கு எங்களது நன்றியை உரித்தாக்குகிறோம்.

சென்னை -

## பெரும்புலவர்
## வ.சுப. மாணிக்கம் பாராட்டு!

இந்த நூலைப் படிக்க ஆரம்பித்த எனக்கு 10-வது பக்கத்திலேயே மெய் சிலிர்த்தது (சிலரது நூலில் அட்டையைப் பார்த்தால் தான் மெய் சிலிர்க்கும்). கலைஞர் எழுதும்போது 'இது நாட்டார் அய்யா எழுதிய கள்ளர் சரித்திரத்தை அடிப்படையாக வைத்து எழுதியது' என்று குறிப்பிட்டதைப் பார்க்கும்போது, என் ஆசிரியரின் நூலை வைத்து எழுதியிருக்கிறார் என அறிந்துதான் மெய்சிலிர்த்தது. எல்லோரும் மேல்நாட்டார் எழுதியதை அடிப்படையாக வைத்து எழுதியதாகத்தான் குறிப்பிடுவார்கள்.

எவ்வளவு இனப்பிரிவுகள் இருந்தாலும், வகுப்புப் பிரிவாக இருந்தாலும், தமிழினம் ஒற்றுமையாக வாழ வேண்டும்; பிரிவுகள் நம்மை வேற்றுமைப் படுத்தக்கூடாதென்ற பின்னணியிலே கலைஞர் எழுதியிருக்கிறார்.

தென்பாண்டிச் சிங்கம் எனும் இந்த நூல்- இந்தியாவிலும், தமிழகத்திலும் பெரும்புகழ் வாய்ந்து, இன்னும் பல புகழை அடையவிருக்கிற கலைஞர் அவர்கள் தன் அரசியல் அனுபவம் முழுவதையும் கொட்டி எழுதிய நூல்.

தமிழகத்தின் எதிர்காலம் இருளாகப் போய்விடக் கூடாது என்று எண்ணி இத்தகையதொரு நூலைத் தமிழகத்திற்கு ஒருபெரும் சொத்தாக எழுதி வைத்திருக்கிறார். இந்தக் குறிக்கோளை அவருடைய காலத்திலேயே பார்க்கும் படியான ஒரு வாய்ப்பு இந்தத் தமிழகத்திற்கு வரும் என்று நான் கருதுகிறேன். நாட்டார் அய்யாவின் குறிக்கோள் கலைஞரான, நம்மவரால் நிறைவேறுகிறது.

## டாக்டர் பாலசுப்பிரமணியம் புகழாரம்

இந்தப் புதினத்தின் தொடக்கம் கத்தப்பட்டுக் கிராமத்தில் இன்றும் காணக்கூடிய வாளுக்குவேலியின் வர்ணனையாக இருக்கிறது. இதன் முடிவு அவன் சாவில் கூடத் தான் பெரிதும் நேசித்த தன் தங்கையின் வாழ்வை மீண்டும் தருகிற வகையில் தாலியைக் கையில் தாங்கியிருக்கிற நிலையில் கதை முடிகிறது. இது ஒரு பெரும் சிறப்பு.

மற்றொரு சிறப்பு: மூன்று சொற்களால் இந்தப் புதினத்தை நான் பாராட்டுவேன். ஒன்று உழைப்பு; இரண்டாவது உணர்வு; மூன்றாவது உயர்வு.

இந்த புதினத்தில் உழைப்பு என்பதை எடுத்துக் கொண்டால் டாக்டர் பட்டத்திற்கு எங்களுடைய பல்கலைக் கழக மாணவன் எந்த அளவிற்குக் குறிப்புகளைத் திரட்டுவானோ, அதற்குச் சற்றும் குறைவில்லாமல் உழைப்புப் பயன்படுத்தப்பட்டிருக்கிறது என்பதை ஒரு ஆராய்ச்சியாளனை மதிப்பிடுகிறவன் என்ற முறையில் காணமுடிகிறது.

உணர்வு என்கிறபோது இந்தநூல் முழுவதிலும் தமிழ் உணர்வு, தமிழ் இன உணர்வு, தமிழ் நாட்டுணர்வு ஆகியவைகளை நாம் காணமுடிகிறது.

மூன்றாவது உயர்வு; இதனைப் படிக்கின்ற காரணத்தால் இந்த இனம் எப்படி உயர முடியும் என்பதற்கு, பக்குவமாக கலைஞர் அவர்கள் இனத்தின் உயர்வைக் காட்டியிருக்கிறார். எதிர்காலத் தமிழகம் எப்படி அமைய வேண்டும் என்ற அவர்களின் கனவை இதில் குறிப்பாகப் புலப் படுத்தியிருக்கிறார்.

## திருக்குறள்மணி திருநாவுக்கரசு பாராட்டு!

தமிழர்களின் உயிர் மூச்சாக இருந்து வருகிற தன்மானத்தைப் போற்றுகின்ற வகையில்-தன்மானமிழந்த தமிழன் வாழ மாட்டான் என்பதை உணர்த்தும் வகையில்-கலைஞர் தென்பாண்டிச் சிங்கத்தைப் படைத்துத் தந்திருக்கிறார்.

இந்தக் கதையின் நாயகன் வாளுக்குவேலியைப் பற்றி வேறு ஏதாவது வரலாற்றுக் குறிப்புக்கள் இருக்கிறதா என்று நான் ஆராய்ந்தேன். தமிழ் நாட்டின் வரலாறே இன்னும் முழுமையாக எழுதப்படவில்லை. பதினான்கு ஆண்டுகளுக்கு முன்பு கலைஞர் அவர்கள் தமிழ் நாட்டின் வரலாற்றை முறையாக எழுத-ஒரு பெரிய குழுவை அமைத்து எழுத வழிகாட்டினார். அந்தப் பணி இப்போது செம்மையாக நடைபெறாத நிலையில்-பண்டைக் காலத்து வரலாறே இன்னும் எழுதப்படாத நிலையில்-அண்மைக்காலத்து வரலாறுகள் நமக்கு எங்கே கிடைக்கப் போகிறது?

இந்தப் புதினத்தில் வாளுக்குவேலியை ஒழிக்க எண்ணுபவன் உறங்காப்புலி. இவனைப்பற்றி ஒய்புலி தேவான் என்று ஆங்கிலக் குறிப்பு ஒன்று காணப்படுகிறது. அவன் ஒரு கோழை.

கலைஞர் படைத்திருக்கும் பாத்திரங்கள் நம்முடனே வாழ்கிற பாத்திரங்களைப் போல அமைந்திருப்பது படைப்பாளியின் தனிப்பெரும் சிறப்பு. கதைகளின் நிகழ்ச்சிகளையெல்லாம் ஒன்றாக இணைத்து, அதற்கொரு வடிவம் கொடுத்துக் கட்டுக்கோப்பாக அமைத்திருக்கிற முறையில் இந்தப் புதினம் எப்படி இருக்கிறதென்றால் கொட்டப்பட்ட செங்கற்களாக இல்லாமல், கட்டப்பட்ட கவர்ச்சிமிகு மாளிகையாக இருக்கிறது.

கலைஞருக்குக் கைவந்த கலை மற்றொன்று உண்டு. சொல்லாட்சியிலே, சொற்களுக்கு விளக்கம் கொடுப்பதிலே அவர் கைதேர்ந்த நிபுணர். உதாரணம்: ''தம்பி, நீ என்ன நினைத்து விட்டாய்? பட்டமங்கலம் மானம் பட்டுப் போன மங்கலம் என்று நினைத்து விட்டாயா? வீரத்திற்குப் பட்டம் வாங்கிய மங்கலம் பட்டமங்கலம்'' என்ற வார்த்தைகளாகும்.

இந்தப் புதினத்தின் உயிர் மூச்சு தமிழனின் தன்மானம்; ஒன்றுபட்ட தமிழகம் உருவாக வேண்டும் என்பதாகும். தமிழுக்கு நோபல் பரிசு கிடைக்கக்கூடிய காலம் நெருங்கிக் கொண்டிருக்கிறது.

19-5-1983 சென்னை ஏ.வி.எம். ராஜேஸ்வரி
திருமண மண்டபத்தில்,
கலைஞரின்
'தென்பாண்டிச் சிங்கம்'
நூல் வெளியீட்டு விழாவில் தமிழறிஞர்களின்

# பாராட்டு!

## பேராசிரியர் அன்பழகனார்:

இந்தக் கதையில் எத்தனை விதமான கருத்தோட்டங்கள் இடையிடையே புகுத்தப்பட்டிருக்கின்றன என்பதை எண்ணிப் பார்க்கிறபோது, இந்தக் கதையைத் தொடர்ச்சியாகப் படிக்கின்ற ஒரு ஆர்வம் ஏற்பட்டது. 'தென்பாண்டிச் சிங்கம்' மிகச் சிறந்த ஒரு புதினம் என்பதை நான் உணர்கிறேன்.

கதைகள் படிக்கிறபோது சில கதைகளில்-புதினங்களில் வருணனைகள் அதிகமாக வருகிறபோது, சில பக்கங்களை இடையிலே புரட்டித் தள்ளிவிட்டால் போதும் என்று தோன்றும்.

ஆங்கிலத்திலேயும் சில புதினங்கள் அப்படி இருக்கின்றன. அதுபோல் தமிழிலும் சில அப்படி இருக்கின்றன.

### சுவை சற்றும் குன்றா அளவறிந்த வருணனைகள்!

பக்கங்களை நிரப்புவதற்காகப் புதினங்கள் எழுதுகிற எழுத்தாளர்கள் இருக்கிறார்கள். வர்ணனைகளை ஆர்வத்தோடு சிலர் படிக்கிறார்கள் என்பதற்காக வர்ணனையையே வளர்த்துக்கொண்டு போய் காவிரிக் கரையில் ஒரு படை வருகிறது என்றால், அந்தக் கரையிலே உள்ள ஊர்களையெல்லாம் கூட-புராணங்களைப் போல - வர்ணிக்கிறவர்களும் இருக்கிறார்கள். அப்படிப்பட்ட எழுத்துக்களைப் படிக்கிறபோது ஒரு வகைச் சோர்வு தட்டும்.

கலைஞர் அவர்கள் வர்ணனையிலே வல்லவர்தான் என்று சொன்னாலும் கூட, அளவறிந்து வர்ணித்திருக்கிறார். எந்த இடத்திலும் கதையின வேகம் தட்டுப்படாமல், உணர்த்த வேண்டிய குறிப்பு மங்கிப் போகாமல்,சூழ் நிலைகள் மாறிப் போகாமல், சூழ்நிலைகளை எது வரையில் உணர்த்த வேண்டுமோ, அதுவரையிலே உணர்த்தி இந்தப் புதினத்தை உருவாக்கி இருக்கிறார்.

எனக்குத் தெரிந்த வரையில் இருநூறு ஆண்டுக் காலத்துக்கு முன்னால் இரண்டாண்டு காலக் காட்சிகளை, ''தென்பாண்டிச் சிங்கம்'' மூலமாக உருவாக்கி இருக்கிறார் என்று மட்டும் நான் உணரவில்லை.

வெள்ளைக்காரனுடைய ஆதிபத்தியம் தென்னாட்டில் வளர்ந்த கால கட்டத்தில், தமிழ் மக்களுடைய உள்ளத்திலே எல்லாம் ஏற்பட்டிருக்கக் கூடிய உணர்வுகளைப் பிரதி பலிக்கக்கூடிய ஒரு புதினமாக இது விளங்குகின்றது.

வாளுக்குவேலியைப் போல, அதற்கு முன்னாலே - கட்டபொம்மனைப்போல, அதற்கு முன்னாலேயும் தமிழ்நாட்டு மக்களிலே வீரம் உள்ளவர்கள்-படைத் தலைவர்களாக இருந்தவர்கள் - சிறு சிறு நாட்டுக்கு மன்னர்களாக இருந்தவர்கள் -எப்படிப்பட்ட உணர்வுகளைப் பெற்றிருந்தார்கள் என்ற ஒரு நூற்றாண்டுகாலத்துத் தமிழ் நாட்டு மக்களுடைய எண்ண ஓட்டத்தைச் சித்தரித்துக் காட்டுகிறது.





# 1

நிமிர்ந்த நடை-நேர்கொண்ட பார்வை- உதடுகளுக்கு மேலே உறைவிட்டெழுந்த வாள் இரண்டைப் பதித்தது போல மீசை-கம்பீரத்தைக் காட்டும் விழிகள்-அவற்றில் கருணையின் சாயலையும் அன்பின் பொழிவையும் கூடக் காண முடியும். நீண்டுயர்ந்து வளைந்த மகுடத் தலைப்பாகை-நெடிய காதுகளில் தங்க வளையங்கள்-விரிந்த மார்பகத்தில் விலை உயர்ந்த பதக்க மணிச்சரங்கள்- இரும்புத்தூண் அனைய கால்களிலும் எஃகுக் குண்டனைய புஜங்களிலும் காப்புகள்-கையிலே ஈட்டி- இத்தனைச் சிறப்புகளையும் சிலை வடிவிலே ''சுத்தப்பட்டு'' என்னும் கிராமத்தில் இன்றைக்கும் காட்சி தருகிற தென்பாண்டிச் சிங்கமாம் ''வாளுக்கு வேலி'' யிடத்தே காணலாம்.

வாளுக்கு வேலி! வீரம் துள்ளுகின்ற வார்த்தைகளால் அமைந்த பெயர்! பாகனேரி நாட்டுக்குத் தலைவன். பாகனேரி என்பது ஒரு நாடா? இப்படிக் கேட்டிடத் தோன்றும். தமிழகத்தில் சோழ நாடு, பாண்டிய நாடு, சேர நாடு போன்ற நாடுகள் உண்டு; பாகனேரி நாடு எனக் கேள்வியுற்றதில்லையே என்ற வியப்புப் பலருக்கு ஏற்படுவது இயல்பு! கல்வெட்டுகளை ஆராயும் பொழுது நாட்டின் பிரிவுகளைப் பற்றிய பல விளக்கங்கள் கிடைக்கின்றன.

பல ஊர்கள் சேர்ந்தது ஒரு நாடு எனவும், பல நாடுகள் சேர்ந்தது ஒரு கோட்டம் எனவும், பல கோட்டங்கள் சேர்ந்தது ஒரு மண்டலமெனவும், பல நாடுகள் சேர்ந்தது ஒரு வளநாடு எனவும், பல வள நாடுகள் சேர்ந்தது ஒரு மண்டலமெனவும் வழங்கப் பெற்றன.

காசா நாடு, கோனூர் நாடு, தென்மை நாடு, கன்னந்தங்குடி நாடு, உரத்த நாடு, பைங்கா நாடு, பாப்பா நாடு, அம்பு நாடு, வல்லநாடு, வாராப்பூர் நாடு, மீசெங்கிளி நாடு, மேலைத்துவாகுடி நாடு போன்ற நாடுகள் சோழ மண்ணில் விளங்கியது போலவே பாண்டி நாட்டிலும் கள்ளர் நாடுகள் பரவிக் கிடக்கும் பட்டியலை சிவகெங்கை சோம சுந்தரனாரும் கல்லல் மணிவாசகச் சரணாலய அடிகளாரும் ஆராய்ந்து வெளியிட்டுள்ளனர்.

மேல நாடு, நடுவுநாடு, சிறுகுடி நாடு, வெள்ளூர் நாடு, அஞ்சூர் நாடு, ஆனூர் நாடு, மல்லாக்கோட்டை நாடு, பட்டமங்கல நாடு, பாகனேரி நாடு, கண்டர் மாணிக்க நாடு, குன்னங்கோட்டை நாடு, தென்னிலை நாடு, இரவுசேரி நாடு, உஞ்சனை நாடு, செம்பொன்மாரி நாடு, கப்பலூர் நாடு,சிலம்பா நாடு, இரும்பா நாடு, தேர்போகி நாடு, வடபோகி நாடு, கோபால நாடு, ஆற்றங்கரை நாடு, ஏழு கோட்டை நாடு, முத்து நாடு என்ற நாடுகள் மட்டுமன்றி இன்னும் பல நாடுகள் ஆராய்ச்சியாளர்களால் குறிக்கப்படுகின்றன.

பல ஊர்கள் இணைந்து ஒரு நாடாகி அந்த நாட்டுக்கு ஒரு ஆற்றல் மிக்க தலைவன் ''அம்பலக்காரர்'' என்ற பெயரால் அழைக்கப்பட்டு அவனது ஆணைக்குக் கட்டுப்பட்டு மக்கள் வாழ்ந்திடுவர்.

அம்பலக்காரர் என்பது ஒரு வகுப்பாரைக் குறிக்கும் சொல்லாகச் சில நேரங்களில் பயன்படுத்தப்பட்டாலும் கூட, கள்ளர் நாடுகளின் தலைவர்களைத்தான் ''அம்பலக்காரர்'' எனப் பட்டம் சூட்டி அந்தந்த நாடுகளின் குடிமக்கள் போற்றி வந்தனர்.

அந்த அம்பலத்காரர்கள் குறிப்பிட்ட சில பிரச்சினைகளுக்காக ஒன்றாகக் கூடிக் கலந்துரையாடிச் சிக்கல்களைக் களைவதுண்டு! அவர்கள் ஆதிக்கத்திற்கு உட்பட்ட நாடுகளின் ஆலயங்களில் பட்டுப் பரிவட்ட மரியாதைக்குரியவர்களாக மதிக்கப்பட்டனர்.

''அட்டமா சித்தி அருளிய பட்டமங்கை'' எனத் திருவிளையாடற் புராணம் கூறுகின்ற அம்மனின் தலம் தான் பட்டமங்கலம்! அந்தப் பட்ட மங்கல அம்பலக் காரருக்கு திருக்கோட்டியூர் பெருமாள் கோயில் தேர், திருவிழாக்களில் பட்டுப் பரிவட்டம் கட்டிச் சிறப்புச் செய்திடுவர்.

பாகனேரி அம்பலக்காரருக்கு அந்நாட்டுச் சிவன் கோயில், அம்பாள் கோயில்களில் எல்லா உரிமைகளும் மரியாதைகளும் உண்டு. அம்பலக்காரர் என்னும் தகுதியைப் பணம் முதலிய எந்தச் சாதனத்தினாலும் திடீரென ஒருவர் பெற்று விடுவதில்லை. அது பரம்பரையாக வந்து கொண்டிருப்பதாகும். ஒருக்கால் அம்பலக்காரருக்குச் சந்ததியில்லாது போய் விடின் அவரைச் சார்ந்த தகுதியுடைய வேறு ஒருவரை ஊரார் தேர்ந்தெடுத்துக் கொள்வர்.

குடிமக்களிடம் வரிகளைப் பெற்று ஊரையும் வளப்படுத்தி ஊர்க்காவலையும் வலுப்படுத்திக் குறுநில மன்னர்களுக்கு அடுத்த நிலையில் தங்கள் நாடுகளில் ஆட்சி செலுத்திய அம்பலக்காரர்கள் கள்ளர், மறவர், அகம்படியர் எனும் மூன்று குழுக்களில் இருந்தனர் எனினும் இவர்கள் அனைவரும் ஒரே வகுப்பினர் என்ற உணர்ச்சியை வேங்கடசாமி நாட்டார் அவர்கள் வெளிப்படுத்துவதுடன்

''தமிழ்நாட்டில் உள்ள பல்வேறு வகுப்பினரும் தாம் இப்பொழுது பல பிரிவினராகஇருப்பினும், தாமெல்லாம்

தமிழ்த்தாயின் மக்களாகிய ஒரே இனத்தவர் என்னும உண்மையை உணர்ந்து யாவரும் அன்பும்,ஒற்றுமையுணர்ச்சியும் உடையவராக, எவரையும் சிறியர் என்று இகழாதிருப்பாராக!"

என வேண்டுகோள் விடுக்கிறார்; அவர் வரைந்துள்ள கள்ளர் வரலாற்றில்!

அந்த வேண்டுகோளையே குறிக்கோளாகக் கொண்டு தென்பாண்டிச் சிங்கத்தின் கதைப் போக்கும், நிகழ்ச்சிகளும், கதாபாத்திரங்களும் அமைந்திடும் என்பதில் யாருக்கும் ஐயமிருக்கத் தேவையில்லை!

ஒற்றுமை; எப்படி-யாரால் குலைந்திடுகிற நிலை ஏற்பட்டது?

பகை மூண்டது ஏன்?

பழி வாங்கும் வெறி வளர்ந்தது எங்ஙனம்?

உண்மைச் சம்பவங்களுடன் கற்பனை மெருகினையும் ஏற்றி மேற்கண்ட கேள்விகளுக்கு விடையளிக்கத் தொடங்குகிறேன்.





# 2

பாவையரின் உள்ளங்கைகள் நெருங்கிக் குவிந்து விரல்கள் மட்டும் விரிந்து அசைவதைப் போல ஒன்பான் தானியங்கள் முளைத்தெழுந்திருந்த பாலிகள் வரிசை வரிசையாக வைக்கப்பட்டிருந்தன; பாகனேரி, பட்டமங்கலம் ஆகிய இரு நாடுகளின் வீடுகளிலே. கருவண்டு உருண்டாடும் கண்ணழகியர்-கையில் அடுக்கிய வளைகள் உண்டுபண்ணும் ஓசையெலாம் இசையாக முளைப்பாரித் திருவிழாவைக் கொண்டாடி மகிழ்ந்தனர்.

சின்னஞ்சிறு சிங்காரப் பாலிகளைக் கரத்திலேந்தி வாளுக்கு வேலிக்கு வாழ்த்துப் பாடியோர் பாகனேரியில்! தங்களின் தலைவன் வல்லத்தரையனுக்கு வாழ்த்திசைத்தோர் பட்டமங்கலத்தில்! முளைப்பாரி மிக விரைவில் செழித்து முளைத்துப் பாலியிலே குலுங்கி நின்றால் அந்த மண் வளத்தைக் கணக்கெடுத்து அந்த ஆண்டு தங்கள் பகுதியில் காடுமேடுகளில் விளைச்சல் எப்படியிருக்கும் எனத் தெரிந்துகொள்ளும் ஆற்றல் மிக்கோர் அந்த மக்கள்!

பூமியில் வைத்துக் கொளுத்திடும் ''புதவாணம்'' போல், வான் நோக்கி வளங்கொழிக்க வளர்ந்திருந்தன அந்த முளைப்பாரிகள்! இல்லத்து முகப்புகளில்-ஆலயத்து வாயில்களில் முளைப்பாரித் திருவிழாவுக்கான ஆட்டபாட்டங்கள், கொண்டாட்டங்கள் முடிவுற்று முளைப்பாரிகள் நீர் நிலைகளில் மிதக்க விடப்பட்டன.

பிள்ளையார் சதுர்த்தியன்று கொழுக்கட்டை, மோதகம் ஆகிய படையலையும் பூசை நைவேத்தியங்களையும் பெற்றுக் கொள்கிற பிள்ளையார் பொம்மைகளையே ஆற்றிலோ குளத்திலோ வீசி எறிந்து விடுகிறபோது, நேற்றைக்கு வித்திட்டு, இன்றைக்கு முளைத்து, நாளைக்கு அழுகிவிடப் போகிற முளைப்பாரிகளை மட்டும் தண்ணீரில் வீசாமல் இருப்பார்களா?

பட்டமங்கலத்தில் முளைப்பாரித் திருவிழாவில் முக்கிய இடம் பெறுவது அந்த ஊர்ப் பிள்ளையார் கோயில்! ஆடவரும் பெண்டிரும் மழலைகளும் அந்தக் கோயிலைச் சுற்றிச் சுற்றி வந்து கணபதி காப்புப் பாடி, தங்களின் அம்பலக்காரர் வல்லத்தரையனுக்காகவும் பிரார்த்தனை செய்து கொண்டனர்.

அப்போது வல்லத்தரையன் அந்தக் கோயிலுக்குப் பூசை செய்ய வருகிறான் என்பதை அறிவிக்கும் முரசு முழங்கியது. அந்த ஒலிகேட்ட திக்கு நோக்கி ஆலயத்தில் குழுமியிருந்தோர் அனைவரும் மரியாதையுடன் உற்றுக் கவனித்தனர். வல்லத்தரையன் வரும் வழிக்குக் குறுக்கே நிற்கக் கூடாதென்று வணங்கியவாறு ஒதுங்கி நின்றனர்.

கருக்கரிவாள் மீசை-வேங்கையின் கம்பீர நடை-கையோ இடையில் தொங்கும் உடைவாளின் மீது-முத்துக்கள் பதித்த வட்ட வடிவமான சப்பைத் தலைப் பாகை-அந்த வீர உருவம்தான் வல்லத்தரையன்! புலி நகம் பொருத்தப்பட்ட முத்தாரமொன்று அவன் மார்பில் புரண்டு கொண்டிருந்தது.

அவனருகே கவர்ச்சிகரமான ஒரு வாலிபன்! கட்டுடல் கொண்டவன்! வேங்கையின் அருகே ஒரு சிறுத்தை போல நடந்து வந்தான்! அவன்தான் வல்லத்தரையனின் தம்பி இளவரசன் வைரமுத்தன்! தலைப்பாகை எதுவுமிருந்து மறைக்காத காரணத்தால்

அவனது சுருள்முடி ஓரளவு வளர்ந்து நீண்டிருந்த அழகைக் காண முடிந்தது. அண்ணன் தம்பிகள் மட்டுமல்ல; அவர்களது சகோதரி வீரம்மாளும், வீரம்மாளின் கணவன்-வேழம் நிகர்த்த உருக் கொண்ட உறங்காப் புலியும்கூட அவர்களுடன் வந்து கொண்டிருந்தனர்.

தங்களின் பட்டமங்கல நாட்டுக்கு அரண்போல இருக்கின்ற அம்பலக்காரர் குடும்பமே பிள்ளையார் கோயில் தரிசனத்திற்கு வருகை தந்து முளைப்பாரி விழாவைச் சிறப்பிப்பதைக் குழுமியிருந்தோர் பெரும் பேறாகக் கருதினர்.

வணங்கியோர்க்குத் தலையசைத்து ஆசி நல்கிய வாறு அம்பலக்காரர் வல்லத்தரையன், ஆலயத் திற்குள் நுழைந்தான்; தனது குடும்பத்தினருடன்! வல்லத்தரையனையும் மற்றவர்களையும் புன்னகை மலர வரவேற்ற அர்ச்சகர், விநாயகருக்குத் தூப தீபம் காட்டியவாறு மந்திரமொலித்துவிட்டு வழக்கப்படி பட்டுப் பரிவட்ட மரியாதை செய்து பிரசாதங்களையும் அளித்தார்.

''அண்ணா! இந்த வருடம் நமது விநாயகர் முகத்தில் ஒரு ஒளி வீசுகிறது பார்த்தாயா?''

தங்கை வீரம்மாளின் குரல் கேட்டு வல்லத்தரையன் அவள் பக்கம் ஆவலுடன் திரும்பினான்.

''ஆமாம்! உண்மைதான்! ஒளி வீசுது! காரணம் அர்ச்சகர் அளவுக்கு மீறிக் கற்பூரத்தை ஏற்றி வைத்து விட்டார்.''

வீரம்மாளின் கணவன் - வல்லத்தரையனின் மைத்துனன் உறங்காப் புலியின் விளக்கமிது!

அது கேட்டுச் சிரித்துக் கொண்டே வல்லத்தரையன், வீரம்மாளிடம், ''நீ என்னம்மா காரணம் கற்பிக்கின்றாய்?

உன் கணவன் உறங்காப்புலி சொல்லும் காரணத்தை மறுக்கிறாயா? ஏற்றுக் கொள்கிறாயா?'' என வினவினான்.

''அவருக்கு எல்லாம் வேடிக்கைதான்! எந்த வருடமும் இல்லாமல் இந்த வருடம் நமது பட்ட மங்கலத்து விநாயகர் ஒளிவிட்டுப் பிரகாசிப்பதற்குச் சரியான காரணமிருக்கிறது! அதாவது இந்த வருடம் என் அண்ணனுக்குக் கல்யாணம் நடக்கப் போகிறது.'' வீரம்மாளின் முகத்தில் தனிக் களை கட்டியது.

''வீரம்மா! உனக்கு எத்தனை முறைதான் சொல்வது? 'எனக்குத் திருமணமாகி ஒரு வாரிசு பிறந்து விட்டால் இதோ என் அருமைத் தம்பி வைரமுத்தன் பட்டமங்கலத்து அம்பலக்காரப் பதவியேற்கும் வாய்ப்பே இல்லாமற் போய்விடுமல்லவா? அதனால் தான் திருமணமே செய்துகொள்வதில்லையென்று சூளுரை மேற்கொண்டுள்ளேன். அதனால் இனியொரு முறை அந்தப் பேச்சைத் தொடங்காதே!''

வல்லத்தரையனின் சகோதர பாசத்தை உணர்ந்து உருகிவிட்ட வைரமுத்தன் அண்ணனின் எண்ணத்தை மறுப்பது போலப் பதறித் துடித்து ''அண்ணா'' என்று குறுக்கிட்டான்.

''தம்பி! அது முடிந்த முடிவு! இந்த விஷயத்தில் என்னை இந்த விநாயகரே கூட மாற்ற முடியாது.''

சகோதரனின் அன்புப் பிரவாகம் கண்டு கண்கள் குளமாக வைரமுத்தன், வல்லத்தரையனின் பாதங்களைத் தொட்டு வணங்கினான். அண்ணன் தம்பிகள் என்றால் இப்படியிருக்க வேண்டுமென்று ஒருவருக்கொருவர் மெல்லிய குரலில் பேசியவாறு ஊரார் கலைந்து சென்றவாறு இருந்தனர்.

''என்ன? பட்டமங்கலம் பாகனேரி முளைப்பாரித் திருவிழாவா? ஏக அமர்க்களப் படுதே!''

வாய் நிறைய சிரித்துக்கொண்டு ஒரு உருவம், சன்னிதானத்திற்கு அருகே நிற்கும் அம்பலக்காரர் குடும்பத்திடம் வந்து நின்றது.

''ஓ! வெள்ளை அய்யர்வாளா? வாங்க! வாங்க, எங்கிருந்து வர்ரீங்க?'' வல்லத்தரையன் வாஞ்சையுடன் வரவேற்றான்.

''எங்கிருந்து வருவேன்? மதுரையிலிருந்துதான் வர்றேன்! விஷயம் தெரியாதோ? மதுரை நாயக்க மன்னர் மாளிகையிலே மல்யுத்தப் போட்டியில் ஜெயித்தானே பாகனேரி வாளுக்கு வேலியின் தம்பி கறுத்த ஆதப்பன்; அவனுக்கு நாயக்க மன்னர் தர்பாரிலே ''வீர விருது'' இன்று காலையிலேதான் வழங்கப்பட்டது! அதற்கு நானும் வந்து தனது தம்பியை ஆசீர்வதிக்கணும்னு வாளுக்கு வேலி ஒத்தைக் காலிலே நின்னதாலே மதுரைக்குப் போய்ட்டு வர்றேன்.''

வெள்ளை அய்யர் சொன்ன வெற்றிச் செய்தியும் வீர விருது நிகழ்ச்சியும் வல்லத்தரையனின் முகத்தில் மகிழ்ச்சி ரேகைகளை மின்னிட விடுவதற்குப் பதிலாக, மழை மேகம் திரளும் வானத்து நிலையை உருவாக்கி விட்டன. ஆனாலும் சமாளித்துக் கொண்டு ''ஓகோ! அப்படியா! பேஷ்! பேஷ்!'' என்றான் மகிழ்ச்சியை வரவழைக்க முயற்சித்தும் முடியாமல்!

வெள்ளை அய்யரை ''மதுரை வெள்ளை அய்யர்'' என்றுதான் தென்பாண்டிச் சீமையில் எல்லோரும் அழைப்பார்கள். வெள்ளைக்காரர்களுடைய நாகரிகத்தைப் பின்பற்றி கோட்டும் சூட்டும் அணிந்து கொண்டு, அதே சமயம் பழைய சம்பிரதாயத்தையும் விடவில்லை என்பதற்கு அடையாளமாகத் தலைப்பாகையும் அணிந்து

கொண்டு நெற்றி நிறையத் திருநீறும் பூசிக்கொண்டு காட்சியளிக்கும் கனவான்தான் அவர்!

வெள்ளையர் ஆதிக்கம் மெல்ல மெல்லப் பரவி, அவர்களை எதிர்த்தோர் கட்டபொம்மன்களாக்கப் பட்டும், ஆதரித்தோர் எட்டப்பன்களாகச் சிம்மாசனப் பதவி பெற்றும், தமிழகம் அடிமைப் புழுதியில் ஆழ்ந்து கொண்டிருந்த வேளையில் எதிர்காலத்தை அரசியல் ரீதியாக ஆரூடம் கணித்துப் பார்த்த மதுரை வெங்கடரமண அய்யர் அவர்கள், தன்னை வெள்ளை அய்யர் என்ற புனை பெயரால் அழைத்துக்கொண்டு கால வெள்ளத்தைக் கடத்திடும் கலையைச் செம்மையாகக் கற்று அதனைச் செயல்படுத்தி வெற்றியும் பெற ஆரம்பித்தவர்.

வெள்ளையர் ஆதிக்கத்திற்கு ஆதரவு தந்திட ''வெள்ளை'' என்ற சொல்லும், பழைய சம்பிரதாயங் களைப் பாதுகாப்பது என்ற பெயரால் ''அய்யர்'' என்ற சொல்லும் இணைந்து வெள்ளை அய்யர் ஆனவர் அவர்! ஆனால் விஷப் பிராணி அல்ல!

மதுரை நாயக்க மன்னர் நடத்திய மற்போர் போட்டியில் வாளுக்கு வேலியின் தம்பி கறுத்த ஆதப்பன் வெற்றிக் கொடி நாட்டி விருதும் பெற்றான் என்ற செய்தியால் வெள்ளை அய்யர்மீதேகூட வல்லத் தரையனுக்குச் சினம் மூண்டது.

எப்படியோ அவனையும் அறியாமல் பாகனேரி அம்பலக்காரர் வாளுக்கு வேலியின்மேல் ஏற்பட்டு விட்ட பகையுணர்வை அவனால் மாற்றிக் கொள்ளவே முடியவில்லை. பட்டமங்கலத்தில் உள்ள குடிமக்களின் அன்புக்குப் பாத்திரமாக அவனால் இயங்கிட முடிந்தது. சகோதர பாசத்தின் அடையாளச் சின்னமாக அவனால் திகழ்ந்திட முடிந்தது. ஏதோ ஒரு வகையான காழ்ப்புணர்ச்சி, வாளுக்கு வேலியிடத்தும் கறுத்த ஆதப்பனிடத்தும் அவனுக்கு ஏற்பட்டிருந்தது.

காரணமே இல்லாமல் சில நேரங்களில் பொறாமைத் தீ உள்ளத்தைச் சுட்டுப் பொசுக்கிடும் என்பார்கள் அல்லவா? அந்த நிலைமைதான் போலும் வல்லத்தரையனுக்கு! ஒரு வேளை நீண்ட காலமாகவே பாகனேரி அம்பலக்காரர் குடும்பத்திற்கும் பட்டமங்கலம் அம்பலக்காரர் குடும்பத்திற்கும் பரம்பரைப் பகை முளை விட்டு இப்போது கிளை விட்டிருக்கிறதோ என்னவோ!

வெள்ளை அய்யர் கொண்டு வந்த செய்தி பட்ட மங்கலத்து முளைப்பாரித் திருவிழாவையே ஒருவகையில் மூளியாக்கிவிட்டது என்பதை உணர்ந்து வைரமுத்தனும், வீரம்மாளும், உறங்காப்புலியும், வல்லத்தரையனின் முகத்தைப் பார்த்தவாறு மௌனம் கடைப்பிடித்தனர்.

அந்த அமைதியைக் கலைத்திடும் வண்ணம் குதிரையொன்று வேகமாக வரும் குளம்படிச் சப்தம் கேட்டது. ஒருவரும் மிச்சமின்றி ஒலி வந்த பக்கம் திரும்பினர். வாளுக்கு வேலியின் தம்பி கறுத்த ஆதப்பன், வேகமாக விரைந்து வந்த குதிரையின் கடிவாளத்தை இழுத்து நிறுத்திப் பட்டமங்கலத்துப் பிள்ளையார் கோயில் வாசலில் இறங்கிக் குதிரையைத் தட்டிக் கொடுத்துவிட்டு, வல்லத்தரையன் குடும்பத்தார் இருக்குமிடம் நோக்கி நடந்து வந்தான்.





# 3

கறுத்த ஆதப்பன் நடந்து வரும் தோரணையிலேயே மதுரை நாயக்க மன்னரிடம் விருது பெற்ற வெற்றிக் களிப்புக் கூத்திடுவதை வல்லத்தரையனும் அவன் குடும்பத்தினரும் கவனிக்காமல் இல்லை!

எங்கே வருகிறான்?

எதற்காக வருகிறான்?

பாகனேரிக்குக் கிடைத்த பட்டயத்தை விளம்பரப் படுத்த அவனே இந்த அஸ்வமேதக் குதிரை(?)யுடன் புறப்பட்டு விட்டானா? "மதுரை மல்லனை மண் கவ்வச் செய்து வந்திருக்கிறேன்; என்னுடன் பொருதிட எவரேனும் இருக்கின்றனரா?" எனக் கேட்டு மார் தட்ட வருகிறானா?

நாயக்க மன்னர் அரண்மனையிலிருந்து திரும்பியதும் திரும்பாததுமாக இந்தத் திடீர் வருகையின் காரணம் எதுவாக இருக்கும்?

வினாக்கள், விண்ணில் தெறிக்கும் மின்வெட்டுக் களாக வல்லத்தரையனின் நெஞ்சில் பளிச்சிட்ட போது, "வணக்கம்" எனப் பணிவு கலந்த தொனியில் கறுத்த ஆதப்பன் கைகூப்பி எதிரில் நின்றான்.

''என்னப்பா! கறுத்த ஆதப்பா! உன் தமையனார் பாகனேரி அம்பலக்காரர் மகாராஜ ராஜஸ்ரீ வாளுக்கு வேலித் தேவர் சுகமாக இருக்கிறாரா? முளைப்பாரித் திருவிழாவும் அதுவுமாக நீ பட்டமங்கலத்திற்கு உன் பஞ்ச கல்யாணிக் குதிரையிலே பறந்து வர வேண்டிய அவசரம் என்னவோ?''

வல்லத்தரையனின் வரவேற்புரையில் காணப்பட்ட ஏகடியங்களைப் புரிந்துகொண்ட கறுத்த ஆதப்பன், அவற்றைப் பொருட்படுத்தாதவனாகக் காட்டிக்கொண்டு ''பட்டமங்கலம் அம்பலக்காரர் அவர்களே! முதலில் என்னை வாழ்த்துங்கள்! பிறகு நான் வந்த விஷயத்தைச் சொல்லுகிறேன்!'' என்றான்.

''எதற்காக வாழ்த்து! உனக்குத் திருமணம் நிச்சயிக்கப்பட்டிருக்கிறதா? அல்லது உன் அண்ணன் வாளுக்கு வேலி பாகனேரி அம்பலக்காரர் பதவியை உனக்கு வழங்கிவிட்டுத் துறவறம் பூண்டு தொலை தேசங்கள் செல்ல முடிவு கட்டியிருக்கிறாரா? எதற்காக ஆதப்பா வாழ்த்து?''

''மதுரை நாயக்கர் சீமையிலே மற்போரில் வெற்றி கண்டு விருது பெற்று வந்துள்ளேன். இதோ நமது வெள்ளை அய்யர் கூட மதுரை விழாவுக்கு வந்திருந்தார்.''

''ஓகோ! மண்டிலங்கள் புகழ வேண்டிய மாபெரும் வெற்றிதான்! நான் ஏற்கனவே கேள்விப் பட்டேன்; உன்னுடன் போரிட்ட அந்த மல்லன் மூன்று மாத காலமாகக் காய்ச்சல் நோயால் பிடிக்கப் பட்டிருந்தானாம்! பரவாயில்லை; எப்படியோ ஒரு நோஞ்சானாக இருந்தாலும் உனக்கு வெற்றி விருது கிடைப்பதற்கு உதவியிருக்கிறான் பார்! அவனுக்கு நன்றி கூறத்தான் வேண்டும்! உனது வெற்றியை ஊரறிய, உலகறிய,

முக்கியமாக, நமது கள்ளர் நாடுகள் அனைத்துமறியக் கொண்டாடத்தான் வேண்டும்! வாழ்க உன் வீரம்! வளர்க உன் புகழ்! போதுமா ஆதப்பா என் வாழ்த்து?''

''சுடுகாட்டு நெருப்பிலே கூட சுருட்டுப் பற்ற வைத்துக் கொள்ள வேண்டிய நிலை ஏற்படுகிறதல்லவா? எந்த உணர்வோடு நீங்கள் என்னை வாழ்த்தினாலும் அந்த வாழ்த்தை என்னால் பயன்படுத்திக் கொள்ள முடியும்!''

''சரி ஆதப்பா! அடுத்து வந்த விஷயத்தைச் சொல்!''

''பாகனேரி தேர்த் திருவிழா தொடங்க இருக்கிறது! எல்லா நாட்டு அம்பலக்காரர்களையும் நேரில் சென்று அழைப்பு விடுத்து வா என்பது என் அண்ணன் கட்டளை! விழாவுக்கு அழைப்பதற்காகத்தான் வந்திருக்கிறேன்.''

இதுவரையில் நெற்றியைச் சுழித்துக் கொண்டு யோசனையில் ஆழ்ந்திருந்த வெள்ளை அய்யர் வாய் திறந்தார்.

''பட்டமங்கலத்தார் திருக்கோட்டியூரில் நடத்திய தேர்த் திருவிழாவுக்கு பாகனேரி அம்பலக்காரர் வாளுக்கு வேலி வரவில்லை என்பதை ஒரு காரணமாகக் காட்டி, இந்த அழைப்பை வல்லத்தரையன் மறுத்துவிடக் கூடாது.''

''நல்ல சமயத்தில் நினைவுபடுத்தினீர்கள் வெள்ளை அய்யர் அவர்களே! நாங்கள் விடுத்த அழைப்பு பாகனேரிக்கு அவ்வளவு கசப்பு! இப்போது அவர்கள் அழைப்பு மட்டும் எங்களுக்கு இனிக்கும் என்ற நினைப்போ? ஆதப்பா! உன் அண்ணனிடம் சொல்; மதியாதார் தலைவாசல் மிதியாமை கோடி பெறும் என்பதை மறக்காதவன் இந்த வல்லத்தரையன் என்ற உண்மையை!''

''திருக்கோட்டியூர்த் தேர்த் திருவிழாவுக்கு வரக் கூடாது என்பதல்ல! அப்போதுதான் மதுரையில் நான் மற்போர் வீரனுடன் மோத வேண்டியிருந்தது. அந்தப் போராட்டத்தைக் காண அண்ணனும் என்னுடன் வந்துவிட்டார்! வர இயலாத காரணத்தை விளக்கி அப்போதே தங்களுக்கு அண்ணன் ஒரு கடிதம் அனுப்பியிருக்கிறார்.''

''நல்ல மதுரை! நல்ல நாயக்க மன்னர்! மற்போர் நிகழ்ச்சிக்கு ஒருநாள்! பிறகு விருது பெற ஒருநாள்! ஏனப்பா இப்படி அரண்மனை விழா என்றால் அலையாய் அலைகிறீர்கள்?''

''இதெல்லாம் நீங்களும் என் அண்ணனும் பேசிக் கொண்டால் நன்றாக இருக்கும். நான் இளைஞன். ஏதாவது துடுக்குத்தனமாகப் பேசிவிட்டால் ஏற்கனவே எப்படியோ புகைந்து கொண்டிருக்கிற விரோதம் நெருப்பைக் கக்கிடத் தொடங்கிவிடும்.''

''வீண் பேச்சு எதற்கு? பாகனேரித் தேர்த் திருவிழாவுக்கு பட்டமங்கலத்தான் வரமாட்டான் என்று திட்டவட்டமாகச் சொல்லிவிடு.''

இதுவரையில் பொறுமையாக இருந்த வைரமுத்தன், அண்ணன் வல்லத்தரையனை அமைதிப்படுத்த முனைந்தான்.

''அண்ணா! தங்களுக்குத் தெரியாதது எதுவுமில்லை. ஏற்கனவே நடந்த தவறுகளைப் பெரிதுபடுத்தி, மேலும் பல தவறுகள் நடப்பதற்கு இடமளித்துவிடக் கூடாதல்லவா? வாளுக்கு வேலியானாலும் சரி; கறுத்த ஆதப்பன் ஆனாலும் சரி; பட்டமங்கலத்தில் நடைபெற்ற எத்தனையோ நிகழ்ச்சிகளுக்கு நம்முடைய அழைப்பையேற்று வந்திருக்கிறார்கள். இந்த ஆண்டு திருக்கோட்டியூரில் நாம் நடத்திய தேர்த்திருவிழாவுக்கு வரக்கூடாது என்பதல்ல; வர முடியாத நிலை! அவ்வளவுதான்! அப்படியே

அவர்கள் வேண்டுமென்றே வராமல் இருந்ததாக வைத்துக் கொள்வோம்! இப்போது நாம் பாகனேரித் தேர்த்திருவிழாவுக்குப் போவதின் மூலம் நமது பரந்த உள்ளத்தையும் அவர்களது குறுகிய உள்ளத்தையும் ஊராருக்கு உணர்த்த முடியும் அல்லவா? பாகனேரிக்கும் பட்டமங்கலத்திற்கும் தலைவர்களாயிருக்கிற அம்பலக் காரர்கள் வேறு வேறானவர்களே தவிர, இரண்டு நாட்டுக்கும் ஆண்டவன் பொதுவானவர்தானே! அந்த ஆண்டவனைப் பாகனேரியிலும் சென்று வணங்குவோமே!''

தம்பியின் அறிவுரையைக் கூர்ந்து கேட்டுக் கொண்டு அசைவற்று நின்றான் வல்லத்தரையன்.

''வைரமுத்தன் சொல்வதிலும் ஒரு நியாயம் இருக்கத்தான் செய்கிறது! பாகனேரிக்கும், பட்ட மங்கலத்துக்கும் பத்துக் கல் தொலைவுகூட இல்லை! அதற்கிடையே இவ்வளவு பகை எதற்காக? உங்கள் இருவரையும் எப்படியாவது ஒற்றுமைப்படுத்த வேண்டு மென்பதற்காகத்தான் நானும் மதுரை மீனாட்சிமீது பாரத்தைப் போட்டுவிட்டு ஓயாமல் உழைத்து வருகிறேன். அதனால் தம்பி சொல்வதைக் கேட்டு வாளுக்கு வேலியின் அழைப்பைத் தட்டாமல் விழாவுக்குச் செல்வதுதான் சிலாக்கியமானது!''

வெள்ளை அய்யரின் இந்த வார்த்தைகளும் வல்லத்தரையனைக் குழப்பத்திற்காளாக்கியது. வீரம்மாள், தன் பங்கிற்கு ஏதாவது சொல்ல வேண்டுமென்று விரும்பினாள்:

''தம்பி சொல்வதையும் அய்யர் அய்யா சொல்வதையும் கேட்டு, இந்த ஒரு தடவை பாகனேரிக்காரருக்கு மன்னிப்பு வழங்கிவிடு அண்ணா!'' என்றாள் இறுமாப்புப் பொங்கிடும் பாணியில்!

கறுத்த ஆதப்பனின் மீசைகள் துடித்தன. ''மன்னிப்பு!'' அந்த வார்த்தை அவன் மண்டையிலே சம்மட்டியால் தாக்கியதுபோல் விழுந்தது! சீறியிருப்பான்! சினக்காட்டுத் தீயாக அங்குப் பரவியிருப்பான்! ஆனால் வீரம்-நிதானம் இரண்டையும் பற்றி அவனது அண்ணன் வாளுக்கு வேலி அடிக்கடி அறிவுரை கூறுவது அவன் நினைவில் ஓடிவந்து மோதியது.

''அழைப்புக் கொடுக்கப் போன இடத்தில் அநாகரிகமாக நடந்து கொண்டு விட்டாயே தம்பி'' என்று அண்ணன் மனம் நொந்து கொண்டால் என்ன செய்வது என்ற ஆயாசப் பெருமூச்சு அவனது ஆவேசத்தைத் தடுத்து நிறுத்தியது.

நல்ல வேளையாக, அதற்குள் வல்லத்தரையன் பாகனேரித் தேர்த் திருவிழாத் தொடக்கத்திற்கு வருவதாகச் சம்மதம் தெரிவித்து விட்டான்.

புயலெனச் சொற்களைச் சுழலவிடத் துடித்துக் கொண்டிருந்த ஆதப்பனின் உதடுகள் புன்னகை புரியும் மலர்களாயின. வைரமுத்தனின் கையைக் குலுக்கி ஆதப்பன் பாராட்டுத் தெரிவித்தான்.

விரும்பத்தகாத ஒரு பேராபத்துக்கு வித்திடப் படுகிறதே எனக் கலக்கம் கொண்டிருந்த கறுத்த ஆதப்பன், எது வரினும் எதிர்த்து நிற்கும் உள்ளத் திண்மை கொண்டவனாயினும், தனது அணுகு முறையால் ஒரு தவறு ஏற்பட்டுப் பழிக்கு ஆளாகி விடக் கூடாது என்பதில் அக்கறையுடன் இருந்ததால் ஒரு சுமுகமான முடிவுக்கு வழிவகுத்த வைரமுத்தனின் நிதானமான போக்கிற்கு வாழ்த்துக் கூறினான்.

வல்லத்தரையன், தம்பி வைரமுத்தனைப் பார்த்து மெல்லச் சிரித்தான். அவனும் அண்ணனை ஓரக் கண்ணால் பார்த்துக் கொண்டே குறுநகை புரிந்தான்.

குறித்த நேரத்தில் விழாவுக்கு வந்துவிடுமாறு மீண்டும் ஒருமுறை கேட்டுக் கொண்டு கறுத்த ஆதப்பன் குதிரையிலேறிப் புறப்பட்டான்.

பட்டமங்கலம் பிள்ளையார் கோயிலைச் சுற்றிக் கொண்டு பாகனேரி செல்லும் பாதையில் குதிரை திரும்பிடும்போது பிள்ளையார் கோயில் சுற்றுச் சுவரில் இடிந்துபோன ஒரு மாடத்திலிருந்து ஆதப்பனின் நெஞ்சைக் குறிபார்த்தவாறு பாய்வதற்கு ஒரு ஈட்டி தயாராக ஓங்கப்பட்டிருந்தது!

சுற்றுச் சுவரின் பக்கம் குதிரை வந்ததும் ஈட்டியைப் பிடித்திருந்த கை அதனை வீசத் தொடங்கியதுதான் தாமதம்; அதற்குள் அந்தக் கையைத் தடுத்து நிறுத்தியது மற்றொரு வீரனின் கை!





# 4

தன்னை ஈட்டியெறிந்து கொன்றுவிட ஒரு முயற்சி நடந்தது குறித்தோ, அந்த முயற்சி தடுக்கப்பட்டது குறித்தோ எதுவுமே தெரிந்து கொள்ளாத ஆதப்பன், குதிரையைப் பாகனேரிப் பாதையில் தட்டிவிட்டு அண்ணனிடம் நல்ல செய்தி சொல்ல விரைந்து கொண்டிருந்தான்.

''உறங்காப்புலியாரே! என்ன வேலை செய்யப் பார்த்தீர்கள்! நமது குலப் பெருமைக்கும் போர் முறைமைக்கும் சிறிதும் பொருந்தாத செயல்! ஆண்மையும் ஆற்றலுமிருந்தால் ஆதப்பனுடன் நேருக்கு நேர் மோதிப் பார்த்திடத் துணிந்திட வேண்டும்! மறைந்திருந்து கோழைத்தனமாக ஒரு வீரனைக் கொல்வது நமது இனத்திற்கே இழிவு!''

வார்த்தைகளைப் பொரிந்து தள்ளினான் வைரமுத்தன்; தனது மைத்துனன் உறங்காப்புலியைப் பார்த்து!

ஆதப்பனை, உறங்காப்புலி-மறைந்திருந்து மதில் சுவர் வழியாக ஈட்டியெறிந்து கொல்ல முயன்ற தகவல் வல்லத்தரையனுக்கும் எட்டியது. அவனும் அதை இரசிக்கவில்லை. ஏன், வீரம்மாள்கூடத் தன் கணவன் செயலைக் கடிந்துரைத்தாள்.

மிகப் பெரிய காரியம் ஒன்றினைச் சாதிக்கப் போகிறோம்-அதற்குரிய பாராட்டினைப் பட்ட மங்கல அம்பலக்காரரிடம் பெறப் போகிறோம் என்று ஆவல் கொண்டிருந்த உறங்காப்புலிக்குக் கிடைத்தது ஏமாற்றமும் ஏளனமும்தான்! ஆனால் இந்த நிகழ்ச்சியை வெளியே பரவ விடாமல் அவர்களின் குடும்பத்திற்குள்ளேயே மறைத்துவிட்டனர்.

ஆதப்பனின்மீது இவ்வளவு ஆத்திரமும் வெறியும் கொண்டிருக்கிற முரடன் உறங்காப்புலியைப் பாகனேரித் தேரோட்டத்திற்கு அழைத்துச் செல்வதால் வேண்டாத விபரீதங்கள் ஏதாவது ஏற்படுமென்று வைரமுத்தன் எடுத்துச் சொன்னதின் பேரில் உறங்காப்புலியையும் வீரம்மாளையும் பட்டமங்கலத்திலேயே இருக்கச் சொல்லி விட்டு, வல்லத்தரையன் வைரமுத்தனுடன் பாகனேரிக்குப் புறப்பட்டான்.

பித்தளைத் தகடுகளும், வெண்கலப் பட்டைகளும் அணி செய்யும் அழகிய பெட்டி வண்டியில் கொழுத்த காளைகள் இரண்டு பூட்டப்பெற்று, அதில் தங்கள் பயணத்தைத் தொடங்கினார்கள் பட்டமங்கலம் சகோதரர்கள். வண்டிக்கு முன்னாலும், பின்னாலும் ஆயுதம் தாங்கிய வீரர்கள் எண்மர் காளைகளுடன் போட்டி போட்டுக் கொண்டு காவல் புரியும் கடமையாற்றிட ஓடிக் கொண்டிருந்தார்கள்.

பாகனேரித் தேர் பரத நாட்டியப் பெண்மணி போல ஜோடிக்கப்பட்டு நின்று கொண்டிருந்தது. அந்தத் தேரைத் தாங்கள்தான் வேகமாக இழுத்துக் கொண்டு போகப் போகிறோம் என்பது போலத் தேரின் முகப்பில் கட்டப்பட்டிருந்த பொம்மைக் குதிரைகள் நாலு கால் பாய்ச்சலில் காட்சி தந்து கொண்டிருந்தன.

நூற்றுக்கணக்கான, ஆயிரக்கணக்கான பாட்டாளிகளும் ஊர்மக்களும் வடம் பிடித்து இழுத்தால்தான் தேர் நகரும்! அது மட்டுமா? பின்னாலிருந்து சிலர் தேர்ச்சக்கரத்தை அசைத்துவிட உலுக்கு மரம் போட வேண்டும்!

வீதியில் தேர் ஒழுங்காகச் சென்று மீண்டும் நிலையடிக்கு வந்திட ஆங்காங்கே முட்டுக்கட்டைகளைப் போட்டுச் சக்கரங்களை ஒழுங்கான பாதையில் திருப்பிவிடச் சில பேர் அறிவு நுட்பத்துடன் பணியாற்ற வேண்டும்.

ஆனால் இத்தனைச் சிரமங்கள் இருப்பதை அறியாத குழந்தைகள் தேரின் முகப்பில் கட்டப்பட்டுள்ள பொம்மைக் குதிரைகள்தான் தேரை இழுப்பதாக எண்ணிக் கொள்ளும். தேர் மட்டுமா! நாட்டில் எத்தனையோ நல்ல காரியங்கள் நடக்க, நரம்பை முறித்துக் கொண்டும் எலும்பை உடைத்துக் கொண்டும் உழைப்போர் பலராயிருக்க, எல்லாம் என்னால்தான் என்று எத்தனை ''பொம்மைக் குதிரைகள்'' போலி நாடகம் ஆடுகின்றன! அதையும் நம்புகின்ற பாமரர்கள் குழந்தையினும் குழந்தையாக இருக்கிறார்கள் அல்லவா!

தேரோட்டம் காணவும் கள்ளர் நாடுகள் பலவற்றின் அம்பலக்காரர்களின் வருகையைக் கண்டு களிக்கவும் பாகனேரி, காடனேரி, நகரம்பட்டி, மற்றுமுள்ள பாகனேரி நாட்டுக் கிராமங்களின் மக்கள் திரள் திரளாகக் குழுமினர்.

பாகனேரிச் சிவன் கோயிலில் பட்டுப் பரிவட்ட மரியாதையைப் பெற்றுக் கொண்டு அதன் பின்னர் தேரோட்டத்தைத் தொடங்கி வைக்க வாளுக்குவேலி வருகிறார் என்பதை வெள்ளமெனச் சூழ்ந்திருந்த மக்கள் இதயங்குளிரச் சொல்லிக் கொண்டு தேரோடும் வீதிகளில் அலைமோதிக் கொண்டிருந்தனர்.

அழைக்கப்பட்டிருந்த அம்பலக்காரர்கள் பெரும் பான்மையோர் சிவன் கோயில் மண்டபத்திற்கு வந்து விட்டனர்; அவர்களையெல்லாம் வரவேற்று உபசரித்து மண்டபத்தில் உள்ள இருக்கைகளில் அமர வைத்துக் கொண்டிருந்தான் ஆதப்பன்!

சிறிது நேரத்திற்கெல்லாம் பட்டமங்கலம் அம்பலக்காரரின் பெட்டி வண்டி சிவன் கோயில் வாசலில் வந்து நின்றது. ஆதப்பன் ஓடிச் சென்று வல்லத் தரையனையும் வைரமுத்தனையும் இனிய முகங்காட்டி வரவேற்று மண்டபத்திற்கு அழைத்துச் சென்றான்.

தங்களைக் காத்திருக்கச் செய்துவிட்டு இன்னும் வாளுக்குவேலி வரவில்லை என்பதைச் சற்றுச் சினத்துடன் வைரமுத்தனிடம் வல்லத்தரையன் முணுமுணுத்தான். வைரமுத்தன் அண்ணனை அமைதிப்படுத்திக் கொண்டிருக்கும்போதே, சிவன் கோயில் நகராவும், எக்காளமும், வாங்காவும், திரிசர்ணமுமாகிய பல்வேறு வாத்திய முழக்கங்கள் வானைக் குலுக்கின. வாளுக்கு வேலியின் வருகையைக் குறிக்கவே அந்த இசைக் கருவி கள் ஒலித்துக் கொண்டிருந்தன! சிவன் கோயில் வாசலில் ஏராளமான மக்கள் தங்கள் தலைவனின் வருகைக்காக இரு வரிசையாகக் காத்துக்கொண்டு நின்றனர்.

பாகனேரி அம்பலக்காரர் வண்டி சற்றுத் தொலைவில் வந்து நின்றது. வண்டியிலிருந்து வாளுக்குவேலி இறங்கியதும் ''அம்பலக்காரர் வாழ்க!'' என ஆர்த்தது அந்தக் கூட்டம்! ''வாளுக்குவேலித் தேவர் வாழ்க!'' என்று ஆடவர் பெண்டிர் அனைவரும் குதித்தாடிக் கும்மாளமிட்டனர். அவர்களைப் பார்த்து மிக்க பணிவுடன் - ஆனால் மிடுக்கு நடை சிறிதும் குறையாமல் வணக்கம் தெரிவித்தவாறு வாளுக்கு வேலி எனும் அந்தச் சிங்கம் கோயிலை நோக்கிச் சென்று கொண்டிருந்தது.

அந்த வண்டியிலிருந்து ஒரு இளமங்கையும் இறங்கி வானுக்கு வேலியின் பின்னால் வந்து கொண்டிருந்தாள்; பதினெட்டு வயதை எட்டிப் பிடித்திருக்கும் பருவச்சிட்டு எனக் கூறலாம்.

தொட்டுப் பார்க்காமலே தெரிந்து கொள்ளலாம். பட்டுப் போன்ற மேனி! முத்துக்கும் முல்லைக்கும் பல்லை ஒப்பிட்டு மூவாயிரம் ஆண்டுகள் ஓடி விட்டன! பால் நிலவைப் பொடியாக்கி அந்தச் சிறிய ஒளித்துகள்களை அவளது பவளச் செவ்வாயில் இயற்கை பதித்துள்ளதோ எனக் கற்பனை செய்யலாம், அந்தப் பல்வரிசையைப் பார்க்கும்போது!

கணையென்றும், வேலென்றும், சேலென்றும் கண்களை வர்ணித்ததெல்லாம் பழைய காலம்! அவள் விழிகளைக் கண்டோர் உவமை தேட ஒரு மொழியிலும் வழியில்லையே என ஏங்கித்தான் நின்றிடுவர்! ஒளி தவழ் வதனம்! உளியிட்டுச் செதுக்காவிடினும் அப்படிச் செதுக்கியது போல உடலின் அமைப்பு!

அலங்கரிக்கப்பட்டு நின்றிருந்த அந்த அழகு வண்ணத் தேர்தான் இப்படிப்பெண்ணுருக் கொண்டு வானுக்கு வேலியின் பின்னால் நடை பயிலுகிறதோ என எழுதிடத்தான் தோன்றும் கவிஞர்களுக்கு!

''கல்யாணி நாச்சியார்! கல்யாணி நாச்சியார்!'' பாச உணர்வு பீறிட அந்தக் கூட்டத்தில் இப்படி மெல்லிய குரல்கள் ஆங்காங்கு எழுந்தன.

கோயில் மண்டபத்திற்குள் நுழைந்த வானுக்கு வேலி, வருகை தந்திருந்த அம்பலக்காரர்களையெல்லாம் இருகை கூப்பி வரவேற்றான். ''மேல நாட்டு அம்பலக்காரரே! வாங்க! வணக்கம். நடுவு நாட்டாரே

வாங்க! ரொம்ப மகிழ்ச்சி! ஓ! சிறுகுடி நாட்டாரா? சௌக்கியமா? வெள்ளூர் நாட்டு அம்பலக்காரரே வாங்க!... அடடே! பட்டமங்கலத்தாரே! வாங்க! வைரமுத்தா வாப்பா!...வா!...'' - என்று அம்பலக்காரர்களுடன் அளவளாவிக் கொண்டே, ''தங்கச்சி! இவுங்களுக்கெல்லாம் வணக்கம் சொல்லும்மா!'' என்று தன்னைத் தொடர்ந்து வந்த அந்த அழகுப் பதுமையிடம் கூறியதோடு, அம்பலக் காரர்களைப் பார்த்து, ''இதுதான் என் ஒரே தங்கை- அன்புத் தங்கை கல்யாணி நாச்சியார்'' என்றும் அறிமுகம் செய்து வைத்தார்.

கல்யாணி நாச்சியார், தனது கட்டழகு குலுங்கிட அம்பலக்காரர்களின் கால்களில் விழுந்து வணங்கினாள். வைரமுத்தனின் காலில் விழவும் அவள் தயங்கிட வில்லை. காலில் விழுந்து எழுந்த போதுதான் அவள் கண்கள் அவன் முகத்தைவிட்டு உடனே அகன்றிட இயலாமல் தயங்கின.

ஆலயத்தில் சிவனாருக்கு அர்ச்சனை, தீபாராதனைகள் நடைபெற்றன, மணியோசை அதிர்ந்தது, வாளுக்கு வேலிக்குப் பட்டுப் பரிவட்ட மரியாதைகள் ஆலயச் சார்பில் நடத்தப்பட்டன.

''எல்லோரும் என் வேண்டுகோளை மதித்து வந்தமைக்கு மிக்க நன்றி! வாருங்கள் தேரோட்டத்தை வடம் பிடித்து ஆரம்பித்து வைப்போம். தேர்த்திருவிழா முடிந்ததென்று யாரும் பயணப்பட்டு விடக்கூடாது! அம்பலக்காரர்களுக்கெல்லாம் தங்கும் விடுதிகள் ஏற்பாடு செய்திருக்கிறேன். என் இல்லத்தில் விருந்துக்கும் அருள் கூர்ந்து வந்திட வேண்டும். முதலில் தேரடிக்குச் செல்வோம், வாருங்கள்!''

வாளுக்கு வேலியும் கல்யாணி நாச்சியாரும் கறுத்த ஆதப்பனும் முன் செல்ல அம்பலக்காரர்கள் அவர்களைத் தொடர்ந்து நடந்தனர்.

எல்லா அம்பலக்காரர்களையும் ஒரு சேரப் பார்த்த இன்பம், பலருக்குத் தேர்விழாப் பார்ப்பதை விட மேலானதாக இருந்தது.

தேர் முகப்பில் கட்டிப்பட்டுள்ள வடத்தைத் தொட்டிழுத்துத் தொடங்கி வைக்க அம்பலக்காரர்கள் வந்தபோது அவர்களுக்கு முன்னே அங்கே வெள்ளை அய்யர் காத்திருந்து ''வாங்கோ! வாங்கோ! வானம் மழையா கொட்டப் போறது! வானம் பார்த்த சீமை வளமாகப் போறது! ஏன்னா-எல்லா அம்பலக்காரர்களும் ஒற்றுமையா வந்திருக்கிறீர்களே!'' என்று பேசிக்கொண்டே இருந்தார்.

அய்யரின் கூரிய கண்கள் வல்லத்தரையனின் முக விகாரத்தையும், வைரமுத்தனின் முகத்தில் ஒரு புதிய பொலிவு தோன்றியிருந்ததையும் குறித்துக் கொள்ளத் தவறவில்லை! மெதுவாக வல்லத்தரையன் காதில் சொன்னார்: ''எல்லா அம்பலக்காரர்களுக்கும் இந்த வாளுக்குவேலிதான் தலைவன் போலப் பாவனை செய்கிறான் அல்லவா!'' என்று!

வல்லத்தரையன் தலையை அசைத்து ஆமோதித்துப் பல்லைக் கடித்துக் கொண்டான். ''ஏன், சரியான நேரம் வந்தாச்சே! ஆரம்பிக்கலாமே! வடத்தைப் பிடிக்கலாமே!'' இவ்வாறு வெள்ளை அய்யர் குரல் கொடுத்ததும் வாளுக்குவேலி, கரங்கூப்பித் தேரில் உள்ள கடவுளைத் தொழுதுவிட்டு வடத்தைத் தொட்டான்.

எல்லா அம்பலக்காரர்களும் வடத்தைத் தொட்டு இழுக்க முனைந்தார்கள். வைரமுத்தன் வடத்தின் ஒரு

புறத்திலும் - கல்யாணி நாச்சியார் மற்றொரு இணை வடத்தின் ஒரு புறத்திலும் இழுக்கத் தொடங்கினார்கள். அதிர்வெடிகள் முழங்கின. உலுக்கு மரங்கள் இயங்கின. ஆயிரக்கணக்கானோர் தேரை இழுத்தனர். எல்லோரும் இழுத்த வேகத்தில் - தேருக்குக் குறுக்குக் கட்டை போட்ட போது, தேர் ஒரு பெரிய அசைவுடன் நின்றது. அப்போது வடம் பிடித்திருந்தவர்கள் ஒருவர் மீதொருவர் விழுந்து எழுந்தனர். அப்படி விழுந்தவர்களில் கல்யாணி நாச்சியாரும் ஒருத்தி! யார்மீது விழுந்தாள்? வைரமுத்தன் மீதுதான்! விழுந்து எழுந்து நாணத்தால் முகத்தைக் கோவைக் கனியாக்கிக் கொண்டாள்.





# 5

பாகனேரித் தேர் வடத்தைத் தொட்டிழுத்துத் தேரோட்டத்தைத் தொடங்கி வைத்தவுடன் அம்பலக்காரர்கள் அனைவரும் அவரவர் தங்குவதற்கு ஏற்பாடு செய்யப்பட்டிருந்த இடங்களுக்குச் சென்று விட்டனர். அவர்களையெல்லாம் அன்புடன் கவனித்து வண்டிகளில் ஏற்றித் தங்கும் விடுதிகளுக்கு அனுப்புவதில் தானே முன்னின்று கறுத்த ஆதப்பன் தனி அக்கறை எடுத்துக் கொண்டான்.

பட்டமங்கலத்து வண்டியில் வல்லத்தரையன் ஏறிக் கொண்டதும் வாளுக்குவேலி அருகே சென்று தவறாமல் விருந்துக்கு வந்துவிட வேண்டுமென்று கேட்டுக் கொண்டான். ''உனக்கும்தான் சொல்லுகிறேன்'' என்று வைரமுத்தனை வாளுக்குவேலி தோளில் தட்டிக் கொடுத்த போதுதான் அவன் திடுக்கிட்டுத் தன் விழிகளைக் கல்யாணி நாச்சியாரிடமிருந்து வேகமாகத் திருப்பிக்கொண்டு ''சரிங்க! சரிங்க!'' என வாளுக்கு வேலியிடம் கூறிவிட்டு வல்லத்தரையனுடன் வண்டியில் ஏறிக்கொண்டான்.

''வாம்மா போகலாம்'' என்று அண்ணன் அழைத்திட அந்த அழகோவியம் அவன் பின்னால் நகர்ந்தது. பட்டமங்கலம் வண்டியை ஒருமுறை திரும்பிப் பார்க்க வேண்டுமென்ற ஆவல் அவள் உள்ளத்தில் கொடிகட்டிப் பறந்தாலும்கூடத் தனது குடும்பப் பெருமையை எண்ணித் தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்டாள்.

கடவுள், தனது பிடரிப் பகுதியிலும் இரண்டு கண்களைப் படைத்திருக்கக் கூடாதா என்று ஏங்கியவாறு அண்ணனைத் தொடர்ந்து சென்று அவனுடன் பெட்டி வண்டியில் ஏறிக் கொண்டாள். ஏறி அமர்ந்த பிறகு தான் அவளால் உணர முடிந்தது; அவளது உடலில் ஏதோ ஒரு கனம் குறைந்திருப்பதாக! கழுத்தைத் தொட்டுப் பார்த்துக் கொண்டாள். முத்து வடம், வைர அட்டிகை, நவரத்தினப் பதக்கமாலை எல்லாமே சரியாகத்தான் இருந்தன.

ஓ! அவளுடைய இதயத்தை அந்தப் பட்ட மங்கலத்துப் பெட்டி வண்டியில் ஏற்றி அனுப்பி விட்டது இப்போதுதான் அவளுக்குப் புரிந்தது.

''பட்டமங்கலத்துக்கு வல்லத்தரையன்தான் அம்பலக்காரர் என்றாலும், அந்த ஊர்ப் பரிபாலனம் முழுதும் சின்னவன் வைரமுத்தன் தானம்மா பார்த்துக் கொள்கிறான். ரொம்ப கெட்டிக்காரன். அண்ணன்காரன் நெருப்பு மாதிரி! தம்பி தண்ணீர் மாதிரி!''

வாளுக்குவேலி வண்டியில் போகும்போது இப்படிப் பேச்சைத் தொடங்கியது கல்யாணி நாச்சியாருக்குக் குற்றாலம் அருவி தலையிலே கொட்டியது போல் இருந்தது. அவளும் அண்ணனுடன் கலகலப்பாக உரையாட ஆரம்பித்தாள்.

''பட்டமங்கலத்திற்கும் பாகனேரிக்கும் இதிலே கூட பெரிய வித்தியாசமண்ணா!''

''என்ன கல்யாணி?''

''இங்கே அண்ணன் தண்ணீர் மாதிரி! தம்பி நெருப்பு மாதிரி! இல்லையா அண்ணா?''

''நெருப்பு - தண்ணீர் இரண்டுமே ஆக்க வேலைக்குப் பயன்படும்போது இரண்டுமே நல்லதுதான்! தண்ணீரே பெருவெள்ளமாகப் பெருக்கெடுத்தால் - கடல் பொங்கிக் கொந்தளித்து நிலம் நோக்கிப் பாய்ந்தால் எத்தனை

ஊர்கள், எத்தனை நகர்கள் அழிந்துவிடும்! மதுரையை அழித்தது நெருப்பு! காவிரிப்பூம்பட்டினத்தை அழித்தது நீர்! பொங்கியெழும் நிலை பெறும்போது நெருப்பு, நீர் எல்லாம் ஒன்றுதானே!''

வாளுக்குவேலியின் இந்த விளக்கம் கல்யாணி நாச்சியார் அனுபவப்பூர்வமாக அறிந்த ஒன்று!தனது அண்ணன் தண்ணீரைப் போலக் குளிர்ந்திருந்தாலும் தன்மான உணர்வுக்கொரு அறைகூவல் என்று வந்து விட்டால், வேண்டுமென்றே யாராவது திட்டமிட்டுத் தவறு செய்தால், அந்த நேரத்தில் கரையுடைத்துக் கொண்ட வெள்ளமென மாறிய நிகழ்ச்சிகள் பலவற்றை அவள் நன்கு அறிவாள். இருந்தாலும் அண்ணன், நீருக்கும் நெருப்புக்குமுள்ள ஒற்றுமை வேற்றுமை பற்றி விளக்கமளிப்பதை விடுத்து, வைரமுத்தனைப் பற்றி வேறு ஏதாவது சொல்லமாட்டானா என்று ஆவல் ததும்பிட எதிர்பார்த்தாள். ஆனால் அவனோ வல்லத்தரையனைப் பற்றி வர்ணித்துக் கொண்டிருந்தான்.

''என்னமோ தெரியவில்லை அம்மா! அந்த வல்லத்தரையனுக்குப் பாகனேரி என்றாலே ஒரு எரிச்சல்! பழங்காலத்தில் பாகனேரியும் பட்டமங்கலமும் எவ்வளவு ஒற்றுமையாகவும் உறவாகவும் இருந்தன என்பதை இப்போது கூடக் கதைகதையாகப் பெரியவர்கள் சொல்கிறார்கள். ஆனால் அதற்கு முற்றிலும் மாறாக மூர்க்கத்தனமான பகை உணர்வுடன் இப்போது பட்டமங்கலத்து வல்லத்தரையன் நடந்து கொள்கிறான், நானும் எவ்வளவோ விட்டுக் கொடுத்துப் போகத்தான் பார்க்கிறேன். ஆனால் அவன் மனதில் நம்மைப் பற்றி நல்லெண்ணமே இல்லை!... இந்தத் தேரோட்ட விழாவிலேகூட அவன் முகத்தில் ஒரு களையே இல்லையே! ஏதோ ஒரு கடமைக்கு வந்தவனைப் போல இருக்கிறானே தவிர நட்பு உணர்வு கடுகளவும் இருப்பதாகத் தெரியவில்லை.''

பட்டமங்கலம் அம்பலக்காரர் குடும்பத்தைப் பற்றி அண்ணன் போட்டு வைத்துள்ள கணக்கு, கல்யாணியைச் சற்று நிலைகுலையத்தான் செய்தது. பழைய மன்னர்கள் பலர் தங்களுக்கும் மற்றொரு நாட்டுக்குமுள்ள பகையைத் தீர்த்துக்கொள்ள அந்த மன்னர் குடும்பங்களுக்குள்ளே பெண் எடுப்பதும் பெண் கொடுப்பதும் போன்ற தந்திரங்களைக் கையாள்வதும் அதனை வரலாற்று ஆசிரியர்கள் ராஜதந்திரம் எனப் போற்றுவதும் அவளது நினைவுக்கு வரத் தவறவில்லை. அதனால் அவள் ஒரு ஆறுதல் பெருமூச்சு விட்டுக் கொண்டாள். எனினும் முழுமையான நிறைவு ஏற்படாத முக வாட்டத்துடன் அண்ணனுடன் அந்த வண்டியில் சென்று கொண்டிருந்தாள்.

வாளுக்குவேலியோ வல்லத்தரையனின் மனப்போக்குக் குறித்தும், காழ்ப்புணர்ச்சி குறித்தும் தன் மனத்தில் உள்ள கவலைகளை வார்த்தைகளால் வெளிப்படுத்துவதை நிறுத்திக் கொள்வதாயில்லை. கல்யாணி நாச்சியாருக்கு ஒரு சந்தேகம் கூட ஏற்பட்டது. ஒரு வேளை, தேர் வடம் பிடிக்கும் இடத்திலும்-கோயில் மண்டபத்திலும் - பட்டமங்கலத்து வண்டி புறப்படும் இடத்திலும் தன்னையறியாமல் வைரமுத்தன் மீது தனது நெஞ்சு பாய்ந்தோடிய நிகழ்ச்சியைத் தன் அண்ணனிடம் தனது விழிகளும் முகமும் காட்டிக் கொடுத்து விட்டனவோ என்று கருதினாள். திடுக்கிட்டாள். அதனால்தான் அப்படியொரு எண்ணம் தனக்கிருந்தால் அதை மறந்துவிட வேண்டுமென்பதற்காக அண்ணன், பட்ட மங்கலத்துப் பகையை விவரித்துக் கொண்டு வருகிறாரோ என அஞ்சினாள்.

''ஏன் அண்ணா! இப்படியொரு கசப்பு இரண்டு அம்பலக்காரக் குடும்பங்களுக்கும் ஏற்பட இடையில் யாராவது விஷமம் செய்கிறார்களா? விஷவிதை தூவுகிறார்களா?''

''சே! சே! நான் அப்படி நினைக்கவில்லையம்மா! ஏன், உனக்கு அப்படி யாரையாவது நினைக்கத் தோன்றுகிறதா?''

''அந்த வெள்ளை அய்யர் எப்படி? அவர் ஏதாவது கலகமூட்டுவாரோ என்னமோ?''

''வெள்ளை அய்யருக்கு என் மீதும் நம் குடும்பத்தின் மீதும் நல்ல அன்பு உண்டு. அவரைப் பொறுத்த வரையில் ஒரு சந்தர்ப்பவாதி. வல்லத்தரையனிடம் இயல்பாகவே அவருக்கு ஒரு அச்சம். அதனால் அவனுக்கு எது பிடிக்குமோ அதைச் சொல்வார். ஆனால் நம்மிடம் பழகும்போது நமது கருத்துக்கு எதிர்க் கருத்தைக்கூடச் சொல்வார். வல்லத்தரையன் மைத்துனன் உறங்காப்புலி என்று ஒருவன் இருக்கிறான். அவன்தான் பாதிக்கு மேலாகப் பட்டமங்கலத்துக்காரரைப் பாகனேரிக்குப் பகையாளிகளாக ஆக்கி வைத்திருப்பவன்.''

''அவனுக்கு ஏன் பாகனேரி மீது அவ்வளவு வெறுப்பு?''

''அது தெரியாதா உனக்கு? பாகனேரி அம்பலக்காரன் 'வாளுக்குவேலித்தேவன்' தனது உயிருக்கு மேலாக நேசிக்கிற உடன்பிறப்பு கல்யாணி நாச்சியாரை அந்த உறங்காப்புலி, பெண் கேட்டுத் தூது அனுப்பினான்!' தூ! தூ! என்று காறித்துப்பி அனுப்பிவிட்டேன்! பிறகென்ன கல்யாணி, நான் வளர்க்கும் சோலைப் பசுங்கிளியை, சொக்கத் தங்கத்தை ஒரு காண்டாமிருகத்தின் கையிலா ஒப்படைப்பேன்? இரண்டு ஆண்டுகளுக்குமுன் அவன் பெற்ற ஏமாற்றத்தால் அவனுக்கு விளைந்த ஆத்திரத்தில் பழிவாங்கும் நெஞ்சுடன் திரிந்து கொண்டிருக்கிறான். பட்டமங்கலத்து அம்பலக்காரர் சம்பந்தியானது மட்டுமல்ல. அங்கே அவன் குடியேறிக்கொண்டு

பாகனேரி மீது பகை மூட்டுவதையே தனது தலையாய தொண்டாகக் கொண்டிருக்கிறான்.''

''அப்படியானால் அண்ணா, இவ்வளவும் என்னால் வந்ததுதானா?''

''உன்னால் எனக்கு எந்த இடர்வரினும் தாங்கிக் கொள்வேன் கல்யாணி! ஆனால் உனக்குத் துரும்பின் முனையளவு துன்பம் வரினும் என்னால் தாங்கிட முடியாது! தண்ணீராயிருக்கும் உன் அண்ணன் மனம் அப்போது உலகையழிக்கும் ஊழியாக மாறிவிடும்.''

அண்ணன், தன்மீது கொண்டுள்ள அளவு கடந்த பாசத்தை அறிந்தவள்தான் கல்யாணி எனினும், அவன் இப்போது உதிர்த்த உறுதி நிறைந்த சபதத்தைக் கேட்டு ஆனந்தக் கண்ணீர் பொழிந்தாள். அந்தச் சகோதர பாச உந்துதலில் வைரமுத்தனைப் பற்றிய நினைவுகள்கூட எங்கேயோ ஒதுங்கிக் கொண்டன.

வாளுக்குவேலி அம்பலக்காரர் வீட்டு வாசலில் வண்டி வந்து நின்றது. அந்த வண்டிக்கு முன்பே கறுத்த ஆதப்பன் குதிரையில் வந்து அங்கு இறங்கி அண்ணனை யும் தங்கையையும் எதிர்பார்த்துக் கொண்டிருந்தான்.

வாளுக்கு வேலி வண்டியில் இருந்து இறங்கியதும் ஆதப்பன் அவனைப் பார்த்து, ''அண்ணா! ஒரு வழக்குக் காத்துக் கொண்டிருக்கிறது'' என்றான்.

''என்ன வழக்கு?'' என்று கேட்டுக்கொண்டே வாளுக்குவேலி முன்னோக்கி நடந்தான்.





# 6

அந்தந்த நாடுகள் மட்டும் சம்பந்தப்பட்ட வழக்குகளை அந்த நாட்டு அம்பலக்காரரே விசாரணை நடத்தி முடிவுகளை அறிவிப்பதும்-இரண்டு மூன்று நாடுகள் தழுவிய பிரச்சனையாக இருந்தால், அம்பலக்காரர்களின் கூட்டம் சவுக்கைகளில் கூட்டப்பட்டுத் தீர்வு காண்பதும் கடைப்பிடிக்கப்பட்டு வருகிற முறை என்கிற காரணத்தால் தன் வீட்டுக்கு முன்னால் வந்து நிற்கும் வழக்கை, தானே விசாரிப்பதற்கு வாளுக்குவேலி முனைந்தது அன்றைக்கு மட்டும் நடக்கிற புதுமையல்ல! பழகிப் போன ஒன்று!

ஆடவரும் பெண்டிருமாகப பத்துப் பதினைந்து பேர் வீட்டு வாசலில் நிற்பது கண்ட கல்யாணி நாச்சியார் மளமளவென்று வீட்டுக்குள் போய் விட்டாள்.

''ஆதப்பா! வழக்கு விபரத்தைச் சொல்! எங்கே போய்விட்டார் மேலாளர் மேகநாதன்?'' இந்தக் குரல் சற்று ஓங்கி ஒலித்ததும் ''இதோ இங்கே தானிருக்கிறேன்!'' என்று பதில் அளித்துக் கொண்டே ஒரு நடுத்தர வயதுடைய மனிதர், கையில் சில கணக்குப் புத்தகங்களுடன் எதிர் வந்து நின்றார்.

கதிர்க்கட்டு மீசையும் கம்பீரமான உருவமும் கொண்ட மேகநாதன், ஆதி திராவிட சமுதாயத்தைச் சேர்ந்தவன். வாளுக்கு வேலியின் வீட்டு விவகாரங்

களையும் - வாளுக்கு வேலியின் ஆளுகைக்கு அடங்கிய கிராமங்களின் நிர்வாகங்களையும் தலைமையேற்றுச் செம்மையாகச் செயல்படுத்தக்கூடிய ஆற்றல் கொண்டவன். ஏறத்தாழ மேகநாதனும் வாளுக்கு வேலியும் ஒத்த வயதுடையவர்கள்.

அவன் எதிர் வந்து நின்று வணக்கம் தெரிவித்தவுடன் வாளுக்கு வேலியும் பதிலுக்கு வணக்கம் தெரிவித்துவிட்டு அவனது தோள்களில் தனது கையைப் போட்டுக் கொண்டு குலவியவாறு அவனது பதிலை எதிர்பார்த்து நின்ற அந்தக் காட்சி, வாளுக்கு வேலியின் சமத்துவ நோக்கத்திற்கு ஒரு எடுத்துக்காட்டாக விளங்கியது. மேகநாதன் வாளுக்கு வேலிக்கு நேராகச் சரிசமமாக உட்கார்ந்து விவாதங்கள் நடத்துவது மாத்திரமல்ல, அந்தச் சிறிய மாளிகை வீட்டில் அடுக்களை வரையில் சென்று சமையல்காரர்கள் ஒழுங்காகப் பணியாற்றுகிறார்களா என்று பார்ப்பது வரையில் எல்லாப் பணிகளையும் மேற்பார்வையிட்டு வருவதை வழக்கமாகக் கொண்டவன். வாளுக்கு வேலியின் இந்தச் சமத்துவக் கொள்கையை ஓரிரு அம்பலக்காரர்கள் போற்றினர். ஓரிருவர் தூற்றினர். ஆனால் யாரும் வெளிப்படையாக மேகநாதனுக்கு எதிராகப் போர்க்கொடி உயர்த்திப் புறப்படவில்லை.

எப்படியோ பிரிந்து போய்க் கிடக்கிற வகுப்பினரெல்லாம் ''அனைவரும் ஓர் குலம்-அதுவே தமிழ்க் குலம்!'' என்று ஒன்று சேர்ந்திட வேண்டுமென்ற வாளுக்கு வேலியின் இதயத் துடிப்புக்கான செயல் வடிவம் தான், மேகநாதன் அங்கே மேலாளர் பதவியில் அமர்த்தப்பட்டிருப்பது!

''இதோ இந்தப் பாட்டியம்மாதான் தனது கிராமத்துத் தெருவாரையெல்லாம் அழைத்துக் கொண்டு வந்திருக்கிறார். அதுதான் இன்றைக்கு முக்கியமான வழக்கு.''

மேகநாதன் இதைச் சொல்லி முடிப்பதற்குள் பழப் பருவத்தையும் தாண்டிக் கொண்டிருக்கும் அந்தப் பெரியம்மா, கண்ணீர் கொட்டியவாறு அம்பலக்காரருக்கு எதிரே வந்து நின்றாள். கை கால்கள் தளர்ச்சியால் அல்ல; உணர்ச்சி வயப்பட்டிருந்த காரணத்தால் நடுங்கிக் கொண்டிருந்தன. தலையோ கழுத்தில் நிற்க மனமின்றி ஆடிய வண்ணமிருந்தது.

''நாட்டாண்மைக்கார மகராசா! உங்க நாளிலே இந்த அநியாயம் நடக்கலாமா?'' கிழவியின் வினாக் கணை வேகமாகப் புறப்பட்டது.

''என்ன பாட்டி? என்ன நடந்தது? போன மாதம் தானே உங்கள் புதல்வனுடன் வந்தீர்கள்? அதற்குள் என்ன விவகாரம்?'' வாளுக்குவேலி படபடத்தான் பாட்டியின் கோலம் கண்டு.

''இன்றைக்கு என் மருமகளோட வந்திருக்கேன்! பாருங்க சாமி அவள் கழுத்தை!''

அந்தத் தாயின் கதறல் வீட்டுச் சுவரில் மோதி எதிரொலித்தது.

அந்த அழகான மருமகளின் கழுத்தில் தாலியைக் காணோம்!

வாளுக்கு வேலிக்கு அதிர்ச்சி! அன்று இந்தக் கிழவியுடன் வந்த அந்த இளைஞன் இறந்து போய் விட்டானா, இந்தக் கட்டழகியைக் கைம்பெண்ணாக ஆக்கிவிட்டு? அதற்குள் அவன் விழிகள் அந்தப் பெண்ணின் முகத்தில் இருந்த மஞ்சளையும் நெற்றியில் இருந்த குங்குமத்தையும் கவனித்து விட்டுக் குழம்பிப் போய்ச் சுருங்கிக் கொண்டன!

''ஒன்றுமே புரியவில்லையே பாட்டி!'' வாளுக்கு வேலிக்குப் பதில் சொல்ல முடியாமல் பாட்டி அழுது கொண்டிருந்தாள். அவனைத் தனது கரங்களால் அரவணைத்துக் கொண்டு வியப்புற்று நின்றான் வாளுக்கு வேலி! மேகநாதன் நடந்தவைகளை விளக்கிட முன் வந்தான்.

தன் மகன் மதுபானத்திற்கு அடிமையாகி வீட்டைப் பற்றிக் கவலையற்று, ஊரார் இகழ்ந்திட, உற்றார் ஏசிட, குடிகாரனாகத் தெருவில் உருள்வதைச் சகிக்க முடியாமல் தான் கடந்த மாதம் அவனை இழுத்து வந்து வாளுக்கு வேலியின் முன்பு அவள் நிறுத்தினாள். வாளுக்குவேலியின் வார்த்தைகளுக்கு மதிப்பு வைத்து அன்று முதல் குடிப்பதை நிறுத்தி விடுவதாகத் தாயின் மீது சத்தியம் செய்தான் அந்தப் பாட்டியின் மகன்!

''என் மேல் சத்தியம் செய்து கொடுத்தானே சாமி! அந்த சத்தியம் என்ன ஆச்சுன்னு கேளுங்க அய்யா! தாயின் மேலாணையா நானும் குடிக்க மாட்டேன், என் சகாக்களையும் குடிக்க விட மாட்டேன்னு உங்க முன்னாலேதானே தலைமேல அடிச்சான்! இப்ப என்ன நடக்குது தெரியுங்களா? தாயைத் தூக்கித் தெருவிலே எறிஞ்சாச்சு! சத்தியத்தைத் தூக்கிச் சகதியிலே போட்டாச்சு! இப்ப எங்க கிராமத்துச் சாவடியிலேயே கடை திறந்துட்டானுங்க, என் மகனும் அவன் கூட்டாளிகளும் சேர்ந்துகிட்டு! பொழுது முழுக்க போதையிலேயே கிடக்கிறான். போதும் போதாததுக்கு அவன் பெண்ஜாதி-என் மருமகள் கழுத்திலே கிடந்த தாலிச் சங்கிலியையும் தாலியோட கழற்றி வித்துட்டுக் குடிச்சிட்டான் பிரபு-குடிச்சிட்டான்!''

கிழவி மாரடித்துக் கொண்டு புலம்பத் தொடங்கினாள். ''அடடே! தேர்த் திருவிழாவும் அதுவுமா அய்யா வீட்டு வாசலிலே அதெல்லாம் கூடாது'' என்று அவளுடன் வந்தவர்கள் அவளைத் தடுத்து நிறுத்தினார்கள்.

வாளுக்கு வேலியின் கண்கள் திருவிழா மகிழ்ச்சியில் மலர்ந்திருந்தவை; இப்போது சிவப்பு நட்சத்திரங்களாயின! அந்தத் தாயின் சோக முகத்தையும் கணவனிருக்கும்போதே தாலியிழந்து நிற்கும் அந்தத் தையலின் அலங்கோல வடிவத்தையும் அவன் கண்கள் மாறிமாறிப் பார்த்தன.

''இப்போது எங்கே அவன்?''

விழா நேரத்து வெடி முழக்கத்தையும் மிஞ்சிக் கிளம்பின அந்தச் சொற்கள்!

''இதோ இருக்கேன்! என்ன வேணும் அம்பலக்காரரே! தவமிருந்து என்னை அழைத்த காரணம் யாதோ? தரிசனம் தர வந்துவிட்டேன்! பக்தா! தயக்கமின்றிக் கேள், உனக்குத் தேவையான வரத்தை!''

கிழவியின் மகன் குடிவெறியில் உளறிக்கொண்டு அந்தக் கூட்டத்தில் புகுந்து பாகனேரி அம்பலக்காரரின் முன்னால் பயம் சிறிதுமின்றி வந்து நின்றான்! இல்லை இல்லை! நிற்க முடியாமல் தடுமாறினான்! அதற்குள் அவன் மனைவி பாய்ந்து சென்று அவன் வாயைத் தன் கை கொண்டு பொத்தினாள்.

''ஏய்! இதுதான் நீ தாயின் மீது ஆணையிட்ட அழகோ!''

இடியொலி! ஆம்-வாளுக்குவேலி அந்தக் குடிகார வாலிபனைப் பார்த்துக் கேட்டான்.

''தாய்! தாய் என்றால் என்ன? தாய் என்பது ஒரு தத்துவம்! ''தத்துவம்'' என்பது ''நமசிவாய'', ''சிவாய நம'' என்பது போல-ஐந்தெழுத்தால் ஆன ஒரு மந்திரம்!''

''அடே! இனிக் குடிப்பதில்லையென்று உன்னைப் பெற்ற தாயின் மீது சத்தியம் செய்தாயா இல்லையா? அதுவும் இதே இடத்தில் என் முன்னிலையில்?''

''செய்தால் என்ன? எழுபத்து எட்டு வயதுத் தாயார் இறந்து போனால் இடுகாடெல்லாம் எலும்பாகவா போய்விடும்?''

''என்ன சொன்னாய்?''

வாளுக்குவேலியின் கைகள் அந்தக் குடிகார வாலிபனின் கன்னத்தில் பயங்கரமாக விளையாடி விட்டன.

மகனைப் பற்றிக் குறை கூற வந்த அந்தக் கிழத்தாய், அம்பலக்காரரின் கால்களில் விழுந்து ''அய்யோ! அவனை விட்டு விடுங்கள்!'' என்று கூக்குரலிட்டாள்! தாய்மை அங்கே கொடிகட்டிப் பறந்தது.

''அவருக்காக நான் மன்னிப்புக் கேட்டுக்கிறேன். அத்தானை ஒண்ணும் செய்யாதீங்க'' என்று குறுக்கே பாய்ந்து கணவனைக் கட்டிக்கொண்டு விம்மியழுதாள் அந்தப் பெண்மணி! கழுத்தில் தாலியில்லாவிட்டாலும் - அதைக் கழற்றி விற்றவன் கணவன் தானே என்ற ஆறுதலுடன்; பெண்மை அங்கே பேரரணாக நின்று பாதுகாத்தது!

பெற்ற தாயும்-உற்ற தாரமும், தன் மீது தூசு படவும் சகிக்கமாட்டார்கள் என்பதை அந்தக் குடி மயக்கத்திலும் புரிந்து கொள்கிற அளவுக்கு வாளுக்கு வேலி கொடுத்த அடி உதவிற்று போலும்! மயக்கம் தெளிந்தவனாக ஒருகணமும் தயக்கமின்றிக் காலில் விழுந்து ''அம்மா! என்னை மன்னித்துவிடு!'' என்று அலறினான். மனைவியின் கரங்களைப் பற்றிக் கொண்டு ''என்னை நம்பு! இனி இந்தத் தவறு செய்யவே மாட்டேன்'' என்று கெஞ்சினான்.

வாளுக்குவேலியின் பாதங்களைப் பற்றிக் கொண்டு அவற்றைத் தன் கண்ணீரில் நனைத்தான்! குமுறிக்

கொண்டிருந்த எரிமலையிலிருந்து திடீரெனக் குளிர் புனல் அருவி கொட்டுவதுண்டோ? உண்டு என்பதற்கு உதாரணம்தான் வாளுக்குவேலியின் கண்ணீர் போலும்! அவனைத் தூக்கி ஆரத் தழுவிக் கொண்டான்.

''தம்பி! உன்னைப் பலமாக அடித்து விட்டேன்! உனக்கு ஒரு அண்ணன் இருந்திருந்தால் இப்படித்தானே கண்டித்திருப்பான் என்று எண்ணிக் கொள்ளடா தம்பி! இதோ இந்தக் கறுத்த ஆதப்பனைத்தான் இப்போது நான் அடித்தேன். புரிகிறதா நான் சொல்வது?''

வாளுக்குவேலியின் குரல் தழுதழுத்தது!

''சாமீ! என்னோட மூத்த மகன் என்னோட இளைய மகனைத் தண்டிச்சதாகத்தான் நான் நினைக்கிறேன்.''

ஆதப்பன் குறுக்கிட்டு ''அடி உதவுவது போல அண்ணன் தம்பிகள் கூட உதவ மாட்டார்கள் அம்மா!'' எனக் கூறிக் கண்ணீர் வழிந்த முகங்களில் களிப்பு நடனமாடச் செய்தான்!

சிரித்துக் கொண்டே வாளுக்கு வேலி ஆதப்பனிடம் நெருங்கி ''அண்ணன் தம்பிகூட உதவ மாட்டானா? அப்படின்னா உனக்கு அடிதான் உதவுமா?'' என்று கையை ஓங்கினான்.

''நீர் இடித்தா நீர் விலகிவிடும்? நன்றாக அடியுங்கள் அண்ணா!'' என்றான் ஆதப்பன் மகிழ்ச்சி பெருக்கெடுத்திட! சோகத்தில் முளைவிட்டு, வேகத்தில் அரும்பிய வீட்டு வாசல் நிகழ்ச்சி, ஆனந்தத்தில் மலர்ந்து மணம் வீசியது!

''நீங்க ரெண்டு பேரும் நல்லா இருப்பீங்க! சரசுவதி, லட்சுமி மாதிரி, ரெண்டு பேருக்கும் பெண்ஜாதிங்க அமையணும்னு பகவானை வேண்டிக்கிறேன்.''

பாட்டியின் வாழ்த்து பரவசத்துடன் வெளிப்பட்டது!

''என்ன தாயே! எங்கள் திருமணத்தைப் பற்றி அதற்குள் வாழ்த்து!... எங்களுக்கு ஒரு தங்கை இருப்பது மறந்துவிட்டதா? கல்யாணி நாச்சியாருக்கு நல்ல இடமும் நலமான வாழ்வும் கிடைத்திட நாள் தோறும் நான் கடவுளிடம் முறையிட்டுக் கொண்டிருக்கிறேனே!''

''கடவுள் கைவிடமாட்டார் சாமி! உங்க தங்கச்சி நாச்சியாரம்மாவுக்கு மன்மதன் மாதிரி மாப்பிள்ளை கிடைக்கத்தான் போறான்! அது ஒரு மகாராணி மாதிரி சகல சௌபாக்யத்துடனும் வாழத்தான் போவுது!''

அந்த மூதாட்டியிடம் இந்த வார்த்தைகளைக் கேட்கக் கேட்க அந்தச் சகோதர நெஞ்சம் பூரிப்பால் விம்மியது! விழிகள் இன்ப உணர்வில் சொக்கிப் போயின! ''கல்யாணி! கல்யாணி!'' என்று வாளுக்குவேலியின் உதடுகள் பாசத்தை உச்சரித்தன.

''ஆதப்பா! இவர்களை இன்று நம் வீட்டிலேயே தங்க வைத்து இவர்களது தேவைகளையெல்லாம் கவனித்து, நிறைவு செய்து சந்தோஷமாக அனுப்பி வைக்கும் ஏற்பாடுகளைச் செய்!''

வாளுக்குவேலியின் பீடு நடை! வீட்டுக்குள் நுழைந்தான் நிறைந்த மகிழ்வுடன்!

''கல்யாணி! கல்யாணி!'' கனிவு மிகுந்த அந்த அழைப்புக் கேட்டு ''என்ன அண்ணா?'' என்று அன்புத் துள்ளலுடன் எதிர் வந்து நின்றாள் அவள்!

''இன்று பட்டமங்கலம் அம்பலக்காரருக்கும் அவருடன் வந்திருப்பவர்களுக்கும் நம் இல்லத்தில் விருந்து! சமையல்கார காடையும் கௌதாரியும் எங்கே?''

''இதோ வந்துட்டோங்க!'' சமையல்காரன் காடையும், சமையல்காரி கெளதாரியும் மரியாதையுடன் வந்து வணங்கி நின்று உத்தரவை எதிர்பார்த்தார்கள்.

''பட்டமங்கலத்துக்காரர்களுக்கு விருந்து பிரமாதமாக இருக்கணும்! போய் ஏற்பாடுகளைச் செய்யுங்கள்! முயல்கள், மான்கள், கோழிகள், ஆடுகள்.... அவைகளில் எத்தனைப் பக்குவங்கள் உண்டோ அத்தனையும் சிறப்பாக இருக்க வேண்டும்.''

''ஏன் அண்ணா, நான் கூட இன்றைக்குச் சமையலைக் கவனிக்கிறேனே!''

''என்னம்மா இது? அடுக்களைப் பக்கமே இது வரையில் உன் கால் பட்டதே கிடையாதே! இளம் அரும்புகள் போன்ற உன் விரல்கள் எலும்புகளையும் இறைச்சித் துண்டுகளையும் தொட்டாலே வாடி விடுமே!''

''ஆமண்ணா, என்னை இப்படியே வளர்த்து எதிர் காலத்தில் கடுகளவு கஷ்டத்தைக் கூடச் சந்திக்கிற வலிவில்லாமல் செய்து விடுங்கள்!''

சிணுங்கினாள் கல்யாணி நாச்சியார்! செல்லம் கொஞ்சிப் பேசினான் வாளுக்கு வேலி!

பட்டமங்கலத்து அம்பலக்காரர் வகையறாவுக்கு விருந்து என்றதும் கல்யாணியின் மனத்தில் ஏற்பட்ட கிளுகிளுப்பை அவளது அண்ணனால் அறிந்து கொள்ள முடியவில்லைதான்!

தேவாலயத்து மண்டபத்திலும், தேரோட்டத்தில் ஏற்பட்ட குலுங்கலிலும், பெட்டி வண்டியில் வழி அனுப்பி வைக்கப்பட்ட போதும் அவள் நாடித் துடிப்புகளுக்கு மிகுந்த வேகத்தை வழங்கிவிட்ட வைரமுத்தனும் விருந்துக்கு வருவான் என்ற அசைக்க

முடியாத நம்பிக்கையல்லவா அவளை அடுக்களைக் காரியங்களை ஆற்றிடத் துரத்துகின்றது!

அப்போது அங்கு வந்த மேலாளர் மேகநாதனைப் பார்த்து ''மேகநாதன்! தெரியுமா சேதி, இன்று விருந்துக்கான சமையல் வேலையில் கல்யாணியும் பங்கு கொள்கிறாள்!'' என்றான் மிகப் பெரிய உலகச் செய்தி போல - வாளுக்கு வேலி!

''அப்படியா? மகிழ்ச்சிதான்! ஆனால் ஒன்று பட்டமங்கலத்துக்காரர்கள் விருந்துக்கு வரமாட்டார்கள் என்று தெரிகிறதே!''

மேகநாதன் இதைச் சொன்னதும் வாளுக்கு வேலி காரணமறியத் துடித்தான்! கல்யாணி நாச்சியாருக்குத் தலை சுற்றுவது போலிருந்தது!





# 7

"ஊர்ப் பிரச்சினைகள் பற்றிய ஆலோசனைகளைக் கூறி அலுவல்களைக் கவனிப்பது முதல் உக்கிராணம், அடுக்களை வரையிலே ஒரு தீண்டத்தகாத சாதிக்காரன் புழங்கிக் கொண்டிருப்பது; அந்த வீட்டுக்கு நாம் விருந்தருந்தப் போவதா ? என்று பட்டமங்கலத்து நாட்டைச் சேர்ந்த சிலர், அவர்கள் தங்கியிருக்கும் விடுதியில் பேசிக் கொண்டார்களாம். அதைத்தான் சொன்னேன்."

மேகநாதனின் இந்த விளக்கத்தைக் கேட்டதும் வாளுக்கு வேலி, மீசையைத் தடவிக் கொண்டு மௌனம் சாதித்தான்! கல்யாணியும் அமைதியின் உருவமாக அசைவற்று நின்றாள்!

"இவர்கள் விருந்து சாப்பிட்டுத்தான் தீரவேண்டும்! இவர்களது பாதத் தூளிகள் பாகனேரி அம்பலக்காரர் வீட்டில் பட்டால்தான் நாம் பாக்கியம் செய்தவர்கள் ஆவோம்! என்றெல்லாம் கெஞ்சுகிற இயல்பு எனக்கு இல்லாததால் பட்டமங்கலத்தாரைப் பார்த்து வெட்டு ஒன்று துண்டு இரண்டு என்கிற முறையிலே கண்டிப்பாகப் பேசிவிட்டு வந்துவிட்டேன்."

இவ்வாறு உரத்த குரலில் உறுமிக்கொண்டு வந்து நின்றான் கறுத்த ஆதப்பன்.

'சரி, அவர்கள் வரப் போவதில்லை!'

- முடிவு கட்டிக் கொண்டாள் கல்யாணி! முழு நிலவு முகம் சோக முகிலால் திரையிடப்பட்டது! முழுச் செய்தியும் அறிந்து கொள்வதில் ஆவல் காட்டி அங்கேயே இருந்தாள்.

''என்ன ஆதப்பா நடந்தது?''

''மேகநாதன் சொன்னாரே; அதுதான் அண்ணா! அதைக் கேள்விப்பட்டதும் நானே நேரில் அவர்கள் தங்க வைக்கப்பட்டிருக்கும் விடுதிக்குச் சென்றேன்!''

''விபரமாகத்தான் சொல்லேன்! அதையும் விரைவாகத்தான் சொல்லேன்!''

''சொல்லுகிறேன்! 'பட்டமங்கலத்தாரே! நீங்கள் என்னைவிட வயதில் மூத்தவர்! நானோ இளைஞன்! அதனால் எடுத்தேன் கவிழ்த்தேன் என எதுவும் பேசி விடாதீர்கள்! ஆண்டவனை நம்புகிறோம் நாம்! அவனுக்கு அடங்கியவர்கள் நாமென்று கூறிக் கொள்கிறோம்! அவன் படைப்பே மனித இனமும் கூட என்று பறைசாற்றிக் கொண்டிருக்கிறோம். அந்தப் படைப்பில் உயர்வு தாழ்வுகள் பிரித்து-வகுப்புக்களைப் பிரித்து-ஒருவன் தொழுதற்குரியவன்; இன்னொருவன் தொடுதற்கே தகுதியற்றவன் என்றெல்லாம் கோட்பாடுகளைக் கடைப்பிடிப்பது நியாயந்தானா?

''அந்த நியாய அநியாயங்கள் கூட ஒரு புறத்தில் கிடக்கட்டும்! மேகநாதன் எங்கள் வீட்டில் சமத்துவமாக, நட்புறவாக, எங்கள் உடன் பிறப்பைப் போல நடத்தப் படுவதை நீங்கள் ஏற்றுக் கொள்ளவில்லை. அதனால்தான் விருந்துக்கு வர மறுத்து விட்டீர்கள் என்ற செய்தி பரவிடுமேயானால், அந்தச் செய்தி எவ்வளவு பெரிய சாதிக் கலவரத்திற்கு வித்திட்டு விடும் தெரியுமா? அதன் விளைவுகளைப் புரிந்து கொண்டீர்களா?

''அந்தப் பயங்கரமான அமளிக்குப் பட்ட மங்கலத்தார் எடுத்த முடிவுதான் காரணமென்று உலகம் கூறாமல் போய்விடுமா?' அண்ணா! இப்படியெல்லாம் நான் கேள்வி மேல் கேள்விகளைக் கேட்டதும் வல்லத்தரைய அம்பலக்காரர் வாய்மூடி மௌனியாகி விட்டார்! எனக்கு ஆதரவாக அங்கே வைரமுத்தனின் குரல் ஒலித்தது!''

கல்யாணி நாச்சியாரின் முகத்தில் கிழக்குத் திசையின் ஒளி மெல்லக் கிளம்பிற்று!

''வைரமுத்தனின் வாதங்கள் எனக்குச் சாதகமானவை! நான் வைத்த கருத்துக்களைவிட வலுவானவை. கறுத்த ஆதப்பன் சொல்வதை அலட்சியப் படுத்திவிடக் கூடாது என்று அழுத்தம் திருத்தமாகச் சொன்னான் வைரமுத்தன்!''

கல்யாணி நாச்சியாரின் வதனமா? எழு ஞாயிற்றின் வண்ணமா? சற்று நேரத்திற்கு முன்பு இருண்டு கறுத்திருந்த முகம்தானா அது?

''வைரமுத்தா! என்றைக்கு உன்னை நான் மீறி நடந்திருக்கிறேன். இருந்தாலும் மூதாதையர் காலத்தி லிருந்து இருந்து வரும் ஏற்றத் தாழ்வுகளைச் சாதாரண மேடு பள்ளங்களாக எண்ணி மண்வெட்டி கொண்டு சமப்படுத்தி விடுவது அவ்வளவு எளிதா?''

''அண்ணா! மண்ணில் ஏற்படும் மேடு பள்ளங்களை ஆற்று வெள்ளம் கூடச் சில சமயங்களில் சமப்படுத்தி விடும்! மனித வர்க்கத்துச் சாதி சமய மேடு பள்ளங்களைச் சமப்படுத்துவதற்கு இரத்த ஆறு பெருக்கெடுக்கும் நிலையை நாம் ஏற்படுத்திவிடக் கூடாதல்லவா?''

''சரி தம்பி வைரமுத்தா! உன் கருத்துப்படி பாகனேரி யார் வீட்டு விருந்துக்குப் போகிறோம்!''

- தம்பி ஆதப்பனின் முதுகில் தட்டிக் கொடுத்து, ''சபாஷ்! நீயும் வைரமுத்தனும் சேர்ந்து வல்லத்தரையனை வளைத்தே விட்டீர்கள்!'' என்று கலகலவெனச் சிரித்தான் வாளுக்கு வேலி!

பாகனேரி இல்லத்து விருந்துக்கு எப்படியும் வர வேண்டுமென்று வைரமுத்தன் ஆர்வம் காட்டுவதிலும் ஆச்சரியமிருக்க முடியாது! அந்த விருந்து எப்படியும் நடைபெற வேண்டுமென்று இரண்டு உள்ளங்கள் உருகின! எதிர்பார்த்து ஏங்கின!

'அடடா! அவர் எப்படித்தான் வாதாடியிருக்கிறார்!' யாருக்கும் தெரியாமல் கல்யாணியின் இதயத்தில் ஒரு இன்பச் சதிராட்டம் நடைபெற்றுக் கொண்டிருந்தது.

''இன்று உன் தங்கை கல்யாணியும் சமைத்திடப் போகிறாள் தெரியுமா ஆதப்பா?''

''அப்படியா? ஏன் கல்யாணி, உண்மைதானா?''

அவள் தலை ''ஆம்'' என்று அசைந்தது! கன்னங்களும் கண்களும் தாங்கள் கொண்ட வெட்க உணர்வை வெளிப்படுத்தாமலிருக்க முயன்று தோற்றுப் போயின.

''கல்யாணிக்கு உதவியாக, நான் கூட இன்று அடுக்களைக்குப் போகப் போகிறேன்.''

எல்லாரும் சிரித்து விடுகிறார்கள். ஆதப்பன், உட்பட!

''என்ன சிரிக்கிறீர்கள்! கல்யாணி குழந்தை; சமைக்கிறேன் என்று கைவிரல்களில் காயத்தோடு வந்து நின்றால் என்ன செய்வது? என் தங்கையின் விரலில் கூட அல்ல; விரலின் நகத்தில்-நகம் கூட அல்ல; நகத்தின் முனையில் சிறு துளி சேதம் ஏற்பட்டால் கூட அதை என்னால் தாங்கிக் கொள்ள முடியாது! இல்லையா கல்யாணி!'' தங்கையை நெருங்கித் தலையில் தடவிக்

கொடுக்கிறான். அவள் கண்கள் களிப்பு மிகுதியால் கடல்களாகின்றன.

அடுக்களை அமர்க்களப்படுகிறது! பட்ட மங்கலத்தார் விருந்து சாப்பிடப் போகிறார்கள் என்பதற்காகவா? கல்யாணி நாச்சியாரும் அவளுக்கு உதவியாக வாளுக்கு வேலியும் சமையற்கூடத்தில் உள்ள பண்ட பாத்திரங்களை உருட்டும்போது அங்குள்ள சமையற்காரன் காடைக்கும் சமையற்காரி கௌதாரிக்கும் கால் ஓடுமா? கை ஓடுமா? மற்ற ஊழியர்கள் கை கட்டிக் கொண்டு வேடிக்கை பார்க்க முடியுமா?

''கல்யாணி! முயல் கறி நன்றாக வெந்துவிட்டது! இதற்கு மேல் இருந்தால் கருகிவிடும்! இறக்கிவிடம்மா!''

''அண்ணா! இதோ இறக்கிவிடுகிறேன்! ஏ அப்பா! பெரிய சட்டி! சூடு வேறு தாங்க முடியவில்லை!''

''இரு! இரு! நான் இறக்கி வைக்கிறேன்!''

''தங்கச்சி! ஆட்டுக்கால் சூப்புக்கு எலுமிச்சம் பழம் பிழிய மறந்துடாதே!''

''மறப்பேனா? இதோ பழங்கள் தயாரா வைத்திருக்கிறேனே!''

பழங்களை வேகவேகமாக அறுக்கிறாள். ''ஆ!'' அவள் விரல் நுனியில் கத்தி வெட்டிவிடுகிறது! இரத்தம் கசிகிறது! வாளுக்கு வேலியின் கண்ணில் இரத்தம் கொட்ட ஓடி வருகிறான்! துடித்துப் போகிறான்! கல்யாணியின் காயம் பட்ட விரலைத் தனது வாய்க்குள் வைத்து, கசியும் இரத்தத்தை உறிஞ்சி விட்டுத் தனது வேட்டியின் நுனிப்பாகத்தைக் கிழித்து அவள் விரலில் சுற்றி விடுகிறான்.

மிகப் பெரும் ஆரவாரத்திற்கிடையே அடுக்களையில் விருந்துப் பண்டங்களாக மாறிய மான்களும், முயல்களும், ஆடுகளும், கோழி முதலிய பறவையினங்களும் வெள்ளித்

தட்டுக்களில் உட்கார்ந்து கொண்டு உணவு மேசைக்கு ஊர்வலமாக வந்து சேர்ந்தன.

பிகு, பிடிவாதம், மறுப்பு, இத்தனைக் கட்டங்களைத் தாண்டிப் பட்டமங்கலத்து வல்லத்தரையன் பாகனேரி மாளிகை வீட்டுக்குள் வந்து நுழைந்தான். வாளுக்கு வேலியும், கறுத்த ஆதப்பனும் வரவேற்று உணவுக் கூடத்திற்கு அழைத்து வந்தார்கள். அவனோடு வெள்ளை அய்யர் வந்ததைப் பார்த்து சமையற்கார காடையும் கௌதாரியும் ஒருவரைப் பார்த்து ஒருவர் சிரித்துக் கொண்டார்கள்.

''சாமி சைவமல்லவா? இதெல்லாம் சாப்பிடுவாரா?'' உணவுக் கூடமோ ஒரு பெரிய யுத்தம் முடிந்து அதற்கடுத்த நாளைப் போலக் காட்சி தருகிறது!

வெள்ளை அய்யர் அதே உணவு மேசையில் தனக்குத் தனியாக ஒரு இலை போடச் சொன்னார்! சைவமிருந்தால் பரிமாறச் சொன்னார்! இல்லையேல் சோறு! அதற்குக் கொஞ்சம் மோர்! முட்டை மாத்திரம் சாப்பிடலாம்; அதில் இறைச்சியோ எலும்போ கிடையாது! அதனால் அது சைவத்தில் சேருகிறது என்பது அவர் வாதம்.

எதிர்பார்க்கப்படுகிற அந்த உருவம் இன்னும் உணவுக் கூடத்தில் நுழையவில்லையே! இப்படியொரு ஏக்க உணர்வோடு இரண்டு விழிகள் எங்கோ ஒரு மூலையில் இருந்து அலைந்து கொண்டிருக்கின்றன. வல்லத்தரையனை உட்கார வைத்துவிட்டு வெளியே சென்ற தனது அண்ணன் கறுத்த ஆதப்பன், வைரமுத்தனோடு தான் உள்ளே வருவான் என்ற எதிர்பார்ப்பு இதயத்தை என்னமோ செய்தது கல்யாணிக்கு!

ஒரு நாள் சந்திப்புதான்! அதுவும் கர்லையிலே சந்தித்ததுதான்! ஆனால் அவனது திறமை, வலிமை, இயல்புகளைப் பற்றித் தனது அண்ணனைப் போலவே பலரும் சொல்லக் கேட்டிருக்கிறாள். அந்த இனிய

செய்திகள் எல்லாம் இனிக் கட்ட இருக்கிற காதல் கோபுரத்திற்கு அழுத்தமான அடித்தளக் கற்களாகி விட்டிருக்கின்றன, இவளை அறியாமலேயே!

அவன் வந்துவிட்டால் அவள் போய்ப் பரிமாறுவதா இல்லையா? என்றைக்குமில்லாமல் இன்றைக்கு அடுக்களை அலுவலுக்குச் சென்றதே அண்ணனுக்கும் மற்றவர்களுக்கும் அதிசயமாக இருக்கும்போது, உணவு பரிமாறவும், கிளம்பிவிட்டால் எல்லோரும் என்ன நினைப்பார்கள்? அது மட்டுமல்ல; பரிமாறும் போது அந்தக் குறும்புக்கார நாணம் என்ன பாடுபடுத்துமோ?

குழம்புக்குப் பதிலாக சூப்பும் ரசத்திற்குப் பதிலாக மோரும் ஊற்றிவிட்டால்! சே! சே! மானமே போய்விடும்! அதனால் மரியாதையாக ஒதுங்கியிருந்து அவரது அழகைப் பருகிக் கொண்டிருப்பதுதான் புத்திசாலித்தனம்!

என்ன இது கோழைத்தனம்? ஒரு மாவீரனின் தங்கையல்லவா? ஒரு தமிழ்ப் பெண்ணுக்குரிய பண்பாடு காப்பதில் உறுதியாக இருந்து - நானே எல்லோருக்கும் உணவு படைத்தால் என்ன? எல்லோருக்கும் சரி; ஆனால் அவர் முன்னால் சென்று உணவு படைக்கும்போது என் கண்ணுக்கு இலை தெரியுமா? அதிலும் அவரது காந்தக் கண்கள் என் கண்களைக் கௌவி இழுத்து விட்டால் அந்த இடத்திலேயே தடுமாறி விழுந்தாலும் விழுந்து விடுவேன்!

அதிருக்கட்டும். நான் இவ்வளவு போராட்டத் திற்கிடையே தத்தளித்துக் கொண்டிருக்கிறேன். இன்னும் அவரைக் காணவில்லையே! ஒருவேளை அவர் பட்டமங்கலம் போய்விட்டாரா? அய்யோ! இதற்காகவா நான் விரலை வெட்டிக் கொண்டேன்! இன்னும் காணவில்லையே! கல்யாணி தவியாய்த் தவித்துக் கொண்டிருந்தாள்.





# 8

எப்படியோ மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு பதார்த்தம் நிறைந்த வெள்ளித் தட்டொன்றைக் கையிலே ஏந்திக்கொண்டு கல்யாணி நாச்சியார் உணவு மேசைக்கருகே வந்து விடுகிறாள். இலைகளுக்கெதிரே அமர்ந்திருக்கும் அத்தனைப் பேருடைய கண்களும் அவள் மீதே மொய்த்துச் சுழல்கின்றன. ஆனால் அவளது நீலக்குறு நயனங்கள் அவனைத் தேடிக் கண்டு பிடிக்கின்றன. அவனும் அவள் நடந்து வரும் நளினத்தையே இரசித்தவாறு அமர்ந்திருக்கிறான்.

''இட்ட அடி நோக, எடுத்த அடி கொப்பளிக்க'' என்று இந்த அம்பிகாபதி, தன்னைப் பார்த்துப் பாடுவது போல் தோன்றுகிறது! உணவு மேசையில் முதலில் உட்கார்ந்திருப்பவர்க்குப் பரிமாறிவிட்டுப் பிறகு ஒவ்வொருவருக்காகப் பரிமாறுவதுதான் வழக்கம். ஆனால் அவளுக்குத் தன் அண்ணன் இருப்பதும் தெரியவில்லை, பட்டமங்கலத்து அம்பலக்காரர்தான் முக்கிய விருந்தினர் என்பதும் மறந்துபோய் விடுகிறது.

நேராக வைரமுத்தனின் இலையில் பதார்த்தங்களைப் பரிமாறச் செல்லுகிறாள். மொய்த்துக் கிடந்த விழி வண்டுகள் அனைத்தின் சிறகுகளும் வியப்பால் விரிந்து பறக்கத் தொடங்கின. வைரமுத்தனின் இலையருகே சென்றதும் அவள் தலை தானாகவே குனிகிறது. சிறிது

நேரம் மௌனம், அசைவற்ற நிலை. பிறகு பதார்த்தத்தை எடுத்து அவன் இலையில் வைக்கிறாள். வைத்துக் கொண்டே இருக்கிறாள். போதும் என்பது போலக் கையை நீட்டிச் சைகை செய்கிறான். அவள்தான் தன்னையும் மறந்து விட்டாள்; தன்னைச் சுற்றியிருப்போரையும் மறந்து விட்டாளே!

வைரமுத்தனின் இலை-முயல்கறி, மான்கறிகளின் குன்றம் போல் உயர்ந்து நின்றது! முட்டைகள் வேறு உருண்டோடிக் கொண்டிருந்தன! சைகை செய்து பயனில்லை என உணர்ந்த வைரமுத்தன் ''போதும்! போதும்!'' என்றான் அசட்டுச் சிரிப்புடன்!

அந்த வார்த்தைகள் அவளுக்கு இன்ப நாதமாக இருந்திருக்க வேண்டும்-கணீர் கணீர் என்று அந்த இரண்டு சொற்களும் ஒலித்தபோது கல்யாணி நிலை குலைந்தாள். ஆனாலும் அவள் கைகள் ஓயவில்லை. வெள்ளித் தட்டில் இருந்தவை முழுதும் அவன் இலைக்கு மாறிவிட்டன.

வேறு வழியின்றி வைரமுத்தன் திடீரென்று அவளது கையைத் தொட்டுத் தடுத்தான், அவள் தொடர்ந்து பரிமாறுவதை நிறுத்துவதற்காக! அந்தக் கை அவள் கைமீது பட்டதும் அவளுக்கு உச்சி முதல் உள்ளங்கால்வரை இனம் தெரியாத சூடு பரவிற்று. சட்டெனக் கையை அவள் இழுத்துக் கொள்ளவில்லை. அவன் கையுடனேயே இணைத்து வைத்திருந்தாள். அதற்கு மேல் வைரமுத்தனால் பொறுக்க முடியுமா?

மண்ணில் காணும் அழகெல்லாம் போதாதென்று விண்ணில் காணும் அழகையும் ஒன்று திரட்டிப் படைக்கப்பட்ட மங்கை நல்லாள் எதிர் நிற்கும்போது முற்றும் துறந்த முனிவர்களே மேனகையைக் கண்ட விசுவாமித்திரர்கள் ஆகிவிடுவர் என்றால் வைரமுத்தனின் இளமை கொழிக்கும் உணர்வுகள் மட்டும் ஊனமுற்றுக்

கிடந்து விடுமா என்ன! தடுத்திட்ட தன் கையை விட்டு அவள் கையை எடுத்திட மனமின்றி நிற்பதை உணர்ந்து அந்தப் பூங்கரத்திற்கு 'இச்' சென்று ஈந்தான் ஓர் முத்தம்!

''அடே! திமிர் பிடித்தவனே! எவ்வளவு கொழுப்பு உனக்கு?'' இடுப்பில் செருகியிருந்த கட்டாரியை எடுத்துக் கொண்டு வைரமுத்தனின் மீது பாய்ந்தான் கறுத்த ஆதப்பன்!

''அண்ணா நில்! அவரைத் தொடாதே!'' என்று ஆதப்பனை எச்சரித்தவாறு குறுக்கே வந்து நின்று கொண்டாள் கல்யாணி!

''முட்டாளே! முதலில் உன் தங்கையை அடக்கி வைக்கக் கற்றுக் கொள்ளடா!'' என்ற வைரமுத்தன் ஒரு குத்துக் கட்டையைத் தூக்கி அவன் மீது ஓங்கினான். வாளுக்கு வேலி, வல்லத்தரையன், வெள்ளை அய்யர், மற்றும் விருந்தருந்த வந்திருந்தோர் தங்கள் இடங்களை விட்டு எழுந்தோடி வந்தனர். காடையும் கௌதாரியும் விருந்துப் பண்டங்களையெல்லாம் கீழே கொட்டி இறைத்துவிட்டு ஓடினர். மேகநாதன் வெலவெலத்துப் போய் நின்றான்.

''கல்யாணி! கடலினும் பரந்த அளவுக்கு அன்பு செலுத்துகிற அண்ணனுக்கு உன்னால் இப்படியொரு அவமானமா? நமது வம்சத்திலேயே இல்லாத கேவலம்! பண்பாட்டின் விளைநிலங்களாக விளங்குகின்ற நமது இனத்தாரின் நாடுகள் எதிலுமே இல்லாத இழிவுக்கு எப்படியம்மா நீ வித்திடத் துணிந்தாய்? சே! குலத்தின் மானத்தைக் குலையறுத்துவிட்ட நீ இனிமேல் உயிரோடு இருக்கக்கூடாது! ஒன்று நீ சாக வேண்டும்! அல்லது நான் சாக வேண்டும்! என் கையால் வளர்க்கப்பட்ட குலக்கொடியை நானே அறுத்தெறிய எனக்குத் துணிவில்லை! அதனால் உன் தவறுக்கு நானே தண்டனையை ஏற்றுக் கொள்கிறேன்.''

வாளுக்கு வேலி, கட்டாரியை ஓங்கித் தன் நெஞ்சில் சரேலெனக் குத்திக் கொண்டான்.

''அண்ணா! அண்ணா!'' என அலறிக் கல்யாணி மூர்ச்சித்து விழுந்து விட்டாள்!

மூர்ச்சை தெளிந்து கண் விழித்த போதுதான்-வாளுக்கு வேலி எந்தக் காயமுமின்றித் தன்னருகே நின்றிருப்பதையும்-இதற்கு முன்பு நடந்தது அத்தனையும் வைரமுத்தனின் மீது அவளுக்கேற்பட்ட அடங்காத காதல் கற்பனையின் குறும்புச் சேட்டையென்பதையும் - கல்யாணியினால் உணர முடிந்தது!

அவளுக்கு ஏற்பட்ட அதிர்ச்சி அதிகநேரம் நீடிக்கவில்லை! தன்னால் விருந்து ஏற்பாடு கெட்டுவிடக் கூடாதேயென்று உடனே எழுந்து அண்ணன் வாளுக்கு வேலியை விருந்துக் கூடத்திற்குச் செல்லுமாறு கேட்டுக் கொண்டாள்! அப்போது, தானிருக்குமிடத்தைச் சுற்றிப் பட்டமங்கலத்துக்காரர்கள் நிற்பதைப் பார்த்து நாணித் தலை குனிந்து கொண்டாள்!

அவர்களிடையே வைரமுத்தன் நின்றதும், தனக்கு ஏற்பட்ட அதிர்ச்சியால் அவனுக்கு முகம் வாடியிருந்ததும் அவளுக்குப் பெரிதும் ஆறுதல் அளித்தன. வாளுக்கு வேலியின் நெற்றிப் பொட்டில் கோடரியால் பிளப்பதைப் போல ஒரு கேள்வியைக் கேட்டான் வல்லத்தரையன்:

''உங்கள் தங்கைக்கு இதுபோல அடிக்கடி வலிப்பு நோய் வருவதுண்டோ?''

வெள்ளை அய்யர் உடனே அந்த அமங்கலமான கேள்வியை மறுத்துரைத்தார்!

''சின்னஞ்சிறு பெண்ணாக இருந்த காலந்தொட்டு எனக்குக் கல்யாணியைத் தெரியும். அப்படியெல்லாம்

எந்தப் பிணியும் அவளுக்கில்லை. ஏதோ குழந்தை திடீர்னு உணர்ச்சி வசப்பட்டிருக்கு. அதனாலே மயங்கி விழுந்துட்டுது. அவ்வளவுதான்.''

வல்லத்தரையனுக்கு வெள்ளை அய்யர் சொன்ன பதில் போதுமானது என்றாலும் வாளுக்கு வேலியின் உள்ளம் அமைதியின்றி ஊசலாடியது: ''வலிப்பு நோயா?'' என்று பட்டமங்கலத்து அம்பலக்காரர் கேட்டுவிட்டாரே யென்று நொந்து போனான். எத்தனையோ சங்கடங்களைச் சமாளித்துக் கொள்ளும் அவரது உரமேறிய இதயம் இதையும் தாங்கிக் கொண்டது.

மீண்டும் அனைவரும் விருந்துக்கூடத்தில் நுழைந்து அமர்ந்தனர். வைரமுத்தனும் வல்லத்தரையனுக்கு அருகே உட்கார்ந்தான். காடையும், கௌதாரியும் ஓடியாடிப் பரிமாறினர். வெள்ளை அய்யர் முழு முட்டைகள் நாலைந்தை விழுங்கிக் களித்தார்.

நலிவு முழுதும் நீங்கப்பெற்ற கல்யாணி, தனது அறையின் பலகணிப் பக்கம் இருந்தவாறு உணவுக் கூடத்தில் வைரமுத்தன் சாப்பிடுவதையே உற்று நோக்கிக் கொண்டிருந்தாள்! பழையபடி அந்த நினைவு மேகங்கள் சூழ்ந்து இடியும் மின்னலும் புயலும் வெள்ளமும் தன்னைத் தாக்கிவிடக் கூடாது என்ற பயத்துடன் அவளைக் கட்டுப்படுத்திக் கொண்டு அந்தக் கட்டழகன் உணவருந்தும் காட்சியில் இலயித்திருந்தாள்.

''சாப்பாடு எப்படியிருக்கிறது? எல்லாம் என் தங்கை கல்யாணியின் கைவண்ணம்! சமையல் செய்த களைப்பிலேதான் கல்யாணிக்கு மயக்கம் கூட வந்து விட்டது!''

பாகனேரியின் பாசமிகு கேள்விக்குப் பட்டமங் கலத்தின் விமர்சனம் உடனடியாகக் கிடைத்தது. வல்லத் தரையன் வர்ணிக்கத் தொடங்கினான்...

''அருமையான முயல்! மிக இளமையான மான் குட்டி! கோழி! நல்ல விடைக் குஞ்சு!''

வாளுக்கு வேலிக்கு ஒரே பூரிப்பு! கல்யாணியின் மனம் குளிர்ந்தது! வல்லத்தரையன் தொடர்ந்தான்!

''ஆனால் ஒன்று பாருங்கள்! முயலும் மான்குட்டியும் ஓடிய வேகத்திலும், கோழியும் மற்ற பறவைகளும் பறந்த வேகத்திலும், உப்பு, புளி, மிளகாய் எதுவுமே அவைகளின் உடம்பிலே ஒட்டவில்லை!''

வாளுக்கு வேலியின் முகம் சிறுத்தது! கல்யாணியின் முகம் கறுத்தது! கறுத்த ஆதப்பன் சிரித்துக் கொண்டே பதில் அளித்தான்!

''நீங்கள் உப்பு, புளி, மிளகாய் தடவிய முயல்களையும் மான்களையும் வேட்டையாடுவீர்கள்! நாங்கள் அப்படியல்ல! அவற்றை உயிரோடு வேட்டையாடுவோம்! அதனால்தான் உப்பும், புளியும் மிளகாயும் இந்த முயல்கள், மான்களின் உடல்களில் இல்லை!''

வாளுக்கு வேலி சிரிப்பை வெளிக்காட்டாமல் தனது தம்பியின் திறமையைத் தனக்குள் புகழ்ந்து கொண்டான். கல்யாணிக்கு ஒரே பயம், ஏதாவது வம்பு வளர்ந்துவிடப் போகிறதென்று!

''என் அண்ணன் வேடிக்கைக்காக வேண்டுமென்றே கேலி பேசுகிறார்கள். நானும் எத்தனையோ விருந்துகள் சாப்பிட்டிருக்கிறேன்! தேவாமிர்தம் என்று சொல்வார்களே; அதை நான் பார்த்ததில்லை! அதை இப்போது இங்கேதான் பார்க்கிறேன். சாப்பிடுகிறேன். நளபாகம் இதன் முன்னால் நிற்கவே நிற்காது! இதற்குத் தமயந்தி பாகம் என்றே கூடப் பெயர் வைக்கலாம்!''

வைரமுத்தனின் பாராட்டுரைக்குப் பிறகு கல்யாணியின் உச்சந்தலையில் பனிக்கட்டி மழைதான் பெய்தது.

''தமயந்தியா! வேண்டாம் வேண்டாம்; காரிகையைக் காரிருளில் கானகத்தில் கைவிட்டுக் கட்டியவன் ஓடிவிடத் திக்குத் தெரியாத காட்டில் தவித்து நின்றாளே தமயந்தி; அந்தப் பெயரே என் தங்கைக்கு வேண்டாம்!''

அண்ணனின் கேலியைக் காட்டிலும் அந்தச் சமயத்தில் கல்யாணிக்கு வைரமுத்தனின் பாராட்டுரை தான் கற்கண்டும் தேனும் கலந்து தித்திப்பை வழங்கியது.

விருந்து முடிந்து விடை பெற்றுக் கொள்ளும் படலம்! கல்யாணியும் அண்ணன் அருகே வந்து நின்றாள். வல்லத்தரையன் வாளுக்குவேலியைக் கட்டித் தழுவி விடை பெற்றுக் கொண்டான். வைரமுத்தனும் கறுத்த ஆதப்பனும் தழுவிக் கொண்டனர்.

அப்போது அண்ணன் அருகில் தூணில் மறைந்தவாறு இருந்த கல்யாணியின் கரங்கள் அவளையுமறியாமல் தூணைத் தழுவித் தடவிக் கொண்டிருந்தன. கல்யாணி-வைரமுத்தன்; நான்கு விழிகளின் சங்கமம்! இதைத் தொடக்கத்திலேயே தேவாலயத்திலும், தேர்வடம் பிடிக்குமிடத்திலும் வல்லத்தரையன் கவனித்து விட்டதால்தான் ''கல்யாணிக்கு வலிப்பு நோய் வருவதுண்டோ?'' எனக் கேட்டு வைத்தான். அப்படியாவது வைரமுத்தனின் எண்ணத்தில் மாற்றம் நிகழாதா என்பதுதான் அவன் கணிப்பு!

வீரர்கள் ஒருவரையொருவர் வாழ்த்தி விடை பெற்றனர்! விடையளித்தனர்! விழிகள் நான்கும் பிரிய முடியாமற் பிரிந்தன!

அடர்ந்த காடு ஒன்றில் அடித்த புயலில் அத்தனை மரங்களும் வீழ்ந்து விட்டது போன்ற ஒரு சூனியம் கல்யாணியின் கண் முன்னே! அதே சமயம் அடுத்து எப்படியும் சந்திப்போம் என்ற ஒரு அசைக்க முடியாத நம்பிக்கை!

வெள்ளை அய்யர் மட்டும் விருந்துக்குப் பிறகும் வாளுக்கு வேலியுடன் உரையாடிக் கொண்டிருந்தார்.

அப்போது பாகனேரி அம்பலக்காரர் மனம் மட்டும் கல்யாணியின் திடீர் அதிர்ச்சிக்குக் காரணம் கண்டு பிடிப்பதிலேயே ஆழ்ந்திருந்தது. எத்தனையோ அம்பலக் காரர்கள் வீட்டுக்கு விருந்துண்ண வந்திருக்கிறார்கள். அப்போதெல்லாம் அடுக்களைப் பக்கமே போகாத கல்யாணி இப்போது மட்டும் இத்துணை ஆர்வத்தோடு போவானேன்? நான் சாடையாகக் கவனிக்கிறேன் என்பதுகூடத் தெரியாமல் வைரமுத்தனும் கல்யாணியும் ஒருவரையொருவர் விழிகளால்... சே! சே! அதெல்லாம் நடக்கவே கூடாது!

''என்னங்க அய்யர்! கல்யாணி திருமண விஷயமாக ஏதாவது விசாரித்தீர்களா? நல்ல மணமகனாக யாராவது...?''

''விசாரிக்காமல் இருப்பேனா? எத்தனையோ அம்பலக்காரர்கள் வீட்டு மாப்பிள்ளைகள் நான் முந்தி நீ முந்தி என்று போட்டி போடுகிறார்கள்!''

''நான் ஒரு முடிவு செய்திருக்கிறேன். கல்யாணியைக் கிராமாந்திரத்திலே கொடுப்பதில்லை. நல்ல நாகரீகமான பட்டினக்கரைப் பகுதிகளில் அந்தஸ்துள்ள மணமகனாகக் கிடைத்தால்தான்... எனக்கு மன நிறைவு!''

''அது என்ன பிரமாதம்! பட்டினப் பகுதிகளிலே நல்ல ராஜ குடும்பம்-ஜமீன் குடும்பத்தைச் சேர்ந்த மாப்பிள்ளைகள் உயர்ந்த படிப்புப் படித்து விட்டிருக்கிறார்கள். ஆனால் ஒன்று, அந்த மாப்பிள்ளைகள் கிராமத்துப் பெண்களைக் கட்டிக் கொள்வார்களா என்பதுதான்!''

''அப்படியா? நீங்கள் சொல்வதைப் பார்த்தால் என் ஆசை நிறைவேறாது போலிருக்கிறதே!''

''பட்டினத்திலே இருக்கிற மாப்பிள்ளைகள் பெண்ணுக்கு வீணை தெரியுமா? பாடத் தெரியுமா? ஆடத் தெரியுமா? என்றும் கேட்கிறார்கள்!''

''கல்யாணி சிறு குழந்தையாக இருக்கும்போது நடனம் கற்றுக் கொண்டாள்! இப்போது மறந்தே போயிருக்குமே!''

''அதனால் என்ன? ஒரு திறமையான நடன ஆசிரியை கற்றுக் கொடுத்தால் கல்யாணி மிகவும் சுலபமாகப் பெரிய நர்த்தகி ஆகிவிட முடியும்!''

''அய்யருக்குத் தெரிந்த நடன ஆசிரியைகள் அப்படி யாராவது இருக்கிறார்களா?''

''ஏராளமாக இருக்கிறார்கள்! தாங்கள் அழைத்தால் தாராளமாகக் கற்றுக் கொடுப்பார்கள்!''

''யார் என்று சொல்லுங்கள்! கல்யாணி பரத நாட்டியம், பாட்டு, வீணை எல்லாவற்றிலும் திறமை பெறட்டும்! பட்டினக்கரையில் ராஜ பரம்பரை அல்லது பெரிய ஜமீன் வீட்டு மருமகளாகட்டும்! அதுவே என் பிரார்த்தனை!''





# 9

இறுதியாக, வெள்ளை அய்யர் குறிப்பிட்ட அந்த நடன ஆசிரியை அருகாமையில் உள்ள திருக்கோட்டியூரில் தான் இருந்தாள். திருமாலுக்குரிய திருத்தலங்களில் ஒன்று அந்த ஊர். இந்த ஊர்க் கோயில் தேர் திருவிழாக்களின் போது பட்டமங்கலத்து அம்பலக்காரருக்கு கோயில் சார்பாகப் பரிவட்ட மரியாதைகள் நடப்பதுண்டு.

ஆலயத்தைச் சுற்றி அழகிய வீதிகளும், எதிரேயொரு குளமும், பூசைக்குத் தேவையான மலர்களை விளைவிக்க ஒரு பூந்தோட்டமும், தங்கக் கலசம் கொண்ட எழில்மிகு கோபுரமும், திருக்கோட்டியூருக்குத் தனிக் கவர்ச்சி! அந்த ஊர்த் தேர் மருது பாண்டியர்களின் உபயம்.

வெள்ளையரை எதிர்த்து வீரப்போர் புரிந்த சிவகங்கைச் சீமையின் அரசியார் வேலுநாச்சியார் போர்க்காலத் தேவைக்காக அமைத்திட்ட கற்சாந்தினால் ஆன கட்டிடம் ஒன்றும் அங்கே இருக்கிறது.

வரலாற்று ஏடுகளில் - புராண இதிகாச ஏடுகளில் அந்தச் சிறிய ஊருக்கு ஒரு முக்கியத்துவம் உண்டு! இராமானுஜர் - அந்த ஊர்க் கோபுரத்திலிருந்துதான் குதித்தார் என்றும் கூறுவர்!

இத்தனைச் சிறப்பு வாய்ந்த அந்த ஊருக்கு மேலும் சிறப்புச் சேர்ப்பதுபோல நாட்டியப் பேராசியாக

விளங்கிய சுந்தராம்பாளும் அதே ஊரில்தான் வாழ்ந்து வந்தாள். வீதிக்குச் சற்றுத் தள்ளி எதிர் எதிராக இரண்டு வீடுகள். ஒரு வீட்டில் சுந்தராம்பாள்! இன்னொரு வீட்டில் அவளது அன்புத் தங்கை வடிவாம்பாள்! அவளும் நடனத்தில் புகழ் பெற்றவள்!

சுந்தராம்பாளுக்கு இருபது வயதிருக்கலாம்- வடிவாம்பாள் அவளைவிட இரண்டு அல்லது மூன்று வயது இளையவள். வீடுகள்தான் எதிர் எதிராக இருந்தனவே தவிர வடிவாம்பாள் ஒரு நாளில் முக்கால் பொழுதைத் தன் அக்காள் சுந்தராம்பாள் வீட்டில்தான் கழிப்பாள்! நடனக் கலையரசிகள் என்பதற்காக அந்தப் பகுதியில் உள்ள யாரும் அவர்களைப் பற்றிக் குறைத்து மதிப்பீடு செய்வதில்லை.

கலைத்துறையில் பெண்கள் என்றாலே அவர்களை விலைப் பொருள்களாகக் கருதும் அவசரக்காரர்கள் உண்டல்லவா? எந்தத் துறையில் இருந்தாலும்-ஏன், கட்டுப்பாடும் கண்டிப்பும் மிக்க இல்வாழ்வில் ஈடுபட்டு, வீட்டுச் சிறையில் இருந்தாலும்-தாவிடும் மனம் படைத்த தையலரை, யார்தான் தடுத்திட முடியும்? கலைத் துறைக்கென வாய்ந்த சூழ்நிலைகள் அதில் ஈடுபடும் பெண்களை எளிதில் சபலமடையச் செய்து விடுகின்றன. அவ்வளவுதான்!

''சிறைகாக்குங் காப்பு எவன் செய்யும்மகளிர்
நிறைகாக்குங் காப்பே தலை''

என்ற குறள் : ''மகளிரைச் சிறை வைத்து அவர்தம் பண்பைக் காத்து விட முடியாது-அவர்களுக்கே இயல்பான நிறையென்னும் கற்புடைய பண்பு ஒன்றே அவர்களைக் காக்கவல்லது'' என்று விளக்கமளிக்கிறது!

இந்தக் குறளுக்கேற்பத் தானும் வாழ்ந்து தன் தங்கை வடிவாம்பாளையும் அவ்வாறே வாழச் செய்ய வேண்டுமென்பதைக் குறிக்கோளாகக் கொண்டிருந்தாள் சுந்தராம்பாள்!

அதனால் அந்த ஊரில் அந்தஸ்து படைத்த சில மிட்டா மிராசுகளுக்குச் சமமாக அவளால் அங்கு வாழ முடிந்தது! அவள் தந்தச் சிலை! அவள் தங்கையோ தங்கச் சிலை! மாதத்தில் நாலைந்து நடன நிகழ்ச்சிகளாவது ஆலயத் திருவிழாக்கள் என்றும் திருமணக் கச்சேரி என்றும் பல ஊர்களில் நடந்து கொண்டேயிருக்கும். நிகழ்ச்சிக்கான பக்கவாத்தியக் குழுவில் நட்டுவாங்கம் நாதமுனியும் பின்பாட்டு லலிதாங்கியும் முக்கியமானவர்கள். அனேகமாக அவர்கள் சுந்தரி வீட்டிலும், வடிவு வீட்டிலும் மாறி மாறி வம்பளந்து கொண்டு அங்கேயே உண்டு உறங்கி விடுவார்கள். ஒருவகையில் உறவினர்கள் கூட சுந்தராம்பாளுக்கு!

அன்று சுந்தராம்பாள் நீண்ட நேரம் புதியதொரு நடன நிகழ்ச்சிக்கு ஒத்திகை நடத்திக் கொண்டிருந்ததால் மிகவும் களைப்பாக இருந்தாள். வழக்கமாகக் கோயிலுக்குப் போகும் அவள் அன்றைக்கு வடிவையும் லலிதாங்கியையும் அனுப்பி வைத்துவிட்டு வீட்டில் தனியாக இருந்தாள். நட்டுவாங்கம் நாதமுனியோ வடிவு வீட்டுத் தாழ்வாரத்தில் படுத்து மாலை நேரத்திலேயே குறட்டை விட்டுக் கொண்டிருந்தான்.

தெருக்கதவைத் தாழிட்டுவிட்டுக் குளிக்கலாமென்று சுந்தரி, ஆடைகளைக் களைந்து கொண்டிருந்தாள். கூடத்தில் இருந்த நிலைக்கண்ணாடி அவளது அரையாடி அழகைப் பிரதிபலித்துக் கொண்டிருந்தது.

''வெந்நீர் தயார்ம்மா!'' என்ற வேலைக்காரியின் குரல்கேட்டு, மார்புக்கு மேலும் மேகலைத் தடங்களுக்குக் கீழும் ஓரளவு மறைக்கக் கூடிய மெல்லிய துண்டு ஒன்றைக் கட்டிக்கொண்டு குளியலறைக்குள் நுழைந்தாள். ஆடிய களைப்பெல்லாம் சூடான நீர் போக்கிவிட்டுக் கொண்டிருந்தது.

குளியலறையில் அந்தச் சிறிய துண்டு ஒரு கம்பிக் கொடியில் அநாதையாகத் தொங்கிக் கொண்டிருந்தது. குளித்து முடித்ததும் அதற்கு அடித்தது யோகம்! கருமுகில் கூந்தலோடு சிறிது நேரம் ஒட்டிக் கொண்டது! பிறகு சுந்தரியின் சந்திர பிம்ப முகத்தில் சதிராடியது! பின்னர் அந்தச் சங்குக் கழுத்து! அதன் பிறகு இதுவரை யாரும் பார்த்தறியாத அந்தப் பளிங்கு மேனியின் பகுதிகளில் கொஞ்சல்; குலாவல்! குளியலறைக் கதவைத் திறந்து கையை மட்டும் வெளியே நீட்டி வேலைக்காரியை அழைத்து அவள் தந்த சேலையை வாங்கிச் சுற்றிக் கொண்டு சுந்தரி வெளியே வந்தபோது, பாவம் அந்தத் துண்டு பரிதாபமாகக் கீழே கிடந்தது! அதற்கு ஒரு ஆறுதல்; அடுத்த நாள் குளியலில் அதே வாய்ப்புக் கிடைக்குமென்று!

கண்ணாடிக்கு முன் நின்று தன்னை அலங்கரித்துக் கொண்ட சுந்தராம்பாள், சமையல் சீக்கிரமாகட்டும் என்று வேலைக்காரிக்குச் சொல்லிவிட்டுக் கூடத்து ஊஞ்சலில் அமர்ந்து மெதுவாக அசைந்தாடிக் கொண்டிருந்தாள்.

தெருக்கதவு தட்டப்படும் சப்தம் கேட்கவே அவளே எழுந்து சென்று கதவைத் திறந்தாள். யாரோ இருவர் – ஆனால் அந்த வட்டாரத்தைச் சேர்ந்தவர்கள் தான் என அறிவிக்கும் முகத்தோற்றம் வாய்ந்தவர்கள்– குழைந்தவாறு வாயிற் பக்கம் நின்று கொண்டிருந்தார்கள்.

''ஒரு நிகழ்ச்சிக்கு ஏற்பாடு செய்ய வந்தோம்– உள்ளே வரலாமா?''

''வாருங்களேன்!''

இருவரும் ஒருவரையொருவர் பார்த்து ஏதோ முகக் குறிப்பால் உணர்த்தியவாறு உள்ளே நுழைந்தார்கள். கூடத்தில் இருந்த இரண்டு நாற்காலிகளைக் காட்டி அவர்களை உட்காரச் சொன்னாள் சுந்தரி!

''என்ன நிகழ்ச்சி? எந்த ஊரில்?''

''மருது பாண்டியர்களைப் பிடிப்பதற்காகக் காட்டாம்பூரில் கர்னல் துரை முகாம் செய்திருக்கிறார்.''

''அந்தப் பரங்கிப் பாவிகளுக்கு வேறு வேலையே கிடையாதா? இந்த மண்ணில் பிறந்த வீரர்களையெல்லாம் அழித்துவிட்டுத் தான் மறுவேலை பார்ப்பார்களா?''

''என்ன செய்வது? நல்லவர்களோ கெட்டவர்களோ அவர்களது கை வலுத்துக் கொண்டே போகிறதே! நாமும் ஊரோடு சேர்ந்து ''ஜே'' போட்டுவிட்டுப் போக வேண்டியதுதானே!''

''நேரத்திற்குத் தக்க நிறம் மாறும் ஆட்கள் இருக்கும் போது நாம் எப்படி உருப்படப் போகிறோம்!''

''அது போகட்டும்; நமக்கேன் அந்த விவகார மெல்லாம்! நாங்கள் முக்கியமாக வந்தது...''

''சொல்லுங்கள்!''

''இன்று அவசரமாகவும் அவசியமாகவும் உங்கள் நிகழ்ச்சி தேவைப்படுகிறது.''

''பக்க வாத்தியக்காரர்கள் யாரும் இல்லையே! திடீரென்று சொன்னால் எப்படி?''

''கர்னல் துரையிடம் இல்லாத பக்க வாத்தியங் களா? எல்லாம் அசல் சீமைச் சரக்கு!''

''என்ன சொல்கிறீர்கள்?''

''புரியலியா? இன்னைக்கு ராத்திரி துரை முகாம் போட்டிருக்கிற இடத்துக்கு வரணும்! அவரைச் சந்தோஷப்படுத்தணும்! அதுக்காக எவ்வளவு தொகை வேணும்னு கேட்டாலும்...''

''சீ! எழுந்திருங்கள்! கலைமாதின் இல்லமென்றாலே விலைமாதின் இல்லமென்று நினைப்பா? மரியாதையாக வெளியேறுங்கள்!''

''சுந்தரி! சூடாப் பேசாதே! இன்னும் கொஞ்ச நாளிலே இந்தப் பகுதி முழுவதையும் பரிபாலிக்கப் போகிற வெள்ளைக்காரத் துரைகளுக்கிட்டே அடங்கிப் போகலேன்னா...?''

''அடங்கிப் போகாவிட்டால் என்ன? உயிர் போகும்! அவ்வளவுதானே!''

''முதலில் மானம் போகும்-பிறகுதான் உயிர் போகும்! வீணாகப் பிடிவாதம் செய்யாதே! எங்களோடு வந்தால் நல்லது! இல்லாவிட்டால் கர்னல் துரையோட சிப்பாய்கள் வந்து உங்களை இழுத்துக் கிட்டுப் போவாங்க!''

''அதையும்தான் பார்க்கிறேன், முதலில் நீங்கள் வெளியேறுங்கள்.''

''சிப்பாய்கள் எதற்கு? இதோ இப்போதே நாங்களே உன்னை அழைச்சிகிட்டுப் போறோம்.''

இருவரும் சுந்தராம்பாளை வளைத்துக்கொண்டு நின்றார்கள்.

''அய்யோ அம்மா!'' என்று அலறிக் கொண்டு வேலைக்காரி ஓடி வந்தாள். அவள் வருவதற்குள் ஒருவன் சுந்தராம்பாளின் கையைப் பிடித்து இழுக்கத் தொடங்கினான்.

''சீ! விடு கையை!'' என்று உதறிக் கொண்டு சீறினாள் சுந்தரி! அப்போது அந்த இருவரின் கழுத்துக்களையும் பின்புறமாகக் கைகளால் இறுக்கிப் பிடித்தவாறு ஒரு வீரன் உள்ளே குதித்தான்.

''சீ! தமிழர்களா நீங்கள்? வெள்ளைக்காரத் துரை மகனுக்கு இந்த வேலையும் பார்க்க ஆரம்பித்து விட்டீர்களா? தூ! வெட்கமில்லை?''

சிங்கத்தின் கர்ச்சனை போலிருந்தது அந்த அழுத்தம் திருத்தமான கேள்வி!

''ஏய்-யாரடா நீ? விடுடா கழுத்தை! நீ செஞ்ச காரியம் கர்னல் துரையின் காதிலே விழுந்தா உன் நெஞ்சாங் குழியில் துப்பாக்கி ரவை பாயும்; ஜாக்கிரதை!''

''என்னையா மிரட்டுகிறீர்கள்!''

இந்தச் சொற்போரைத் தொடர்ந்து அந்த இருவர் தலைகளையும் ஒன்றொடொன்று மோதவிட்டு வேடிக்கை பார்த்தான் அந்த வீரன்! அவனது செயலால் ஆத்திரமுற்ற இருவரும் அவன்மீது பாய்ந்தனர்! சுந்தரி வீட்டுக் கூடத்தில் சிறிது நேரம் போராட்டம்! கர்னல் துரையின் குண்டர்கள் பந்தாடப்பட்டார்கள்! அடி தாங்காமல் ஓட முனைந்தவர்களை அந்த வீரன் வலுவாகப் பிடித்துக் கொண்டான். அவனது ஆற்றலை வியந்தவாறு சுந்தரி விழி அசையாமல் அவனையே பார்த்துக் கொண்டிருந்தாள். உதைபட்டவர்கள் வாய் வீரம் பேசத் தவறவில்லை!

''ஏய்-நீ யார் என்று தெரிந்தால் போதும்! கர்னல் துரையின் கைத்துப்பாக்கி உன்மீது விளையாடும்.''

''நான் யார் என்று தெரிய வேண்டுமா? பாகனேரி அம்பலக்காரர் வாளுக்கு வேலித் தேவரின் தம்பி கறுத்த ஆதப்பன் என்று உங்கள் கர்னல் துரையிடம் சொல்!''

அந்தப் பெயரைக் கேட்டு கர்னல் துரையின் ஆட்கள் நடுங்கினார்கள்.

''கறுத்த ஆதப்பனா? அய்யோ! எங்களை மன்னித்து விடுங்கள்! இது உங்களுக்குத் தொடர்புடைய இடம் என்று

தெரியாமல் வந்துவிட்டோம்! துரைக்குத் தெரிந்தால்கூட எங்களைக் கோபிப்பார். நாங்கள் வர்றோம்!'' என்று சொல்லிக் கொண்டே இருவரும் ஓட்டம் பிடித்தார்கள்.

சுந்தரி ஆதப்பனைக் கண்கலங்க நோக்கினாள். அவனும் அவளை அனுதாபத்துடன் பார்த்தான்.

''ரொம்ப நன்றி!''

''பரவாயில்லை! நான் வர்றேன்!''...

''ஆபத்தில் நீங்கள் செய்த உதவிக்கு எங்கள் வீட்டில் ஒரு கிண்ணம் பாலாவது சாப்பிடுங்கள்.''

இல்லை! மிகவும் நன்றி.. நான்..'' கறுத்த ஆதப்பன் ஏதோ கூறிட வாயெடுத்துப் பிறகு நிறுத்திக் கொண்டான்.

''எப்படியோ நல்ல சமயத்தில் வந்தீர்கள்!''

''நான் வந்ததே உங்களைப் பார்க்கத்தானே!''

சுந்தராம்பாளின் முகம் மேலும் கலவரமடைந்தது. இருந்தாலும் அவனுடன் பேசினாள்.

''என்னைப் பார்க்கவா? எதற்காக?''

''என் தங்கை விஷயமாகப் பேசுவதற்காக என் அண்ணன் அனுப்பி வைத்தார்!''

''தங்கை விஷயமா? அப்படியென்றால்...?''

''உங்களுக்கு எங்கள் குடும்பத்தைப் பற்றிய விபரங்கள் முழுமையாகத் தெரியாது!''

''தெரியாவிட்டாலும் பாகனேரி அம்பலக் காரரையும் அவர் தம்பி உங்களைப் பற்றியும் கேள்விப்பட்டிருக்கிறேன்...''.

''அப்படியா? மகிழ்ச்சி... என் தங்கை கல்யாணிக்கு நடனம் கற்றுத் தர வேண்டுமென்றும் அதுபற்றி விபரமாகப் பேசுவதற்கும் வந்தேன். இப்போது உங்கள்

மனோநிலை சரியில்லை. அதனால் பிறகு வருகிறேன். வணக்கம்.''

சுந்தராம்பாளின் பதிலை எதிர்பார்க்காமலேயே வாசல்வரையில் சென்றுவிட்ட கறுத்த ஆதப்பன் அவளைத் திரும்பிப் பார்த்து, ''கதவைத் தாழிட்டுக் கொள்ளுங்கள்! ஜாக்கிரதை! உதவி எதுவும் தேவைப்பட்டால் உடனே பாகனேரிக்குச் சொல்லி அனுப்புங்கள்!'' என எச்சரித்துவிட்டுத் தெருவில் தயாராக நின்ற தனது குதிரையிலேறிப் புறப்பட்டான்.

சுந்தராம்பாள், அந்தக் கர்னல் துரையின் ஆட்களைச் சபித்துக் கொண்டே பெருமூச்செறிந்த வண்ணம் ஊஞ்சலில் உட்கார்ந்தாள். வேலைக்காரி அவளருகே வந்து ''அம்மா! அம்பலக்கார அய்யாவின் தம்பி அந்த ஆதப்பன் வரலேன்னா எவ்வளவு விபரீதமாப் போயிருக்கும்!'' என்றாள் நடுக்கத்துடன்!

''ஆமாண்டி! ஆனால் எனக்கு இன்னொரு பயம்! அந்த ஆதப்பனாலே என்ன விபரீதம் நேருமோன்னு! தலைவலி போயி திருகு வலி வந்துடாம நல்லவேளை தப்பிச்சேன்.''

''இல்லம்மா-அவரு நல்ல தம்பியாத் தோணுதம்மா!''

''என்னதான் நல்ல தம்பியா இருந்தாலும் பெண்களுக்கு முன்னாலே ஆண்கள் நெருப்புக்குப் பக்கத்திலே இருக்கிற மெழுகு மாதிரிதான்! ஆண்கள் என்றாலே ''சபலம்'' என்றுதான் அர்த்தம்!''

இப்படியொரு முடிவுரையைக் கூறிவிட்டுச் சுந்தரி அங்கேயுள்ள பூஜை மாடத்திற்கு விரைந்து சென்று நடராசர் சிலையைத் தொழுது நின்றாள்.





# 10

''மண்டிலங்கள் பலவற்றைப் பறித்துக் கொண்டார்கள்! இன்னமும் பறித்துக் கொண்டே வருகிறார்கள். அதற்கும் மேலே ஒரு படி ஏறி நமது மங்கையரின் மானத்தையும் பறித்திடுகின்ற கோர விளையாட்டில் வெள்ளைக்காரத் துரைமார்கள் ஈடுபடுவார்கள் என்றால் அதைப் பொறுத்துக் கொண்டு வாழ்வதைவிடச் சாவது எவ்வளவோ மேலானது அண்ணா!''

''என்ன தம்பி செய்வது? அவிழ்த்துக் கொட்டப்பட்ட நெல்லிக்காய் மூட்டைபோலச் சிதறிக் கிடக்கும் குறுநில மன்னர்களும், பாளையக்காரர்களும் ஒருவரோடு ஒருவர் மோதிக் கொள்ளவும் காட்டிக் கொடுக்கவுமான செயல்களுக்குத் தங்களை ஆட்படுத்திக் கொண்டுவிட்ட பிறகு திறந்து விட்ட மனையாகி விட்டது தென்பாண்டிச் சீமை! நூற்றுக்கணக்கானதும் ஆயிரக்கணக் கானதுமான சதுரக் கற்கள் பரப்பளவில் எல்லைகளை வகுத்துக் கொண்டு ஆட்சி நடத்திய அரசர்களே இன்றைக்கு ஆங்கிலேயர்களின் அடிமைகளாகிவிட்ட பிறகு இருபது முப்பது கிராமங்களை உள்ளடக்கிய நமது அம்பலக்காரர்கள் அதிகாரம் செலுத்தும் நாடுகள் எம்மாத்திரம்?''

''ஆட்சி, அதிகாரம் இவைகள் போனது பற்றியோ அல்லது இனியும் போகப் போவது பற்றியோ நான்

கவலைப்படவில்லையண்ணா! வெள்ளைக்காரப் பிரபுக்களின் வெறி அதிகாரத்தோடு அடங்கிடாமல் நமது ஊர்ப் பெண்களையுமல்லவா இரவு விருந்துக்கான போகப் பொருள்களாக ஆக்கிட முனைகின்றது!''

''புரிகிறதப்பா எனக்கு! ஆனால் அந்த வேலைக்கு இடைத் தரகர்களாக இருப்பவர்கள் இந்த மண்ணில் பிறந்த தமிழர்கள் என்று நீதானே சற்று முன்பு சொன்னாய்!''

திருக்கோட்டியூரிலிருந்து திரும்பிய ஆதப்பனுக்கும் வாளுக்கு வேலிக்கும் நடைபெற்ற இந்த உரையாடலின் போது வெள்ளை அய்யரும் இருந்தார். சுந்தராம்பாள் வீட்டில் கர்னல் துரையின் ஆட்களைச் செம்மையாக உதைத்து அனுப்பிய ஆதப்பனின் செய்கையால் கர்னல் துரை கடுங்கோபம் கொள்வார் என்பது அவரது கணிப்பு!

''விடிந்து எழுந்தால் விஸ்கியில் வாய் கொப்பளிப்பான். காலைக் காப்பிக்குப் பதில் பிராந்திதான் சாப்பிடுவான்... பிற்பகல் உணவுக்கு முன்பு தாகமெடுக்கிற போதெல்லாம் இரண்டு பீர்ப் புட்டிகளைக் காலி செய்வான்...மாலையில் தூங்கி விழித்ததும் படுக்கைக்குப் பக்கத்திலேயே ஒரு கோப்பையில் வழிய வழிய ஒயின் இருக்க வேண்டும்...இரவு முழுதும் ''ரம்'' மும் வேண்டும். பக்கத்தில் ஒரு ரம்பையும் வேண்டும். இப்படிப்பட்டவன் அந்தக் கர்னல் துரை; அவன் சுந்தராம்பாளைத்தான் கூப்பிடுகிறான்! இல்லை-வடிவாம்பாளைத்தான் கூப்பிடுகிறான்; போவதும் போகாததும் அவர்கள் இஷ்டம்! அதற்குரிய பலனை அவர்கள் அனுபவித்து விட்டுப் போகிறார்கள். இடையில் சென்று நாம் ஏன் நுழைய வேண்டும்? வீணான வம்பை விலை கொடுத்து எதற்காக வாங்க வேண்டும்?''

வெள்ளை அய்யர், பாகனேரியின் நன்மைக்காகத் தான் பேசுகிறார் என்று வாளுக்குவேலி புரிந்து கொண்டாலும் கூட, தனது தம்பியின் செயலுக்காகக் கர்னல் துரை ஆத்திரப்பட்டு எந்தக் காரியத்திலாவது ஈடுபடுவானேயானால் அதனை வீரத்தோடு சந்தித்தே தீரவேண்டுமென்று உறுதி கொண்டிருந்தான்!

''அய்யர் அவர்களே! உங்கள் நல்ல உள்ளத்தை அறிந்துகொள்ள முடிகிறது என்னால்! ஆனால் ஒன்று- நாடுகளை ஆக்ரமித்து ஆதிக்கத்தை நிலைநாட்டப் படைகொண்டு தாக்குவோரிடம் தோற்று விடுவது இயற்கை! போர் என்றால் வெற்றி, தோல்வி இரண்டில் ஒன்றைச் சந்தித்தே ஆக வேண்டும்! அதற்காகத் தோற்றுப்போன நாட்டின் மக்களை மேலும், மேலும் மிதித்து நசுக்கிக் கொண்டேயிருந்தால் புழுக்கள்கூடப் புலியாகித்தானே தீரவேண்டும்! ஆதப்பனைப் போன்ற இளைஞர்கள்; தங்கள் கண் எதிரிலேயே தமிழ்ப் பெண்ணின் மானம் சூறையாடப் படுவதை எப்படித் தாங்கிக் கொண்டிருக்க முடியும்?''

''வெள்ளையர் ஆதிக்கம் - அவர்தம் நிர்வாகம் - அவர்களின் நீதி பரிபாலனம்-மெல்ல மெல்லப் பரவிக் கொண்டிருக்கிறது! வேறு வழியில்லை; பொறுத்துக் கொண்டிருக்கிறோம்! இனியொருவர் முயற்சி எடுத்து இங்குள்ள எல்லா அரசர்களையும் ஒன்று சேர்த்து ஒற்றுமைப்படுத்தி ஆங்கிலேயரை எதிர்க்கும் ஓரணியை உருவாக்குவது என்பது உடனடிச் சாத்தியமில்லை! மன்னர்கள் ஒவ்வொருவரும் தங்களின் மாளிகை, வருமானம், வளவாழ்வு இவைகளை நினைத்தால் போதும் என்ற நினைப்புக்குத் தங்களின் வீர தீரத்தைச் சுருக்கிக் கொண்டு விட்டார்கள்.''

''அடிமை வாழ்வே ஒரு அவமான வாழ்வு! அதிலும் நமது தன்மானத்துக்கு நேரடி அறைகூவலாக உங்கள் மண்ணையும் கொடுங்கள்...உல்லாசம் அனுபவிக்க ஒவ்வொரு நாளும் ஒரு பெண்ணையும் கொடுங்கள்... என்றால் அதையும் ஏற்றுக்கொண்டு எதற்காக உயிர்ப் பொதி சுமக்கும் கழுதைபோல இந்த உடல்கள் நடமாட வேண்டும்?''

எதிரியின் வலிவையும், நாட்டின் ஒற்றுமையின்மை யையும், அந்நிய ஆதிபத்தியம் சில காலத்திற்கு அசைக்க முடியாத அளவுக்கு அடித்தளம் அமைத்துள்ளதையும், நடைமுறை அனுபவத்தால் உணர்ந்து உள்ளம் திறந்து பேசிய வாளுக்கு வேலியின் கவலை தோய்ந்த வார்த்தைகளை, எழுத்துக்கு எழுத்து அப்படியே ஒப்புக்கொண்ட வெள்ளை அய்யர், ஒரு நடனக்காரி சுந்தராம்பாள் வீட்டு நிகழ்ச்சிக்காகக் கர்னல் துரையின் எதிரிகளாகி வாளுக்கு வேலியும், ஆதப்பனும் கஷ்டப்பட வேண்டாமே யென்று கருதினார்.

''ஆங்கிலேயர் கைகளில் துப்பாக்கிகள் இருக்கின்றன அம்பலக்காரரே...'' வெள்ளை அய்யர் இதைக் கூறி முடிப்பதற்குள்..

''இருக்கட்டுமே! அந்தத் துப்பாக்கிக் குண்டுகளைத் தாங்க நம்மிடம் கேடயங்களாக நெஞ்சங்கள் இருக் கின்றன!'' என்று முழங்கிக் கொண்டே எதிர் வந்து நின்றான் மேகநாதன்!

''என்ன மேகநாதா! அமைதிப்படுத்த வேண்டிய நீயே அம்பலக்காரரை வெறியேற்றித் தூண்டி விடு கிறாய்?'' சிரித்துக் கொண்டே-ஆனால் முகத்தில் அச்சத்தின் சாயல் தெரிந்திட வெள்ளை அய்யர் வினவினார்!

''தலைக்கு மேல் போய்விட்டது! இனியென்ன அச்சம்? தம்பி ஆதப்பன் தனது ஆட்களை அடித்து விரட்டியதால் அந்த வெள்ளைக்கார மிருகம் வெகுண்டு கிடக்கிறது போலும்...''

மேகநாதன் இதைச் சொல்லிவிட்டுப் பல்லைக் கடித்துக் கொண்டு பதைத்து நின்றான். வேங்கை நிமிர்ந்ததுபோல் வாளுக்கு வேலி நிமிர்ந்தான். எழுந்தான் மேகநாதனின் தோளைக் குலுக்கி, ''அதனால்?'' என்று அதிர்வெடி போல முழங்கினான்.

''அழைப்பு வந்திருக்கிறது கர்னல் துரையிடமிருந்து! வாளுக்குவேலித் தேவரும் கறுத்த ஆதப்பனும் அந்தத் துரையை உடனே சந்திக்க வேண்டுமாம்!''

''ஓலையா?''

''இல்லை! ஒரு ஆள் மூலம் செய்தி அனுப்பியிருக்கிறான்.'' சிறிது நேரம் அந்த இடத்தில் அமைதி நிலவியது. வெள்ளை அய்யரின் அருகே சென்று வாளுக்குவேலி மீசை துடிதுடிக்கக் கேட்டான்.

''அய்யர் அவர்களே! இப்போது உங்கள் அறிவுரை என்ன?''

''அழைப்பை ஏற்றுச் சென்றால் அடங்கி ஒடுங்கி விட்டீர்கள் என்று அர்த்தம்! அலட்சியப்படுத்தினால் அழிக்கப்பட்டு விட்டீர்கள் என்று இப்போதே ஆரூடம் கூறி விடலாம்.''

''என்ன அய்யர் அவர்களே! அதையும் சொல்கிறீர்கள்! இதையும் சொல்கிறீர்கள்!''

''உள்ளதை உள்ளபடி சொன்னேன். நிலைமைக்கேற்ப முடிவெடுப்பது அம்பலக்காரர் இஷ்டம்!''

''நேரிலே சென்று சந்தித்து நடந்தவைகளை விவரித்து நமது உணர்ச்சிகளையும் தெரியப்படுத்தி விட்டு வரலாம் அல்லவா? அல்லது வர முடியாமல் அங்கேயே மடிந்துபோய் மானம் காத்த வரலாற்றை உருவாக்கலாம் அல்லவா?''

ஆதப்பனுக்கும், மேகநாதனுக்கும், வாளுக்கு வேலியின் அந்தத் தீர்மானம் மிகவும் பிடித்திருந்தது. கர்னல் துரையைச் சென்று சந்திப்பதற்கான பயண ஏற்பாடுகளைக் கவனிக்க மேகநாதன் பறந்தான். குதிரைகள் பூட்டிய சாரட்டு வண்டி வந்து நின்றது.

செய்திகள் அனைத்தையும் சமையற்காரக் காடை கௌதாரி இருவரின் வாயிலாகக் கேள்விப்பட்ட கல்யாணி நாச்சியார் அண்ணன்களைக் காண அந்த வீட்டின் முன்கட்டுக்கு ஓடி வந்தாள். அப்போதுதான் ஆடை அணிகளைப் பூண்டவாறு வாளுக்கு வேலியும், ஆதப்பனும் கிளம்பிக் கொண்டிருந்தார்கள்! தங்கை தடுத்திடுவாளோ என்ற அச்சமும் ஐயமும் இருவருக்கும்!

''நீ என்ன சொல்கிறாய் கல்யாணி! எல்லாம் கேள்விப்பட்டிருப்பாயே!''

''அண்ணா! மண் அடிமையானதே மனதைக் கலக்கிக் கொண்டிருக்கிறது! இதில் பெண் அடிமை வேறா அந்த வெள்ளைக்கார வெறியர்களிடம்?''

''ஆகா! தன்மானத் தமிழச்சி; என் அன்புத் தங்கச்சி!''

அவள் கன்னங்களை இரு கரங்களால் பிடித்துக் கொண்டு உச்சியில் ஒரு முத்தம் கொடுத்தான். வாயிற்புறம் வரையில் வந்து வழியனுப்பி வைத்தாள்.

''கல்யாணி! கர்னல் துரையைச் சந்திக்கத் திருக்கோட்டியூர் வழியாகத்தான் போகிறேன்! திரும்பி வரும்போது அந்தச் சுந்தராம்பாளைச் சந்தித்து உன் நடனப் பயிற்சிக்கு அவளை ஆசிரியையாக அமர்த்தி விட்டு வருகிறேன்.''

சாரட்டு வண்டியில் வாளுக்குவேலியும், ஆதப்பனும் ஏறிக் கொண்டார்கள். ஆதப்பன் குதிரைகளைத் தட்டி விட்டதும் வண்டி காற்றைக் கிழித்துக் கொண்டு கிளம்பியது.

பாகனேரி அம்பலக்காரர் எதற்காக எங்கே போகிறார் என்று தெரியாவிட்டாலும் திருக்கோட்டியூர் வழியாகச் செல்கிறார் என்ற செய்தி அந்த ஊரெங்கும் பரவிவிட்டது. கோட்டியூர் மக்கள் கும்பல் கும்பலாக வீதிகளில் நின்று வேடிக்கை பார்த்தனர். வீட்டு வாசல்களில் நின்று வாளுக்கு வேலியின் வருகையை எதிர் நோக்கினர்.

விழாக் காலங்களில்-விவகாரங்களையொட்டி பொதுச் சவுக்கைகளில் நடைபெறும் எல்லா நாட்டு அம்பலக்காரர்களின் கூட்டங்கள்-தேவாலய தரிசனம்-இவைகளைத் தவிர அடிக்கடி வெளியில் வருகிற பழக்கத்தை வாளுக்கு வேலி ஏற்படுத்திக் கொள்ளாத காரணத்தால் அவனைப் பார்க்கும் ஆர்வத்தில் மக்கள் அலை அலையாக ஓடி வருவார்கள். அன்றைக்கும் அப்படித்தான் ஆயிற்று!

திடீரெனச் செய்தி கிடைத்த காரணத்தால் ஆலயத்து நந்தவனத்து மதிலேறிக் குதித்து மலர்களைப் பறித்து அவன் வரும்போது வண்டியை நோக்கி அந்த மலர்களைத் தூவிட இளைஞர்கள் காத்துக் கொண்டிருந்தனர்.

அதே நேரத்தில் திருக்கோட்டியூர் சுந்தராம்பாள் வீட்டில் புதிய நடன நிகழ்ச்சிக்கான ஒத்திகை தொடர்ந்து நடந்து கொண்டிருந்தது. சுந்தரியும், வடிவும், கால்களில் சலங்கை கொஞ்சிட மிகுந்த சிரத்தையுடன் ஆடிக் கொண்டிருந்தனர். நாத முனியின் கைத்தாளம் விறு விறுப்பான ''ஜதி'' யுடன் சேர்ந்து ஒலித்துக் கொண் டிருந்தது. லலிதாங்கி இந்த இளம் மான்கள் இரண்டும் துள்ளித் துள்ளி ஆடுவதை அகலமான விழிகளால் பார்த்து மகிழ்ந்து கொண்டிருந்தாள்.

அப்போதுதான் தெருப் பக்கமிருந்து வீட்டு வேலைக்காரி பரபரப்புடன் ஓடிவந்து ''அம்மா! அம்மா! பாகனேரி அம்பலக்காரர் வாளுக்குவேலித் தேவர் நம்ப வீட்டு வழியா எங்கேயோ போறாராம். வேடிக்கை பார்க்க வீதியெல்லாம் ஒரே கூட்டம்... வாங்க! வாங்க'' என்று அலறினாள் ஆனந்தம் பொங்கிட!

''அக்கா போய்ப் பார்க்கலாமா? எனக்கு அவரைப் பார்க்கணும்னு ரொம்ப நாளா ஆசை!'' வடிவாம்பாள் வாய் முத்து உதிர்த்தாள்!

''அவர் பாகனேரிக்கு அரசர், நான் பரத நாட்டியத்துக்கு அரசி! கலைஞானத்திற்கு மிஞ்சியதா அதிகாரமும் அந்தஸ்தும்? சரி சரி! ஒத்திகையைக் கவனிக்கலாம்.''

சுந்தரி அலட்சியமாகப் பதில் அளித்துவிட்டு ஆட்டத்தில் கவனம் செலுத்தினாள். வடிவாம்பாள் கூடத்தில் ஆடினாள் என்றாலும் அவள் எண்ணமெல்லாம் வாசலிலேயே இருந்தது. சுந்தரியின் அழகில் ஒரு புனிதம் இருக்கும். சுந்தரியின் கண்களில் ஒரு குத்து விளக்கின் ஒளி தெரியும்! வடிவின் விழிகளிலோ மின்னல் வெட்டும்! சுந்தரியின் நடை, உடை, பேச்சு, அசைவு எல்லாவற்றிலும் ஒரு நிதானம் பரதமாடும்! வடிவின் நடையோ குதிரைப்படைதான்! உடையோ உடலைக் காட்ட உதவிடும் ரசம் பூசாத கண்ணாடி! நிதானத்திற்கும் அவளுக்கும் வெகு தூரம்; அதனால்தான் அக்காளின் கண்டிப்பைக்கூடப் புரிந்து கொள்ளாமல் தனது மனத்தை வெளியில் ஓடவிட்டாள்! நாதமுனியின் 'ஜதி' தொடர்ந்தது!

தக்க தரி கிடத் தக்க...
தக்கஜிமி...தக்கஜிமி..
தாம்...தரிகிடதக்க

சுந்தரியின் பாதச் சதங்கை ஒலித்தது! வேறு வழியின்றி வடிவாம்பாளும் அக்காளுடன் சேர்ந்து ஆடினாள்!... தெருவில் வாளுக்கு வேலி செல்லும் சாரட் வண்டியில் பூட்டப்பட்டுள்ள குதிரைகளின் குளம்படி ஓசை! சுந்தரி வீட்டில் பரத நாட்டியச் சதங்கை ஓசை!...

திருக்கோட்டியூர் மக்களின் ஆரவாரமான வரவேற்பைப் பெற்றுக் கொண்டு அந்த மகிழ்ச்சிக் கிடையிலேயும் ஒரு மனப்புயலோடு வாளுக்குவேலியும் ஆதப்பனும் கர்னல் துரை தங்கியிருக்கும் இடம் நோக்கி விரைந்து சென்றனர்.

கர்னல் துரை தங்கியிருந்த இடம் சுற்றிலும் புதர்கள் மண்டி நீளச்சுவர் அமைந்த மதில்களுக்கிடையே உள்ள ஒரு மைதானம்! அங்கே ஏழெட்டுக் கூடாரங்கள் வலுவானவைகளாகவும் தற்காலிகமானவைகளாகவும் கட்டப்பட்டிருந்தன. இரண்டு பீரங்கி வண்டிகள் வாய் பிளந்து காவல் புரிந்த பெரிய கூடாரத்தில்தான் கர்னல் துரை முகாமிட்டிருக்கிறான் என்பது, சற்றுத் தொலைவி லிருந்து பார்த்தாலே புரிந்து கொள்ளக் கூடிய ஒன்றுதான்.

அந்தக் கூடாரத்தைச் சுற்றிலுமுள்ள சிறுசிறு கூடாரங்களில் புகைபிடித்தவாறு வெள்ளைக்காரப் போர் வீரர்கள் அமர்ந்து பேசிக் கொண்டிருந்தார்கள். அஃதன்னியில் புதர் மண்டிய மதில் சுவருக்கு அருகாமை யில் துப்பாக்கிகள் ஏந்திய ஆங்கிலேய வீரர்கள் ''பாரா'' கொடுத்துக் கொண்டிருந்தார்கள்.

வாளுக்கு வேலியின் குதிரை சாரட் அந்த முகாமின் முகப்பில் வந்து நின்றது. ஆதப்பன் குதிரைகளைத் தட்டிக் கொடுத்துவிட்டு வண்டியை ஒரு ஓரமாக நிறுத்தினான். வாளுக்குவேலி தனது இயல்பான கம்பீரத்துடன் வண்டியிலிருந்து இறங்கி முகாமிற்குள் நுழைவதற்குப் பீடுநடை போடத் தொடங்கினான். அப்போது அவன்

கண்ணிலும் ஆதப்பன் கண்ணிலும் ஒரே சமயத்தில் காட்சி கொடுத்தது, பட்டமங்கலத்து அம்பலக்காரரின் வண்டி!

உயர்ந்த சாதி காளைகள் பூட்டி, இருபுறங்களிலும் பட்டமங்கலம் என்று பட்டுத்திரையில் எழுதப்பட்டுப் பளபளப்பாக நின்று கொண்டிருந்தது அந்த முகாமின் வாசலில் அந்த வண்டி!

ஒருவேளை கர்னல் துரை வல்லத்தரையனையும் அழைத்திருப்பாரோ என்று பாகனேரி சகோதரர்கள் தங்களுக்குள் பேசிக்கொண்டு, பெரிய கூடாரத்தை நெருங்கித் தாங்களிருவரும் வந்திருக்கும் செய்தியை வாயிற்காவலன் மூலம் உள்ளே சொல்லி அனுப்பினார்கள். உள்ளே போன காவலன் உடனடியாக வெளியே ஓடிவந்து ''துரை கூப்பிடுகிறார்'' என்று கூறி அவர்களைக் கூடாரத்திற்குள் அழைத்துச் சென்றான். ஏககாலத்தில் அண்ணனும் தம்பியும் தங்கள் உடைவாட்களைத் தடவிக்கொடுத்து விட்டு உள்ளே நுழைந்தார்கள்.





# 11

பாகனேரிச் சகோதரர்கள் எதிர்பார்த்தபடியே அந்தப் பாசறையில் பட்டமங்கலத்து வல்லத்தரையனும் உறங்காப்புலியும் அமர்ந்திருந்தனர்.

வெல்வெட்டு மெத்தை தைக்கப்பட்ட ஒரு உயரமான நாற்காலியில் கர்னல் துரை ஒரு நீளமான சுருட்டைப் புகைத்தவாறு கால்மீது கால் போட்டுக் கொண்டு உட்கார்ந்திருந்தான். அந்த ஆசனத்தைச் சுற்றிப் போடப்பட்டிருந்தன நாலைந்து மர நாற்காலிகள். அந்த நாற்காலிகளில் வல்லத்தரையனும் உறங்காப்புலியும்.

வாளுக்கு வேலியைக் கண்டவுடன் கர்னல் துரை அந்த அதிகார மமதை சற்றுக்கூடக் குறையாமல்க் உட்கார்ந்தபடியே ''வாங்க! வாங்க! ரெண்டு பேரும் உட்காருங்க!'' என்று அங்குக்கிடந்த நாற்காலிகளைத் தன் கையிலிருந்த புகைச் சுருட்டால் சுட்டிக் காட்டினான்.

வாளுக்குவேலி தலையை மட்டும் மெல்ல அசைத்து விட்டு ஒரு நாற்காலியில் அமர்ந்து கால்மீது கால் போட்டுக் கொண்டு, வல்லத்தரையனைப் பார்த்து ''பட்டமங்கலத்தார் எப்போது வந்தீர்கள்?'' என்று வி னவினான்.

''சற்று முன்புதான்!'' என்று பதில் அளித்தான் வல்லத்தரையன்.

''உயர்ந்த ரக மதுபானங்கள் இருக்கின்றன! என்ன பிடிக்கும்? கொண்டு வரச் சொல்கிறேன்!'' கர்னல் துரையின் இந்தக் கேள்விக்கு,

''அதெல்லாம் பழக்கமில்லை! வேண்டாம்!'' என்று மறுத்தான் வாளுக்குவேலி!

''ஓ! வல்லத்தரையனும் வேண்டாமென்கிறார், நீரும் அப்படியே சொல்கிறீர்!'' என்று கலகலவென ஒரு அர்த்தமற்ற சிரிப்பைக் கொட்டினான் வெள்ளை அதிகாரி!

திருக்கோட்டியூரில் கர்னல் துரையின் ஆட்களை ஆதப்பன் அடித்து விரட்டியது குறித்துத் தனது ஆத்திரத்தைக் கொட்டத்தான் அழைத்திருப்பான் என்று நினைத்ததற்கு மாறாக நிலைமை இருப்பதை உணர்ந்து, தம்பியைப் பார்த்தான் வாளுக்குவேலி! தம்பி ஆதப்பனின் கண்களோ அண்ணனைப் பார்க்காமல் அந்தக் கூடாரத்தில் ஒரு பகுதியில் மாட்டப்பட்டிருந்த ஒரு வண்ண ஓவியத்தையே இமை கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தன.

ஒரு புளிய மரம்! அந்த மரத்தின் கீழே முக்காலி! முக்காலிக்குக் கீழேயுள்ள வெள்ளைப் பகுதியில் ''கயத்தாறு'' என்ற எழுத்துக்கள்! முக்காலியின் மீது கட்டபொம்மன்! அவன் கழுத்திலே தூக்குக் கயிறு! அதற்கடுத்து இன்னொரு வண்ண ஓவியம்! சிம்மாசனத்திலே சிரித்த முகத்துடன் எட்டப்பன்! அவன் தலையில் ஒரு ஆங்கிலேய அதிகாரி மகுடம் சூட்டுவது போன்ற காட்சி!

அந்த ஓவியங்கள் புரியும் உபதேசம்தான் என்ன? ஆங்கிலேயர்க்கு அடங்கிப் போனால் ஆட்சி நிலைக்கும்! அடங்காவிட்டால் ஆவி பிரியும்! கறுத்த ஆதப்பனின் உள்ளம் கனலாகத் தகித்தது.

எவ்வளவு ஆணவமும், அதிகாரக் கொழுப்பும் இருந்தால் கூடாரத்திலேயே இந்தப் படத்தை மாட்டி வைத்துக் குறுநில மன்னர்களையும், பாளையக்காரர் களையும் பரங்கி அதிகாரிகள் மிரட்டிக் கொண்டிருப் பார்கள்...

அவர்களைச் சொல்லி என்ன பயன்? எப்படியும் வாழ வேண்டும், எந்தப் பதவியிலாவது ஒட்டிக் கொண்டிருக்க வேண்டுமென்று வாயில் எச்சிலை வடிய விட்டுக்கொண்டு அலைகிற எட்டப்பர்களையல்லவா சொல்ல வேண்டும்! ஆதப்பனின் கண்களில் ஜுவாலை வீசியது! குமுறும் எரிமலையைப் போல அந்தக் கூடாரத்தில் உட்கார்ந்திருந்தான்!

கர்னல் துரை வாளுக்கு வேலியைப் பார்த்துப் பேசத்தொடங்கினான். ''பாகனேரியாரையும் பட்ட மங்கலத்தாரையும் ஒரு அத்யாவசியமான காரியத்திற்காக அழைத்திருக்கிறேன்.''

''பீடிகை பலமாக இருக்கிறது! என்ன காரியமோ?''

''வியாபார நோக்கத்தோடுதான் உங்கள் நாட்டுக்கு வந்தோம்! ஆனால் எங்கள் அதிர்ஷ்டம் ஒரு சாம்ராஜ் யத்தையே உருவாக்குகிற அளவுக்குப் பெருகி வருகிறது! உங்களின் வீரம், துணிவு, தியாக உணர்வு, நாட்டுப்பற்று இவைகளில் எங்களுக்குத் துளியும் சந்தேகமில்லை! ஆனால் எங்களிடமிருக்கும் நவீனமான போர்க் கருவி களின் முன்னால் தாக்குப் பிடிக்க உங்களால் முடியாது! உங்கள் கண் எதிரிலேயே எத்தனை ராஜ்யங்கள் எங்கள் கொடிக்குத் தலை வணங்கியிருக்கின்றன என்பதும், தலைவணங்காதவர்கள் தலையை இழந்திருக்கிறார்கள் என்பதும் நீங்கள் அறியாத கணக்கல்ல!''

இறுமாப்புடன் சுருட்டுப் புகையை இழுத்து அங்கே மாட்டப்பட்டிருந்த கட்டபொம்மன், எட்டப்பன் ஓவியங்களின் மீது சுருள் சுருளாக விட்டான். அந்தப்

படங்களை வாளுக்குவேலியும் வல்லத்தரையனும் கவனித்தனர்.

''பாவம்! இந்தக் கட்டபொம்மனுக்கு வந்த கதி, பெரிய மருது-சின்ன மருது இருவருக்கும் வரக் கூடாது என்பதுதான் என் கவலை! மருது பாண்டியர்களிடம் என்ன கேட்கிறோம்! எங்களுக்கு அடங்கியும் கப்பம் செலுத்தியும் எங்கள் ஆதிக்கத்திற்கு இடையூறு இன்றியும் உங்கள் பரிபாலனத்தை நடத்துங்கள் என்றுதானே கூறுகிறோம். இதைவிடச் சிறந்த சமரச ஏற்பாடு வேறு ஏதாவது இருக்க முடியுமா?...உம்! எப்படியோ அவர்கள் வீழ்ச்சியை அவர்களாகவே தேடி அலைகிறார்கள்-அவர்களை எப்படியும் சிறைபிடிப்பது என்ற நோக்கத்துடன்தான் நான் புறப்பட்டிருக்கிறேன் என்பதை நீங்கள் அறிவீர்கள். அது சம்பந்தமாகத்தான் உங்கள் இருவரின் உதவியை நாடுகிறேன். அதற்காகவே உங்களையும் வருமாறு அழைப்பு விடுத்தேன்.''

வாளுக்குவேலியின் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தான் கர்னல் துரை!

''மருது சகோதரர்களைப் பிடிப்பதற்கு எங்களிடம் என்ன உதவியை எதிர்பார்க்கிறீர்கள்?''

வீரம் மிக்க வாளுக்குவேலியின் குரல் தழுதழுத்தது! எத்தனையோ ஆயிரம் கல் தொலைவுக்கு அப்பாலிருந்து வந்த ஒரு அன்னியன் இந்தத் தமிழ் மண்ணில் அமர்ந்து கொண்டு எவ்வளவு ஏகடியமாகப் பேசுகிறான் என்பதை எண்ணிடும்போது அவன் வீர நெஞ்சம் படபடக்கத்தான் செய்தது. கர்னல் துரை மேலும் தொடர்ந்தான்.

''மருது பாண்டியர்களைப் பிடிப்பதற்கு எனக்கு மூளையில் ஒரு அருமையான திட்டம் உருவாகியிருக் கிறது. பாகனேரி, பட்டமங்கலம் இரண்டு அம்பலக்

காரர்களாகிய நீங்கள் எல்லா அம்பலக்காரர்களையும் திரட்டி, மருது சகோதரர்களுக்கு ஆதரவளிப்பதாக அறிவிக்க வேண்டும். அந்த அறிவிப்புக்குப் பிறகு கள்ளர் நாடுகளின் அம்பலக்காரர்கள் அனைவரும் கலந்து கொள்கிற ஒரு விருந்து ஏற்பாடு. அதில் முக்கிய விருந்தினர்கள் மருதுபாண்டியர் இருவரும்! விருந்து நடைபெறும்போது விருந்து மண்டபத்தை வெள்ளைப் படை வளைக்கிறது. பெரிய மருதும் சின்ன மருதும் கைது செய்யப்படுகிறார்கள். எப்படி என் போர்த் தந்திரம்! இந்தத் தந்திரம் வெற்றி பெறத்தான் நீங்களிருவரும் துணைநிற்க வேண்டும்.''

வாளுக்குவேலிக்கு ஒரு அனல் மூச்சு! ஆதப்பன் இதயத் துடிப்புகள் இடியொலிகளாயின! சாம்ராஜ்யாதிபதி கள், குறுநில மன்னர்கள், பாளையக்காரர்கள் சரிந்துபோய் சரணாகதியடைந்து கிடக்கும் சூழ்நிலையில் நாடு என்று பெயர் பூண்ட ஒரு சில கிராமங்களின் அதிபர்களாக விளங்கும் அம்பலக்காரர்களால் ஆங்கிலேய ஆதிபத் யத்தின் வளர்ச்சியை எப்படித் தடுத்துவிட முடியும்?

''இந்த யோசனையை எனது நண்பர் பட்டமங்கலம் அம்பலக்காரர் வல்லத்தரையருக்குச் சொல்லியிருப் பீர்களே; அவரது பதில் என்னவோ?'' வாளுக்கு வேலியின் கேள்விக்கு வெள்ளைக்காரத் துரைமகன் பெருஞ்சிரிப்புடன் பதில் கூறினான்.

''பட்டமங்கலத்தாருக்கு அவ்வளவு பக்குவம் போதாது! மருது பாண்டியரைக் காட்டிக் கொடுப்பதா? அதற்கு என் மனம் ஒப்பவே ஒப்பாது-என்று மறுத்து விட்டார்!''

கர்னல் துரையின் இந்தச் சொற்கள் காதில் விழுந்தவுடனே வாளுக்குவேலி, தன்னிருக்கையை

விட்டுத் தாவிச் சென்று வல்லத்தரையனைக் கட்டித் தழுவிக் கொண்டான்.

''நான் சொல்ல வேண்டியதையும் சேர்த்துப் பட்ட மங்கலத்தார் சொல்லிவிட்டார்.''

கர்னல் துரையின் முகம் சிவந்தது. வெல்வெட்டு நாற்காலியை விட்டு வேகமாக எழுந்தான்.

''வாளுக்குவேலி! உங்களிருவரையும் நம்பித்தான் இந்தத் திட்டமே தீட்டினேன். கடைசியில் என்னைக் கைவிட்டு விடுவீர்கள் போலிருக்கிறதே!''

''கர்னல் துரை ஒன்றைப் புரிந்து கொள்ள வேண்டும். சூரியன் அஸ்தமனமே ஆகாத சாம்ராஜ்யத்தை நிறுவ வேண்டுமென்ற ஆங்கிலேயரின் ஆசை நிறைவேறி வருகிறது. மொத்தமாக எங்கள் மண்ணுக்கு அடிமைச் சங்கிலி பூட்டப்பட்டு விட்டதென்றே கூற வேண்டும். இந்த அடிமை மண்ணுக்குள்ளே ஏதோ என்னைப் போன்றவர்களின் தலைமையில் எங்களின் பழம்பெரும் கலாச்சாரங்களுக்குக் கேடு வராமல் பார்த்துக் கொள்ளும் பொறுப்பாவது மிஞ்சியிருக்கிறது. அதையும் சீர்குலைக்கும் வகையில் எங்களில் ஒருவரை-அதாவது நீங்கள் குறி வைத்திருக்கும் மருது பாண்டியரைக் காட்டிக் கொடுப்பதென்றால், அதற்கான சூழ்ச்சியில் ஈடுபடுவதென்றால் அதை ஏற்க முடியாது என மறுப்பதால் ஏற்படும் இழப்பு எதுவாயினும் அதை ஏற்றுக் கொள்ளத் தயாராக இருக்கிறோம்.''

உறுதியும் திடமும் பெருக்கெடுத்திட வாளுக்கு வேலி விளக்கமுரைத்ததும், எந்த இடர் வரினும் ஏற்கத் தயார்; ஆனால் காட்டிக் கொடுக்க ஒப்பமாட்டோம் எனக் கண்டிப்பாகக் கூறியதும்-கர்னல் துரையைக் கலக்கத்தில் ஆழ்த்தின. மருது சகோதரர்களைப் பிடிக்க வேறு வழிகூடக் கண்டுபிடிக்கலாம்! அதற்காக அந்தப் பகுதியில்

பலம் பொருந்திய அம்பலக்காரர்களைப் பகைத்துக் கொள்ளத் தேவையில்லையென்று ஒரு முடிவுக்கு வந்தான்.

''வாளுக்கு வேலி! உமது வீரத்தையும் உறுதியையும் பாராட்டுகிறேன்''- என்று துரை மகன் சொன்னதை உறங்காப்புலியால் பொறுத்துக் கொள்ள முடியவில்லை!

''அவராக எங்கே வீரம் பேசினார்? எங்கள் அம்பலக்காரர் பட்டமங்கலத்து வல்லத்தரையர் என்ன சொன்னார் என்று கேட்டுக் கொண்டுதானே அதற்குப் பாகனேரியார் பின்பாட்டுப் பாடியிருக்கிறார்.''

இப்படியொரு ஏளனத்தின் மூலம் வாளுக்கு வேலியைத் தாழ்த்தி விட்டதாக உறங்காப்புலிக்கு ஒரு மகிழ்ச்சி! வாளுக்குவேலி, அவன் பேச்சைப் பொருட் படுத்தாமல் மௌனமாகப் புன்னகை புரிந்ததால் அவனுக்கு மேலும் துணிவு பிறந்தது!

''மருது பாண்டியரைப் பிடிப்பதற்கான சூழ்ச்சிக்கு உதவிட வேண்டுமென்று முதலிலேயே பாகனேரி அம்பலக்காரர் வாளுக்குவேலியை அழைத்துக் கேட்டிருப்பீர்களேயானால் அவர் ''சரி பிரபு'' என்று ''சலாம்'' போட்டிருப்பார்!''

ஆதப்பன் குதித்தான்!

''உறங்காப்புலி! உன் நாக்கை அடக்கு! இதற்கு மேலும் உன்னைப் பேச அனுமதிக்கமாட்டேன்!''

தணலாக நின்ற தம்பியை வாளுக்குவேலி சாந்தப்படுத்தினான். ஆதப்பன் அடங்குவதாக இல்லை. இடையில் இருந்த கட்டாரி கைக்கு வந்து விட்டது!

உறங்காப்புலி, கர்னல் துரையைப் பார்த்து, ''பிரபூ! நீங்கள் இந்த யோசனையை எங்களிடமெல்லாம் கேட்டதற்குப் பதிலாகக் கொஞ்சம் முன் யோசனையுடன்

திருக்கோட்டியூர் சுந்தரியிடம் சொல்லி, கறுத்த ஆதப்பனை இதற்கு இணங்க வைத்திருக்கலாம். அவள் சொன்னால் ஆதப்பனுக்கு வேத வாக்கு! ஆதப்பன் சொன்னால் அவன் அண்ணனுக்கு தெய்வ வாக்கு! சுந்தரி மூலம் சுலபமாக முடிந்திருக்கும் வேலை!'' என்றான் நகைத்துக் கொண்டே!

''சுந்தரிக்கும் எனக்குமென்ன தொடர்பு? எதற்காக உறங்காப்புலி இந்த வீண் வம்புகள் எல்லாம்?''

கர்னல் துரை இடைமறித்தான்!

''ஆதப்பா! அதிலேகூட ஒரு தவறு நடந்து விட்டது! சுந்தரி என்பவள் உன்னுடைய ஆசைநாயகியென்று தெரியாமல் என்னுடைய ஆட்கள்...''

துரை, சொல்ல வந்ததைச் சொல்லி நிறுத்துவதற்குள் ஆதப்பன் மேலும் சினங்கொண்டு, ''தவறான எண்ணம்! மிகமிகத் தவறான எண்ணம்! சுந்தராம்பாள் ஒரு கௌரவமான நடனக்காரி...அங்கே உங்கள் ஆட்கள் நுழைந்து...அமளி நடத்தினார்கள்!'' என்றான்.

''நாட்டிய நிகழ்ச்சிக்கு அழைத்திருப்பார்கள்.''

''இல்லை! நள்ளிரவுக் கேளிக்கைக்கு!''

''அப்படியா? அதனால்தான் உனக்குக் கோபம் வந்ததா?...''

உறங்காப்புலி சும்மா இருக்கவில்லை! ஆதப்பனை உசுப்பி விட்டான்!

''பிறகென்ன, கோபம் வராதா? பிரியத்துக்குரியவளை யாரோ பிடித்து இழுக்கும்போது...''

''போதும்! உன் பொய் மூட்டைகளை அவிழ்க்காதே! என் பொறுமையைச் சோதிக்காதே!''

''ஆதப்பா! அப்படியானால் ஒரு ஆடலரசியின் வீட்டில் உனக்கென்ன வேலையப்பா?''

''ஏன், வேறு ஏதாவது வேலை இருக்கக்கூடாதா?''

''இருக்கவே முடியாது! இருந்தால் இரண்டே வேலைதான் இருக்க முடியும்! ஒன்று மாப்பிள்ளையாக இருக்கும் வேலை-அல்லது அந்தத் தாசிக்குத் தரகு பார்க்கும் வேலை...''

''என்னடா சொன்னாய்?'' என்று ஆதப்பன் கேட்பதற்கு முன்பே, வாளுக்குவேலியின் முரட்டுக்கரம். உறங்காப்புலியின் கன்னத்தில் ஓங்கி விழுந்தது! உறங்காப்புலிக்கு அந்த அடியினால் உலகமே சுற்றியது போலிருந்தது. அவன் கண்கள் இருண்டு விட்டன!

வல்லத்தரையன், உறங்காப்புலியை அணைத்துக் கொண்டு ''இது உன்னை அடித்த அடியல்ல! என்னை அடித்த அடி! இதற்கு நான் வாளுக்கு வேலியைப் பதிலுக்குப் பதில் அவமானப்படுத்தாமல் விட மாட்டேன்'' என்று உரக்கக் கத்தினான்...

''எப்படி அவமானப்படுத்துவீர்? இதோ நானே உம்மைச் சந்திக்கிறேன்! உம், நடக்கட்டும் உமது பழி வாங்கும் படலம்!'' ஆதப்பன் கர்ச்சனை செய்தான்.

அந்த அறைகூவலைக் கேட்ட பிறகும் வாளா விருக்கப் பட்டமங்கலத்து வல்லத்தரையன் என்ன கோழையா? உடைவாளை எடுத்து ஓங்கினான். அப்போது வாளுக்குவேலி, வல்லத்தரையனின் முன்னால் சென்று-''முதலில் என்னை வீழ்த்திவிட்டுப் பிறகு என் தம்பியை வீழ்த்தும்!'' என்று நெஞ்சை நிமிர்த்திக் கொண்டு நின்றான்.

''போதும்! போதும்! உங்கள் சண்டையை நிறுத் துங்கள்'' என்று கர்னல் துரை குறுக்கிட்டான். உருவிய வாட்களும், ஓங்கிய கட்டாரிகளும் உறைகளில் புகுந்தன!

''இன்று நீங்கள் வந்த நேரம் உங்களுக்கும் சரியில்லை; எனக்கும் சரியில்லை-தேவைப்பட்டால் இன்னொரு நாள் சந்திக்கலாம்! நீங்கள் போய் வரலாம்!'' என்று சுருட்டைப் புகைத்தவாறு நாற்காலியில் அமர்ந்தான் கர்னல் துரை!

பாகனேரி சகோதரர்கள், பட்டமங்கலத்து மைத்துனர்கள் எந்தச் சமயத்தில் வெடித்துச் சிதறப் போகிறதோ இந்த எரிமலை என எண்ணிடும் வண்ணம் அந்தக் கூடாரத்தை விட்டு அகன்றனர்!

அவர்கள் போனபிறகு கர்னல் துரை சிரித்துக் கொண்டே மதுக் கோப்பையைக் கையில் எடுத்தான்!

''நமது ''பலம்'' நமது படையிலும், படைக் கலன்களிலும் இல்லை! இதோ இவர்களைப் போன்றவர்களின் ஒற்றுமையற்ற ''பலகீனத்தில்'' தான் இருக்கிறது.''

வெள்ளை அதிகாரியின் வாய் இதைத்தான் கம்பீரமாக உச்சரித்தது!





# 12

''ஆமாம்! அதற்கென்ன சந்தேகம்?'' என்று சிரித்துக் கொண்டே வெள்ளை அய்யர் கர்னலின் முன்னே வந்து நின்றார். ''வாருங்கள் மிஸ்டர் வெள்ளை! இப்போதுதான் பாகனேரி, பட்டமங்கலம் அம்பலக்காரர்கள் வந்து விட்டுப் போகிறார்கள்'' என்று கூறிக் கொண்டே கர்னல் துரை ஒரு அழகான மதுக் கோப்பையை அவரிடம் நீட்டினான்.

''நான் இதைத் தொட மாட்டேன்னுதான் உமக்குத் தெரியுமே'' என்று சைகையால் மறுத்தவாறு வெள்ளை அய்யர் நாற்காலியில் உட்கார்ந்தார்.

மருது பாண்டியர்களை அடக்கிட வேண்டும் அல்லது அழித்திட வேண்டும் என்பதற்காகப் படைகளுடன் கங்கணம் கட்டித் திரியும் ஆங்கிலேய அதிகாரிகளில் ஒருவனான அக்னியூ என்பவன்தான் கர்னல் துரையென்று மரியாதையுடன் அழைக்கப் படுபவன். அம்பலக்காரர் இருவரும் தனது சூழ்ச்சித் திட்டத்திற்கு உதவிட மறுத்து விட்டார்கள் என்றாலும் கர்னல் அக்னியூவுக்குப் பெருமகிழ்ச்சியான ஒன்று என்னவென்றால் பலம் மிக்க பாகனேரி அம்பலக்காரரும் பட்டமங்கலம் அம்பலக்காரரும் ஒருவரோடு ஒருவர் மோதிக் கொள்ள எந்த நேரமும் தயாராக இருப்பதுதான்!

''என்ன மிஸ்டர் வெள்ளை! வாளுக்கு வேலியின் தம்பி ஆதப்பன் இருக்கிறானே, அவனுக்கு ஒரு சிங்கக் குட்டியின் பலம் இருக்கும் போலிருக்கிறதே!''

''ஆமாம்! இப்போதுதானே மதுரை நாயக்கர் முன்னிலையில் நடைபெற்ற மல்யுத்தப் போட்டியில் ஒரு மாமல்லனையே ஜெயித்திருக்கிறான்!''

''மதுரை நாயக்கரா? அவர் யார்? சந்தாசாகிப்பின் படைகளுக்கு ஈடுகொடுக்க முடியாமல் வேறுவழியின்றி விஷமருந்தி மாண்டாள் ராணி மீனாட்சி! அதற்குப் பிறகு யாரோ பங்காரு நாயக்கர் என்பவர் மராத்தியர்களுடன் சேர்ந்து கொண்டு மகம்மதியர்களின் ஆட்சியை எதிர்த்து அவரும் கொல்லப்பட்டு விட்டார்...அதன் பிறகு மதுரை நாட்டை ஆளுகின்ற நவாப்புக்கள் எங்கள் ஆட்சியுடன் உறவு பூண்டிருப்பவர்கள்தானே! எந்த நாயக்கர்-எந்த மதுரையில் இந்தக் கறுத்த ஆதப்பனுக்கு விருது வழங்கினார்?''

''மிஸ்டர் அக்னியூ! பெயர்தான் மதுரை நாடு என்றாலும், கடைசி காலத்தில் திருச்சிதான் மதுரை நாட்டு நாயக்கர் ஆட்சிக்குத் தலைநகரமாக இருந்தது! அப்போதும் மதுரைக்கு ஒரு செல்வாக்கு உண்டு! மதுரை நாடு மகம்மதியர் வசமாகும்போது திருச்சித் தலைநகரில்தான் ராணி மீனாட்சி தற்கொலை செய்து கொண்டாள்! மகம்மதியர் ஆட்சிக்கு வந்த பிறகு அவர்களது நேரடி கவனத்தில் மதுரை இல்லை! நவாப்புக்களின் கவனத்திற்குரியதாக இல்லாத நாயக்க மன்னர்களின் அழியாத நினைவுச் சின்னங்களான மதுரை மாடமாளிகை கூட கோபுரங்களில் சிலவற்றை உங்களை எதிர்க்கும் விடுதலை வீரர்கள் சிலர் தங்களுடைய பாசறைகளாக அமைத்துக் கொண்டிருக்கிறார்கள்! இதெல்லாம் தங்கள் காதுக்கு இதுவரையில் வராமல் இருந்திருக்காதே!''

''வந்துள்ளது மிஸ்டர் வெள்ளை, வந்துள்ளது! ஜல்லிப்பட்டி விருப்பாட்சி பாளையக்காரரான கோபால நாயக்கரும், அவரது மகன் முத்துவேல் நாயக்கரும் மருதுபாண்டியர்களுக்கு நெருங்கிய பக்கபலமாக இருந்து அம்பலக்காரர்கள் பலருடனும் இரகசியத் தொடர்பு கொண்டு ஆங்கிலேயப் படையை எதிர்க்க மிகப் பெரிய ஆயத்தங்களைச் செய்து வருகிறார்கள்! அப்படித் தொடர்பு கொள்ளப்படும் அம்பலக்காரர்கள் பட்டியலில் பாகனேரியும் பட்டமங்கலமும் கூட உண்டு இல்லையா?''

''அதெல்லாம் எனக்குத் தெரியாது! எனக்குத் தெரிந்ததெல்லாம் நீங்கள் சொன்னீர்களே, கோபால நாயக்கர்; அதாவது விருப்பாட்சி ஜல்லிப்பட்டி பாளையக்காரர் - அவர், அந்த விடுதலை வீரர்கள் மத்தியில் மதுரை நாயக்கர் என்று அழைக்கப்படுகிறார். மதுரையிலே பழைய மாளிகையொன்றில் ஒரு பாசறையும் அமைத்திருக்கிறார்கள். அங்கு நடைபெற்ற வீரர்கள் போட்டியில்தான் கறுத்த ஆதப்பன் விருது பெற்றான். அந்த நிகழ்ச்சிக்கு நான் கூடப் போயிருந்தேன்.''

''ஏன் மிஸ்டர் வெள்ளை, உண்மையில் பாதியை விழுங்குகிறீர்? மருது பாண்டியரிடத்திலும், மதுரை நாயக்கர் என்றீரே, அந்தக் கோபால நாயக்கரிடத்திலும் அவர்கள் கூட்டத்தைச் சேர்ந்த புரட்சிக்காரர்களான ஊமைத்துரை, செவத்தையா, ஞானமுத்து, முத்துவீரன், வீரப்பன், சிவஞானம், சிராள முத்தரையர், உதயணன், கனகசபாபதி, உலகநாத உடையார், உத்தமநாதப் படையாச்சியார், கடல்குடி குஞ்ச நாயக்கர், பூபதி நாடார், பூசாரி நாயக்கர், கோமி ரெட்டி, பெருமாள் சாமி பிள்ளை, கல்யாணத் தேவர், தோமாச்சி முதலியார், எல்லப்ப முதலியார், உதயபெருமாள் கவுண்டர் போன்றவர்களிடத்

திலும் வாளுக்கு வேலிக்கும் கறுத்த ஆதப்பனுக்கும் இரகசியத் தொடர்பு இருக்கவே செய்கிறது எனக் கேள்விப்படுகிறேன். பட்டமங்கலத்தார்தான் இன்னும் எதிலும் பட்டுக் கொள்ளாமல் இருக்கிறார். ஆனால் அவரும் அவர் தம்பி வைரமுத்தனும் எங்கள் ஆட்சியை விரும்புகிறார்களோ இல்லையோ, தென்பாண்டி மண்டிலம் அடிமையாகவும் காட்டிக் கொடுக்கும் குணம் கொண்டதாகவும் மாறுவதை விரும்பவில்லை என்று புரிகிறது. அதுவும் ஒரு வகையில் எங்களுக்கு அதிருப்தியான கொள்கைதான்! கள்ளர் நாடுகளின் சார்பாகப் பெருமாள்சாமி பிள்ளையும், கல்யாணத் தேவரும் மருதுவுடனும் கோபால நாயக்கருடனும் அணி வகுத்து எங்களை எதிர்க்க-திண்டுக்கல்லில் கோபால நாயக்கரை இரகசியமாகச் சந்தித்தும் இருக்கிறார்கள்.''

வியப்புடன் கர்னல் துரையைப் பார்த்து விழிகளில் ஒளி மிகுந்திட வெள்ளை அய்யர் பாராட்டுரைகளை உதிர்த்தார்.

''ஏ அப்பா! என்ன விவேகம்! என்ன நினைவு! மருது பாண்டியருடன் அணிவகுத்து நிற்கும் வீரத்தளபதிகளை அப்படியே மனப்பாடம் செய்தது போலச் சொல்லுகிறீர்களே! ஆனால் ஒன்று, மிஸ்டர் அக்னியூ! பாகனேரித் தலைவன் வாளுக்குவேலியும் அவர் தம்பியும் உங்களுக்கு எதிராக மருதுபாண்டியரோடும், கோபால நாயக்கர் போன்ற புரட்சிக்காரர்களோடும் தொடர்பு வைத்திருப்பதாகச் சொல்வதை என்னால் நம்ப முடியவில்லை!''

''நான் நம்புகிறேன் அய்யரே! எனக்குக் கிடைத்துள்ள தகவல்களின்படி நான் நம்புகிறேன்!''

''அப்படியானால் நான் வாளுக்குவேலிக்கு அறிவுரை கூறித் திருத்துகிறேன். அது என்னால் முடியும்.

மலையோடு மோதிக்கொள்ளாதே என்று எச்சரிக்கை செய்து பாகனேரியை உங்கள் வழிக்குக் கொண்டு வருவது என் பொறுப்பு! அவசரப்பட்டுப் பாகனேரி மீது பகை கொள்ள வேண்டாமென்பது என் கருத்து.''

அக்னியூ, மேலும் ஒரு கோப்பை மதுவை வயிற்றுக்குள் ஊற்றிக் கொண்டான். ஆங்கிலேயர் ஊடுருவலை எதிர்த்து நிற்கும் அத்தனைப் புரட்சிக்காரர் களையும் ஊதையில் துரும்பென அலைக்கழித்து விடலாம் என்ற ஆணவச் சிரிப்புக் கிளம்பிற்று. வெள்ளை அய்யரிடம் தள்ளாடியவாறு நடந்து வந்து அவரது தோளைக் குலுக்கி உரக்கச் சத்தமிட்டுக் கொக்கரித்தான்:

''நினைவிருக்கட்டும் 1799 அக்டோபர் 16-ஆம் தேதி! அன்றைக்குத்தான் வீரபாண்டிய கட்டபொம்மன் கயத்தாறு புளியமரத்திலே தூக்கிலிடப்பட்டான்! பாளையங்கோட்டைச் சிறையில் கிடந்த ஊமைத்துரை தப்பியோடி மீண்டும் பாஞ்சாலங்குறிச்சியிலிருந்து இந்த 1801 ஆம் ஆண்டு பிப்ரவரி ஒன்பதாம் தேதி முதல் மே மாதம் இருபத்து நாலாம் தேதிவரையில் போரிட்டுக் கோட்டையைப் பறிகொடுத்துவிட்டு மருதுபாண்டிய ரிடம் ஓடிவந்து விட்டான்! இன்னும் ஆறு மாதத்திற்குள் அவனையும் அவனுக்குத் துணைநிற்கும் மருது சகோதரர்களையும்-மற்றவர்கள் யாராயிருப்பினும் அவர் களையும் இந்தக் கர்னல் அக்னியூவின் படை வளைத்தே தீரும்! அந்தப் புயலில் சிக்கி வாளுக்குவேலி சாக விரும்புகிறானா? அல்லது எங்கள் வாழ்த்தோடு வாழ விரும்புகிறானா?''

வெள்ளை அய்யர், கர்னல்துரைக்கு மதுவெறி ஏறிவிட்டதைப் புரிந்து கொண்டு அமைதியாகவே பேசினார்.

''வாளுக்குவேலி உங்களுக்குப் பகைவராக இல்லாதபோது, நீங்களே வலியச் சென்று விரோதியாக ஆக்கிக் கொள்ள விரும்புகிறீர்களே! ஏன்?''

''மிஸ்டர் வெள்ளை! வாளுக்குவேலியை நீர் வழிக்குக் கொண்டுவந்தால் எனக்கு மகிழ்ச்சிதான்! வரவேற்கவும் உம்மைப் போற்றிப் புகழவும் தயாராக இருக்கிறேன்! அப்படி ஒழுங்குபட்டு வராவிட்டால், இருக்கவே இருக்கிறது, பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் பிரித்தாளும் சூழ்ச்சி! அந்தச் சூழ்ச்சியில் சிக்குண்டால் ஆங்கிலேயப் படைகளின் துப்பாக்கிக் குண்டுகள் வெடிக்காமலேயே உங்கள் அன்புக்குரிய அம்பலக்காரர் இருவரின் கல்லறைகளையும் கட்டி முடித்துவிடுவோம்! இருவரும் பலம் பொருந்திய அம்பலக்காரர்கள்-அவர்களது பகையையும் எதற்காகத் தேடிக் கொள்ள வேண்டும் என்பதற்காகவே எனது திட்டமொன்றை அவர்கள் ஏற்றுக் கொள்ளாத போதும் பொறுத்துக் கொண்டேன்! அதே நேரத்தில் எமது பகைவர்களுடன் அவர்கள் இருவரோ அல்லது இருவரில் ஒருவரோ உறவாடுவது என்பது சகித்துக் கொள்ளக் கூடியதல்ல! இருப்பினும் தெரியாதது போலப் பொறுத்துக் கொண்டிருக்கிறேன்.''

''அக்னியூ, நீங்கள் அந்த விஷயத்தை என்னிடம் விட்டு விடுங்கள்! நான் வாளுக்கு வேலியிடமும் வல்லத்தரையனிடமும் நெருங்கிப் பழகுகிறவன்! நானறிந்தவரையில் அவர்கள் உங்களுக்கு எதிராக எதுவும் செய்யவில்லை! ஒருவேளை எனக்கும் தெரியாமல் நீங்கள் சொல்வதுபோல ஏதாவது இரகசிய சதிகள் நடக்குமே யானால் அவர்களை அடக்கி வைப்பதும், ஆங்கிலேய ஆட்சியின் விசுவாசிகளாக ஆக்குவதும் என்னுடைய கடமை! என்னுடைய நல்ல நண்பர்கள் அவர்கள்! அவர்களும் அவர்களது நாடும் நாசமாவதை என்னால் பார்த்துக் கொண்டிருக்க முடியுமா?''

''முடிந்தவரையில் உமது முயற்சி வெற்றி பெறட்டும்! இல்லையேல் இரண்டு ஆடுகளையும் முட்டவிட்டு, வழியும் இரத்தத்தைச் சுவைத்துக் குடிக்க என்னால் முடியும்!''

''நீங்கள் அந்த இரத்தம் குடிக்க வேண்டாம்! கையிலே இருப்பதையே குடியுங்கள்!''

கர்னல் அக்னியூ கோப்பையைக் காலிசெய்து கீழே வீசுகிறான். படைத் துணைத்தளபதி பாசறைக் கூடாரத்திற்குள்ளே வேகமாக நுழைகிறான்...

அக்னியூ அவனைப் பார்த்து ''அவசரமான செய்தியா? முகத்தில் ஏன் இவ்வளவு பரபரப்பு?'' எனக் கேட்டான்.

துணைத் தளபதி கர்னலுக்குப் பட்டாளத்து முறைப்படி வணக்கம் தெரிவித்துவிட்டு, செய்தியைப் பதட்டத்துடன் சொன்னான்.

''நமது படைகளில் ஒன்று மருதுபாண்டியர் படைகளை எதிர்ப்பதற்குத் திருபுவனத்தை விட்டுத் திருப்பாச்சேத்திக்குப் புறப்பட்டு வந்தது. அந்த எட்டுக்கல் தொலைவுக்குள் மருதுவின் வீரர்களால் நமது படைக்கு ஏற்பட்ட சேதம் மிகப் பெரிது! ஆற்றல் நிறைந்த ''மேஜர் கிரே'' கொல்லப்பட்டு விட்டார். பிளாக்கர், கோல், பார்மின்டன், ஸ்டுவர்டு என்ற தளபதிகள் கடுமையான காயங்களுக்கு ஆளாகியிருக்கிறார்கள். பல வீரர்கள் உயிரிழந்தார்கள். போரில் சுடப்பட்டுக் கொல்லப்பட்ட மேஜர் கிரேயின் உடலைக் கண்டதுண்டமாக்கிப் போட்டு விட்டனர் மருதுப் படையினர்!''

துணைத் தளபதி சொன்ன செய்தி கேட்டு, கர்னல் அக்னியூ அதிர்ச்சி அடைந்தான்! ஆத்திரம் கொண்டான்! மூக்கு முட்டக் குடித்திருந்ததால் ஏறியிருந்த மயக்கம் தெளிந்தது!

உடனே திருப்பாச்சேத்தி நோக்கித் தனது படைகள் புறப்பட வேண்டுமென்று ஆணை பிறப்பித்தான். மேஜர்

ரேயைக் கண்டதுண்டமாக்கிய மருது பாண்டியரைக் கண்டதுண்டமாக்கிக் கழுகுகளுக்கு விருந்தாக்க அவனும் அக்கணமே அந்தப் படையுடன் கிளம்புவதற்குத் தயாரானான்.

''மிஸ்டர் வெள்ளை! போய் வருகிறேன்'' என்று அய்யரின் கையைக் குலுக்கினான் கோபம் கொப்பளிக்க!

''ஆண்டவன் செயலால் உங்கள் உயிருக்கு எந்த ஆபத்தும் ஏற்படக் கூடாதென்று பிரார்த்திக்கிறேன்'' என்று ஆசீர்வாதம் வழங்கினார் வெள்ளை அய்யர்! அவருக்கு ஒரு நிம்மதி! இந்தப் புதிய பதட்டமான செய்தியினால் கர்னல் அக்னியூவுக்கு பாகனேரியார் மீதும் பட்டமங்கலத்தார் மீதுமிருந்த கோபம், வேறுபக்கம் திரும்பி விட்டதென்ற ஆறுதலுடன் அய்யர் அங்கிருந்து வெளியேறினார்.

பாசறை வீரர்கள் உடனே பயணத்திற்குத் தயாராக சங்கு ஒலிக்கத் தொடங்கியது! அந்தச் சங்கொலி கேட்டு உடல் நடுங்க, உள்ளம் பதற, வெள்ளை அய்யர் பயந்து கொண்டே பாசறையைப் பார்த்தவாறு மெல்ல நகர்ந்து கொண்டிருந்தார்!

குறிப்பு:

'Kallarnadu, a rugged region of thorny shrubs, situated between Madurai and Tiruchirapalli, served as the meeting ground of the three parallel rebel organisations of Tirunelveli, Ramnad and Dindigul. The Kallans, the inhabitants of this hilly territory, were not only gallant fighters but the inveterate enemies of the Company for generations. Large sections of them had already lent their support to Marudu and associates of Kattabomman. Gopala Nayak

more than the other leaders effectively prevailed upon them and gained their alliance. He sent Ellappa Mudali on missions to Kallarnadu. On the 25th of February Kaliani Tevar and Perumal Swami Pillai, the deputies of Kallarnadu, visited Dindigul and gave their consent to join the League.

(Page 87, SOUTH INDIAN REBELLION, BY K. RAJAYYAN, Professor and Head of the Department of Modern History, Madurai University, Madurai).





# 13

கர்னல் அக்னியூவைச் சந்தித்து விட்டு அதனால் ஏற்பட்ட மன உணர்வுகளின் பாதிப்பைச் சமாளித்தவாறு வாளுக்கு வேலியும் கறுத்த ஆதப்பனும் குதிரை சாரட்டில் திரும்பிக் கொண்டிருந்தார்கள்.

கர்னல் ஒரு அந்நியன்; அவன் நடந்து கொண்டதை விடப் பட்டமங்கலத்து உறங்காப்புலியும் அவனுக்காகப் பரிந்து பேசிக்கொண்டு வல்லத்தரையனும் நடந்து கொண்டது ஆதப்பனின் உள்ளத்தில் குமுறலையும் வாளுக்கு வேலிக்குக் குழப்பத்தையும் ஏற்படுத்தியது.

எவ்வளவோ மறக்க முயன்றும் முடியவில்லை. சாரட்டு வண்டி திருக்கோட்டியூர் செல்லும் பாதையில் திரும்பிக் கொண்டிருந்தபோது கல்யாணி நாச்சியாரின் நினைவு வரவே, அண்ணன், தம்பியைப் பார்த்துச் சொன்னான்: ''ஆதப்பா! அப்படியே போகும் வழியில் அந்தச் சுந்தராம்பாளைப் பார்த்துக் கல்யாணிக்கு நடனம் கற்றுக் கொடுக்க ஏற்பாடு செய்துவிட்டுச் செல்லலாமே'' என்று!

''அண்ணா! இருட்டு நேரம்! பகல் வேளையாக இருந்தால் கூட உங்கள் கௌரவத்திற்கு நீங்களே நேரில் சென்று சுந்தராம்பாளை நடன ஆசிரியராக வருவதற்குக் கேட்பது என்பது சரியாக இருக்காது!''

''இதிலென்னப்பா கௌரவம்! இதோ, கர்னல் அழைத்தான்! போனோம்; வந்தோம்! இதில் போகாத கௌரவமா ஒரு கலையரசியின் வீட்டுக்குப் போவதால் போய் விடும்!''

''என்ன அண்ணா அவசரம்? நாளைக்குக் காலையில் நானே போய்க் கேட்டு விட்டு வருகிறேனே!''

''புறப்படும்போது கல்யாணியிடம் சொல்லி விட்டேனே ஆதப்பா! தங்கையிடம் ஒரு வார்த்தை சொல்லி அதை என்றைக்காவது நான் மறந்தது உண்டா? செய்யத் தவறியது தான் உண்டா?''

அதற்கு மேல் ஆதப்பன் அண்ணனிடம் வாதாடிப் பழக்கப்படாதவன்! சாரட்டை வேகமாக ஓட்டிக் கொண்டிருந்தான். அப்போது பாதையிலும், வயல்களின் வரப்புக்களிலும், ஒற்றையடி வழிகளிலும் சாரை சாரையாக ஆண்களும் பெண்களும் திருக்கோட்டியூரை நோக்கிச் சென்று கொண்டிருந்ததை இருவருமே கவனித்தார்கள்.

''என்னப்பா! இவ்வளவு கூட்டம் போகிறது! கொஞ்சம் வண்டியை நல்ல இருட்டில் நிறுத்தி என்னவென்று விசாரித்துப் பாரேன்!'' என்றான் வாளுக்குவேலி.

ஆதப்பனும் வண்டியை,கிளைகளும் இலைகளும் நிரம்பி அடர்ந்து படர்ந்திருந்த ஒரு மரத்தடியில் நிறுத்திவிட்டு, வண்டியில் யார் இருக்கிறார்கள் என்று தெரியாத இருட்டில் சாரட்டில் இருந்தவாறு ''என்னய்யா விசேஷம்? எங்கே போறீங்க எல்லோரும்?'' என்று கேட்டான்.

''தெரியாதா உங்களுக்கு? இன்னைக்குத் திருக்கோட்டியூருக்குப் பக்கத்திலே மேனா மேயன்னா செட்டியார் வீட்டிலே கல்யாணம்! அதுக்கு சுந்தராம்பாள்

வடிவாம்பாள் நடனக் கச்சேரி! அதைப் பார்க்கத்தான் இவ்வளவு கூட்டம்.''

இப்படிப் பதில் சொல்லிக் கொண்டே அந்தக் கூட்டம் விரைந்து நடந்து கொண்டிருந்தது. மேனா மேயன்னா செட்டியார் பெரும் பணக்காரர்! கோடீஸ்வரர்! அவர் வீட்டுத் திருமணத்திற்கு அவசியம் வர வேண்டுமென்று நேரிலேயே வந்து வாளுக்கு வேலிக்கு அழைப்பிதழ் கொடுத்துவிட்டுச் சென்றார். திருமண நேரத்திற்கே சென்று மணமக்களை வாழ்த்தியிருக்க வேண்டும். கர்னல் அக்னியூவின் திடீர் அழைப்பினால் ஏற்பட்ட பரபரப்பில் செட்டியார் வீட்டுத் திருமணத்தை எல்லோரும் மறந்து விட்டார்கள்.

ஆனால், இப்போது வாளுக்குவேலிக்கு ஒரு யோசனை தோன்றியது. நேராகச் செட்டியார் வீட்டுக்குச் சென்று விட்டால் திருமணத்தை விசாரித்தது போலவும் இருக்கும். சுந்தராம்பாள் நடன நிகழ்ச்சியைப் பார்த்துவிட்டு அவளிடம் தன் தங்கையின் நடனப் பயிற்சி குறித்துப் பேசிவிட்டு வரவும் வாய்ப்பாக இருக்கும்! அண்ணனின் இந்த யோசனையை ஆதப்பனும் ஏற்றுக் கொண்டான். சாரட்டு வண்டி, செட்டியார் வீட்டை நோக்கித் திரும்பியது.

செட்டியார் வீடு இருக்கும் வீதி முழுதும் கண்ணைக் கவரும் அலங்காரம்! வீதியின் இருமருங்கிலும் ஒரே சீரான பனை மரங்களை வெட்டி நட்டு அவற்றின் மீது பெரிய பெரிய அகல் விளக்குகள் எரிய விடப்பட்டிருந்த காட்சி அனைவரையும் ஈர்த்தது! பல வண்ணத் துணிகளைக் கட்டிப் பார்ப்போர் அதிசயிக்கும் வண்ணம் பந்தல் அமைக்கப்பட்டிருந்தது! சுந்தராம்பாள் நடன நிகழ்ச்சி நடைபெறும் அரங்கிற்கு முன்னால் மணமக்கள் அழகுற சிங்காரித்து உட்கார வைக்கப்பட்டிருந்தார்கள்.

செட்டியார், திருமண வரவேற்பு விழாவுக்கு வருவோரை வரவேற்பதில் மிகுந்த உற்சாகம் காட்டி ஆடி ஓடிக் கொண்டிருந்தார் என்றாலும், வல்லத்தரையன் முதற்கொண்டு தனக்குத் தெரிந்த அம்பலக்காரர்கள் எல்லாம் வந்திருந்து கல்யாணம் விசாரித்துவிட்டுப் போயிருக்கும்போது வாளுக்குவேலி மட்டும் வராதது அவர் மனத்தின் ஒரு ஓரத்தில் ஆதங்கத்தை ஏற்படுத்திக் கொண்டுதானிருந்தது.

நடன அரங்கில் சுந்தராம்பாளும் வடிவாம்பாளும் பட்டை தீட்டப்பட்ட வைரமணிகளாகச் சுழன்றாடிப் பந்தலில் வீற்றிருந்தோரைச் சுழல வைத்தனர்.

அலாரிப்பு, ஜதிஸ்வரம், தில்லானா என்ற நடனங்கள் முடிவுற்று மோகினி உடையில் சுந்தராம்பாளும், வடிவாம்பாளும் சதங்கை கொஞ்சும் தாமரைப் பாதங்களை அரங்க மேடையில் அசையவிட்டபோது பந்தலில் எழுந்த கையொலியால் அந்த வீதியே அதிர்ந்தது!

''வெற்றி வேல்! வீர வேல்! என்

விழி யிரண்டும் வேல்! வேல்!

சுற்றி வா! சுழன்று வா!

சுகம் கிடைக்கும் ஓடி வா!''

என்ற பாட்டுக்கு அபிநயம் காட்டிச் சுந்தராம்பாள் ஆடினாள்!

''கொம்புத் தேன்! குடகுத் தேன்! என்

கொவ்வை இதழ் தேன்! தேன்!

அருகில் வா! பருக வா!

அமுதம் தருவேன் ஓடி வா!''

என்ற பாட்டுக்குத் தன் மேனியின் அழகை யெல்லாம் அசைத்துக் காட்டி வடிவாம்பாள் ஆடினாள்!

''நினைத்தது நடக்கும்
நனைத்தது இனிக்கும்
கிடைத்திடும் சொர்க்கம்
புதுக்கனி வர்க்கம்!''



இந்தப் பாடல் வரிகளுக்குச் சுந்தராம்பாள் ஆட,

''கன்னத்தைக் கிள்ளு! கிள்ளு!
நெஞ்சத்தை அள்ளு! அள்ளு!
எண்ணத்தைச் சொல்லு! சொல்லு!
மஞ்சத்தில் துள்ளு! துள்ளு!''

என்ற வரிகளுக்கு வடிவாம்பாள் ஆடி, வாலிப இதயங்களை வசீகரித்தாள்!

''நடையின் அழகைக் காட்டவா?
இடையின் நெளிவில் வாட்டவா?
எதிரிப்படையை ஓட்டவா?
இன்ப வீணை மீட்டவா?''

என்ற பாட்டுக்குச் சுந்தராம்பாள் ஆடி, அனைவரையும் மெய்மறக்கச் செய்து கொண்டிருந்த போதுதான் வாளுக்குவேலி வந்த சாரட்டு வண்டி திருமணப் பந்தலின் முகப்பில் வந்து நின்றது.

''பாகனேரியார்! பாகனேரியார்!'' என்று பந்தல் வாசலில் நின்ற சிலர் அங்குமிங்கும் ஓட - செட்டியார் ஆனந்த மிகுதியால் எதிர் கொண்டு வரவேற்கக் காற்றைப் போல் கடுகி வரபந்தலில் இருந்தோர் அனைவரும் எழுந்து விட்டனர்.

''வாளுக்கு வேலித் தேவர் வாழ்க!'' என்று முழக்கம் வேறு எழுந்து விட்டது. பந்தலில் இருந்தோரை அமைதிப்படுத்தி வணங்கியவாறு வாளுக்குவேலி முன் வரிசையில் வந்து அமர்ந்து நடனத்தைக் கண்டு களிக்கத் தயாரானார்!

திடீரென ஏற்பட்ட அமளியால் சுந்தராம்பாளின் முகம் தீப்பந்தமாகி விட்டது! இருந்தாலும் சமாளித்துக் கொண்டு அடுத்த கட்டமாகக் குறத்தி நடனத்தை வடிவாம்பாளுடன் தொடங்கினாள். அப்போதும் பந்தலில் அமைதியில்லை. ஒவ்வொருவராக எழுந்து வந்து வாளுக்கு வேலிக்கு வணக்கம் தெரிவித்துவிட்டுச் சென்று கொண்டேயிருந்தனர்.

சிலர் வாளுக்குவேலியையும் ஆதப்பனையும் சூழ்ந்து கொண்டு, தங்கள் கோரிக்கைகளை சரமாரியாக எடுத்து வைத்துக் கொண்டிருந்தனர்.

தனது கலை புறக்கணிக்கப்படுவது கண்டு சினங்கொண்ட சுந்தராம்பாள் நடனத்தில் அதிக அக்கறை காட்டாமலே ஆடி முடித்துவிட்டுத் தங்கையுடன் ஒப்பனை அறைக்குச் சென்று விட்டாள்!

சுந்தராம்பாளைச் சந்திக்க வேண்டிய காரணத்தைச் செட்டியாரிடம் சொல்லி, அவரையும் ஆதப்பனையும் அழைத்துக் கொண்டு, வாளுக்குவேலி ஒப்பனை அறைக்குச் சென்றான்.

''சுந்தரி! வடிவு! யார் வந்திருக்கா தெரியுதா? பாகனேரி அம்பலக்காரர் உங்களைப் பார்க்க வந்திருக்கார்!''

உணர்ச்சியற்ற மரப்பதுமைக்கு விசை கொடுத்துக் கைகளைத் தூக்க வைத்தது போலச் சுந்தராம்பாள் ஒரு வணக்கத்தைச் சொன்னாள்!

''அற்புதமாக இருந்ததம்மா நடனம்! அரம்பையும் ஊர்வசியும் போல ஆடினீர்கள்!''

சுந்தராம்பாள் தனது கலைக்கு ஏற்பட்ட அவமானத்தில் சீற்றம் கொண்டிருந்ததால் சட்டென்று கேட்டு விட்டாள்!

''அரம்பை ஊர்வசி ஆட்டத்தைக் கூடப் பார்த்திருக்கிறீர்களா? பலே! பரவாயில்லையே!''

''கேள்விப்பட்டதுதான்! முனிவர்களின் தவங்களைத் கூட அவர்கள் நடனத்தால் கலைத்து விடுவார்களாமே!''

''அவர்கள் நல்லோர் தவத்தைக் கெடுக்கும் நடன ராணிகள்! நீங்கள் நல்ல நடனத்தைக் கெடுக்கும் முனிவர்! இல்லையா?''

''நடனத்தை நான் கெடுப்பதா? என்னம்மா சொல்கிறாய்?''

''பந்தலிலே வந்து உட்கார்ந்து கொண்டு பாகனேரி ராஜ்ய பரிபாலனத்தையே செய்து விட்டீர்களே! என்றைக்கும் ஏற்படாத அவமானம், எனக்கும் என் கலைக்கும் இன்றைக்கு உங்களால் ஏற்பட்டு விட்டது!''

சுந்தராம்பாள், மிகுந்த வேதனையோடும், கோபத்தை அடக்க முடியாமலும் பேசுகிறாள் என்பதைத் தெரிந்து கொண்ட செட்டியார் :

''சுந்தரி! பாகனேரி அம்பலக்காரர், உன் நாட்டியத்தைப் பாராட்டக் கொடுத்து வைக்க வேண்டுமம்மா! நீ போன ஜென்மத்திலே செய்த புண்ணியம்தான் அவர் உன்னுடைய ஒப்பனை அறை வரையிலே வந்து உன்னைப் புகழ்வது என்பதை மறந்துவிடாதே!'' என்று வார்த்தைகளில் வெல்லப் பாகைத் தடவி வாரி வீசினார்.

''மிகவும் நன்றி! பாகனேரி அம்பலக்காரரால் எனக்குக் கிடைத்த பாக்கியம் ஒன்றே போதும்! பணம் கூட வேண்டாம்! நாட்டிய நிகழ்ச்சிக்கு!''

என்று மிடுக்குடன் கூறிக்கொண்டே சுந்தராம்பாள் அந்த இடத்தை விட்டு நகரத் தொடங்கினாள்.

''என்னால் உனக்கு ஏதாவது மன உளைச்சல் ஏற்பட்டு விட்டதா? உனது கலைத்திறன் பற்றிக் கேள்விப்பட்டுத்தான் உன்னைக் காண வந்தேனே தவிர, உன் உள்ளத்தைப் புண்படுத்தும் நோக்கம் எள் அளவும் எனக்கில்லை!''

வாளுக்குவேலி, சுந்தராம்பாளைப் பார்த்து, மிகுந்த பண்புடன் அமைதியாக விளக்கமளித்தான். அருகில் ஆதப்பனுக்குத் தன் அண்ணன் அவ்வளவு விட்டுக் கொடுத்துப் பேசுவது பிடிக்கவில்லை.

''அண்ணா! நேரமாகிறது, போகலாம்!'' என்றான்.

''இரு தம்பி! வந்த விஷயத்தைப் பற்றிப் பேசாமல் போவதா?'' என ஆதப்பனை அடக்கி விட்டு மீண்டும் சுந்தராம்பாளிடம்,

''சுந்தரி! உன்னிடம் ஒரு முக்கியமான கோரிக்கை! என் தங்கை கல்யாணி நாச்சியாருக்கு நீயாவது அல்லது உன் சகோதரி வடிவாம்பாளாவது நாட்டியப் பயிற்சி அளிக்க வேண்டும்!'' என்றான்.

''கலை என்றால் என்னவென்றே தெரியாமல் இருக்கும் உங்களைப் போன்றவர்களின் வீட்டில் நாங்கள் காலடி எடுத்து வைக்க மாட்டோம்!''

சுந்தரியின் இந்தப் பதிலைக் கேட்ட வடிவாம்பாள் ''அக்கா!'' என்று அதிர்ச்சியால் அலறி விட்டாள்! நட்டு வாங்கம் நாதமுனிக்கு நாடி நரம்புகள் எல்லாம் நடுங்கின! லலிதாங்கியோ ''சுந்தரி!'' என்று கத்திக் கொண்டே அவளை அமைதிப்படுத்த ஓடோடி வந்தாள்!

''எனக்கா கலையைப் பற்றித் தெரியாது! சுந்தரி! நீ பேசுவது பாகனேரி அம்பலக்காரருடன் என்பதை மறந்து விடாதே!''

''பாகனேரி அம்பலக்காரர் என்ன! பகவானே வந்து என் கலையை மதிக்காமல் நடந்து கொண்டால் அதற்காக இந்த சுந்தரி பணிந்து போக மாட்டாள்!''

''வஞ்சிக்கொடியே! நீ வாதிடுவது வாளுக்கு வேலியுடன்!''

''உமது கையில் மின்னும் வாளைவிட, என் காலில் ஒலிக்கும் சதங்கையை மதிப்பவள் நான்!''

''என்ன சொன்னாய்? அகங்காரம் பிடித்தவளே! அவ்வளவு ஆணவமா உனக்கு?''

வாளுக்கு வேலியின் கோபாவேசக் கேள்வி, குவலயத்தைக் குலுக்கும் பூகம்ப வெடிப்பாக ஒலித்தது! ஆவேசத்துடன் ஓங்கப்பட்ட அவனது வலிமை வாய்ந்த கை, சுந்தரியின் கன்னத்தில் படுவதற்கு முன்பு, கறுத்த ஆதப்பனும் செட்டியாரும் அவனுக்குக் குறுக்கே விழுந்து தடுத்துவிட்டனர். வெலவெலத்துப் போய் நின்ற வடிவையும், நாதமுனி, லலிதாங்கி முதலியவர்களையும் இழுத்துக் கொண்டு சுந்தராம்பாள் கனல் பறக்கும் விழிகளோடு அங்கிருந்து அகன்றாள்.

மான் முட்டி, யானை ஊனமுறுவதுண்டோ? இல்லை! ஆனால் வாளுக்குவேலி அப்படி ஊனமுற்ற ஒரு யானையின் நிலையில் அசைந்து அசைந்து நடந்து வண்டியில் ஏறிக் கொண்டான். பாகனேரி போய்ச் சேரும் வரையில் வண்டியில் இருந்த அண்ணனும் தம்பியும் வாய் திறக்கவேயில்லை. தனது மீசையை மட்டும் வாளுக்குவேலி தடவிக் கொண்டே வண்டியில் உட்கார்ந்திருந்தான்.





# 14

ஆலமரங்களைக் கூட அடியோடு பெயர்த்தெறியக்கூடிய சூறைக்காற்று ஒன்று அடித்து ஓய்ந்து விட்டால் எப்படிப்பட்ட அமைதி நிலவிடுமோ அதைப் போன்ற அமைதி திருக்கோட்டியூர் சுந்தராம்பாள் வீட்டில் சூழ்ந்திருந்தது.

ஊஞ்சல் சங்கிலியில் தலையைச் சாய்த்தபடி சுந்தராம்பாள் உட்கார்ந்திருந்தாள். அவளது மனோ நிலையைச் சித்தரிப்பது போல ஊஞ்சல் மெதுவாக ஆடிக் கொண்டிருந்தது. சந்திர பிம்பமோ எனும் படி அமைந்திருந்த அந்த சுந்தர வதனம் சோக முகிலால் ஆக்கிரமித்துக் கொள்ளப்பட்டிருந்தது.

நடன நிகழ்ச்சியில் பாடப்பட்டதே ''வெற்றி வேல்! வீரவேல்! விழியிரண்டும் வேல்! வேல்!'' என்று; அந்த வேல் நிகர்த்த விழிகள், வதங்கிப் போன அல்லி மொட்டுக்களைப் போல் சோர்ந்து கிடந்தன.

ஊஞ்சலை ஒட்டினாற் போல் கிடந்த நாற்காலியில் அச்சம் ஆட்கொண்ட முகத்துடன் வடிவாம்பாள் அமர்ந்திருந்தாள். நட்டுவாங்கம் நாதமுனியும் பின் பாட்டுக்காரி லலிதாங்கியும் ஒருவர் முகத்தையொருவர் பார்த்துக் கொண்டே துயரப் பெருமூச்சு விட்டனர்.

சுந்தரியின் அழகுடன் போட்டியிடுவது போல் விளங்கிடும் வடிவாம்பாளின் தோற்றமும் கூனிக் குறுகிக்

காட்சியளித்தது. செட்டியார் வீட்டுத் திருமண நிகழ்ச்சியில் இப்படியொரு எதிர்பாராத அசம்பாவிதம் நடைபெறு மென்று யார்தான் நினைத்தார்கள்!

எல்லை மீறித்தான் துடுக்காகப் பேசி விட்டோமோ என்ற எண்ணம் சுந்தராம்பாளைக் கலக்கியது! ''பிறகென்ன; புனிதமாகக் கருதுகிற கலையைப் புரிந்து கொள்ளும் சக்தியற்றுப் போய்-தனது அதிகார அந்தஸ்துகளுக்கு விளம்பர வெளிச்சம் போடுகிறவர்கள் யாராயிருந்தாலும் அவர்கள் குற்றவாளிகள்தானே!''

-இப்படியும் அவளுக்கு ஒரு சமாதானமான பதிலை அவள் இதயம் வழங்கியது. நீண்ட நேர மௌனத்தின் ஆதிக்கத்திற்குப் பிறகு முதலில் வடிவு தான் வாய்திறந்தாள்.

''வாயாடி! சுட்டிப்பெண்! யாரிடமாவது வம்பு செய்யாவிட்டால் தூக்கம் வராது என்றெல்லாம் என்னைத் திட்டுவாய்! இப்போது நீ பெரிய இடத்துப் பொல்லாப்பை விலை கொடுத்து வாங்கிக் கொண்டிருக்கிறாய்!''

சுந்தரியின் வாடிப் போயிருந்த கண்கள் கனலை வாரி இறைத்துக் கொண்டு வடிவாம்பாளைப் பார்த்தன.

''வடிவு! நீ வேறு என் நெஞ்சில் நெருப்பைக் கொட்டாதே! பெரிய இடம்! மகாப் பெரிய இடம்! அந்தப் பெரிய இடத்து மனிதர் நமது நடனக் கலையை எப்படி மதித்தார் பார்த்தாயல்லவா?''

லலிதாங்கி ஊஞ்சலருகே சென்று சுந்தரியின் கன்னத்தில் தன் கைகளால் தடவியவாறு, ''என்னம்மா சுந்தரி! குழந்தை மாதிரி பேசறே? நம்ப நடனக் கலையை அவர் மதிக்கிறதினாலதான் அவர் தங்கச்சிக்கு உன்னைக் குருவா இருக்கக் கேட்கிறார்! இது கூடவா உனக்குப் புரியலே!'' என்று குழைந்தாள்.

''ஒரு பெண்ணைக் கைநீட்டி அடிப்பதற்குத் துணிந்தாரே! அதைக்கூட நீங்கள் எல்லாம் அவமானமாகக் கருதவில்லையா?'' சுந்தரி சீறினாள்.

''அவர் கையிலிருக்கிற வாளுக்கு எதிரிகள்கூட மதிப்புத் தருகிறார்கள்! அந்த வீரவாளை உனது கால் சதங்கைக்கு ஈடாகுமா என்று நீ கேட்டது எவ்வளவு பெரிய தவறு தெரியுமா? நல்ல வேளை! அவராக இருந்த காரணத்தால் கையை மட்டும் ஓங்கினார்! கறுத்த ஆதப்பன் முந்திக் கொண்டிருந்தால் உன் கழுத்தை நோக்கிக் கட்டாரியையே ஓங்கியிருப்பான்.''

நாதமுனி கொஞ்சம் கண்டிப்பாகவும், அழுத்தம் திருத்தமாகவும் பேசினான்.

''கட்டாரியை ஓங்கினால் என்ன? என் உயிர் போகும்! அவ்வளவுதானே! என்னை வாழ வைக்கும் என் கலைத் தெய்வத்திற்கு மாசு மரு உண்டாக்கு கிறவர்கள் யாராயிருந்தாலும் என்னால் மன்னிக்க முடியாது! அதற்காக நான் மரணத்தையும் ஏற்றுக் கொள்ளத் தயார்!''

சுந்தரியின் முகம் இப்போது சுடர்விட்டுப் பிரகாசித்தது! கலைத்தாயின் மீது அவள் கொண்ட பற்றும் அந்தக் கலைக்காக எதையும் தாங்கக்கூடிய உறுதியும் அவள் முகத்திலேற்படுத்திய மாற்றம் அது!

''என்னமோ அம்மா! நடந்தது நடந்து விட்டது! இதற்கு ஒரே ஒரு பரிகாரம் பாகனேரியார் வீட்டில் அவர் தங்கைக்குப் பரத நாட்டியம் கற்றுத்தரத் தயாராயிருக் கிறேன்னு நீ ஒரு செய்தி அனுப்பிட்டா எல்லாம் சரியாயிடும்!''

லலிதாங்கி வேண்டுகோள் விடுத்தாள். சுந்தரி அலட்சியமாகச் சிரித்தாள். வடிவாம்பாளும் அக்காளை அணுகி அவள் தோளைத் தழுவிக்கொண்டு ''லலிதாங் கியம்மா சொல்வதைக் கேள் அக்கா! அம்பலக்காரர்

மேல் என்ன குற்றம்? அவர் கல்யாணம் விசாரிக்க வந்தார். வந்த இடத்தில் பந்தலில் இருந்த கூட்டம் அவரைச் சுற்றிக் கொண்டது. அதற்கு அவர் எப்படிப் பொறுப்பாளியாக முடியும்? அதனால் எல்லாவற்றையும் மறந்துவிட்டு, அவர் தங்கைக்கு நடனப் பயிற்சி அளிக்க ஒப்புக் கொள்வதுதான் புத்திசாலித்தனமானது!'' என்று கொஞ்சினாள்.

திருமணப் பந்தலில் நடைபெற்ற நிகழ்ச்சிகளும் ஒப்பனை அறையில் நடைபெற்ற வாதப் பிரதிவாதங் களும் சுந்தரியின் மனத்திரையில் மீண்டும் உருண்டோடின!

வாளுக்குவேலி வருகையால் கலை நிகழ்ச்சிக்கு இடையூறு ஏற்பட்டதற்காக அவரிடம் தனது மனக்குறையை வெளியிட்டிருக்க வேண்டுமே தவிர அதையொரு கடுமையான வாக்கு வாதமாக ஆக்கி அவரது வீரத்தையே இகழ்ந்திருக்கக் கூடாது என்ற தெளிவு, கொஞ்சம் கொஞ்சமாகச் சுந்தராம்பாளின் நெஞ்சில் சுரக்கத் தொடங்கியது.

இருந்தாலும் அவளாக வலுவில் சென்று மன்னிப்புக் கேட்டுக் கொள்வதுபோல அவரது தங்கைக்கு நடனம் கற்றுத் தரச் செல்வதை அவள் மனம் ஒப்பவில்லை. தன்னை நோக்கி அவர் கையை ஓங்கி அடிக்க வந்த அந்தச் செயலை அவளால் மறந்து விட முடியவில்லை.

இந்தப் புகை பெருந்தீயாக மாறிப் பாகனேரி அம்பலக்காரருடன் நமக்குப் பகை என்ற செய்தி எங்கும் பரவுவது நல்லதல்ல என்ற கருத்தைத்தான் வடிவாம் பாளும், லலிதாங்கியும், நாதமுனியும் திரும்பத் திரும்ப வலியுறுத்தினர்.

அவர்களுக்குப் பக்கபலமாக அந்தநேரம் பார்த்து வெள்ளை அய்யரும் வந்து சேர்ந்தார்! ''என்ன லலிதா! சௌக்கியமோ? பார்த்து ரொம்ப நாள் ஆச்சு!'' என்று லலிதாங்கியிடம் ஒரு அசட்டுச் சிரிப்புடன் நின்றார். அவருக்கு மரியாதை காட்டுகிற வகையில் சுந்தரியும் வடிவும் எழுந்து ''வாங்க சுவாமிகளே!'' என்று வணக்கம் தெரிவித்தனர்.

''எல்லாம் கேள்விப்பட்டுத்தான் வந்திருக்கிறேன். ஒரு பக்கத்திலே கும்பினிக்காரனுக்கும் மருது பாண்டியருக்கும் போராட்டம்! அது என்ன ஆகுமோ! எப்படி முடியுமோ, தெரியாது! அதற்கிடையில் வாளுக்கு வேலித் தேவருக்கும் சுந்தராம்பாளுக்கும் ஒரு போராட்டமா? இது நல்லாயில்லையே! வாளுக்கு வேலிக்கு எவ்வளவோ பிரச்சினை! சமீப காலமா கர்னல் அக்னியூ ஒருகண் வச்சிருக்கிறான் அவர்மேலே! அவர் இங்கிலீஷ்காரர்களையும் வெளிப்படையாக விரோதிக்க முடியாது! அதற்காக விடுதலைப் போராட்டம் நடத்துகிறவர்களையும் விட்டுவிட முடியாது! இந்த மாதிரி நிலைமையிலே அந்த மனிதர், கயிற்றின் மேலே நடந்துகொண்டிருக்கிறார். அத்தனை பிரச்சினைகளுக்கிடையிலே அவருக்கு அவர் தங்கை கல்யாணி நாச்சியார் ஒரு பெரிய பிரச்சினை! தங்கை மேல் அவருக்கு உயிர்! இல்லாவிட்டால் சுந்தராம்பாளைத் தேடிக்கொண்டு அவ்வளவு பெரிய அம்பலக்காரர் வருவாரோ?''

வெள்ளை அய்யரின் பேச்சு ஏற்கெனவே தெளிந்துகொண்டிருந்த சுந்தராம்பாளின் மனத்தில் மேற்கொண்டும் தெளிவை ஏற்படுத்தி வாளுக்குவேலியின் மீது ஒரு தனி மதிப்பையும், அனுதாபத்தையும் உருவாக்கியது! இருந்தபோதிலும் அவளே வலுவில் சென்று வாளுக்கு வேலி வீட்டில் கல்யாணி நாச்சியாருக்கான நாட்டியப் பயிற்சியை ஆரம்பிப்பது அவளது

தன்மான உணர்வுக்குக் குறைவாகத் தெரிந்தது! அவளது சங்கடத்தையும் புரிந்து கொண்ட வெள்ளை அய்யர் பொதுவான ஒரு திட்டத்தை அறிவித்து அந்தச் சமரச யோசனையை ஒப்புக் கொள்ளுமாறு கேட்டுக் கொண்டார்.

''கல்யாணிக்குப் பரத நாட்டியம் கற்றுத் தருவதற்குச் சுந்தராம்பாள் போகத் தேவையில்லை! வடிவாம்பாளை அனுப்பி வைப்பது!''

இந்தச் சமரச யோசனையை உடனே ஆமோதித்துச் சுந்தரி ''சரி!'' என்று சொல்லாவிட்டாலும் - மறுத்துப் பேசாமல் மௌனமாக இருந்து விட்டாள்.

''மௌனம் சம்மதத்திற்கு அறிகுறி! அதனால் வடிவாம்பாள் பாகனேரி புறப்படுவதென முடிவாகிறது!'' என அறிவித்தார் வெள்ளை அய்யர்!

கலையைப் பொறுத்துச் சுந்தராம்பாள் சற்றுக் கடுமையானவள்-கண்டிப்பானவள் என்றாலும் நற்குணப் பெட்டகமென ஊராரால் போற்றப்படுகிறவள்!

அவளோடு ஒப்பிடும்போது வடிவாம்பாள் ஐம்பது விழுக்காடுதான் தேறுவாள்! வெள்ளை அய்யரின் சமரச யோசனை, வடிவுக்குத் தாங்க முடியாத பூரிப்பை அளித்தது! அதற்குக் காரணம் இல்லாமலில்லை! வாளுக்கு வேலியின்மீது நீண்ட நாட்களாகவே அவளுக்கு ஒரு மோகம்! தாகம்! அவனுடைய ஆசைக் காதலியாகத் தானாகிவிடுவதின் மூலம், வாட்கோட்டை நாடு எனப் படும் அந்தப் பாகனேரிப் பகுதியிலேயே தனக்கு ஒரு தனி அந்தஸ்து கிடைக்கும்! அதிகாரம், செல்வாக்கு என்பதை விட அவனைப்பற்றிக் கேள்விப்பட்ட நாள் முதலே அவளுக்கு ஒரு கிறுகிறுப்பு! அவனைச் செட்டியார் வீட்டு நடன நிகழ்ச்சியின்போது மிக அருகாமையில் பார்த்த போது அவனது விரிந்த மார்பும், அகன்ற தோள்களும், வாட்டசாட்டமான உருவமும் அவளையுமறியாமலே அவளது அங்கங்களை விம்மச் செய்தன!

இப்போது அதிர்ஷ்டவசமாகத் தனக்கு அவனைச் சந்திக்கும் வாய்ப்புகள் ஏராளமாகக் கிடைக்கப் போகின்றன என்று எண்ணி எண்ணி இதயத்தைக் குதியாட்டம் போடச் செய்தாள் :

'கல்யாணி நாச்சியாருக்கு நடனம் கற்றுத் தருவேன்! வாளுக்குவேலிக்கு என் நயன பாஷை கற்றுத் தருவேன்! தங்கை ஆடுவாள்! அவள் அண்ணன் என்னுடன் கூடுவான்! கண்ணனைத் தேடும் ராதை போலக் கல்யாணி அபிநயம் பிடிப்பாள்! அவள் அண்ணனைத் தேடிக் காதல் போதையேறி அவன் மடியினில் நான் கிடப்பேன்! இது எனக்கு வலுவில் கிடைத்த வரப்பிரசாதம்! என் அக்காளின் கோபம் எனக்கு லாபம்! இனித் தீரும் என் விரக தாபம்!''

வடிவாம்பாளின் நெஞ்சத் திரையில் எதிர்கால நிழலோவியங்கள் ஆடின!

சுந்தராம்பாளின் வீட்டைப் போலவேதான் வாளுக்கு வேலியின் மாளிகையிலும் ஒரே மனக் குழப்பம்!

''என்ன இருந்தாலும் நீங்கள் சுந்தரியை அடிக்கப் போயிருக்கக் கூடாது அண்ணா! உங்கள் தகுதிக்கும் பெருமைக்கும் அது எவ்வளவு பெரிய இழுக்குத் தெரியுமா?''

என்று கல்யாணி நாச்சியார் கடிந்து கொண்ட போது, வாளுக்கு வேலியால் எந்தப் பதிலும் சொல்ல முடியவில்லை!

''நல்ல வேளையாக இந்தத் தகராறு நாலைந்து பேருக்குத் தெரிந்ததோடு முடிந்து விட்டது! ஊராருக்குத் தெரிந்தால் உங்களைத்தான் அண்ணா குறை சொல்லுவார்கள்!''

''ஆமாம் கல்யாணி, ஆமாம்! கலையின்மீது கொண்ட பற்றினால் அவளும் நிலைகுலைந்து ஏதேதோ பேசிவிட்டாள்! நானும் உணர்ச்சி வயப்பட்டு என்னை மறந்துவிட்டேன்! தம்பி ஆதப்பனின் தணல் உள்ளத்திற்கு

அடிக்கடி தண்ணீர் ஊற்றி அணைத்துக் கொண்டிருக்கும் நானே, நேற்றைய தினம் நெருப்பின் ஜுவாலையாக எப்படித்தான் மாறினேனோ! எனக்கே தெரியவில்லை!''

''எல்லாம் என்னால் வந்தது! இப்போது எனக்கு எதற்காக நடனம்? பயிற்சி? எதுவுமே வேண்டாம் அண்ணா! தென்பாண்டிச் சீமையில் நம்மைச் சுற்றிப் போர்-புரட்சி-இப்படியொரு பயங்கரமான சூழ்நிலையில் பரதநாட்டியப் பயிற்சி என்ன வேண்டிக் கிடக்கிறது?''

''கல்யாணி! தென்பாண்டி மண்டலம் தீக்காடாக மாறி வருவதை அறியாதவனல்ல நான்! அதற்கான தடுப்பு ஏற்பாடுகளை எவ்வளவு தந்திரமாகச் செய்ய முடியுமோ அப்படிச் செய்துதான் வருகிறேன்! எனக்கு எத்தனையோ சங்கடங்கள்! எத்தனையோ சிக்கல்கள்! எந்த நேரத்திலும் எதுவும் நடக்கலாம்! அவைகளுக்கிடையே எனக்கு இருக்கும் ஒரே ஒரு ஆறுதல் நீதானம்மா! உன்னை ஒரு நல்ல இடமாகப் பார்த்து மணம் செய்து கொடுத்து விட்டால், பிறகு நான் நிம்மதியாக எதையும் சந்திக்கத் தயாராகி விடுவேன்! அதனால் கல்யாணி, என் ஆசையைத் தடுக்காதே! அதுமட்டுமல்ல; இப்போது நான் சொல்லப் போவதையும் மறுத்துப் பேசாதே!''

''என்ன அண்ணா?''

''நானே சுந்தராம்பாள் வீட்டுக்குப் போகப் போகிறேன். செட்டியார் வீட்டில் நடந்தவைகளுக்கு வருத்தம் தெரிவிக்கப் போகிறேன்! சுந்தராம்பாளையாவது அல்லது வடிவாம்பாளையாவது உனக்கு நடன ஆசிரியையாக அழைத்து வரப்போகிறேன்.''

கல்யாணி திடுக்கிட்டுப்போய் ''அண்ணா!'' என்று அவன் கைகளைப் பிடித்துக்கொண்டு கண்கலங்கினாள்!

''எல்லாம் நல்லதாகவே நடக்கும்!'' என்று கூறி விட்டு வாயிற்புறம் வந்தான் வாளுக்குவேலி!





# 15

வாயிற்புறம் வந்தபிறகுதான் கறுத்த ஆதப்பன் ஊரில் இல்லை என்பதும், அவனை வாளுக்கு வேலிதான் மிக அவசரமான ஒரு பணிக்காக அனுப்பியிருக்கிறான் என்பதும் நினைவுக்கு வந்தது! ஆதப்பன் இல்லாததும் அவனுக்கு ஒரு வகையில் நல்லதாயிற்று.

இருந்திருந்தால் அவனைச் சுந்தராம்பாள் வீட்டுக்குச் சென்றிடக் கல்யாணி நாச்சியார் மறுப்பு எதுவும் தெரிவிக்காமல் விட்டதுபோல் விட்டிருக்க மாட்டான். தம்பி அப்போது இல்லை என்பதில் ஒரு நிம்மதி!

ஆனால், தம்பி சென்றிருக்கும் காரியத்தை நினைக்கும்போது அவன் பத்திரமாகத் திரும்பி வர வேண்டுமே என்ற கவலை! திருப்பாச்சேத்தியில் ஆங்கிலேயக் கம்பெனியார் படைக்கு ஏற்பட்ட தோல்வியையும், மேஜர் கிரே அந்தப் போரில் கொல்லப்பட்டதையும் கேள்வியுற்ற கர்னல் அக்னியூ மற்றொரு கர்னலான வெல்ஷ் என்பவனுக்கு மருது பாண்டியர் படையை எப்படி மடக்க வேண்டும் என்பது குறித்து ஒரு இரகசியக் கடிதம் அனுப்பியிருக்கிறான்.

அந்தக் கடிதம் பட்டமங்கலம் அம்பலக்காரர் வல்லத்தரையனுக்கும் தெரியாமல் அவனது மைத்துனன்

உறங்காப்புலி மூலமாக வெல்ஷ் துரைக்கு அனுப்பப்படு கிறது என்பதை வாளுக்கு வேலி முன்கூட்டியே தெரிந்து கொண்ட காரணத்தால் அந்தக் கடிதம் எப்படியும் வெல்ஷ் துரையின் கையில் கிடைக்காமல் செய்துவிட வேண்டு மென்றுதான் அந்த முயற்சியில் ஈடுபட ஆதப்பனை அனுப்பியிருக்கிறான்.

மானாமதுரைக்கும் பார்த்திபனூருக்கும் இடையே பாசறைகள் அமைத்துக் கொண்டு பறங்கியர் பட்டாளத்தைச் சிதற அடிப்பதற்குத் தயார்ப்படுத்திக் கொண்டுள்ள விடுதலைப் படையினர் விழிப்புடன் இருக்க வேண்டுமேயானால் வெல்ஷுக்குக் கர்னல் அக்னியூ அனுப்பியுள்ள கடிதம் பற்றிய விவரம் விடுதலைப் போர்த் தளபதிகளுக்குத் தெரிந்தாக வேண்டும்.

அந்த அரிய பணிக்காகவே ஆதப்பன், தன்னுயிரைத் திரணமாக மதித்துப் புரவியேறிப் பறந்திருக்கிறான். இந்த விஷயம் கல்யாணி நாச்சியாருக்குக் கூடத் தெரியாது. காரியத்தை வெற்றிகரமாக முடித்துவிட்டுத் தன்னை வந்து சந்திக்குமாறு அண்ணன் இட்ட ஆணையைச் சிரமேற்றாங்கிச் சிலிர்த்தெழுந்த ஆதப்பன் கூடக் கல்யாணியிடம் விபரத்தைச் சொல்லாமல் வேறு வேலையாக வெளியூர் போவதாகத்தான் கூறிவிட்டுச் சென்றிருக்கிறான்.

குதிரை சாரட்டு வேண்டாமென்று கூறும் பாகனேரி நாட்டு அம்பலக்கார வீட்டுப் பெண்கள் வழக்கமாகப் போகும் பெட்டி வண்டியைக் கொண்டு வரச் சொன்னான் வாளுக்குவேலி! இருபுறமும் பட்டுத் திரைகள் தொங்கும் அந்த வண்டியில் சென்றால், தன்னை யாரும் தெரிந்து கொள்ள முடியாது என்பதற்காக அந்தத் திடீர் ஏற்பாடு!

கம்பீரமான காளைகள் பூட்டப்பட்ட அந்த வண்டியைக் கொண்டுவந்து நிறுத்திவிட்டு, வண்டிக்காரன் வாளுக்கு வேலியை வணங்கி நின்றான். வாயிற்புறமிருந்த காவலர்களை உஷார் படுத்திவிட்டு வாளுக்கு வேலி, வண்டியில் ஏறித் திரைகளை இழுத்து விட்டுக் கொண்டதும் தட்டிவிடப்பட்ட காளைகள், குதிரைகளுக்கு ஈடாக வேகம் காட்டிக் கிளம்பின.

பாகனேரி எல்லையைத் தாண்டும்போது வாளுக்கு வேலி செல்லும் வண்டிக்கு எதிரே மற்றொரு வண்டி பாகனேரியை நோக்கி விரைந்து வந்து கொண்டிருந்தது. அந்த வண்டியில் இருபுறமும் தொங்கிய வெள்ளைத் துணியில் 'சுந்தரி' என எழுதப்பட்டிருந்ததைக் கவனிக்காமலே வாளுக்கு வேலியின் வண்டி திருக்கோட்டியூர் பாதையில் கடுவேகமாகப் போய்க் கொண்டிருந்தது.

எதிரே பாகனேரியை நோக்கி வந்த வண்டி சுந்தரிக்குச் சொந்தமானது! ஆலயத்திற்குச் செல்வது - அரங்குகளில் நடனமாடுவது தவிர வேறு எதற்கும் வெளியிற் சென்று பழக்கப்படுத்திக் கொள்ளாத சுந்தரி, வேற்றூர் செல்வதென்றால் திரையிடப்பட்ட பெட்டி வண்டியில்தான் செல்வது வழக்கம். அவளுடைய அந்த வண்டிதான் இப்போது பாகனேரிக்குள் நுழைந்து அம்பலக்காரர் வீட்டை நெருங்கிக் கொண்டிருக்கிறது.

வாளுக்குவேலியின் வீட்டு வாசலில் வந்து நின்ற அந்த வண்டியிலிருந்து முதலில் லலிதாங்கி இறங்கினாள். அவளைத் தொடர்ந்து நாதமுனி இறங்கினான். மூன்றாவதாக வடிவாம்பாள் இறங்கினாள். அதற்குள் சமையற்காரக் காடையும் கௌதாரியும் அவர்களைப் பார்த்துவிட்டுக் குதியாய்க் குதித்து விட்டார்கள்.

''நீதானே திருக்கோட்டியூர் சுந்தரியோட தங்கச்சி வடிவாம்பாள்! உன்னை நாங்க செட்டியார் வீட்டுக்

கல்யாணத்திலே பார்த்தோமே!'' என்று வடிவைச் சூழ்ந்து கொண்டார்கள்.

வந்திருப்பது யார் என்று புரிந்து கொண்ட காவலர் களும் தடையேதுமின்றி வடிவையும் அவளுடன் வந்த வர்களையும் உள்ளே அழைத்துச் செல்ல அனுமதித்தனர். வடிவாம்பாள் நடந்து செல்வதே ஒரு நடனமாக இருப்பதையும், அவளது முன் அழகைவிடப் பின் அழகு, காந்தம்போல் கவர்ந்து இழுப்பதையும் அந்தக் காவலர்கள் இரசித்துக் களித்தனர்.

நவராத்திரியின்போது அம்பாள் அலங்காரம் என்றுமில்லாத அளவுக்கு எழிலுடன் விளங்குவது போல அன்றைக்கு வடிவாம்பாளின் அலங்காரம் விளங்கியது. வாளுக்குவேலி தன்னைப் பார்த்தவுடன் காதல் வலையில் வீழ்ந்துவிட வேண்டுமல்லவா? அதற்கேற்ப அந்த அழகியின் அங்கங்கள் ஆடைக்கு வெளியே தங்களை விளம்பரப்படுத்திக் கொண்டிருந்தன.

அந்தச் சிறிய மாளிகையின் கூடத்தில் அவளையும் அவளுடன் வந்த இருவரையும் உட்கார வைத்து விட்டு, ''இருங்கள்! இதோ கல்யாணி நாச்சியாரை அழைச்சிகிட்டு வர்றோம்!'' என்று காடையும், கௌதாரியும் உள்ளே ஓடிடத் துடித்தனர்.

''அம்பலக்கார அய்யா இல்லியா?'' என்று லலிதாங்கி கேட்ட கேள்விக்குக் கிடைத்த பதில், வடிவுக்குத் தூக்கி வாரிப்போட்டது.

''அவர் ஊரில் இல்லை!''

முதல் சந்திப்பிலேயே மூகிழ்த்துவிட வேண்டும் மோகம் என்று ஆசையை மலையாகச் சுமந்து கொண்டு வந்த வடிவாம்பாள் ஏமாற்றப் படுகுழியில் விழுந்தது போல் உணர்ந்தாள்.

கூடத்தில் மாட்டப்பட்டிருந்த ஓவியங்களின்மீது அவள் கண்கள் ஒளியற்றுப் படர்ந்தன. வாளுக்கு வேலியின் மூதாதையர் குறித்த ஓவியங்கள் அவை! புலியுடன் போரிடுவது போலும்-சிங்கத்தின் வாயைக் கிழிப்பது போலும்-காளைமாடுகளை அடக்கி வீழ்த்து வது போலும்-வீரத்தை விளக்கும் அந்த ஓவியங்களை அவள் இரசித்துப் பார்க்கவில்லை. அந்த ஓவியங்களின் வரிசையில் கடைசியாக இடம் பெற்றிருந்த வாளுக்கு வேலியின் உருவத்தின் மீது அவள் பார்வை விழுந்ததும் அவள் விழிகளுக்குப் புத்தொளி பிறந்தது.

என்ன கம்பீரம்! என்ன வீரம் செறிந்த முகம்! இவரது உயர்ந்த குன்று போன்ற தோளில் ஒரு பறவையைப் போல நான் முகம் புதைத்துச் சாய்ந்து கொண்டால் எத்துணை இன்பமாயிருக்கும்! உடைவாளினையொத்த அந்த மீசையின் மீது என் உதடுகள் படும்போது-இந்த மென்மையான இதழ்கள்; முரட்டுத்தனமான ஒரு ஸ்பரிசத் தால் எவ்வளவு சுகம் அனுபவிக்கத் துடிக்கின்றன!

காடையும் கௌதாரியும் அவள் இன்பக் கனவைச் கலைத்து, கல்யாணி நாச்சியாரை அங்கே அழைத்து வந்து விட்டார்கள்.

நாச்சியாரின் அழகின் முன்னால்-வைரத்திற்கு எதிரே புஷ்பராகம் மின்னுவதைப் போல் வடிவாம்பாள் காட்சி அளித்தாள்.

''நடந்ததையெல்லாம் மறந்துடணும்னு கேட்டுக்கத் தான் வந்திருக்கோம்!'' முதலில் நாதமுனி ஆரம்பிக்க, அதற்குப் பின்பாட்டுப் பாடினாள் லலிதாங்கி!

''ஏதோ சின்னஞ்சிறுசுகள்! ஊர் உலகம் தெரியாத பெண்ணுங்க! அய்யாவோட பெருமை தெரியாம ஏதோ வாய் தவறுதலா பேசிட்டா, அதை அம்பலக்கார அய்யா

மனசிலே வச்சுக்கக் கூடாதுன்னு சொல்லிக்கிறதுக் காகவும்.....''

லலிதாங்கி முடிப்பதற்குள் கல்யாணி நாச்சியார் குறுக்கிட்டாள்.

''எங்க அண்ணன் நடந்து கொண்டது கொஞ்சம் அதிகம்தான்! அதற்காக அவர் மிகவும் வருத்தப்பட்டார்! ஏதோ ஆத்திரத்திலும் அவசரத்திலும் நடந்துவிட்ட தென்று அவருக்கு ஒரே வேதனை! திருக்கோட்டியூருக்கு அருகே ஒரு வேலையாகப் போயிருக்கிறார்; போகும் பொழுதோ அல்லது வரும் பொழுதோ உங்கள் சகோதரி சுந்தராம்பாளைச் சந்தித்துவிட்டு வருவேன் என்று சொல்லிவிட்டுத்தான் போயிருக்கிறார்!''

வடிவாம்பாளுக்கு மற்றொரு இடி! அவர் போய் அக்காளைச் சந்தித்து விட்டால்? அக்காள் சமாதான மடைந்து அவளே கல்யாணிக்கு நடனம் கற்றுக் கொடுக்கச் சம்மதித்து விட்டால்? அதன் பிறகு வடிவின் மனக்கோட்டையெல்லாம் இடிந்து, தூள் தூளாகப் போய் விடாதா?

எனவே வடிவு, லலிதாங்கியின் காதில் இரகசியம் பேசினாள். அதற்குள் காடையும், கௌதாரியும் காய்ச்சிய பாலைக் கிண்ணங்களில் ஊற்றிக் கொண்டு அவற்றை வெள்ளித் தட்டில் வைத்து அவர்களிடம் நீட்டினர். பால் பருகிக்கொண்டே லலிதாங்கி பிடிகையைப் பலமாகப் போட்டாள்.

''அம்பலக்கார அய்யா மனசு எவ்வளவு கவலைப்பட்டதோ, அப்படித்தான் எங்க சுந்தரியோட மனசிலும் கவலை அலை மோதிடிச்சு! அதனாலதான் அவள் ஒரு சமாதான ஏற்பாடா வடிவாம்பாளை அனுப்பி நாச்சியாரம்மாளுக்கு நடனப் பயிற்சியை ஆரம்பிக்கச் சொல்லியிருக்கா!''

கல்யாணியின் முகம் மலர்ந்தது என்றாலும், அண்ணன் இல்லாத நேரத்தில் முதல் முதலாக எப்படிப் பயிற்சியைத் தொடங்குவது என்று திகைத்துப் போனாள்:

''அண்ணன் ஊரிலிருந்து வந்துவிடட்டுமே!''

கல்யாணியின் பேச்சைக் கேட்டுத் தலையசைத்து விட்டால்-அதற்குள் வடிவாம்பாள் இடத்திற்குச் சுந்தரியே வந்துவிடலாமல்லவா? மீண்டும் வடிவுக்குக் குழப்பம்! அவளே முதலில் ஆரம்பித்துவிட்டால் பிறகு சுந்தரி வந்து நடனப் பயிற்சி தொடங்கி வைக்கிறேன் என்று சொல்ல மாட்டாள் என்ற நம்பிக்கை அவளுக்கு!

''இன்று நல்ல நாள்! நான் வந்திருக்கிற வேளையும் நல்ல வேளை! இப்போது ஆரம்பித்து விடுவோம்! முதன் முதலாக வந்து திரும்பிப் போவதும் அபசகுனமாகி விடும்! அதனால் இப்போதே...''

வடிவாம்பாள் பேச்சுக்குக் கல்யாணி நாச்சியார் மறுப்பு ஏதும் உரைத்திடவில்லை!

''சரி'' என்று அவள் தலை அசைந்ததுதான் தாமதம்; நாதமுனி, தாளத்தை எடுத்து ''டைங்'' என்று தட்டினான்.

**வா**ளுக்குவேலியின் பெட்டி வண்டி திருக்கோட்டியூர் சுந்தராம்பாள் வீட்டு வாசலில் போய் நின்றது! வாளுக்குவேலி வண்டியிலிருந்து இறங்கவில்லை. வண்டிக்காரனை உள்ளே அனுப்பித் தனது வருகையைத் தெரிவித்துவிட்டு வரச் சொன்னான்.

இறங்கி உள்ளே சென்ற வண்டிக்காரன் திரும்பி வந்து ''அய்யா! யாருமில்லிங்க வீட்டிலே! வேலைக்காரி மாத்திரம்தான் இருக்கிறா! சுந்தராம்பாள் அம்மா கோயிலுக்குப் போயிருக்காங்களாம்! அவுங்க தங்கச்சி, வடிவாம்பா அம்மா நம்ப பாகனேரி அரண்மனைக்கு நாட்டியம் சொல்லிக் கொடுக்கப் போயிருக்காங்களாம்!

வேலைக்காரிக்கு அவ்வளவுதான் தெரியுமாம்!'' என்றான்.

வாளுக்குவேலியின் முகத்தில் ஒரு மலர்ச்சி! சுந்தரியும் தனது தவற்றை உணர்ந்து அதற்குப் பரிகாரமாக அவள் தங்கையை என் தங்கைக்கு நடன ஆசிரியையாக அனுப்பியிருக்கிறாள்! இவ்வளவு பண்பாடு உள்ளவளைப் பார்த்து எனது வருத்தத்தைத் தெரிவித்தே தீர வேண்டும்!

வண்டியைத் திருக்கோட்டியூர் கோயில் வாசலுக்கு ஓட்டச் சொன்னான்.

ஆலயத்தில் ஆடலரசி ஆண்டவன் சந்நிதானத்தில் பக்தி வெள்ளத்தில் ஆழ்ந்திருந்தாள்! அர்ச்சகர் பூஜையை முடித்து விட்டு அவளிடம் பிரசாதத்தை வழங்கினார். அதை வாங்கிக் கண்களில் ஒற்றிக் கொண்டு சுந்தரி பிரகாரம் சுற்றுவதற்குக் கிளம்பினாள்.

வாளுக்குவேலியின் வண்டி கோயில் வாசலில் நின்றது! உள்ளே ஓடியிருந்த வண்டிக்காரன் திரும்பி விரைந்து வந்தான்: ''அய்யா! சுந்தரியம்மா பூஜை முடிந்து கோயில் பிரகாரத்தைச் சுற்றி வர்றாங்க!''

''ஓ! அவள் கோயில் பிரகாரத்தில் ''பிரதட்சணமாக'' வருவாள்! நான் ''அப்பிரதட்சணமாக''ப் போனால்தான் அவளை எதிரே சந்திக்க முடியும்.''

வாளுக்குவேலியின் வாய் இவ்வாறு முணு முணுத்தது! அந்தி மாலையும் தன்னை அடையாளம் காட்டாமல் இருக்க உதவிடும் என்ற நம்பிக்கையுடன் வாளுக்குவேலி வண்டியை விட்டு இறங்கிக் கோயிலுக்குள் நுழைந்தான்.





# 16

வைகைக் கரையின் ஓரமாக உள்ள வழிகளில் ஆங்கிலேயப் படைகளை நடத்திச் செல்ல வேண்டுமென்றும், அந்தப் படையில் இணைந்து கொள்வதற்கெனத் த்னது படையிலிருந்து ஒரு பகுதி வீரர்களை அனுப்பி வைப்பதாகவும் மருதுவின் விடுதலைப் போர் வீரர்கள் ஏறத்தாழ மூவாயிரம்பேர் மானாமதுரைக்கும் பார்த்திபனூருக்குமிடையே பல இடங்களில் முகாமிட்டுக் கொண்டிருக்கிறார்கள் என்றும், கர்னல் அக்னியூ கர்னல் வெல்ஷுக்கு எழுதி, தந்திரமாகக் கையாள வேண்டிய யுத்த ரகசியங்களையும் குறிப்பிட்டிருந்த கடிதம்தான் உறங்காப்புலியின் மூலம் அனுப்பப் பட்டிருந்தது!

அந்தக் கடிதத்தில் என்ன விஷயங்கள் அடங்கியிருக்கின்றன என்று முன்னரே தெரிந்து கொள்ளா விட்டாலும் கூட எப்படியும் விடுதலை வீரர்களை வீழ்த்தக்கூடிய போர் உபாயங்கள்தான் அறிவிக்கப் பட்டிருக்கும் என்ற முடிவுக்கு வந்திருந்த வாளுக்குவேலி, அந்தக் கடிதம் கர்னல் வெல்ஷ் கையில் கிடைக்காமல் தடுத்து நிறுத்திடத்தான் கறுத்த ஆதப்பனை முடுக்கி விட்டிருந்தான்.

ஆங்கிலேய வீரர்கள் யாரும் கடிதத்தை எடுத்துக் கொண்டு தனியே சென்றால் சந்தேகமுற்று விடுதலை

வீரர்கள் மடக்கி விடுவார்கள் என்பதைக் கருதித்தான், உறங்காப்புலியின் வசம் கடிதத்தை ஒப்படைக்கச் செய்து கர்னல் வெல்ஷ் துரையிடம் சேர்த்து விடுமாறு அக்னியூ கேட்டுக் கொண்டிருந்தான்.

உறங்காப்புலி அந்தக் கடிதத்துடன் குதிரையில் ஏறினான். பட்டமங்கலத்திலிருந்து புறப்பட்ட அவன் தன்னை யாரும் பின்தொடருகிறார்களா என்று திரும்பித் திரும்பிப் பார்த்துக் கொண்டே குதிரையை வேகமாக விரட்டினான். மதுரைக்கும் திருபுவனத்திற்குமிடையே மணலூர் என்ற இடத்தில் முகாமிட்டிருக்கும் கர்னல் வெல்ஷ் துரையிடம் உடனடியாக அந்த மடலைச் சேர்க்க வேண்டுமென்று உறங்காப் புலியின் உள்ளம் துடித்துக் கொண்டிருந்தது!

மண்ணின் பெருமை காக்க மரணத்தின் விளிம்பில் நின்று போராடிக் கொண்டிருக்கும் மருதுபாண்டியர், கோபால நாயக்கர், ஊமைத்துரை போன்றவர்களைப் பற்றி அணுச்சஞ்சலமும் இல்லாமல் அவன் ஒரு புனித மான கடமையை ஆற்றப் போவதாகப் பூரிப்புக் கொண்டு புரவியை மேலும் மேலும் விரைவு படுத்தினான்.

மணலூருக்குச் செல்லப் பட்டமங்கலத்திலிருந்து சுரண்டைக்காடு வழியாகத்தான் உறங்காப்புலி வர வேண்டுமென்று எதிர்பார்த்துத் தனது குதிரையைக் கறுத்த ஆதப்பன் அந்தக் காட்டின் பக்கம் தட்டி விட்டான். சீரான பாதையல்ல! மரங்களிடையே அடர்ந்திருந்த முரட்டு முட்செடிகளின் மீது குதிரையின் உடல் படும்பொழுதெல் லாம் மேலே செல்லத் தயங்கியது.

சுரண்டைக் காட்டில் உள்ள பல்வேறு பாதைகளில் எந்தப் பாதையில் உறங்காப்புலி செல்வானோ என்பது தெரியாமல் ஆதப்பன் திகைத்தான். குதிரையில் அமர்ந்தவாறே அங்கிருந்த மரங்களை அண்ணாந்து

நோக்கினான். வானளாவி நின்ற ஒரு மரம் அவன் கவனத்தை ஈர்த்தது. அந்த மரத்தின் உச்சிக்கிளையில் ஏறி உட்கார்ந்து கொண்டால் அங்குள்ள பல வழிகளில் எந்த வழியில் உறங்காப்புலியின் குதிரை செல்கிறது எனக் கண்டுபிடித்து விடலாம். உடனே மரத்திலிருந்து இறங்கி, அவனைத் தொடர்ந்து சென்று கடிதத்தைப் பறித்து விடலாம். இந்த யோசனை அவனுக்கு முற்றிலும் சரியென்று தோன்றியது.

குதிரையை மரங்களின் மறைவில் நிறுத்திவிட்டு அந்த உயர்ந்த மரத்தின் கிளையில் ஆதப்பன் ஏறி உட்கார்ந்து கொண்டான். அங்கிருந்து பார்க்க அந்தக் காட்டின் பல கிளைப் பாதைகள் கரடுமுரடாகவும் மேடு பள்ளங்களாகவும் காட்சியளித்தன. வெகு தொலைவுக்கு அவன் விழிகளை ஓடவிட்டும்கூட எந்தக் குதிரையிலும் யாரும் வருவதாகத் தெரியவில்லை.

சுரண்டைக் காட்டில் மான்கள் சுதந்திரமாகத் துள்ளித் திரிவதைச் சற்று நேரம் இரசித்துப் பார்த்துக் கொண்டிருந்த கறுத்த ஆதப்பனின் காதுகளில் சற்றுத் தொலைவில் குதிரை வரும் குளம்படி ஓசை கேட்டது. கண்களை அகல விரித்துக் கொண்டான்.

ஆம்! அவன் நினைத்தவாறே அது உறங்காப்புலி தான்!

அவன் வரும் அந்தக் குதிரைதான் சுரண்டைக் காட்டுக்குள் நுழைந்து, மூன்று வழிகள் சந்திக்கும் ஒரு இடத்தில் சற்று நின்று, பின்னர் ஒரு வழியைத் தேர்ந்தெடுத்துக் கொண்டு அதில் ஓடத்தொடங்கியது!

மரத்தின் உச்சியிலிருந்து மளமளவென்று கீழ்நோக்கி இறங்கிக் கொண்டிருந்த ஆதப்பனின்

செவிகளில் இன்னொரு குதிரை வேகமாக வருகிற குளம்படி ஒலிகள் கேட்டன. வியப்புற்று நோக்கினான். உறங்காப்புலியின் குதிரையை மிஞ்சிட வேண்டும் என்ற தீவிர வேகத்துடன் அந்தக் குதிரை வந்து கொண்டிருந்தது! அதைவிட ஆச்சரியம், அதன்மேல் ஒரு பெண் அமர்ந்திருந்தாள்!

யார் அந்தப் பெண்? ஆதப்பன் தனது நினைவாற்றலைச் சாணை பிடித்தான்! ஆம்-அன்றைக்குப் பட்டமங்கலத்துப் பிள்ளையார் கோயிலில் அவன் சந்தித்த வீரம்மாள்தான்! வல்லத்தரையனின் சகோதரி! உறங்காப் புலியின் மனைவி!

அவள் எதற்காக உறங்காப்புலியைத் துரத்திக் கொண்டு வருகிறாள்? ஆதப்பன் திகைத்தான்!

என்ன நடக்கிறதென்று மரத்திலிருந்து பார்த்துக் கொண்டேயிருந்தால் உறங்காப்புலியைத் தப்பிக்க விட்டு விடக்கூடும். எனவே உடனடியாக அவனைத் தொடர்வதே மேல் என்று முடிவு செய்து, தனது குதிரையில் பாய்ந்து உறங்காப்புலியும், வீரம்மாளும் செல்லும் வழியில் திருப்பினான்.

முன்னைக் காட்டிலும் வேகம் கொண்டது உறங்காப்புலியின் குதிரை! அந்த வேகத்திற்கு ஈடு கொடுத்துப் பின்னால் தொடர்ந்தது வீரம்மாளின் குதிரை! அவற்றிற்குப் பின்னால் ஏதோ ஒரு எதிர்பாராத நிகழ்ச்சிக்குத் தன்னைத் தயார்ப்படுத்திக் கொண்டவாறு செல்லும் கறுத்த ஆதப்பனின் குதிரை!

''நில்லுங்கள்! நில்லுங்கள்!''

வீரம்மாள் அலறியது அந்தக்காட்டையே அதிரச் செய்தது. உறங்காப்புலி அவளைத் திரும்பிப் பார்த்து

விட்டு இன்னும் வேகமாகப் போகுமாறு குதிரையைத் தனது குதிகால்களால் ஓங்கி உதைத்தான்! பொறுமை யிழந்தவளாகக் காணப்பட்ட வீரம்மாள், தனது இடை யிலிருந்த ஒரு கூரிய கட்டாரியை எடுத்து உறங்காப்புலி யின் குதிரைக்குக் குறி பார்த்து வீசினாள். குறி தவறாமல் குதிரையின் கழுத்துப் பகுதியில் கட்டாரி தாக்கியது. குதிரை வீறிட்டுக் குரல் கொடுத்தவாறு நின்றது. தள்ளாடியது. அது கீழே விழுவதற்குள் உறங்காப்புலி இறங்கிவிட்டான். வீரம்மாளும், தனது குதிரையை நிறுத்திவிட்டுக் கீழே குதித்தாள்.

இத்தனையும் பின் தொடர்ந்து பார்த்துக் கொண்டே வந்த கறுத்த ஆதப்பன், தனது குதிரையை ஒரு பெரும் புதரின் மறைவில் நிறுத்திக் கொண்டு கவனித்தான். உறங்காப்புலியின் அழகற்ற முகம் இப்போது விகாரத்தை யும் வெளிப்படுத்திக் கொண்டிருந்தது. எரியும் அடுப்பில் இருந்து எடுக்கப்பட்ட விறகுக் கட்டைகள் போன்று அவனது கொள்ளிக் கண்கள் அவளைக் கொத்துவதற்குத் துடித்தன. பற்களை அவன் நறநறவென்று கடித்தான். காட்டில் மூங்கில் மரங்கள் ஒன்றொடொன்று உராய்வது போல ஒலித்தது!

''வீரம்மா! உனக்கு எவ்வளவு கொழுப்பு இருந்தால் இந்தக் காரியம் செய்வாய்?''

''அய்யோ! என்னை மன்னித்துக் கொள்ளுங்கள்! உங்களைத் தடுத்து நிறுத்த வேறு வழியில்லாத காரணத்தால், குதிரையைத் தாக்கி வீழ்த்தினேன்!''

''நீ என் கழுத்துக்குத்தானடி குறி பார்த்திருப்பாய்; அது தவறிப்போய்க் குதிரையின் கழுத்தில் பாய்ந்து விட்டது!''

''அப்படியெல்லாம் சொல்லாதீர்கள்!''

''பின்னே எப்படியடி சொல்வது? என் செயல்களில் குறுக்கிட நீ யாரடி?''

''நான் உங்கள் மனைவி!''

''சே! மனைவி! மானங்கெட்டவள்!''

வீரம்மாளின் கன்னத்தில் ஓங்கி அறைகிறான். அவள் நிதானமாக அவனைப்பார்த்து, ''மனைவியாகக் கூட வேண்டாம்! இந்த மண்ணில் பிறந்த ஒரு தமிழச்சி என்ற முறையில் எனக்கு உங்களைத் தடுக்க உரிமையுண்டு!'' என்று சொல்லி முடிப்பதற்குள், உறங்காப்புலி தன் கையிலிருந்த முரட்டு நூல் கயிற்றால் அவளை வளைத்து விடுகிறான்.

''கணவனே கண்கண்ட தெய்வம்! கல்லானாலும் கணவன், புல்லானாலும் புருஷன்! பத்தினிக்கழகு பதி சொல்கேட்பது! இதெல்லாம் வெறும் வாயலங்காரம் என்பதை உன்னைப் பார்த்துத்தானடி தெரிந்து கொண்டேன்!''

''பிறந்த மண்ணுக்குத் துரோகம் செய்கிற கணவனை காலம் முழுவதும் துரோகி என்றும் காட்டிக் கொடுத்த கயவன் என்றும் இந்த உலகம் தூற்றுமே! அந்தக் களங்கத்திலிருந்து என் கணவனைக் காப்பாற்றுவது என் கடமை!''

''ஓ! உன் கடமையை நீ செய்! என் கடமையை நான் செய்கிறேன்!''

வீரம்மாளைக் கயிற்றுடன் இழுத்து ஒரு மரத்தில் இறுகக் கட்டுகிறான். ''வீரம்மா! இப்போது என்ன செய்வாய்? இங்கேயே இரு. நீ வந்த குதிரையிலேயே சென்று கர்னல் வெல்ஷ் துரையிடம் கடிதத்தைக் கொடுத்து விட்டுத் திரும்பி வரும்போது உன்னை அழைத்துப் போகிறேன்!''

அதைக் கேட்டு அவள் கொதித்துப் போனாள். ''என் சொல்லை மீறி நீங்கள் செல்வீர்களேயானால் திரும்பி வரும் பொழுது என் பிணத்தைத்தான் இந்த மரத்தடியில் காண்பீர்கள்!''

உறங்காப்புலியின் பயங்கரச் சிரிப்பு! ''அதுவும் பரவாயில்லை! ஒரு தொல்லை விட்டது!''

அவன் பதிலைக் கேட்ட வீரம்மாள் கண்ணீர் பெருக்கியவாறு கதறினாள்.

''உங்க குணம் தெரிந்துதானே பாகனேரியார் வீட்டிலே பெண் கேட்டுக் கொண்டு படியேறாதே என்று விரட்டியடித்தார்கள்! நானும்தான் எவ்வளவோ மறுத்தேன். பட்டமங்கலம் நாட்டிலேயே ஒரு மணமகளைத் தேர்ந்தெடுங்கள் அண்ணா என்று எவ்வளவோ கெஞ்சினேன். இப்படிக் காட்டிக் கொடுக்கிற உங்களுக்கு மனைவியாக ஆக வேண்டுமென்று என் தலையெழுத்து இருந்திருக்கிறது!''

வீரம்மாளின் சுடு கணைகளைத் தாங்கிக் கொள்ள முடியாத உறங்காப்புலி, அவள் கன்னங்களில் தனது இரும்புக் கரங்களால் மாறி மாறி அடித்தான்.

''என்னை-நீயல்ல!-கடவுளே வந்தாலும் தடுக்க முடியாது!'' என்று சூளுரைத்துக் கொண்டே அவன் ஏறி வந்த குதிரையில் ஏறுவதற்குச் சென்றான்.

''உன்னைத் தடுக்கக் கடவுள் தேவையில்லை. இதோ கறுத்த ஆதப்பன் வந்திருக்கிறேன்!'' என எக்காளமிட்டுக் கொண்டு எதிரே நின்றான் ஆதப்பன்!

''வாடா! வா! அன்றைக்கு கர்னல் துரை முகாமிலே நான் உனக்குக் கொடுக்க வேண்டியதைக் கொடுக்கவில்லை! இப்போது வாங்கிக்கொள் வட்டியும் முதலுமாக!''

''உன் அன்பு மனைவி அழுதும் புலம்பியும் கண்ணீர் விட்டும் கதறியும் கூட மனத்தை மாற்றிக் கொள்ளாத நீ, என் வேண்டுகோளுக்கா மாற்றிக் கொள்ளப் போகிறாய்! இருந்தாலும் என் கடமை; கேட்கிறேன்! கர்னல் வெல்ஷுக்குக் கொண்டு போகும் அந்த மடலைக் கொடு இப்படி!''

ஆதப்பன் சொல்லி முடிப்பதற்குள், அவன்மீது மோதினான் உறங்காப்புலி! இருவரும் அந்தக் காட்டில் கிடந்த கருங்கல் சரளைகளிலும், முட்புதர்களிலும் கட்டிப் புரண்டு போரிட்டனர்! உறங்காப்புலியை வீழ்த்தி, அவன் கையிலிருந்த கடிதத்தைப் பறித்திட ஆதப்பனுக்கு அதிக நேரம் ஆகவில்லை! உறங்காப்புலி எழுந்து நடக்க முடியாமல் தள்ளாடினான். ஆதப்பன் அவனைக் கடைசியாக அடிக்கக் கையை ஓங்கினான். ஆனால் ''அய்யோ! தயவு செய்து அவரை விட்டு விடு ஆதப்பா!'' என்று வீரம்மாளின் கெஞ்சுங் குரலைக்கேட்டு ஆதப்பன் அப்படியே நின்றுவிட்டான்! பிறகு மெல்ல அவளருகே சென்று அவளை மரத்திலிருந்து அவிழ்த்துவிட்டான்.

''பட்டமங்கலத்தில் இப்படியொரு காட்டிக் கொடுக்கும் துரோகி, அம்பலக்காரரின் மாளிகையிலேயே இருப்பது பட்டமங்கலத்துக்கே அவமானம்! இதை நான் உடனடியாக வல்லத்தரையரிடம் சொல்லப் போகிறேன்!''

''வேண்டாம் தம்பி வேண்டாம்! ஆதப்பா! இப்படியொரு சம்பவம் நடந்ததையே மறந்துவிடு! என் தாலி நிலைப்பதற்காகவாவது என் வேண்டுகோளைக் கேள்! நான் இவரை எப்படியும் திருத்தி, பட்டமங்கலத்துப் பெருமையைக் காப்பாற்றுகிறேன்!''

ஆதப்பன் புன்னகை புரிந்தவாறு அவளது வேண்டுகோளை ஏற்றுக் கொண்டான். நிற்பதற்கும் முடியாமல் ஊமைக் காயமுற்றுத் தவித்த கணவனைத் தன் தோளின்மீது சாத்திக் கொண்டு, குதிரையின் அருகே சென்றாள். அவள் குதிரையில் ஏறிக் கொள்ளவும், அவள்மீது உறங்காப்புலி சாய்ந்து கொள்ளவும் உதவி செய்துவிட்டு, அந்தக் குதிரை பட்டமங்கலம் நோக்கி நடப்பதைப் பார்த்துக் கொண்டே நின்றான் கறுத்த ஆதப்பன்!





# 17

திருக்கோட்டியூர் கோயிலுக்குள் நுழைய முனைந்த வாளுக்குவேலியின் முன்னால், அவன் சற்றும் எதிர்பாராத வகையில் மேகநாதன் நின்றான். ''என்ன மேகநாதன்! என்ன விசேஷம்? திடீரென்று?'' வாளுக்குவேலி மிகுந்த பரபரப்போடு கேட்டான்!

''ஒன்றுமில்லை! எல்லாம் நல்ல சேதிதான்! கறுத்த ஆதப்பன் போன காரியம் வெற்றியாம்! இதோ இந்தக் கடித உறை ஆதப்பன் அனுப்பியது, தங்களிடம் சேர்க்கச் சொல்லி!''

மேகநாதன் கொடுத்த கடித உறையை வாங்கிக் கிழித்து அந்த அந்தி மாலை வெளிச்சத்தில் மெதுவாகப் படிக்கத் தொடங்கினான்.

''அன்பு நிறைந்த அண்ணன் அவர்களுக்கு ஆதப்பன் வணக்கம். அக்னியூ கொடுத்த கடிதத்துடன் வெல்ஷ் துரையிடம் சென்று கொண்டிருந்த உறங்காப்புலியை வழியிலேயே சந்தித்தேன். நிலைமைகளை விளக்கினேன். உறங்காப்புலி நமது உணர்வுகளைப் புரிந்துகொண்டு, கடிதத்தை என்னிடம் கொடுத்துவிட்டான். எனக்கும் அவனுக்கும் எந்தத் தகராறும் இல்லாமலே கடிதம் என் கைக்கு வந்து விட்டது. கடிதத்தில் ஆங்கிலேயர்களின் யுத்த ரகசியங்கள் சில சிக்கியிருக்கின்றன. மானா

மதுரைக்கும் பார்த்திபனூருக்கும் இடையில் ஆயிரக் கணக்கான வீரர்களுடன் முகாமிட்டிருக்கும் மருதுப் படையின் தளபதிகளில் யாரையாவது சந்தித்து ஆங்கிலப் படை வரும் வழியை அக்னியூவின் கடிதத்தில் கண்டவாறு விளக்கிவிட்டு, கடிதத்தையும் அவர்களிடம் சேர்த்துவிட்டு உடனடியாக ஊர் திரும்புகிறேன். தாங்கள் எனக்காகக் காத்துக்கொண்டு கவலையோடு இருப்பீர் களேயென்றுதான் இந்தக் கடிதம் எழுதி அனுப்பினேன். பார்த்திபனூரில் பரங்கியர் பட்டாளம் வசமாகச் சிக்கிக்கொண்டு சீரழிந்தது என்ற செய்தியுடன் விரைவில் வருவேன்.

தங்கள் தம்பி,
கறுத்த ஆதப்பன்

மட்டற்ற மகிழ்ச்சியில் ஆழ்ந்த வாளுக்குவேலி, மேகநாதனின் தோளைப் பிடித்து உலுக்கித் தனது உணர்ச்சியைக் காட்டிக்கொண்டு, மேகநாதனிடத் திலேயே அந்த மடலையும் கொடுத்து அவனைப் பாகனேரிக்கு அனுப்பி வைத்தான்.

''திருக்கோட்டியூரப்பா! உன் கோயில் வாசலுக்கு வந்ததுமே என் மனம் குளிரும் செய்தி கிடைத்தது! இந்த வெற்றிச் செய்திகள் தொடர்ந்திட அருள்புரிவாய் பெருமானே!''

- என்று கரங்கூப்பியவாறு உள்ளே சென்று முதலில் திட்டமிட்டபடி அப்பிரதட்சணமாகக் கோயில் பிரகாரத்தைச் சுற்றுவதற்கு வாளுக்குவேலி தொடங்கி னான். சுந்தராம்பாள் எதிரே வருவாள் என்று எண்ணிச் சென்றவனின் கண் எதிரே வெள்ளை அய்யர் வந்து நின்றார். அவர் கையில் தேங்காய் பழங்கள் போன்ற கோயில் பிரசாதங்கள்.

''அடடே! அய்யர்வாளா! எங்கே இவ்வளவு தூரம்?''

''இதுக்குப் பேர்தான் குருட்டுக் கேள்வி! கோயில் பிரகாரத்தை பிரதட்சணம் பண்ணிண்டு வர்றேன்; எங்கே இவ்வளவு தூரம்னு கேட்கிறீரே! இப்படித்தான் அந்த சுந்தராம்பாளுகிட்டேயும் ஏதேதோ பேசி, வீணான மோதல்! தேவையில்லாமல் ஒரு நடனக்காரியிடம்!''

''என்ன அய்யரே! உமக்குக்கூடக் கோபம் கொப்பளிக்கிறது! சுந்தராம்பாளுக்கும் எனக்கும் நடந்த தகராறு அவ்வளவு பரவிவிட்டதா?''

''பரவாமல் இருக்குமா? உமக்குக் கொஞ்சமாவது கலைஞானம் இருந்தால் அவளுடைய கலையை இப்படி அவமதித்திருப்பீரா?''

''வெள்ளை அய்யர் அவர்களே! யாருக்குக் கலைஞானம் இல்லை என்கிறீர்கள்?''

''என் எதிரே நிற்கிறாரே, சாட்சாத் வாளுக்குவேலி! அவருக்குத்தான் கலைஞானம் இல்லை என்கிறேன்!''

''என்ன சொன்னீர்?''

''கைவளரி என்ற ஆயுதத்தை அற்புதமாக வீசக் கூடிய ஞானம் உண்டே தவிர, கலைஞானம் கடுகளவும் இல்லையென்பதற்கு செட்டியார் வீட்டுத் திருமண நிகழ்ச்சியொன்றே சாட்சி!''

வாளுக்குவேலிக்கு மீசை துடித்தது! முகம் சிவந்தது! அந்தி மாலை நேரத்தில் இரண்டு சூரியனோ என எண்ணிடத் தோன்றியது! ''எனக்கா கலைஞானம் இல்லை!'' என்று உறுமினான்.

வெள்ளை அய்யர், ''விடும் அதனை! இல்லாதது இனிமேல் வரவா போகிறது!'' என்று சலித்துக் கொண்டார்!

''கலைஞானமா இல்லை எனக்கு? கேளுங்கள் அய்யரே, கேளுங்கள்!'' என்று வெடிச் சொற்களை வீசிய வாளுக்குவேலி திடீரெனப் பாடத் தொடங்கினான். திருக்கோட்டியூர் பற்றி ஆழ்வார்கள் பாடிய பாசுரங்களின் தொகுப்பாக அந்தப்பாட்டு அமைந்தது!

''கோல் கொண்டு வா! கோல் கொண்டு வா!'' என்று வாளுக்குவேலி உரத்த குரலில் பாடியதும் வெள்ளை அய்யர் பயந்தே விட்டார்! பிறகுதான் அவருக்குப் புரிந்தது, அது பெரியாழ்வார் பாடிய திருமொழியென்பது!

''கொங்கும் குடந்தையும் கோட்டியூரும் பேரும்
எங்குந் திரிந்து விளையாடு மென் மகன்
சங்கம் பிடிக்கும் தடக்கைக்குத் தக்க நல்
லக்க முடையதோர் கோல் கொண்டு வா!
அரக்கு வழித்ததோர் கோல் கொண்டு வா!''

''இது பெரியாழ்வார் பாடியது-இதோ திருமங்கை யாழ்வார் திருக்கோட்டியூர் பெருமானைக் குறித்துப் பாடியது'' என்று வாளுக்குவேலி கூறிக் கொண்டே தொடர்ந்து பாடினான்.

''வங்கமா கடல் வண்ணன் மாமணி வண்ணன்
விண்ணவர் கோன்; மதுமலர்த்
தொங்கல் நீண் முடியான், நெடியான்படி நடந்தான்
மங்குல் தோய் மணிமாட வெண்கொடி
மாக மீதுயர்ந் தேறி, வானுயர்
திங்கள் தானணவும் திருக்கோட்டியூரானே''

ஆழ்வார் பாசுரங்கள் வாளுக்கு வேலியின் கணீரென்ற குரலில் கலந்து இசைஞானப் பெருக்குடன் அந்த ஆலயத்திற்குள் அமுத மழையெனக் கொட்டிக் கொண்டிருந்தன. கோயில் பிரகாரத்தில் பிரதட்சணமாகச்

சுற்றி வந்த சுந்தராம்பாள் அந்த இசை வெள்ளத்தில் அப்படியே அமிழ்ந்து போய்த் தவக்கோலம் கொண்டவளைப் போல அசைவற்று நின்று விட்டாள்!

இசைத்தவாறு வாளுக்குவேலியும், இசையினை இரசித்தவாறு சுந்தராம்பாளும் ஒருவரையறியாமல் ஒருவர் அருகருகே வந்து விட்டனர். ஆனால் அது அவர்களுக்குத் தெரியாது. இசையின்பம் அப்படி மெய்ம் மறக்கச் செய்திருந்தது.

திருமங்கையாழ்வார் பாசுரத்தைப் பாடி முடித்த போது சுந்தராம்பாளைப் பார்த்துவிட்ட வாளுக்குவேலி, வெள்ளை அய்யரிடம் திரும்பி அறைகூவல் விடும் தோரணையில் கேட்டான்: ''என் பாட்டுக்கு ஏற்பப் பரதமாடிடக் கூடியவர்கள் யாராவது இருக்கிறார்களா?'' என்று!

அந்த வார்த்தையைக் கேட்டவுடன் சுந்தராம்பாள் ''அப்படியொரு பாக்கியம் எனக்குக் கிடைக்கட்டுமே!'' என்று சொல்லிக் கொண்டே பரதக் கலைக்குரிய முத்திரையை விரல்களில் காட்டி; அந்தக் கலையின் உயிரை விழியொளியில் காட்டி, அதன் நளினத்தை இதழ்களிலும் இடையிலும் காட்டி, பாதங்களைத் தாள லயத்துடன் தரையில் மிதக்க விட்டாள்!

வாளுக்குவேலி மீண்டும் பாடத் தொடங்கினான். நடனத்திற்குரிய பாடல் வரிகள் அவன் நாவில் நர்த்தன மாடின! அந்தப் பாட்டுக்கேற்ப ஆடிய சுந்தரியோ அவன் விழிகளில் சதுராடி, மெல்ல மெல்ல அவன் இதயத் தாழ்வாரத்திலும் சதுராடிக் கொண்டிருந்தாள்.

திருக்கோட்டியூர் ஆலயம் தோன்றிய காலத்தி லிருந்து, சோழ மன்னர்கள், பாண்டிய மன்னர்கள், விஜய நகரப் பேரரசர்கள் காலத்திலேகூட இப்படியொரு இசை

விருந்தும் நடன விருந்தும் நடந்திருக்குமா என ஐயுறும் வண்ணம் அவன் பாடினான்! அவள் ஆடினாள்!

அவ்லூர்ப் பெருமான் மீது பாசுரங்களை இயற்றிய பெரியாழ்வார், பேயாழ்வார், பூதத்தாழ்வார், திருமங்கை யாழ்வார், திருமழிசை ஆழ்வார் ஆகிய ஐவரும் கூட வாளுக்குவேலி போல் இசை நயமும் குரல் நயமும் கொண்டு அந்த ஆலயத்தில் பாடியிருப்பார்களா என்பது சந்தேகமே!

அந்தக் கலை நிகழ்ச்சியில் தன்னை அறவே மறந்து விட்டது போலத் திருப்பாற்கடல் எனப்படும் அந்தக் கோயிலின் குளம் அலைகளைக்கூட நெளிய விடாமல் மலைத்து நின்றது! இராஜ கோபுரம், தனது கலசங்களைக் கீழே இறக்கி அவர்களுக்குப் பரிசுகளாக வழங்கலாமா என்பது போல உயிர் பெற்று விளங்கியது!

திருக்கோட்டியூர் பெருமாள் கோயிலில் தேனும் பாலும் கலந்து மழை! அந்த மழையில் நீலமணித் தோகை விரித்தாடும் கலைமயில்! செவிகள் செய்த தவமா? விழிகள் புரிந்த நோன்பா? எதற்குக் கிடைத்தது இந்தப் பயன் என்னும் படியாகப் பாடலும் ஆடலும் தொடர்ந்தது!

ஆடிக்கொண்டேயிருந்த சுந்தரியின் நெஞ்சம் அவளையுமறியாமல் வாளுக்கு வேலிக்கு அடிமைச் சாசனம் எழுதிக் கொடுத்து விட்டது! இசையே உஃடி வெடுத்து வீரத் தோற்றம் காட்டி எதிரே நிற்பது போன்ற நம்பிக்கை, அவளுக்கு! வாளுக்கு வேலியும் அந்த மின்னற் கொடியாளின் பொன்னவிர் மேனியில் ஒவ்வொரு அணுவிலும் கலை ஒளி பெருகிடும் அழகைக் கண்டு இரசித்தான்.

திடீரென அவன் கால்களில் விழுந்தாள் சுந்தரி! ''என்னை மன்னித்து விடுங்கள்! கலைக் கருவூலம் நீங்கள்!

உங்களைத் தவறாக எடை போட்ட நான்தான் ஞான சூன்யம்!'' என்று கலங்கினாள்.

''கவலைப்படாதே சுந்தரி!'' என்று அவளைக் கரம் தொட்டுத் தூக்கினான் வாளுக்கு வேலி! அவன் அவளைத் தொட்டுத் தூக்கப் போகிறான் என்று முன்கூட்டியே அறிந்து கொண்டு வெள்ளை அய்யர் அந்த இடத்தை விட்டு மாயமாய் மறைந்து போனார்.

''என்னை மன்னித்ததற்கு அடையாளமாக என் வீட்டுக்கு வந்து..சிற்றுண்டி அருந்திச் செல்ல வேண்டும்'' என்று சுந்தரி குழைந்தாள்!

''அவ்வளவுதானா?''

வாளுக்குவேலியின் இந்தக் குறும்புத்தனமான கேள்விக்கு உடனே பதில் சொல்ல முடியாமல் பளிங்குச் சிலையின் பவள இதழ்கள் துடித்தன!

அவன் வாழ்க்கையில் எத்தனையோ அல்லல்கள்! உள்ளத்தில் ஓயாமல் வீசிக் கொண்டிருக்கும் அனல் காற்று! நாடு நாடோடிகளிடம் அடிமையாகிக் கொண்டிருக்கிறது. அதை நினைத்து நினைத்துப் பெருமூச்சு! தங்கை கல்யாணிக்கு ஒரு நல்ல இடம் கிடைக்க வேண்டுமே என்ற ஏக்கம் ஒவ்வொரு விநாடியும்! தனது தமிழ் இனத்தார் ஒற்றுமையின்றி ஒருவரையொருவர் காட்டிக் கொடுத்து வெள்ளையர் ஆட்சிக்கு விளைநிலமாகத் தமிழ் நிலத்தை மாற்றி விட்டனரே என்ற மனக் குமுறல்!

இத்தனைக்குமிடையே கோடையிலே இளைப் பாற்றிக் கொள்ளும் குளிர் தருவாக-தரு நிழலாக-நிழல் கனிந்த சுகமாக-சுந்தரியின் அழைப்பு இருந்தது, வாளுக்கு வேலிக்கு!

இருந்தாலும் அழைத்தவுடன் ''வருகிறேன்'' என்று கூறிவிட முடியுமா? அம்பலக்காரருக்கென்று சில அந்தஸ்துகள், பந்தாக்கள் இருக்கின்றனவே!

''சுந்தரி! நான் நிச்சயம் வருவேன்! ஆனால் ஒன்று! நான் வருகிறேன் என்பதற்கு அடையாளமாக, எனக்கு முன்பு உன் வீட்டிற்குச் சீர்வரிசைகள் வரும்: என்ன, புரிகிறதா?''

அதைக் கேட்ட சுந்தரியின் முகம் கவிழ்ந்தது! பூமிக்கு இன்னொரு நிலவின் தரிசனம் கிடைத்தது! அவளது கால் பெருவிரல்கள் தரையைக் கீறிக் கொண்டிருந்தன! இல்லை; காதல் கல்விக்கான ''அரிநமோத்து சிந்தம்'' எழுதிக் கொண்டிருந்தன!

அந்த எழிலார் திருவுருவை வாளுக்குவேலி, தனது இருவிழிகளால் பருகிக் கொண்டே நின்றான்! பின் பிரியா விடை பெற்றுச் சென்றான்! அவனை நினைத்துக் கொண்டே அவன் தங்கை கல்யாணி நாச்சியாருக்கு நடனப் பயிற்சியை நடத்திக் கொண்டிருந்தாள் வடிவாம்பாள்!





# 18

''குழந்தையிலேயே பரதநாட்டியம் கத்துக்கிட்டு இருந்ததாலே, எங்க நாச்சியாரம்மாவுக்கு வடிவு சொல்லிக் கொடுக்கிறது ஒவ்வொண்ணும் உடனுக் குடனே அத்துப்படியாகிடுது'' என்று குழையக் குழையச் சிரித்துக் கொண்டு கல்யாணி நாச்சியாரைப் பாராட்டி வாழ்த்தினாள் லலிதாங்கி!

''வாத்தியாரம்மா சாமர்த்தியமும் இருக்குல்லே!'' என்று காடையும் கௌதாரியும் ஏக காலத்தில் வடிவாம் பாளைப் புகழ்ந்தார்கள்.

வடிவுக்கோ, வாளுக்கு வேலியைச் சந்திக்க முடிய வில்லையே என்ற ஏக்கம்! அந்த ஏக்கத்தை ஏமாற்ற மாக்கும் செய்தியொன்றும் அங்கேயே வந்து சேர்ந்தது.

வாளுக்குவேலியின் மாளிகையில் வேலை செய்யும் ஆட்கள் சிலர் வேக வேகமாக உள்ளே வந்து கூடத்திற்கு அருகேயுள்ள அறைக்குள் அழகுற அடுக்கி வைக்கப்பட்டிருந்த வெள்ளிப் பாத்திரங்களில் சிலவற்றை எடுத்துத் தாழ்வாரத்தில் வைத்தனர்.

வெண்கலத் தவலைகள், பித்தளைக் குடங்கள், செப்புப் பாத்திரங்கள், இப்படிச் சில விலை உயர்ந்த பொருட்களும் அறையிலிருந்து எடுக்கப்பட்டுத் தாழ்வாரத்தில் குவிக்கப்பட்டன. அறை முழுவதும்

காலியாகவில்லையென்றாலும் பாதியளவுச் சாமான்கள் வெளியே வந்து விட்டன. ஆட்கள் பரபரப்புடன் காணப்பட்டார்கள்.

வடிவாம்பாள், லலிதாங்கியையும் நாதமுனியையும் வியப்பு மேலிடப் பார்த்தாள். கல்யாணி நாச்சியார் காடை, கௌதாரி இருவரையும் அழைத்துக் காதோடு ஏதோ சொல்லி அந்தக் கூடத்து அறைப் பக்கம் காடை கௌதாரி இருவரும் போவதைப் பார்த்துக் கொண்டேயிருந்தாள்.

லலிதாங்கி வடிவின் காதை மெல்லக் கடித்தாள் : ''அம்பலக்காரர் உத்தரவா இருக்கும். அவர் தங்கச்சிக்கு நீ நடனம் சொல்லிக் கொடுக்க வந்தாய் என்கிற சந்தோஷத்திலே இப்படிப் பண்ட பாத்திரங்களைப் பரிசா அனுப்ப முடிவு செஞ்சிருப்பார்.''

அதைக் கேட்ட வடிவுக்கு மகிழ்ச்சி பொங்கிற்று! லலிதாங்கி, வடிவாம்பாளிடம் பேசியதைத் தனது பாம்புக் காதுகளால் கேட்டுக் கொண்டிருந்த நாதமுனி, அவர்களுக்கு ஒரு விளக்கம் சொல்ல அவர்கள் அருகே நகர்ந்து வந்தான். அதற்குள் தனது பரத நாட்டிய உடைகளைக் கழற்றிவிட்டு மாற்று உடை அணிந்திடத் தனது அறைக்குள் சென்று விட்டாள் கல்யாணி நாச்சியார்!

''அம்பலக்காரர்கள் வழக்கம் தெரியாதா உங்களுக்கு? அவுங்க யாராவது நம்ப கலைத்துறையிலே இருக்கிற பெண்கள்மேல ஆசைப்பட்டு அவுங்களோட வாழணும்னு முடிவு செஞ்சுட்டா முதல்ல இது மாதிரி தான் சீர் வரிசையெல்லாம் அனுப்புவாங்க! வடிவாம் பாளுக்கு வலுவிலே அடிக்குது அதிர்ஷ்டம்!''

நாதமுனி, தனது கண்டுபிடிப்பை வெளியிட்டதும், வடிவு இன்பத்தில் மூழ்கினாள் என்றாலும், ஒரு சந்தேகம் அவளுக்கு ஏற்படவே செய்தது.

''வழக்கம் அப்படியிருக்கலாம்! ஆனால் அந்தப் பெண்ணிடம் சம்மதம் கேட்டு அவள் சரியென்று சொன்ன பிறகுதானே இந்தச் சம்பிரதாயங்கள் எல்லாம் நடைபெற வேண்டும்?'' என்று நாதமுனியைப் பார்த்து வினவினாள்!

உடனே லலிதாங்கி குறுக்கிட்டு ''ஏன்மா? உனக்கு சம்மதம் இல்லியா? அப்படின்னா சொல்லிடு! இப்பவே அந்த ஆளுங்ககிட்ட சொல்லி எல்லாத்தையும் நிறுத்திடச் சொல்றேன்'' என்று குறும்பாக இடித்தாள்!

''இல்லை! இல்லை! நீங்க வேற ஏதாவது இடையிலே புகுந்து குழப்பம் பண்ணிடாதீங்க!'' என்று வெட்கத்தைக் காட்டிக் கொண்டு புன்னகை உதிர்த்தாள்.

'நினைத்தது நடக்கப் போகிறது! நெடிய உருவும் வலிய புயமும் கொண்ட வாளுக்குவேலி தனது சின்ன இடை தழுவி, கன்னலிதழ் பருகி, பஞ்சணைப் பசி தீர்ப்பான்! பணத்தால் அர்ச்சிப்பான்! பலரும் மதித்திடும் கௌரவத்தை அளிப்பான்!'

வடிவின் நினைவுகள் கற்பனை வளையங்களாக உருண்டோடிக் கொண்டிருந்தன!

அப்போது கல்யாணியின் அறைக்குள் காடையும் கௌதாரியும் குதித்தோடினர் குதூகல உணர்ச்சியுடன்!

''அம்மா! ரொம்ப நல்ல சேதி! நம்ப அய்யா, இந்த சீர்வரிசையெல்லாம் எங்கே அனுப்புறார் தெரியுமா?''

''தெரிந்து கொள்ளத்தானே உங்களை அனுப்பினேன். என்னையே வந்து கேள்வி கேட்கிறீர்களா?''

''அதைத் தெரிஞ்சுகிட்டுத்தாம்மா வந்திருக்கிறோம்! திருக்கோட்டியூர் சுந்தராம்பாள் வீட்டுக்குப் போவுது சீர்வரிசை!''

''அப்படியா?'' கல்யாணி நாச்சியாரின் புருவங்கள் வினாக் குறிகளாயின' எனினும் புன்னகை மலர்ந்தது இதழோரத்தில்!

''சீர்வரிசை அனுப்புறது எதுக்குத் தெரியுமா அம்மா?''

''எதுக்கு?''

''ஊம்! தெரியாதுபோலக் கேக்கிறீங்களே! நம்ப அய்யா அந்தச் சுந்தரியைக் காந்தர்வ மணம் பண்ணிக் கிட்டார்னு அர்த்தம்!''

கல்யாணிக்கு வசந்தமும் வாடைக் காற்றும் ஒரே நேரத்தில் வீசுவது போன்ற உணர்ச்சி! அண்ணன் வாழ்க்கையில் தென்றல் தோன்றுகிறது என்றாலும், அவர் எவ்வளவு பெரிய புயலுக்கிடையே உலவிக் கொண்டிருக்கிறார் என்பதை அவளால் எண்ணிப் பார்க்காமல் இருக்க முடியவில்லை.

அண்ணன் எடுத்துள்ள இந்தத் திடீர் முடிவு குறித்து ஆதப்பன் என்ன கருதுகிறானோ என்ற சஞ்சலம் வேறு அவளைக் குழப்பியது. எது எப்படியிருந்தாலும் தனது பாசத்திற்குரிய அண்ணன், சந்தோஷமாக இருந்தால் போதும் என்ற ஆறுதலும் அவளை அரவணைத்துக் கொண்டது.

அறையைவிட்டு வெளியே வந்த காடையும் கெளதாரியும் வடிவாம்பாள் குழுவினரின் முன்னே உண்மையைப் போட்டு உடைத்துவிடவே, உள்ளம் ஆயிரம் சுக்கல்களாக நொறுங்கிப்போய் நின்றாள் வடிவாம்பாள்!

சங்கிலியை அறுத்துக் கொண்டு வெறிகொண்டு ஓடும் மத யானையைப் போல அவள் உள்ளத்துப் பொறாமை அக்காள் சுந்தரிமீது பாய்ந்து மோதியது!

தனக்கென்று முத்திரை குத்தப்பட்டிருந்த பொருளைத் தனது சகோதரி - தன்னிடமிருந்து தட்டிப் பறித்து விட்டதாகவே குமுறினாள்!

செங்கற் சூளையின் தீப்பிழம்பைச் சல்லாத் துணி போட்டு மறைத்திட இயலுமா? அந்த நிலைதான் அங்கே வடிவுக்கு! ஆயினும் அவள் புத்திசாலிப் பெண்! இருதயப் போர்க் களத்தில் நடைபெறும் ஈட்டி வீச்சுக்களையும், வாள் பாய்ச்சல்களையும்-தனது முகக் குறிப்பால் காட்டி விடாமல் பாதுகாத்துக் கொண்டாள்.

என்றைக்கோ ஒருநாள் எண்ணியதை எண்ணிய வாறு செய்து முடித்து வெற்றி பெற்றே தீருவேன் எனத் தனக்குத் தானே சூளுரைத்துக் கொண்டு, கல்யாணி நாச்சியாரிடம் விடைபெற்றுக் கொள்ள வேண்டுமென்று காத்திருப்பதாகக் காடை, கௌதாரியிடம் சொன்னாள். அவர்கள் அறைக்குள் ஓடுவதற்குள்ளாகவே கல்யாணி அங்கு வந்து விட்டாள்!

''எல்லாம் நன்றாகவே முடிந்து விட்டது. உங்கள் அண்ணனுக்கும், என் அக்காளுக்கும் ஏற்பட்ட மோதல், இப்போது காதலிலே முடிந்துவிட்டது. இதைக் கேட்க எனக்கு எவ்வளவு இனிமையாக இருக்கிறது தெரியுமா? கடவுள் சித்தம்; ஒரு நாளைக்குச் சிலரைப் பகைவர் களாக்குகிறது! மறுநாள் அவர்களையே பாசமுள்ள நேசர்களாக்கி விடுகிறது!''

வடிவாம்பாளின் வாயிலிருந்து மட்டுமே இந்த வார்த்தைகள் வருகின்றன என்பதும் அவள் மனம் வாடிக் கிடக்கிறது என்பதும் கல்யாணி நாச்சியாருக்குத் தெரிவதற்கு நியாயமில்லை. அவள் முறுவலித்தவாறு வடிவாம்பாளிடம் தனது நடனப் பயிற்சி தொடர்ந்து நடந்திட ஒத்துழைக்க வேண்டுமென்று விருப்பம் தெரிவித்தாள்!

''என் குறிக்கோளை நீங்கள் அறிய மாட்டீர்கள்! அது நிறைவேறும் வரையில்-நாள்தோறும் நடனப் பயிற்சி வழங்க இந்த வடிவு வந்து கொண்டேயிருப்பாள்!''

கல்யாணி, கருப்பஞ்சாற்றில் தேன் கலந்த மொழியிலே வடிவைப் பார்த்துக் கேட்டாள் : ''என்ன குறிக்கோள்?'' என்று!

''என்னையும் என் அக்காளையும் வெல்கிற அளவுக்குச் சிறந்த நாட்டிய மேதையாக எங்கள் கல்யாணி நாச்சியார் ஆக வேண்டும்! அதுவே என் குறிக்கோள்!'' என்று சமாளித்தாள் வடிவாம்பாள்!

மறுநாள் வருவதாகக் கூறிவிட்டு வடிவு, லலிதாங்கி, நாதமுனி மூவரும் கல்யாணியிடமும், காடை, கௌதாரியிடமும் விடைபெற்றுக் கொண்டார்கள்.

அவர்களை ஏற்றி வந்த சுந்தராம்பாளின் வண்டி பாகனேரி மாளிகையைவிட்டுத் திருக்கோட்டியூரை நோக்கி ஓடியது!

வடிவின் மனோநிலையை லலிதாங்கியால் புரிந்து கொள்ள முடிந்ததால் வழியில் ஏதேதோ பேச்சுக் கொடுத்து அவள் மனதை மாற்றிட முயற்சி செய்தாள். வடிவு வாயே திறக்கவில்லை.

வண்டி சுந்தரியின் வீட்டு வாசலில் போய் நின்றது. மூவரும் இறங்கினார்கள். தனது வேதனையையோ சீற்றத்தையோ அக்காளிடம் வெளிப்படையாகக் காட்டிக் கொள்ள விரும்பாத வடிவு எதிரேயிருந்த தனிது வீட்டுக்குச் சென்றுவிட வேண்டுமென்று முதலில் நினைத்தாலும் அக்காள் வீட்டுக்குப் போய்விட்டுப் பிறகு செல்லலாம் என்றே முடிவு செய்தாள்.

அவள் சுந்தரியின் வீட்டுக்குள் நுழைந்தது வழக்க மாக மிதந்து வரும் பூங்காற்று போல இருந்தாலும் விரை வில் அடிக்கப்போகும் புயலுக்கு முன் அறிவிப்பாகவே தோன்றியது!

சுந்தரியும், வேலைக்காரர், வேலைக்காரிகளும் விறு விறுப்புடன் வீட்டுப்பணிகளை ஆற்றிக் கொண்டி ருந்தனர். சுந்தரி பூச்சரங்களைக் கூடத்தில் தொங்க விட்டுக் கொண்டிருந்தாள்; வெற்றிலைத் தட்டு, பன்னீர்ச் செம்பு, சந்தனக் கிண்ணம் இவைகள் ஒரு அழகிய தந்த வேலைப்பாடுள்ள மேசைமீது வைக்கப்பட்டிருந்தன.

இரத்தினக் கம்பளத்தை எடுத்து ஊஞ்சல்மீது விரித்துப் போடு என்று வேலைக்காரிக்குச் சுந்தரி ஆணையிடும் போது, உள்ளே நுழைந்து வடிவு ''என்னக்கா! வீடே அமர்க்களப்படுகிறது?'' என்றாள்.

சுந்தரி, நாணத்தால் முகம் சிவக்க வேறு பக்கம் திரும்பிக் கொண்டு, ''வா! வடிவு, வா! வந்துட்டியா!'' என்று அன்புடன் அழைத்தாள்!

அதற்குள் வேலைக்காரிகள் வடிவாம்பாளைச் சூழ்ந்து கொண்டு ''நான் முந்தி-நீ முந்தி'' என்று செய்தியைச் சொல்லி அன்றிரவு வாளுக்கு வேலி அங்கு வரப்போகிற விஷயத்தையும் கூறினார்கள்.

அவர்கள் பேசிக் கொண்டிருக்கும்போதே இரண்டு மூன்று பெட்டி வண்டிகள் வந்து சுந்தரி வீட்டு வாசலில் நின்றன. அவைகளில் இருந்து வாளுக்குவேலி அனுப்பிய சீர்வரிசைகள் சுந்தரி வீட்டுக்கு எடுத்து வரப்பட்டன. அந்தப் பாத்திரங்கள் சுந்தரி வீட்டுக் கூடத்தில் அடுக்கப்பட்ட காட்சி, மேலும் அந்த வீட்டுக்குக் கலையழகை அள்ளிக் கொட்டியது.

''வடிவு! இங்கே வாம்மா! ஏன் அங்கேயே நிக்கிறே?'' என்று சுந்தரி அவளருகே வந்து அவளைக் கட்டித் தழுவிக் கொண்டாள்!

எரிச்சலைக் கேலியாக மாற்றிக் கொண்டு ''அக்கா! அக்கா! நான் அவரல்ல! உன் தங்கச்சி! என்னை விட்டு விடு'' என்றாள்!

சுந்தரி, தங்கையின் கன்னத்தில் செல்லமாகக் கிள்ளி, ''குறும்புக்கு ஒண்ணும் குறைச்சல் இல்ல; அதிருக்கட்டும்! கல்யாணி நாச்சியாருக்கு நடனப் பயிற்சி தொடங்கிட்டியா?'' எனக் கேட்டரள்.

''உம்! பெரிய ஆள் அக்கா நீ! என்னை நடனப் பயிற்சிக்கு அனுப்பி வச்சிட்டு....வடிவு! நீ போயி அவர் தங்கச்சிக்குக் கலையைக் கற்றுக் கொடு! நான் அவர் மேலே வலையை வீசறேன்னு வீசிட்டியே; நல்ல திமிங்கில மீனே வலையிலே விழுந்துட்டுதே!''

''வடிவா! என்ன பேசறே? உன் அக்காளைப் பற்றி நீ போட்டிருக்கிற கணக்கு இவ்வளவுதானா?''

''சே! சே! விளையாட்டுக்குச் சொன்னேனக்கா!''

''அதானே பார்த்தேன்? வடிவு! உனக்குச் செய்தி தெரியுமா? பாகனேரி அம்பலக்காரர் பெரிய ஞானஸ்தர்! இசை மேதை! அவருடைய சங்கீதத்தின் முன் நான் சரணடைந்து விட்டேன்!''

''உம்! கால் சதங்கையின் முன் அவரது வாள் எம்மாத்திரம் என்று பேசிய இதே வாய், இன்றைக்குச் சரணம் பாடுகிறதா? சபாஷ்!''

''ஏய்! விஷமம்! என்னை ரொம்பக் கிண்டல் பண்ணாதே! நான் உன்னோட அக்கா! தெரியுதா? சரி! சரி! இந்தா, இந்தப் பாலையும் பழத்தட்டையும் கொண்டு போய் மாடி அறையிலே வச்சிட்டு வா!''

பால் சொம்பையும், பழத்தட்டையும், வெள்ளிக் கிண்ணங்களையும் கையில் வாங்கிக் கொண்ட வடிவாம்பாள் அகத்தில் அக்கினி நாக்குகள் ஆயிரம் ஆயிரம் தனது அக்காளைச் சபித்திட-முகத்திலே மட்டும் மோகனம் காட்டியவாறு, படிகளில் ஏறி மாடி அறையை அடைந்தாள்!

மாடியில் அக்காளின் படுக்கை அறை மல்லிகை தூவிய மலர் மஞ்சமாகத் திகழ்ந்தது! ஊதுவத்தி மணம் கமழ்ந்தது! கட்டிலின் இருபுறமும் திடீரென இரண்டு நிலைக்கண்ணாடிகள் முளைத்திருந்தன! பால், பழத்தட்டுடன் அங்கே நுழைந்த வடிவாம்பாள் அசைவற்று நின்றாள். அவளது மனக்கண் முன்னால்-அந்த மெத்தையில் வாளுக்கு வேலி சயனித்திருப்பது போல் தெரிந்தது! அவனது அகன்ற மார்பில் தலை வைத்தவாறு அவளே படுத்திருப்பது போலத் தோன்றியது! பாலும் பழத்தட்டும் அவளையறியாமல் அவள் கைகளில் இருந்து நழுவின! கீழே விழுந்து பால் சொம்பு உருண்டது! பழங்களும் சிதறின!





# 19

தன்னுடைய தடுமாற்றத்தை உணர்ந்து கொண்ட வடிவாம்பாள் தன்னைத்தானே நொந்து கொண்டாள். தரையில் உருண்டு கொண்டிருந்த பால் சொம்பிலிருந்து கொட்டிவிட்ட பாலைப் போலவே தனது ஆசைகள் நிராசைகளாகிவிட்டதாக எண்ணியபடி ஓடிடும் பாலை யும் சிதறிய பழங்களையும் வெறிக்கப் பார்த்துக் கொண்டே நின்றாள்.

அவள் மனம் அவளை வசை பாடிற்று! ''உன் அக்காள் வீட்டுப் பள்ளியறையில் உன் கனவுக் காதலனுடன் நீ கட்டிப்புரள்வதற்கு என்னடி உரிமை யிருக்கிறது? நீ ஏமாந்துபோய் அவனைச் சுந்தரியிடம் ஒப்படைத்ததற்குச் சுந்தரியா பொறுப்பு?''

இப்படிக் கேட்ட மனம், உடனே தன்னை மாற்றிக் கொண்டு, அதற்கு ஆத்திரம் தோய்ந்த பதிலையும் தந்தது! ''என்னதான் அக்காளாக இருந்தாலும் வயது வந்த பெண்ணாயிற்றே வடிவாம்பாள் என்று கருதாமல், அவள் கையிலே பள்ளியறைக்குத் தேவையான பண்டங்களைக் கொடுத்தனுப்பியது மட்டும் முறையா? பாரடி பார்; நான் ஜெயித்து விட்டேன் என்று சுந்தரி விடுக்கும் அறைகூவல் அல்லவா இது?''

இந்த மனப் போராட்டத்துடன் மஞ்சத்திற்கருகே வஞ்சி நின்று கொண்டிருந்தபோது அங்கே பரபரப்புடன் ஓடிவந்த லலிதாங்கி சிந்திய பாலையும் சிதறிய தட்டையும் கண்டு அதிர்ச்சியடைந்தாள். வடிவாம்பாளின் நிலைமைதான் அவளுக்குப் புரியுமே!

பழங்களை யெடுத்துத் தட்டிலே வைத்துவிட்டுத் தரையில் கொட்டிய பாலைத் துணி கொண்டு துடைத்துக் கொண்டே "அம்மா வடிவு! தலையெழுத்தை மாத்த யாராலும் முடியாது! உன்னோட அழகுக்குப் பாகனேரி அம்பலக்காரர் மாதிரி பத்தாயிரம் பேர் உன் வீட்டுப் படிக்கட்டிலே தவம் கிடப்பாங்க! நீ கண்ணை அசைச்சா போதும்; களஞ்சியத்திலே இருக்கிற நெல்லு முழுவதையும் உன்காலடியிலே கொட்ட எத்தனையோ பாளையக் காரங்க பல்லை இளிச்சிட்டு நிக்கிறாங்க!" என்று அளக்க ஆரம்பித்தாள் லலிதாங்கி.

வடிவாம்பாளுக்குத் தனது உள்ளக் குமுறலை யாரிடமாவது கொட்டித் தீர்த்தால் கொஞ்சம் நிம்மதியேற்படும் போலிருந்தது. அதற்கேற்றவள் லலிதாங்கிதான்.

"நீங்க என்னதான் சொல்லுங்க! என் மனதிலே என்னையுமறியாத ஒரு பொறாமை என் அக்கா மேலே ஏற்பட்டு விட்டது! அக்காதானே, அவள் சந்தோஷமா இருக்கிறதிலே தங்கச்சி திருப்தியடைய வேண்டாமா? அப்படின்னு கேக்காதிங்க! சுவையான ஆப்பம்-அதுவும் சூடான ஆப்பம்-அதைச் சுந்தராம்பாள் தான் சாப்பிடட்டுமேன்னு வடிவாம்பாள் சும்மா இருக்கலாம்! ஆனா அக்காள் என்னிடமிருந்து பறித்துக் கொண்டது ஆப்பமுமல்ல; அதிரசமுமல்ல! என் வாழ்க்கையையே பறிச்சுகிட்டிருக்கும்போது அதை எப்படி என்னால பொறுத்துகிட்டு இருக்க முடியும்?"

''அட! வாழ்க்கையாவது ஒண்ணாவது வடிவு! அது நம்பளா பாத்து வகுத்துக்கிறதுதானே! வாளுக்குவேலித் தேவரே பிறக்காம இருந்திருந்து வடிவாம்பாள் மாத்திரம் பிறந்திருந்தா என்ன செய்றது? வாளுக்குவேலி இல்லேன்னா யாராவது ஒரு வயலுக்கு வேலி வந்துட்டுப் போறான்!''

''எத்தனை வேலி வந்தாலும் சரிதான்! அவர்கள் எல்லாம் என் மஞ்சத்தை ஆக்ரமிக்க அனுமதிப்பேன்! ஆனால் என் நெஞ்சத்தை ஆக்ரமிக்க வாளுக்குவேலிதான் எனக்குத் தேவை! கடலெனக் கனகமணிகளைக் குவிப்போர்க்கு என் உடலை அளிப்பேன்; ஆனால் என் உள்ளத்து வேட்கையைத் தீர்க்க வாளுக்குவேலிக்காகக் காத்துக் கொண்டேயிருப்பேன்!''

''அப்படின்னா ஒண்ணு செய்யட்டுமா? இப்பவே உங்க அக்காகிட்டே சொல்லி அவரை உன்கிட்ட ஒப்படைக்கும்படி பண்ணட்டுமா?''

''காதல் பிச்சையா? அதற்கு நீங்க சிபாரிசா? லலிதாங்கியம்மா! என் ஆசையைக் கொன்று போட்டு விட்ட அக்காளை என் சரசங்களால் சாகசங்களால் வென்று காட்டுகிறேனா இல்லையா என்று பாருங்கள்!''

''சரசம்! சாகசம்! யாருகிட்டே? உங்க அக்கா கிட்டேயா? பொம்பளைக்குப் பொம்பளை அது என்னம்மா சரசம்?''

''வேதனையில் வெந்து கொண்டிருக்கிறேன்! விளையாடதீங்க! பாகனேரி அம்பலக்காரரை என் வீட்டுப் படுக்கையறையில் தவம் செய்யும் முனிவராக ஆக்கா விட்டால் என் பெயர் வடிவாம்பாள் அல்ல!''

லலிதாங்கி திகைத்து நின்றாள்! அதற்கு மேல் வடிவிடம் பேசிப் பயனில்லை என்பதைப் புரிந்து

கொண்டாள்! ''சரிம்மா வடிவு! உனக்கு ஜெயமுண்டா கட்டும்!'' என்று வாழ்த்தினாள்.

அப்போது நாதமுனியின் குரல் கீழிருந்து ஒலித்தது: ''லலிதாங்கி! வா வா! அய்யர் வந்தாச்சு!''

வடிவு, கொதிப்பை அடக்கிக் கொண்டு நின்றாள், லலிதாங்கி, மாடிப்படிகளில் இறங்கிக் கீழே ஓடினாள். வடிவாம்பாளும் உயிரற்ற உடலொன்று நடந்திடும் விதம் எவ்வாறிருக்குமென்று அந்தப் படிகளில் மெல்ல நடந்து காட்டினாள்.

வீட்டின் வரவேற்புக் கூடத்தில் அழகிய ரோஜா மாலையொன்றுடன் நின்று கொண்டிருந்த சுந்தராம்பாள், உள்ளே நுழைந்த வாளுக்கு வேலியின் கழுத்தில் அதனை அணிவித்து அவன் காலைத் தொட்டுக் கும்பிட்டு நின்றாள். நாதமுனியும், லலிதாங்கியும் தெரிவித்த வணக்கத்திற்குப் பதில் வணக்கம் கூறிக் கொண்டே அங்கிருந்த ஊஞ்சலில் வாளுக்கு வேலி அமர்ந்தான்.

இமை கொட்டாமல் அவனையே நோக்கிக் கொண்டிருந்த சுந்தரி, திடீரென நினைவு வந்தவளாய் ''வடிவூ! வடிவூ!'' என்று அழைத்தாள்; அறிமுகப்படுத்து வதற்காக!

''வடிவு, அதோட வீட்டுக்குப் போயிட்டுது!'' என்று லலிதாங்கி பதில் அளித்தாள்!

''இருவரும் ஒரே வீட்டில் இல்லையா!'' என்று வாளுக்குவேலி கேட்டான்!

''ஆடுறதுதான் ஒரே மேடை! வாழுறது ரெண்டு வீட்லே!'' என்றான் நாதமுனி, ஒரு அசட்டுத்தனமான சிரிப்புடன்! அதற்குள் லலிதாங்கி வெற்றிலைத் தட்டைக் கொண்டு வந்து ஊஞ்சலில் வைத்தாள்!

''கல்யாணி நாச்சியாருக்கு நடனக் கலை ஆர்வம் எப்படியிருக்கிறதாம்? வடிவாம்பாள் எதுவும் சொல்லவில்லையா?''

இந்தக் கேள்விக்கு லலிதாங்கியும் நாதமுனியும் போட்டி போட்டுக் கொண்டு பதில் சொன்னார்கள்.

''எடுத்த எடுப்பிலேயே அபாரமா ஆடுறாங்க!''

''அஸ்திவாரம் பலமா இருக்கிறதாலே சொல்லிக் கொடுக்கிறதை உடனே புடிச்சிக்கிறாங்க!''

விமர்சனங்களைக் கேட்டு வாளுக்குவேலி நிறைந்த மகிழ்ச்சியுடன், வெற்றிலைத் தட்டிலிருந்து பாக்கை எடுத்து மென்றுகொண்டே வெற்றிலையில் சுண்ணாம்பு தடவிட முனைந்தான். அதற்குள் சுந்தரி அருகே வந்து அவன் கையில் இருந்த வெற்றிலையை வாங்கி அவளே சுண்ணாம்பு தடவி மடித்துக் கொடுத்தாள்.

அவள் மடித்துக் கொடுக்கும் எழிலும், அவன் அதை வாங்கிச் சுவைக்கும் எழிலும்-நாதமுனியையும் லலிதாங்கியையும் கடைக்கண்களால் பேசிக் கொள்ளச் செய்தது. இருவரும் அங்கிருந்து மெல்ல நகர்ந்தனர்.

அவர்கள் நழுவிச் செல்வதைச் சுந்தரி கவனிக்காதது போல வாளுக்குவேலிக்கு வெற்றிலை மடித்துக் கொடுத்தபடியே இருந்தாள். எத்தனை வெற்றிலைகள் மடித்துக் கொடுத்தாள் என்று அவளுக்கும் நினைவில்லை. அவனுக்கும் நினைவில்லை. ஆனால் எவ்வளவு சுண்ணாம்பை அளவின்றித் தடவி விட்டாள் என்பது அவன் வாய் நிறைந்து வெந்துபோனதும் தான் தெரிந்தது! வாய் வெந்து போனதைக் காட்டிக் கொள்ளாமலே சமாளித்தான்.

தனது தவற்றைப் புரிந்து கொண்ட சுந்தரி, உடனே விரைந்தோடிச் சென்று தாம்பூலப் படிகத்தை எடுத்து வந்து

நீட்டினாள். வாளுக்கு வேலி வீரனல்லவா? வாய் வெந்து போனதற்காகச் சங்கடப்படுகிற சாயல்கூடத் தெரியலாமா? தாம்பூலப் படிகத்தைக் கீழே வைக்கச் சொல்லி அவளுக்கு ஜாடை காட்டினான். அவளோ அதற்கு இணங்காமல் கையிலேயே வைத்துக் கொண்டு அவன் வாயருகே அந்தப் படிகத்தை நீட்டிக் கொண்டிருந்தாள். வேறு வழியின்றி அதிலே தாம்பூலத்தை உமிழ்ந்தான். நாக்கு, உதடு, ஈறு எல்லாமே வெந்துபோய் எரிந்து கொண்டிருந்தது.

''மன்னிச்சிடுங்க! சுண்ணாம்பு அதிகம் தடவிட்டேன்ல?'' மாம்பழச்சாறு நிகர் மொழியேந்திக் கேட்டாள்!

''தாளம், லயம் எல்லாம் நாட்டியத்துக்கு அளவா இருக்கிற மாதிரி-தாம்பூலத்துக்கும் பாக்கு, சுண்ணாம்பு, வெற்றிலை எல்லாம் அளவா இருக்கணும் இல்லை?''

''இதுவரை இப்படி மடித்துக் கொடுத்துப் பழக்கமில்லை!''

''இனிமேல் நான் படித்துக் கொடுக்கிறேன்!''

''கொஞ்சம் பால் சாப்பிட்டால் வாய்க்கு இதமாக இருக்கும்.''

''பால்? அதாவது-முப்பாலில் எப்பால்?''

''மூன்றுமில்லை! பசுவின் பால்!''

''இருந்தால் கொடு!''

''இருக்கிற இடத்திற்குப் போகலாம்!''

''பசுமாடு இருக்கிற இடத்திற்கா? அதாவது தொழுவத்திற்கா?''

''இசை மன்னர் மட்டுமல்ல; நகைச்சுவை மன்னருங்கூட நீங்கள்!''

''பரவாயில்லை! பரதக் கலையோடு பட்டங்கள் சூட்டும் கலையிலும் தேர்ச்சி பெற்றிருக்கிறாய்!''

''பொருத்தமானவர்களுக்குத்தானே அதுகூடப் பொருந்தும்! சரி வாருங்கள்!... மாடிக்குப் போகலாம்!''

அழைப்பில் வழிந்தோடிய அன்பு அமுதத்தை அவன் செவிகள் பருகின! ஆனால் அவனுக்கென்னவோ ஒரு கூச்சம்! எத்தனையோ வாட்போர்களில் வாகை சூடி நெஞ்சை நிமிர்த்தி நடந்திருக்கிறான். காடுகளில் வேட்டைக்கென நுழைந்து கடும்புலிகள் சிறுத்தைகளைத் தன் காலடியில் வீழ்த்தியிருக்கிறான். ஆனால் இப்போது சுந்தரியைத் தலைநிமிர்ந்து நோக்காமலே எத்தனையோ திசைகளில் தலையைத் திருப்பிப் பேசிக் கொண்டிருக் கிறான். மிருக ஜாதியில் புலி, மானை வெல்லுகிறது! மனித ஜாதியில் மான், புலியை வெல்லுகிறது என்ற உண்மை, அவனைப் பொறுத்த வரையில் எவ்வளவு தெளிவாக நிரூபிக்கப்பட்டு விட்டது!

சுந்தராம்பாள், மெல்லத் தெருக் கதவின் பக்கம் சென்று முன் கதவுகளைத் தாழிட்டாள்! அடுக்களைப் பக்கம் திரும்பி ''சாப்பாடு தயாரா?'' என்று கேட்டாள்!

லலிதாங்கிதான் ஓடிவந்து ஒரு திரை மறைவில் தலையை மட்டும் நீட்டிக்கொண்டு ''எல்லாம் தயார்! சாப்பாடு, பால், பழம் எல்லாம் மாடியிலே காத்துக் கொண்டிருக்கம்மா!'' என்றாள். மீண்டும் சுந்தரி அவனைப் பார்த்து ''உம்! வாருங்கள்!'' என்றாள்.

அவன் ஊஞ்சலில் இருந்து எழாமல் உட்கார்ந் திருந்தான். சுந்தரி, தனது கைகளை நீட்டி அவன் கைகளைப் பற்றி ''வாருங்கள்'' என்றாள்.

இனி என்ன செய்வது? மான், புலியை வென்றது! இருவரும் படிகளைக் கடந்து மாடியறைக்குச் சென்றார்கள்! அவர்களுக்காக உணவு காத்திருந்தது! உணவுக்காகப் பல காலம் பட்டினி கிடக்கும் பஞ்சணையும் காத்திருந்தது! மல்லிகையின் மணத்திற்கே ஒரு தனி மகத்துவம் உண்டு. அதுவும் அந்த மஞ்சம் முழுவதும் மல்லிகையென்றால் கேட்கவா வேண்டும்! தங்க நிற விளக்கொளியில் அவள் தங்க மேனி மேலும் மெருகேற அவனுக்கு வெள்ளித் தட்டில் உணவு பரிமாறத் தொடங்கினாள்.

''நீயும் உட்கார்ந்தால்தான்!'' என்று வாளுக்குவேலி அவள் தோளைப் பிடித்து உட்கார வைத்தான். இத்தனை நாள் குலுங்கிக் குலுங்கி நடனமாடிய அவளது மெல்லிய தோள்கள், அவன் கைப்பட்டு, இதுவரை காணாத இன்ப உணர்வை ஏந்திழையின் உடலெங்கும் பரப்பி விட்டன! அருகருகே அமர்ந்து கொண்டு இருவரும் உணவருந்தினர்.

''இன்று, முதல் நாள்! அதனால் அசைவமில்லை!'' என்றாள்.

''மான்கறி, முயல்கறி இல்லாவிட்டால் என்ன? இந்த மாம்பழங்களின் ருசிக்கு அவை ஈடாகுமா!'' என்று கேட்டுக் கொண்டே, அவள் முகத்தை நோக்கினான்! முகத்தை மட்டுமா நோக்கினான்? புரிந்து கொண்டதற்கான புன்னகை, அவள் செம்மாதுளைக் கன்னங்களில் நாணத்தின் இரேகைகளாக மின்னி மறைந்தன! இனமறியாத ஒரு கதகதப்பு சுந்தரியின் தேகத்தில் ஊடுருவியது.

ஒரு வழியாகச் சாப்பாடு முடிந்தது! அவனது கையை வெள்ளித் தட்டிலேயே காட்டச் சொல்லி அவளே கழுவி விட்டாள்! ஈரக்கையை அவளே ஒரு துண்டெடுத்துத் துடைத்தும் விட்டாள்! சில நொடிகளில் இருவரும் உணவருந்திய இடம் தூய்மைப் படுத்தப்பட்டது.

வாளுக்கு வேலி எழுந்து, கட்டிலுக்கருகே கிடந்த ஒரு நாற்காலியில் உட்கார்ந்தான். சுந்தரியும் அவனுக்கெதிரே கீழே தரையில் உட்கார்ந்து பழச்சுளைகளை உரித்து ஒவ்வொன்றாகத் தந்து கொண்டிருந்தாள்.

சில சுளைகளை அவன் கையில் கொடுத்தபிறகு, அவனது வாயில்தான் கொடுப்பேன் என்று சிணுங்கினாள்! இறுதியாக அவனும் இணங்கினான். இரண்டொரு சுளைகளைக் கொடுத்துவிட்டு-ஒரு சுளையை அவன் உதட்டருகே கொண்டு சென்று, அவன் வாயைத் திறந்தபோது தன் வாயில் போட்டுக்கொண்டு, ''களுக்'' என்று சிரித்தாள்.

அவள் கையிலிருந்த பழச்சுளையை அவன் வாங்கி, அவளது வாயில் கொடுத்தான். அவள் அவன் விரல்களை மெதுவாகக் கடித்தாள்.

விரலை இழுத்துக் கொண்ட வாளுக்குவேலி, அவளைப் பார்த்து ''ஆமாம்! இவ்வளவு பிரியம் வைத்திருக்கிற நீ, அன்றைக்கு என்னை அப்படி வெறுத்துப் பேசினாயே-ஏன்?'' என்றான். அவன் கை விரல்கள் அவளது கூந்தலைக் கோதிக் கொண்டிருந்தன!

''கருங்கல் பாறைக்களுக்கிடையிலேதானே குளிர்ந்த அருவி பாய்கிறது! அதுபோலத்தான் நமது கடுமையான வாக்குவாதத்திற்கிடையே இந்த அன்பு அருவி உருவாகியிருக்கிறது!''

சுந்தரியின் பதிலைக் கேட்டு, அவன் மெய்ம்மறந்து உட்கார்ந்திருந்தான். அவளும் அவனது தொடையில் தலையைப் புதைத்துக் கொண்டு இன்பத்தில் மிதந்து கொண்டிருந்தாள்.

பஞ்சணையோ பசியால் துடித்தது! அதன் பசிப்பிணி போக்கி முதல் தடவையாக அதன் வாழ்த்தைப்

பெறப்போகிறோம் என்ற ஆவலுடன், சுந்தரி மெல்ல எழுந்து அறையில் பிரகாசமாக எரிந்து கொண்டிருந்த விளக்குகளை அணைத்தாள். ஒரே ஒரு சிறிய விளக்கு மட்டும் மங்கலாக ஒளிவிட்டுக் கொண்டிருந்தது.

''தூக்கம் வரவில்லை? ரொம்ப களைப்பாக இருப்பீர்களே! படுக்கலாமே!'' என்றாள், தழுதழுத்த குரலில்! அதற்குள் இரண்டு முறை உமிழ் நீரை விழுங்கிக் கொண்டாள்!

''இல்லை சுந்தரி! நான் பாகனேரிக்குப் புறப்படுகிறேன்!'' என்றான் அவன்.

அவளோ, நரம்பு தெறித்து விட்ட யாழ் ஆனாள்! ''ஏன்? ஏன்?'' என்று கேட்டுக்கொண்டே அவனைத் தழுவியவாறு, கட்டிலுக்கு அழைத்தாள்! அவள் கண்கள் கலங்கியிருந்தன!

''சுந்தரி! நான் உன்னை விரும்புகிறேன்! நீயேதான் என் வாழ்க்கைக்குத் துணை! ஆனால்...ஆனால்...''

''என்ன ஆனால்?...''

''நான் மேற்கொண்டுள்ள விரதமொன்று நமது விரகதாபத்தைத் தணித்துக் கொள்ள முடியாமல் தடுத்து நிற்கிறது!''

''விரதமா?''

''ஆம்! என் தங்கை கல்யாணியின் திருமணம் முடியும் வரையில்...''





# 20

இரண்டு தூய உள்ளங்களை இணைப்பதுதான் காதல்! உடல்களை இணைப்பது ஒருவகையான வெறி! காதலை, முதுமையிலும் சுவைக்க முடியும். காமவெறியின் ஆயுளோ, உடலின் வலியோடு முடிந்துவிடும்-இந்த உண்மையை வாளுக்குவேலியும் சுந்தராம்பாளும் உணர்ந்திருந்த காரணத்தால் அவனது விரதத்தைக் கேட்டு அவள் பதறிப் போய்விடவில்லை. அவனுக்காக எவ்வளவு காலம் வேண்டுமானாலும் காத்திருப்பதற்கு அவள் தயாராகவே இருந்தாள்.

''கல்யாணி நாச்சியாரின் திருமணம், நடக்க முடியாத ஒன்றல்லவே! அதனால் நான் காத்திருக்க வேண்டிய காலத்தின் இடைவெளி மிகக் குறுகியதாகத்தான் இருக்கும்'' என்ற நம்பிக்கையுடன் அவள் அவனது முகத்தையே ஆவலோடு பார்த்துக் கொண்டிருந்தாள்.

''சுந்தரி! என்னைத் தவறாகப் புரிந்துகொண்டு விடாதே! நான் எத்தனை பிரச்சினைகளுக்கு ஈடு கொடுத்துக் கொண்டிருக்கிறேன் என்பது உனக்கு முழுமையாகத் தெரியாது! அதற்கிடையே எனது தங்கை நாச்சியாரின் திருமணத்தை முடித்து வைத்து விட்டால் என் இதயத்தில் ஏற்றி வைக்கப்பட்டுள்ள மிகப் பெரிய பொறுப்பை நிறைவேற்றியவனாவேன்.''

''சிப்பியின் முத்து நான்! உங்கள் சிரசை அலங்கரிக்கும் மகுடத்தில் ஒரு இடம் கிடைத்துவிட்டதே எனக்குப் போதும்!''

''என்னதான் நீ சொன்னாலும், உன் இதய மாளிகையில் எங்கேயோ ஒரு மூலையில் ஏமாற்றத்தின் சோகப் பின்னணி ஒலிப்பதை என் காதுகளால் கேட்க முடிகிறது சுந்தரி!''

''ஒரு லட்டு உருண்டையை ஒரு குழந்தையின் கையில் கொடுத்துவிட்டு, அதைத் தின்னப்போகும் போது இன்றைக்கு வேண்டாம் கண்ணு; இன்னொரு நாளைக்குச் சாப்பிடலாம் என்று திரும்ப வாங்கிக் கொண்டால்-என்ன தான் பொறுமையான குழந்தையாக இருந்தாலும் அதன் முகத்தில் மாற்றம் ஏற்படத்தானே செய்யும்!''

''சுந்தரி! ஒரு கலைமாதின் வீட்டுக்கு ஒரு அம்பலக்காரர் வருகிறோம் என்ற உணர்வோடு நான் வர வில்லை; சம்பிரதாயப்படி சீர்வரிசைகள் அனுப்பி வைத்தேன்! அவ்வளவுதான்! என் தங்கையின் மீது எனக்கிருக்கும் அன்பு, இன்றுமுதல் உனக்கும் ஏற்பட வேண்டும்! அதனால் கல்யாணியின் கழுத்தில் தாலி ஏறும்வரையில் நமக்குள் உடலுறவு இல்லையென்று என்னைப் போலவே நீயும் விரதம் பூண்டிட வேண்டும்!''

''நீங்களே என் உடலில், உள்ளத்தில், உயிரில், அனைத்திலும் உறவு கொண்டுவிட்ட பிறகு, நீங்கள் சொல்லும் அந்த உறவுக்கு நமது சிந்தனையில் முதல் இடம் கிடையாதே!''

சுந்தரியின் முகத்தைத் தனது நெஞ்சத்தில் மென்மையாக அழுத்திக் கொண்டான். அவளது மலரிதழினும் சிறந்த கைவிரல்கள் அவனது முதுகில் ஊர்ந்து கொண்டிருந்தன! சிறிதுநேரம் அந்த மணம் கமழும் அறையில் அசைவற்று நின்றார்கள்.

''சுந்தரி!''

''என்னங்க?''

''எங்கே, இப்படித் திரும்பு!''

திரும்பினாள்! வாளுக்குவேலி தனது மடியிலிருந்து புலி நகப் பதக்கம் கோத்த ஒரு தங்கச் சங்கிலியை எடுத்தான்! அதை அவள் கழுத்தருகே கொண்டு போய், அணிவிக்காமல் நிறுத்திக் கொண்டு, ''என்ன சம்மதம் தானே?'' என்று கேட்டான்.

அவள் அவன் கால்களைக் கட்டிப் பிடித்துக் கொண்டாள், கண்களிலிருந்து நீர்த்துளிகள் பெருகி, அவன் பாதங்களைக் குளிப்பாட்டின! பிறகு, மெதுவாக எழுந்தாள்.

அவன் கையில் பிடித்திருந்த புலித்தாலிச் சங்கிலிக்கு முன்னே தலைகுனிந்தாள். அதை அவன் அவளுக்கு அணிவித்து அவளது நெற்றியிலே முத்தமிட்டான். சுந்தரி, தனது விரலில் இருந்த வைர மோதிரத்தைக் கழற்றி அவன் விரலில் அணிவிக்க முனைந்தாள்.

நல்லவேளையாக அவன் சுண்டுவிரலுக்கு அந்தக் கணையாழி பொருத்தமாக இருந்தது. இருவரும் மீண்டும் தழுவிக் கொண்டனர்! சுந்தரி கழுத்திலிருந்த தாலிக்கு அவன் முத்தமிட்டான்! வாளுக்குவேலியின் சுண்டு விரலில் பிரகாசித்த கணையாழிக்கு அவள் முத்தமிட்டாள்!

''புறப்படட்டுமா சுந்தரி?'' என அவன் கேட்டதும், அவளை முந்திக்கொண்டு அந்தக் கட்டில் ஒரு ஆழ்ந்த பெருமூச்சு விட்டது! அந்தக் கனல் மூச்சில் மல்லிகைப் பூக்கள் வாடத் தொடங்கின! இருவரும் படிகளில் இறங்கிக் கீழே வந்தனர்!

''இரவு மதகுப்பட்டியில் ஒரு முக்கியமான வேலை இருக்கிறது! அதை முடித்துக்கொண்டு காலையில் பாகனேரியில் இருக்க வேண்டும்.'' வாளுக்கு வேலி தனது கடமையை அவளிடம் குறிப்பாக உணர்த்தி விட்டு-விடை பெற்றுக் கொண்டான்.

தெரு வாயில்புறம் வரையில் வந்து நின்று அவனை வழியனுப்பி வைத்தாள் சுந்தராம்பாள்! கதவைத் தாளிட்டுவிட்டு, கூடத்தில் இருந்த ஊஞ்சலிலேயே முழங்கையைத் தலையணையாக வைத்துக் கொண்டு படுத்துவிட்டாள்!

முதலில் அவளுக்கு ஏற்பட்ட சலனம் போல ஊஞ்சல் சிறிது நேரம் ஆடி அதன் பிறகு அவளுக்கு அமைதி மலர்ந்துவிட்டது என்பதற்கு அடையாளமாக நின்ற விட்டது! மாடியில் மஞ்சம்-மல்லிகைக் குவியல் - ஊதுவத்தியின் ஒய்யாரம்-எல்லாமே ஆணவமடங்கிக் கேட்பாரற்றுப் போயின!

வேதனையில் புரளும் ஆரணங்குகள்-விரகதாபத்தில் நெளியும் ஆடவர்கள் - இரண்டுக்குமிடமின்றி இன்ப லோகத்தில் விளையாடி மகிழும் காதல் ஜோடிகள் - அனைவரையும் மூடியிருந்த திரையை விலக்கி, ஆதவன் கீழ்வானத்தில் செம்பருத்திப் பூவாக முளைத்தான்! உதயக் கதிரை வாழ்த்தியவாறு வாளுக்கு வேலி, மதகுப்பட்டி யில் இருந்து பாகனேரி நோக்கி வந்து கொண்டிருந்தான்!

அண்ணன் வருகைக்காகப் பாகனேரியில் தம்பி ஆதப்பன் காத்துக் கொண்டிருந்தான். மேகநாதனிடம் கொடுத்தனுப்பிய கடிதத்தில் எழுதியிருந்த விபரங்களுக் கேற்ப, தனது பணிகளை முடித்துக் கொண்டு வைகறைப் பொழுதிலேயே பாகனேரிக்கு வந்து சேர்ந்திருந்தான்.

அவன் முடித்துவிட்டு வந்த வேலைகளை வேறு யாரிடமும் சொல்லாமல் மூடி வைத்திருந்தான் என்றாலும் மாளிகையில் இருந்த காடை, கௌதாரி, மற்றும் பணியாளர்கள், காவலர்கள் அனைவரும் வடிவாம்பாள் வந்து கல்யாணி நாச்சியாருக்கு நடனம் கற்றுத்தரத் தொடங்கிவிட்ட செய்தியையும், வாளுக்கு வேலி திருக்கோட்டியூர் சுந்தராம்பாள் வீட்டுக்குச் சீர்வரிசைகள் அனுப்பிவிட்டு அவனும் அன்றிரவு அங்குச் சென்றுவிட்ட செய்தியையும் அவரவர்கள் கற்பனைக் கேற்றவாறு அவனிடம் வர்ணித்து முடித்து விட்டனர்.

அந்தச் செய்திகள் அவனுக்குப் பிடிக்காதவை என்றாலும் தனது உணர்வுகளை அண்ணனுக்கு முன்னால் வெளிப்படையாகக் காட்டிக்கொள்ள விரும்பவில்லை.

ஊர், முழுமையாக விழித்துக் கொள்ளாத அதிகாலை நேரம். கல்யாணி நாச்சியார் கூட நாட்டியப் பயிற்சியின் களைப்பில் இன்னமும் உறங்கிக்கொண்டு தானிருந்தாள். பாகனேரி மாளிகை வாசலில் வந்து இறங்கிய வாளுக்குவேலி, தனக்கேயுரிய அரிமா நடை யுடன் மாளிகைக்குள் நுழைந்தான்.

ஏதோ ஒரு புதுமை-அதிசயம் நடந்திருக்கிறது என்ற இனிய நினைவுகளோடு காவலர்களும், பணியாளர் களும், காடை கௌதாரியும் அவனை வைத்த விழி வாங்காமல் கூர்ந்து கவனித்துக் கொண்டிருந்தார்கள். ஒருவரையொருவர் பார்த்துப் புன்முறுவல் பூத்தார்கள்.

''என்ன! காடை! கௌதாரி!'' என்ற அம்பலக் காரரின் கம்பீரமான குரல் கேட்ட இருவரும் ''அய்யா!'' என்று கும்பிட்டவாறு அருகே ஓடினார்கள்.

''கல்யாணி நாச்சியார் நலமா?'' கம்பீரத் தொனி யிலும் பாசத்தின் பிணைப்பு ஊற்றெடுத்தது.

''நல்லா இருக்காங்க! தூங்குறாங்க!'' காடையும் கௌதாரியும் மரியாதையுடன் பதில் சொல்லிவிட்டு ஓரத்தில் ஒதுங்கிக் கொண்டார்கள்.

''ஆதப்பா! வந்து விட்டாயா? ஒன்றும் ஆபத்தில்லையே?'' என்று கேட்டுக்கொண்டே வந்த அண்ணனைக் கண்டு ஆதப்பன் மாளிகைக் கூடத்தில் எழுந்து நின்றான்.

''வா! அறைக்குப் போய்த் தனியாகப் பேசலாம்!'' என்று தம்பியின் தோளை அணைத்தவாறு அழைத்துக் கொண்டு அறைக்குள் சென்றான்.

''உறங்காப்புலி கூட இன உணர்ச்சியும் நாட்டுப் பற்றும் கொண்டு, உடனே உன்னிடத்தில் அந்த இரகசிய மடலைக் கொடுத்துவிட்டிருக்கிறானே!''

''ஆம்! அண்ணா!'' என்று ஆதப்பன் சொன்னானே தவிர, உறங்காப்புலியின் உண்மை உருவத்தைத் தோலுரித்துக் காட்ட அவன் விரும்பவில்லை. காரணம்; வீரம்மாளிடம் அளித்த வாக்கை நிறைவேற்ற வேண்டு மென்பதிலே அவன் உறுதியாக இருந்தான்.

''வல்லத்தரையன், வைரமுத்தன் இவர்களிருவரையும் வளைக்க முடியவில்லையென்று தெரிந்ததும் கர்னல்கள் அக்னியூவும் வெல்ஷுவும் எப்படியோ இந்த உறங்காப்புலியைத் தமது பைக்குள் போட்டுக் கொண் விட்டார்களே! நல்ல வேளை. அந்த உறங்காப்புலி, பாகனேரிக்கு மாப்பிள்ளையாக வேண்டியவன்- இப்போது பட்டமங்கலத்தார் பெயரைக் கெடுக்கப் போய்ச் சேர்ந்திருக்கிறான்! அதிருக்கட்டும், ஆதப்பா! கர்னல் அக்னியூ, வெல்ஷ் துரைக்கு எழுதிய கடிதத்தை என்ன செய்தாய்? யாரிடம் சேர்த்தாய்? அது ஏதாவது பயன்பட்டதா?''

''அண்ணா! வைகைக் கரையோரமாகத்தான் வெள்ளைப் படை வருகிறது என்று முன்கூட்டி மருதுப் படைகளுக்குத் தெரிந்துவிட்ட காரணத்தால் அவர்களை மடக்குவது மிகச் சுலபமாகிவிட்டது! விருப்பாட்சி ஜல்லிப்பட்டிப் பாளையக்காரர் கோபால நாயக்கரின் தளபதியைச் சந்தித்து கர்னல் அக்னியூவின் கடிதத்திலுள்ள ஆங்கிலேயர்கள் வகுத்திருந்த யுத்த ரகசியங்களைச் சொன்னேன். அவர் உடனே அந்தத் தகவலை எல்லாப் பாசறைகளுக்கும் அனுப்பி விட்டார்!''

''வைகைக் கரையோரம் காட்டு மார்க்கமாகத் திட்டமிட்டபடி வந்த வெள்ளையர் படையை மானா மதுரையிலிருந்து பார்த்திபனூர் வரையில் நம்மவர்கள் சின்னாபின்னப்படுத்திச் சிதற அடித்து விட்டார்கள்! பத்துக்கு மேற்பட்ட ஆங்கிலேய ராணுவ அதிகாரிகள் கொல்லப்பட்டு விட்டார்கள்! அது மட்டுமல்ல; நமது மண்ணைக் காட்டிக் கொடுக்க அவர்களோடு சேர்ந்து கொண்டு நம்மவரை எதிர்த்து ஆயுதம் தாங்கிப் போரிடும் துரோகிகளில் சுமார் நூறுபேர் பிணங்களாக்கப்பட்டார்கள்! ஆங்கிலேயர்களில் இருவரையும், துரோகிகளில் ஐவரையும் கொன்ற பெருமை உங்கள் தம்பிக்கு உண்டு!''

''சபாஷ்! ஆதப்பா! சபாஷ்! நாம் நமது நிலைக்கு இப்படி மறைந்திருந்துதான் மருதுப் படைக்கும், நாயக்கர் படைக்கும் உதவிகளைச் செய்ய வேண்டும். நாம் வெளிப்படையாக இந்தக் காரியத்தில் இறங்கினால் வெள்ளையர்களின் பயங்கர எதிர்ப்புக்கு ஆளாக நேரிடும்.''

''இதைத்தான் கோபால நாயக்கரின் தளபதி கூடச் சொன்னார் என்னிடம்! பாகனேரியும் பட்ட மங்கலமும் மற்றுமுள்ள கள்ளர் நாடுகளும் இப்போது செய்து வருகிற மறைமுக உதவிகளைச் செய்து வந்தாலே போதுமென்றார்!

பார்த்திபனூரில் வெள்ளையர்கள் பட்டபாடு! அடடா! அந்த வெல்ஷ் துரையே வெலவெலத்துப் போய், தனது படைகளோடு பின்வாங்கி விட்டான் அண்ணா!''

''பின் வாங்குவது ஆங்கிலேயர்களுக்குக் கைவந்த கலை! அதையே போர்த் தந்திரம் என்பார்கள்! பார்த்திபனூரில் இருந்து இப்போது அவர்கள் எங்கே போயிருக்கிறார்கள்!''

''அவர்களது அடுத்த திட்டம் தெரியவில்லை! பரமக்குடியை நோக்கிப் பரங்கியர் படை ஒன்று போகிறதாம்! கர்னல் அக்னியூ, ராமனாதபுரம் வட பகுதிக்குச் சென்று அங்கே நமது வீரர்களின் தாக்குதலைத் தாங்க மாட்டாமல் மிகவும் தத்தளித்துப் போய்-மதுரைக்குச் சென்றுவிடத் தீர்மானித்திருக்கிறானாம்!''

''அக்னியூ! அவன் சாதாரண ஆள் அல்ல ஆதப்பா! மகா விஷமக்காரன்! சூழ்ச்சிச் சுரங்கம்! அவனது சூது வலைகளை அறுத்தெறிவது என்பது எளிதான செய லல்ல! என் செய்வது! நம்மவர்களே பலர் அவனுக்கும் அவனது ஆதிக்கத்திற்கும் நாமாவளி பாடிக் கொண்டிருக் கிறார்களே!''

''பார்த்திபனூரில் மருது பாண்டியரின் வீரர்கள் பெற்ற வெற்றி தொடருமேயானால் பரங்கியரை ஒழித்துக் கட்டுவது நிச்சயம் அண்ணா, நிச்சயம்!''

''இறுதி வெற்றி நமக்குக் கிடைக்குமென்ற நம்பிக்கை எனக்கு இன்னும் ஏற்படவில்லை! அதற்காக விடுதலைப் போரில் ஈடுபட்டுள்ள மருது பாண்டியர் போன்ற தளபதிகளுக்கும், கோபால நாயக்கர் போன்ற பாளையத்து மன்னர்களுக்கும், நாம் கொடுத்து வரும் ஆதரவை நிறுத்திவிடப் போறதில்லை! ஆதப்பா! ஒரு சந்தேகம் எனக்கு!''

''என்ன அண்ணா?''

''உறங்காப்புலி உன்னிடம் நல்லவனைப் போல அந்தக் கடிதத்தைக் கொடுத்துவிட்டு, ஆங்கிலேயக் கர்னல்களிடம் போய் நம்மைப் பற்றி ஏதாவது கலகம் செய்து விடுவானேயானால்... நமது இரகசிய ஏற்பாடுகள் அனைத்தும் நாசமாகி விடுமே!''

''அவன் அப்படிச் செய்ய மாட்டான் என்று நம்புகிறேன்! ஒருவேளை அதுவும் நடந்தால் என்ன செய்ய முடியும்?...''

''நடக்காது! நடக்க வேண்டாம்! நல்லதையே நினைப்போம்!''

அண்ணனும் தம்பியும் உரையாடிக் கொண்டிருக்கும் போதே அறைக்கு வெளியிலிருந்து தங்கையின் குரல் கேட்டது.

''இரகசியம் முடிந்ததா? நான் வரலாமா?''

''யாரது? கல்யாணியா? வாம்மா! வாம்மா!'' வாஞ்சையுடன் அழைத்தான் வாளுக்குவேலி!

கல்யாணி நாச்சியார், கையில் ஆரத்தித் தட்டுடன், உள்ளே நுழைந்தாள்!

''எதுக்கம்மா ஆரத்தி? ஆதப்பன் போன காரியம் வெற்றியாக முடிந்ததற்காகவா? அது உனக்கு எப்படியம்மா தெரியும்?'' பாசம் இழைந்தோடக் கேட்ட வாளுக்கு வேலியைச் சிரித்த முகத்துடன் கல்யாணி பார்த்தாள்!

''சின்ன அண்ணா போனது வெற்றியோ தோல்வியோ? எனக்குத் தெரியாது! பெரியண்ணா வெற்றியோட திருக்கோட்டியூரில் இருந்து திரும்பியதற்காக இந்த ஆரத்தி! சரி! இரண்டு பேருமே நில்லுங்கள்! இருவருக்கும் சேர்த்தே ஆரத்தி எடுக்கிறேன்.''

''வேண்டாம் கல்யாணி!'' என்று வாளுக்குவேலி தடுத்திட, எதுவும் பேச முடியாமல் தடுமாறிய நிலையில் கறுத்த ஆதப்பன் அங்கேயே நின்று கொண்டிருந்தான்... இருவருக்கும் செல்லமான தங்கை என்பதால் கல்யாணி நாச்சியார் அவர்களுக்கு ஆரத்தி சுற்றினாள் அகமும் முகமும் அன்றலர்ந்த செந்தாமரையாக!

அப்போது அங்கு வந்த மேகநாதனைப் பார்த்து வாளுக்குவேலி, ''ஏதாவது புதிய செய்திகள் உண்டா?'' என்று கேட்டான்.

வெள்ளையர் படையின் வீழ்ச்சி தொடருகிறதா என்பதே அந்தக் கேள்வியில் கலந்திருந்த ஆவலாகும்.

''பார்த்திபனூரில் வெள்ளையருக்கு ஏற்பட்ட படுதோல்விக்குக் காரணம், மருது பாண்டியருக்கும் கோபால நாயக்கருக்கும் நமது கள்ளர் நாடுகள் பலவும்-அதிலும் குறிப்பாக நமது வாட்கோட்டை நாடும்-அதிலும் சிறப்பாக நமது ஆதப்பன் நடத்திய வீரச் செயல்களும்தான் என்று ஆங்கிலேயக் கர்னல்கள் முடிவுக்கு வந்திருக்கிறார்களாம்-என்னதான் நமது உதவிகள், விடுதலைப் படையினர்க்கு மறைமுகமாகச் செய்யப்பட்டாலும் அதனை வெள்ளை நாய்கள் சரியானபடி மோப்பம் பிடித்து விடுகின்றன.''

மேகநாதனின் விளக்கங் கேட்டு வாளுக்குவேலி எந்தவிதப் பரபரப்பும் அடையாமல் ''அதனால் இப்போது என்ன செய்ய வேண்டுமென்கிறாய்?'' என்று வினவினான்.

''நமது கள்ளர் நாட்டு அம்பலக்காரர்களின் அவசரக் கூட்டமொன்றைக் கோபால நாயக்கர், கோட்டியூருக்கு அருகேயுள்ள மாவலிக் கண்மாய் பகுதியில் இன்றைக்குக் கூட்டியிருக்கிறார். அதற்குத் தாங்களும் ஆதப்பனும்

நானும் தவறாது வந்து கலந்து கொள்ள வேண்டுமென்று செய்தி வந்திருக்கிறது.''

''அப்படியா? அவசியம் கலந்து கொள்வோம். ஆனால் அங்கு நாம் செல்வது யாருக்கும் தெரியாமல் இருக்க வேண்டும். கல்யாணி! நீ கூட யார் காதிலும் போட்டு விடாதே! ஆதப்பா! அதற்கான ஆயத்தங்களைச் செய்திடுக. இதோ நானும் ஒரு நொடியில் தயாராகி விடுகிறேன்!''

அவர்கள் பேசிக்கொண்டிருக்கும் போதே வாயிற் புறத்தில் வண்டியொன்று வந்து நின்றது. அதிலிருந்து வடிவாம்பாளும், லலிதாங்கியும், நாதமுனியும் வந்து இறங்கினார்கள். வாயிற்புறம் நடந்தவாறு பேசிக் கொண்டே வந்து கொண்டிருந்த வாளுக்குவேலி, ஆதப்பன், மேகநாதன், கல்யாணி ஆகிய நால்வரையும், வடிவாம்பாள் குழுவினர் வணங்கி மரியாதை செலுத்தினர்.

வடிவாம்பாள் தனது விழிகளைத் தூண்டில் முள்களாக்கி வாளுக்குவேலியின் மீது வீசினாள். அதைக் கவனித்தும் கவனிக்காதது போல் இருந்து விட்ட வாளுக்குவேலி, தனது தங்கையை நோக்கி ''என்னம்மா! நடன ஆசிரியை வந்துவிட்டாற் போலிருக்கிறதே! உம், நடக்கட்டும்! நாங்கள் போய் விட்டு விரைவில் திரும்புகிறோம்'' என்றான் புன்னகையுடன்!

மேலாடையைச் சற்றே சரியவிட்டு-அவன் கண்டதும் காந்தமெனக் கண்களை இழுத்துக்கொள்ள வேண்டுமென்ற தந்திரத்துடன் - வடிவாம்பாள் வாளுக்கு வேலியிடம் கேட்டாள்: ''ஏன்? நீங்கள் இருந்து நடனப் பயிற்சி நன்றாக இருக்கிறதா எனப் பார்க்கலாமே'' என்று.

''சுந்தரியின் தங்கைக்கு நான் வேறா நற்சான்று வழங்க வேண்டும்? நடக்கட்டும் பயிற்சி! இன்னொரு

நாள் நான் பார்க்கிறேன்! நாங்கள் மிக முக்கியமான ஒரு காரியத்திற்காகப் புறப்பட்டுக் கொண்டிருக்கிறோம்.''

அந்தப் பதில் வடிவுக்குத் திருப்தி அளிக்காதது மட்டுமல்ல; சுந்தரியைக் குறிப்பிட்டு அவள் தங்கை என்பதால்தான் தனக்குச் சிறப்பு என்பது போல வாளுக்கு வேலி கூறியதை அவளால் பொறுத்துக் கொள்ள முடியவில்லை. வாளுக்குவேலியை எப்படியும் வளைத்துப் போட வேண்டுமென்று அவள் கொண்ட வஞ்சினத்தை வெளிக்காட்டிக் கொள்ளாமல் கல்யாணி நாச்சியாருடன் சிரித்துப் பேசிக் கொண்டே மாளிகைக்குள் நுழைந்தாள் தனது குழுவினருடன்.

வாசலில் நிறுத்தப்பட்டிருந்த கோட்டியூர் வண்டியில் தொங்கிய திரையில் ''சுந்தரி'' என்று எழுதப்பட்டிருந்ததையே சிறிது நேரம் வாளுக்குவேலி பார்த்துக் கொண்டு நின்றான். அந்த வண்டியில் வந்திறங்கிய வடிவாம்பாளைப் பற்றி அவனுக்கென்ன கவலை!

திரையில் இருந்த 'சுந்தரி' என்ற எழுத்துக்கள் அல்லவா அவனை அப்படியே மயங்கி நிற்க வைத்து விட்டன!

''நகரலாமா?'' மேகநாதனின் குரல் கேட்டு அசட்டுச் சிரிப்புடன் வாளுக்குவேலி வாயிற்புறம் விட்டகன்றான். அதற்குள் ஆதப்பன் ஆணையின்படி ஏற்பாடு செய்யப்பட்ட சாரட் வண்டி வந்து நின்றது. அதில் வாளுக்கு வேலியும் மேகநாதனும் ஏறிக் கொள்ள ஆதப்பன் சாரட்டைக் கிளப்பினான்.

உள்ளே, கல்யாணி நாச்சியார் நடனப் பயிற்சிக்குத் தயாராகி, வடிவாம்பாளின் முன்னே வந்து நின்றாள். லலிதாங்கி பாடத் தொடங்கினாள். நாதமுனி தாளத்தைத் தட்டினான். கல்யாணி ஆடினாள். வடிவு இடையிடையே திருத்தங்களைக் கூறிக் கொண்டிருந்தாள்.

அப்போது சமையற்காரன் காடையும், சமையற்காரி கௌதாரியும் ஓடோடி வந்து கூச்சல் போட்டனர்! எல்லோரும் திடுக்கிட்டனர்.

''அம்மா! அம்மா! பட்டமங்கலத்து ஜல்லிக்கட்டுக் காளையை அவிழ்த்து விட்டுவிட்டார்களாம். அது பாதையிலே பல பேரைக் குத்திக் கிழித்து எறிந்து விட்டு-நம்ப பாகனேரி சாலையிலே ஓடி வருதாம்-பாகனேரியிலே நுழைந்தா அவ்வளவுதான்!''

இதைக்கேட்டு நடுநடுங்கிய நாதமுனி, லலிதாங்கியைக் கட்டிப் பிடித்துக் கொண்டு ''அய்யோ! யாராவது ஆம்பளையைக் கூப்பிடுங்களேன்'' என்று கத்தினான்.

''அட கடவுளே! அம்பலக்கார அய்யாவும் இல்லை! சின்னய்யாவும் இல்லை! யாருமே இல்லையே! இது என்னா அக்கிரமம்? இது எங்க போயி முடியுமோ?''

காடையும் கௌதாரியும் கதறினர்.

''பொறுமையாக இருங்கள்! இதோ நானே போகிறேன்! காடை! என் பெட்டி வண்டியை உடனே பூட்டச் சொல்! கௌதாரி! நீ என்னோடு வா!''

கல்யாணியின் அஞ்சாமை கண்டு வடிவும் மற்றவர்களும் வியர்த்து நின்றனர். கல்யாணி அங்கிருந்த ஒரு கட்டாரியை எடுத்துக் கொண்டாள். தனது நாட்டிய ஆடைகளைக் களைந்துவிட்டு வேறு ஆடை உடுத்திக் கொண்டு, கட்டாரியையும் இடுப்பில் செருகிக் கொண்டு வாசலில் தயாராகிக் கொண்டிருக்கும் பெட்டி வண்டியை நோக்கி வேகமாக நடந்தாள்.





# 21

கர்னல் அக்னியூ, வெல்ஷ் துரைக்கு அனுப்பிய கடிதம் என்ன ஆனது என்பதை உறங்காப்புலி அக்னியூவுக்குத் தெரிவிக்காமல் இருப்பானா? அந்தக் கடிதம் பறிக்கப்பட்ட காரணத்தால்தான் வெள்ளைப்படைக்குப் பலத்த சேதம் ஏற்பட்டது என்பதை எண்ணி அக்னியூ வெகுண்டான்!

இருந்தாலும் ஆத்திரத்தில் அறிவிழந்துவிடக் கூடாது என்பதிலே எச்சரிக்கையாக இருந்தான். தோல்வியால் தொங்கிப்போன முகத்துடன் தன் எதிரில் நின்ற உறங்காப்புலிக்கு, மதுரையில் தங்கியிருந்த அக்னியூ வகுத்துக் கொடுத்த திட்டம் இதுதான்:

''நீ கடிதம் கொண்டுபோன செய்தியோ அல்லது அதனை வழியில் கறுத்த ஆதப்பன் அபகரித்துக் கொண்ட நிகழ்ச்சியோ வல்லத்தரையனுக்குக்கூடத் தெரியக் கூடாது! ஆதப்பன், வேண்டுமென்றே திட்டமிட்டு, உன்னை ஆட்களை வைத்துத் தாக்கினான் என்றும், அதற்குப் பாகனேரிக்காரனைப் பழிக்குப்பழி வாங்கியே தீரவேண்டும் என்றும், நீ உனது மைத்துனன் வல்லத்தரையனிடம் உசுப்பிவிட வேண்டும்! அப்படியொரு பயங்கர எதிர்ப்பைச் சமாளிக்க வேண்டிய கட்டாயம் பாகனேரி அம்பலக்காரனுக்கு ஏற்பட்டால்தான் ''கோபால நாயக்கர் மருது பாண்டியர் கூட்டணி''யில் அவன் சேராமல் இருப்பான்.''

அக்னியூவின் திட்டத்தைக் கேட்டு உறங்காப்புலி புளகாங்கிதமுற்றான். ஆங்கிலேயர் மூளையே மூளையென்று புகழ்ந்துரைத்தான். அந்த அரிய பணியை அட்டியின்றிச் செய்து முடிப்பதற்காக ஐந்நூறு சவரன் கொண்ட பண முடிப்பு ஒன்றையும் உறங்காப்புலியின் கையில் எலும்புத் துண்டைப்போல வீசியெறிந்தான், அக்னியூ துரைமகன்! வீழ்ந்து வணங்கி விடைபெற்றுக் கொண்டான் உறங்காப்புலி! துரோகிகள் எவ்வளவு எளிதாகக் கிடைக்கிறார்கள்-விலை சற்று அதிகமானாலும் பரவாயில்லை; சாம்ராஜ்யத்தை விரிவாக்கவும் வலுப்படுத்தவும் இப்படிப்பட்ட சதிகாரர்கள் நமது வலையில் விழும்பொழுது நமக்கென்ன குறை என்ற தெம்புடன், தனது போர்த் திட்டங்களை முறைப்படுத்தும் பணியிலே ஈடுபட முனைந்தான் அக்னியூ!

அவன் வகுத்தளித்த திட்டத்திற்கு மேலும் மெருகு கொடுத்து வல்லத்தரையனை ஊழித்தீப் போல ஆக்கினான் உறங்காப்புலி! தன் கணவன் ஆங்கிலேயர்க்குத் துணை போன துரோகச் செயலைத் தனது அண்ணனிடமோ, தம்பியிடமோ - வேறு யாரிடமோ வெளியிடமாட்டாள் வீரம்மாள் என்ற தைரியம் வேறு உறங்காப்புலிக்கு!

அதனால் சுரண்டைக் காட்டுப் பகுதியில் கறுத்த ஆதப்பனும் அவனது ஆட்களும் சேர்ந்து தன்னைத் தாக்கியது மாத்திரமல்லாமல் பட்டமங்கலத்து அம்பலக்காரர்கள் குடும்பத்தை மிக இழிவாக அர்ச்சித்தனர் என்றும் கதை கட்டினான்.

வீரம்மாளும் அந்தக் கதையைக் கேட்டுக் கொண்டிருந்தாள் என்றாலும் உண்மையில் நடந்த நிகழ்ச்சிகளை அண்ணனிடம் எடுத்துரைத்துக் கணவனுக்குக் களங்கம் உண்டாக்கத் துணியவில்லை. வைரமுத்தனும் அந்தக் கலக விதை ஊன்றப்படும்பொழுது அங்கில்லை.

அதனால் எரியும் நெருப்பில் எண்ணெய் வார்க்கும் வேலையை உறங்காப்புலியினால் எளிதாகச் செய்ய முடிந்தது.

அதன் தொடர்பாக அவிழ்த்து ஏவி விடப்பட்டது தான் பட்டமங்கலத்து ஜல்லிக்கட்டுக் காளை! அந்தக் காளையைக் கடவுளுக்கும் மேலாக மதித்து வல்லத் தரையன் வளர்த்து வந்தான்! அந்தக் காளையை யாராலும் வெல்லவும் முடியாது - அடக்கவும் முடியாது-அப்படிப் பழக்கப்படுத்தப்பட்ட வலிமை கொழிக்கும் காளையது!

'என் மைத்துனனைத் தாக்கினான். என்னையும் பட்டமங்கலத்தையும் ஏசிப் பேசினான். எவ்வளவு ஆணவம் அவனுக்கு! முதலில் அந்த மூடர்கள் என் காளைக்குப் பதில் சொல்லட்டும்!' என அறைகூவல் விடுத்து, பட்டமங்கலத்து வல்லத்தரையன், பாகனேரியை நோக்கிச் செல்லக் காளைக்குக் கட்டளை பிறப்பித்தான்.

வேறெங்கோ சென்றிருந்த வைரமுத்தன் தாமதமாக வந்தான் என்றாலும் காளை ஏவி விடப்பட்டுள்ள செய்தி கேட்டுத் தன் குதிரையில் ஏறிப் பறந்தான். வழியிலே பல வாலிபர்களையும் வயோதிகர்களையும்-காளை, தனது முரட்டுக் கொம்புகளால் புரட்டித் தள்ளிக் குடல்கள் சரியக் குத்திவிட்டு ஓடிக் கொண்டிருக்கிறது என்ற தகவல் அவனுக்கு வந்துகொண்டேயிருந்தது.

மாவலிக்கண்மாய் அருகே கோபால நாயக்கரும் மருது பாண்டியரைச் சேர்ந்த கூட்டணியினரும் பட்டமங்கலத்துக்கு விடுத்துள்ள அழைப்பைப்பற்றிக் கூடக் கவலைப்படாமல் தனது அண்ணன் பாகனேரி மீது ஜல்லிக்கட்டுக் காளையை ஏவிவிட்டு விட்டாரேயென்ற துன்பத்துடன் அவன் தனது குதிரையைத் துரத்திக் கொண்டே வந்தான்.

:

காளையின் வெறி பிடித்த வேகம்-குதிரையின் பாய்ச்சல்-எப்படியும் பாகனேரி எல்லைக்குள் காளை நுழைவதற்குள் அதைத் தடுத்து நிறுத்த வேண்டுமென்ற வைரமுத்தனின் துடிப்பு-இதற்கிடையே கல்யாணி நாச்சியாரை ஏற்றி வந்த பெட்டிவண்டி, பாகனேரி எல்லையில் உள்ள குறுகிய சாலையில் வந்து குறுக்கே நிறுத்தப்பட்டு விட்டது.

கண்களில் பொறி பறக்கக் கல்யாணி நாச்சியார் வண்டியிலிருந்து இறங்கி, அங்கிருந்த ஒரு கற்பாறையின் மீது ஏறிக் கொண்டாள். வண்டிக்காரனும், கெளதாரியும் நடுங்கியவாறு கற்பாறைக்குப் பின்னால் மறைந்து நின்று கொண்டனர்.

சாலையின் குறுக்கே வண்டி நிறுத்தப்பட்டு விட்டதால், கல்யாணி நிற்கும் பாறையைக் கடந்துதான் அந்த முரட்டுக் காளை பாகனேரி எல்லைக்குள் நுழைந்திட வேண்டும். நாச்சியார், தனது கையில் கட்டாரியை ஓங்கியவாறு, காளையைக் குத்துவதற்குத் தயாராக நின்றாள். வண்டிக்காரன் உடலும், கெளதாரியின் உடலும் 'வெடவெட' என ஆடிக் கொண்டிருந்தன.

சற்றுத் தொலைவில் புழுதி மண்டலம் கிளம்பிற்று. பாய்ந்து வரும் அந்தக் கொடிய காளை எழுப்பிய புழுதி தான் அது! பாகனேரி எல்லையை மிதிக்கப் போகிற நேரத்தில் குறுக்கே நின்ற வண்டியைப் பார்த்துக் கொஞ்சம் தயங்கியது! ஒரு நொடி நேரம்தான்! காளை, பின்வாங்கி நடந்தது! அப்படி நடந்த அதே நேரத்தில் ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து குறுக்கே நின்ற வண்டியைக் குடை சாய்த்தது. வண்டி மாடுகள் கதறிக் கொண்டு விழுந்தன.

ஜல்லிக்கட்டுக் காளையின் கொம்பு, பெட்டி வண்டியில் வசமாகச் சிக்கிக் கொண்டது. கொம்புகளை விடுவிக்க அது போராடிக் கொண்டிருக்கும் போது இதுதான் சரியான சமயமென்று கல்யாணி நாச்சியார், கட்டாரியை ஓங்கியவாறு, காளையிடம் ஓடினாள்.

அதற்குள் வைரமுத்தனின் குதிரை அங்கே வந்து விட்டது. குதிரையிலிருந்து தாவிய வைரமுத்தன், கல்யாணியைத் தடுத்து நிறுத்தினான். கட்டாரியேந்தி யிருந்த அவளுடைய கையைப் பிடித்து நிறுத்தாவிட்டால் தடுத்திருக்க முடியாது! கல்யாணி, மின்னல் போல் நடைபெற்றுவிட்ட அந்தச் சம்பவத்தால் சிலை போல ஆகி விட்டாள்.

வைரமுத்தன், வண்டியில் சிக்கியிருந்த காளையின் கொம்புகளை விடுவித்து-அதனை அதட்டி-தட்டிக் கொடுத்து-தான் கொண்டு வந்திருந்த சங்கிலியால் பிணைத்து அங்கிருந்த ஒரு பெரிய மரத்தில் காளையைக் கட்டிப் போட்டான்.

பிறகு அசைவற்று நின்று கொண்டிருந்த கல்யாணி யின் அருகே நெருங்கி வந்தான். அவளும் அவன்மீது தைத்துவிட்ட தனது விழிகளை மீட்க முடியாது தவித்துக் கொண்டிருந்தாள். பாறை மறைவில் ஒளிந்து கொண் டிருந்த வண்டிக்காரனும் கௌதாரியும் ஒருவரைப் பார்த்து ஒருவர் மிரள மிரள விழித்துக் கொண்டிருந்தனர்.

அவர்களைப் போலவே மிரள விழித்துக் கொண் டிருந்த வண்டி மாடுகளைத் தூக்கிவிடும் முயற்சியில் வைரமுத்தன் ஈடுபட்டான். மாடுகள் எழுந்து சிலிர்த்து நின்றன. அவற்றின் முதுகிலும் தட்டிக் கொடுத்த வைர முத்தன், அவளைத் தனது ஓரக் கண்ணால் விழுங்கிக் கொண்டே, ''பக்கத்து ஊரில் இருந்து மிரண்டு வரும் காளையை அடக்கி ஊர் மக்களைப் பாதுகாக்க உங்கள் நாட்டில் ஆட்களே இல்லையோ? அம்பலக்காரர் அவர் களிடம் வீரர்களே- இல்லையோ?'' என்று கேலியாகக் கேட்டான்.

''ஊராள மாத்திரம் அம்பலக்காரர் குடும்பம்- இப்படி வரும், உபத்திரவங்களைப் போக்குவதற்கு

மற்றவங்களா? அப்படின்னு யாரும் கேட்க மாட்டாங் களா? அதனாலதான் எங்க நாச்சியாரே புறப்பட்டுட் டாங்க!'' கௌதாரி இப்படிப் பதில் சொல்லிக் கொண்டே பாறை மறைவிலிருந்து வந்தாள்.

''ஓகோ! அப்படியா? உங்கள் நாச்சியாருக்குப் பேச வராதோ? அதற்காகவே உன்னை அழைத்து வந்தார் களோ?'' மீண்டும் கேலி செய்தான் வைரமுத்தன்.

அவனது நகைச்சுவையாற்றலை வியந்து நாணத்தில் தலைகுனிந்து கொண்டாள் கல்யாணி! வண்டிக்காரன் வண்டியைப் பாகனேரிப் பக்கம் திருப்பி நிறுத்தினான்.

''வண்டி பழுதாகியிருக்கும். எதற்கும் என் குதிரை யில் ஏறிக்கொண்டால் நானே கொண்டு போய்விட்டு விடுகிறேன்.''

அவளிடமிருந்து பதிலை எதிர்பார்த்தான்-ஆனால் அவள் மௌனமாகவே நின்றாள்.

''எவ்வளவு துணிச்சல் இருந்தால் எங்கள் காளை யின் மீது கட்டாரியைப் பாய்ச்சிட எண்ணியிருப்பாய்?''

இதற்கு அவளால் பதில் சொல்லாமல் இருக்க முடியவில்லை.

''அதே கேள்வியை நான் திருப்பிக் கேட்டால்? எவ்வளவு தைரியமிருந்தால் காளையைப் பாகனேரி மீது ஏவியிருப்பீர்கள்?''

- நேரடியாகப் பதில் சொல்ல விரும்பாத வைரமுத்தன் கண்ணைச் சிமிட்டிக்கொண்டே,

''காளை-வர வேண்டிய இடத்துக்குத்தானே வந்திருக்கிறது'' என்றான்.

கல்யாணியின் கன்னங்கள் குப்பென்று சிவந்து விட்டன! இதயத் துடிப்புகளை மட்டுமே மறைக்க முடிந்த

அவளால் கன்னங்கள் சிவந்ததையும், பெருமூச்சால் கனதனங்களிரண்டும் விம்மியசைவதையும், கண்கள் கயல்களாகித் துள்ளுவதையும், புருவமிசையரும்பிய வியர்வையினையும், வைரமுத்தனுக்கு முன்னால் மறைத்திட முடியவில்லை.

ஏதோ விடையளிக்க இதழ் அசைத்தாள். நாத் தழுதழுத்தது. அந்த இதழ்களின் அசைவு, தன்னிடமிருந்து அவள் எதையோ எதிர்பார்ப்பதற்கான குறிப்பு என எண்ணிக் கொண்ட வைரமுத்தன், அவளது கையில் இருந்த கட்டாரியை வாங்கிக் கொண்டான்,

அத்துடன் விட்டானா?

அந்தக் கட்டாரியின் முனைமீது ஒரு முத்தமும் தந்தான். கெளதாரி தலையைக் கவிழ்த்துக் கொண்டே வண்டிக்குள் போய் ஏறிக்கொண்டு-காளை முட்டிய வண்டியின் துவாரத்தின் வழியாக விழிகளைச் செலுத்தி வெளியே நடப்பதைப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

மெல்லத் தலை நிமிர்ந்து கல்யாணி, அவனைப் பார்த்தபோது அவன் கையிலிருந்த கட்டாரியை அவளிடம் நீட்ட, அவள் அதை வாங்கிக்கொண்டு, அவன் முத்தமிட்ட அதே இடத்திலேயே அந்தக் கட்டாரிக்கு முத்தமீந்தாள். இருவர் கண்களும் காதல் ஓவியம் தீட்டின! இருவர் இதழ்களும் கவிதைகளைப் பாடின! எட்டி எட்டித்தான் நின்றனர்! ஆனால் ஒருவருக்கொருவர் எட்டி யாக நிற்கவில்லை! இனித்த நறும் பலாச்சுளையைத் தேனில் தோய்த்துக் கற்கண்டுப் பொடியும் தூவிய தெவிட்டாத அமுத விருந்தாகத்தான் நின்றனர்!

எத்தனை நேரம் நிற்பது! ''என்னை மறக்காதீர்! நான் உங்கள் அன்பின் அடிமை!'' என்று சொல்லாமற் சொல்லிக் கொண்டு, கல்யாணி நாச்சியார் வண்டியிலேறி அமர்ந்தாள்.

வண்டி நகரத் தொடங்கியது. கண்களை விட்டு வண்டி மறையும் வரையில் பார்த்துக்கொண்டு நின்ற வைரமுத்தன், தன் குதிரையிடம் சென்றான். அதற்குள் பட்டமங்கலத்திலிருந்து அவனைத் தொடர்ந்து வந்த இரண்டு குதிரை வீரர்களிடம் ஜல்லிக்கட்டுக் காளையை அவிழ்த்து ஒப்படைத்து - அதைக் கொண்டுபோய்ப் பட்டமங்கலம் சேர்க்குமாறு ஆணையிட்டுவிட்டுத் தன் குதிரையிலேறி-கோட்டியூர் மாவலிக் கண்மாயில் நடைபெறும் கூட்டணிக் கூட்டத்திற்கு விரைந்தோடத் தொடங்கினான்.

கல்யாணி நாச்சியாரின் வண்டி திரும்பி வருவதற்குள், அம்பலக்காரர்களின் வீரர்களும்-பாகனேரி மக்களும் திரண்டு வந்து, ''நாங்களிருக்கும்போது நாச்சியார் எதற்காகப் போக வேண்டும்!'' என்று ஆழ்ந்த கவலையுடன் கேட்கத் தொடங்கினர்!

''கடமையைச் செய்வதற்குப் பொறுப்பிலே உள்ளவர்கள் ஒரு நொடி நேரமும் காலம் தாழ்த்திடக் கூடாது!'' என்று கல்யாணி பதில் அளித்து விட்டு- வைரமுத்தனின் நினைவுடனேயே மாளிகைக்குச் சென்றாள்.

அவளையுமறியாமல் அவள் நெஞ்சம் அந்த ஜல்லிக் கட்டுக் காளையை வாழ்த்திற்று! அது வராவிட்டால் அந்த இனிய சந்திப்பு நிகழ்ந்திருக்காதல்லவா?

திரும்ப இழுத்து வரப்பட்ட காளையைப் பார்த்துத் திடுக்கிட்டான் உறங்காப்புலி! தீட்டப்பட்ட திட்டம் சிதைந்துவிட்டதே என்ற கவலை அவனுக்கு! அம்பலத் துக்காரர் வல்லத்தரையரே உத்தரவிட்டிருக்கும்போது அதைத் த்டுக்க வைரமுத்தனுக்கு ஏது அதிகாரம் என்று ஆர்ப்பரித்தான். வல்லத்தரையனுக்கும் தெரியாமல், மனைவி வீரம்மாளுக்கும் தெரியாமல் ஜல்லிக்கட்டுக் காளையைத் தானே வழி நடத்திக்கொண்டு பாகனேரி

நோக்கிப் புறப்பட்டான்! பகை வளர்க்க வேண்டுமே! பரங்கியனிடம் வாங்கிய பவுன் காசுகளுக்குப் பணிபுரிந்திட வேண்டுமே!

இதற்கிடையே மாவலிக்கண்மாய் சுதந்திர வீரர்கள் கூட்டத்தில் கலந்து கொண்டிருந்த வாளுக்குவேலிக்கும், ஆதப்பனுக்கும் - பட்டமங்கலம் காளையின் அட்டூழியங்களும் -அது பாகனேரிக்குள் விரட்டப்பட்டிருக்கும் செய்தியும் எப்படியோ எட்டி விட்டது!

ஆதப்பன் அங்கிருந்த ஒரு வீரனின் குதிரையைக் கேட்டுப் பெற்றுப் பாகனேரி நோக்கிக் குதிரையைத் தட்டி விட்டான்! ஜல்லிக் கட்டுக் காளையை வைரமுத்தன் திருப்பி அனுப்பியதும்-ஆனால் உறங்காப்புலி அந்தக் காளையுடன் மீண்டும் பாகனேரி நோக்கி வருவதும் கறுத்த ஆதப்பனுக்குத் தெரியாது!

பட்டமங்கலத்துக் காளையின் முரட்டுக் கொம்புகளுக்கு, பாகனேரி மக்கள் எத்தனைப்பேர் பலியாகியிருப்பார்களோ என்ற ஆழ்ந்த கவலையுடன் அக்னிஜுவாலை பறக்கும் கண்களுடன் ஆதப்பன் பாகனேரிக்குள் நுழைந்தான். அவன் நுழைந்தபோது பார்த்த அந்தக் காட்சி அவனை ஒரு குலுக்குக் குலுக்கியது, குதிரையின் கடிவாளத்தை இழுத்து நிறுத்தினான். பாகனேரித் தெருக்களில் மனித நடமாட்டமே இல்லை! சிறுவர்களும், பெரியவர்களும், பெண்டிரும் வீட்டுக் கூரைகளிலும் - மதிற் சுவர்களிலும் - மண்டபங்களிலும் மரக்கிளைகளிலும் ஏறி உட்கார்ந்திருந்தனர். சில வாலிபர்களின் உடல்கள் பட்டமங்கலத்து ஜல்லிக்கட்டுக் காளையால் கிழிக்கப்பட்டு- இரத்தம் பெருகத் தெரு மண்ணில் கிடந்தன!

அவற்றினிடையே உரக்கச் சிரித்தவாறு உறங்காப்புலி அறைகூவல் விடுத்துக் கொண்டிருந்தான்.

கல்யாணி நாச்சியார் இந்தச் செய்தி கேள்வியுற்றுப் பெட்டி வண்டியில் அந்த இடம் நோக்கி வந்து கொண்டிருந்தாள். கல்யாணிதான் வண்டியில் வருகிறாள் என்பதை உணர்ந்த கறுத்த ஆதப்பன், குதிரையிலிருந்து குதித்து அந்த வண்டியைத் தடுத்து நிறுத்தினான்.

அச்சத்தால் தெருவில் நிற்க முடியாமல் உயர்ந்த பகுதிகளில் ஏறிக் கொண்டிருந்த பாகனேரி மக்களைப் பார்த்துச் சவால் விட்டுக்கொண்டிருந்த உறங்காப்புலி எக்காளக்குரலில் கத்தினான்.

''பாகனேரியில் எல்லோரும் பயந்தாங்குளிகள்! எங்கள் பட்டமங்கலத்துக் காளையை அடக்க எவருக் காவது துணிவு உண்டா? கோழைகள்! படுகோழைகள்!''

இதைக்கேட்ட மாத்திரத்தில் கறுத்த ஆதப்பன் உறங்காப்புலியின் முன்னால் போய் நின்றான்!

''இதோ! நான் தயார்!''

ஆதப்பனின் அறைகூவல் கோடையிடியென ஒலித்தது!





# 22

காளைக்கு முன்னால் களத்தில் குதித்துவிட்டான் கறுத்த ஆதப்பன் என்றதும் மண்டபங்களிலும் மரக் கிளைகளிலும் உயிருக்குப் பயந்து ஏறி ஒளிந்து கொண்டிருந்தோர் ஒவ்வொருவராகக் கீழே இறங்கிச் சூழ்ந்து நிற்கத் தொடங்கினர். காளையின் கொம்புகளைப் பிடித்துக் கொண்டு கம்பீரமாகக் கர்ச்சித்துக் கொண்டிருந்த உறங்காப்புலி, எந்த விநாடியிலும் காளையை ஆதப்பன் மீது மோதவிடத் தயாராக இருந்தான்.

சுரண்டைக் காட்டில் அவன் மனைவிக்கு நேராக ஆதப்பனிடம் அவன் பட்ட அடி அவனுக்கல்லவா தெரியும்! அதற்குப் பழிவாங்கிக் கொள்ளவும், பரங்கிக் கர்னலுக்கு எழுதிக் கொடுத்துள்ள துரோக சாசனத்திற் கேற்பப்பாகனேரி பட்டமங்கலத்துப் பகையை வளர்க் கவும் அருமையான சந்தர்ப்பம் கிடைத்ததென்று அந்தச் 'சகுனி' மகிழ்ச்சிப் பெருக்கில் ஆழ்ந்திருந்தான்.

பெட்டி வண்டியில் இருந்தவாறு கல்யாணி நாச்சியார் பதைபதைக்கும் உள்ளத்துடன் நடக்கப் போவதைக் கவனித்துக் கொண்டிருந்தாள். அவனே அந்தக் காளையை எதிர்த்து வீழ்த்திட எண்ணிப் புறப்பட்டபோது ஏற்படாத அச்ச உணர்ச்சி, தனது சகோதரன்-வெறுங்கையுடன் காளையை அடக்கக் கிளம்பியபோது அதிகமாகத் தலை தூக்கியது.

ஏற்கெனவே அந்தக் காளையினால் குத்துண்டு மடிந்து தெருவில் கிடந்த ஒரு வாலிபனின் வழிந்தோடும் இரத்தத்தை எடுத்துத் தன் நெற்றிக்குத் திலகமிட்டுக் கொண்டு காளையை எதிர்க்க ஆதப்பன் தயாராகித் தலையைக் கம்பீரமாக அசைத்தான். உறங்காப்புலியின் கையிலிருந்து விடுபட்ட காளை, தனது கொம்புகளை ஆதப்பனின் குடலை நோக்கி நீட்டியவாறு பாய்ந்தது!

ஆதப்பனோ, அந்தக் காளையை அலைக்கழித்து அதைக் களைத்துப் போகச் செய்ய வேண்டுமென்பதிலேயே குறியாக இருந்தான். போரில் எதிரியை வீழ்த்தும் முறைகளில் அதுவும் ஒன்று.

முதற் கட்டம்-இரண்டாம் கட்டம் வெற்றிகளையெல்லாம் எதிரிக்கே கொடுத்துவிட்டு எதிரி பெற்ற வெற்றியிலே களித்தும்-களைத்தும் இருக்கும்போது மூன்றாம்கட்ட வெற்றியை எதிரியிடமிருந்து தட்டிப் பறித்து அவனைப் புறங்காணச் செய்வது!

அந்த முறையைத்தான் ஆதப்பன், வெறி பிடித்த ஜல்லிக்கட்டுக் காளையிடம் கடைப்பிடித்தான். அவனது இரண்டு கால்களுக்குமிடையே காளையின் கொம்புகள் நுழைந்தபோது-கால்களை மேலும் அகலமாக விரித்துக் கொண்டு அவன் காளையின் கழுத்தில் ஏறி உட்கார்ந்து கொண்டான். ஆனால் காளை தனது கழுத்தை வேகமாக உலுக்கி ஆதப்பனைக் கீழே எறிந்தது!

கீழே கிடந்தவனைத் தனது கூரிய கொம்புகளால் கிழித்தெறியக் காளை முட்டியபோதெல்லாம் அவன் அப்படியும் இப்படியுமாக உருண்டு தப்பித்துக் கொண்டதுமல்லாமல் தரையில் தாக்குண்ட கொம்புகள் வலியெடுத்துப் போகுமளவுக்கும் செய்து விட்டான்.

குனிந்து கொண்டே காளையை நெருங்குவான். காளை அவன்மீது பயங்கரமாகப் பாயும். அப்போது அவன் தரையுடன் படுத்து விடுவான். பாய்ந்த வேகத்தில் காளையின் கால்கள் மடங்கும். பின்னர் எழுந்து அவன் மீது அதிக சினத்துடன் மோதிட முனையும்.

ஒவ்வொரு முறை காளை ஆதப்பன்மீது பாயும் போதும் கல்யாணியின் அங்கமெல்லாம் பதறும்! உறங்காப்புலியோ உற்சாகத்தில் குதிப்பான்! எப்படி முடியும், எப்போது முடியும் என்று தெரியாத அளவுக்கு இந்தப் போராட்டம் நடந்து கொண்டிருந்தபோது- திருக்கோட்டியூர் மாவலிக்கண்மாய் அருகே நடைபெற்ற சுதந்திர வீரர்கள் கூட்டணிக் கூட்டம் முடிவுற்றது.

வாளுக்குவேலி, அங்குத் தாமதமாக வந்து சேர்ந்த வைரமுத்தனிடம் பாகனேரிக்கு மீண்டும் ஜல்லிக்கட்டுக் காளை கொண்டு வரப்பட்ட செய்தியைச் சொல்லவே- வைரமுத்தனும் ஆச்சரியமடைந்தவனாக, பாகனேரிக்குக் குதிரையைத் தட்டிவிட்டான். வாளுக்குவேலியின் சாரட்டு வண்டியும் புறப்பட்டு விட்டது..

பாகனேரிக்கு ஜல்லிக்கட்டுக் காளை அனுப்பப் பட்டதிலிருந்து எல்லா விபரங்களையும் தெரிந்துகொண்ட பட்டமங்கலத்து வல்லத்தரையனும் தனது காளையிடம் கறுத்த ஆதப்பன் தோற்றுப்போய் ஓடுவதைக் காண வேண்டுமென்ற ஆசையுடன் பாகனேரிக்குக் கிளம்பினான்.

இவர்கள் யாரும் வந்து சேருவதற்குள்ளாகப் பாகனேரியில் அந்தப் பயங்கரப் போராட்டம் முடிந்து விட்டது! திறமை மிகுந்த ஆதப்பனின் வலிமையான கரங்களில் பட்டமங்கலத்துக் காளையின் கொம்புகள் வசமாகச் சிக்கிக் கொண்டன. காளை களைப்புற்றுச் சோர்ந்துபோய் நின்று விட்டது!

"காளையா காளை! யாராலும் தோற்கடிக்க முடியாத காளை! கொண்டு போய் இந்தக் காளையை எண்ணெய்ச் செக்கிலே கட்டி இழுக்கச் சொல்லுங்கள்! உம்! உறங்காப்புலி! உனது கொழுப்பை அடக்க ஏற்பட்டுள்ள இந்தத் தோல்விக்கு உனக்கு என்ன தண்டனை தெரியுமா? நீயும் உன் காளை மாட்டுடன் எண்ணெய்ச் செக்கைச் சுற்றிச் சுற்றி வர வேண்டும்!"

கறுத்த ஆதப்பனின் ஆணையை நிறைவேற்றப் பாகனேரி வீரர்கள் விரைந்து வந்தனர். செருமுனையில் நின்ற காளை செக்கு மாடாக்கப்பட்டு ஓட்டப்பட்டது. உறங்காப்புலியின் கைகள் கட்டப்பட்டு அவனும் அவனது காளைக்குப் பின்னால் அந்த எண்ணெய்ச் செக்கைச் சுற்றிச் சுற்றி வந்தான். பாகனேரி மக்கள் கையொலி செய்து கெக்கலி கொட்டினர். ஆதப்பனுக்கு வெற்றி மாலைகளைச் சூட்டி மகிழ்ந்தனர். மலர் மாரி பொழிந்தனர். அப்போது புலி வேகம்-புயல் வேகம் காட்டி பூகம்பம் அதிர்வது போல வல்லத்தரையன் அங்கே நுழைந்தான்.

பட்டமங்கலத்தின் கௌரவமே பட்டொழிந்தது என்ற உணர்ச்சிக் கொந்தளிப்பு அவனை நிலை தடுமாறச் செய்தது. ஆண்டவனுக்குத் தந்த மரியாதையைவிட அதிக மரியாதையுடன் வளர்க்கப்பட்ட அவனது காளை; செக்குச் சுற்றும் மாடா? இது என்ன கொடுமை? தன் தங்கையின் கணவன்-உறங்காப்புலி, தனக்கு எதிரிலேயே ஊரார் சிரிக்க அடிமைபோல நடத்தப்படுவதா?

"யாரடா அவன், வெற்றியிலே வெறியாட்டம் போடும் வீணன்? பட்டமங்கலத்து வெற்றிச் சின்னமடா என் காளை! அதை எப்படியோ சதி செய்து மடக்கிப் பிடித்து விட்டீர்கள் என்றால்-அதற்குரிய பரிசைக் கேள் தருகிறேன்! அதற்குப் பதிலாக என் காளையையும்

அவமானப்படுத்தி என் மைத்துனன் உறங்காப்புலியையும் கேவலப்படுத்தும் இந்த ஈனச் செயலை, மானமுள்ள மறவன் நான் மன்னிக்கவே மாட்டேன்!''

வல்லத்தரையன் வாளை உருவிக் கொண்டு அந்த வேடிக்கை பார்க்கும் கூட்டத்திற்கிடையே சுழன்றான்.

''நமது வழக்கப்படி மஞ்சு விரட்டுக்கு விட வேண்டிய ஜல்லிக்கட்டுக் காளையை வேண்டுமென்றே ஏவி விட்டு அந்தப் பொல்லாத காளை பல உயிர்களைக் குடித்ததுமல்லாமல் பாகனேரிக்கும் அறைகூவலாக வந்து நிற்கிறதென்றால், அதைத் தூண்டி விட்ட துன்மார்க்கர்களுக்குப் பாடம் போதிக்க வேண்டாமா? அதுதான் இது!''

கறுத்த ஆதப்பன் கம்பீரமாகப் பதில் கூறிக் கொண்டே வல்லத்தரைய அம்பலக்காரரின் முன்னால் வந்து நின்றான்.

''நியாயம் பேசுகிறாயோ நியாயம்! அன்று சுரண்டைக் காட்டிலே என் மைத்துனன் உறங்காப் புலியைச் சுற்றி வளைத்துத் தாக்கி அவன் குதிரையையும் கொன்று குவித்தாயே! அதற்குப் பதில்தான் நான் இந்தக் காளையைப் பாகனேரிக்கு அனுப்பியது!''

''சுரண்டைக் காட்டு நிகழ்ச்சியா? அதை நான் சொல்வதும் வெட்கக்கேடு-நீங்கள் தெரிந்து கொள்வதும் மானக்கேடு!''

''இப்போது என் கண் எதிரே நடைபெறுகிற வெட்கக் கேட்டையும் மானக்கேட்டையும் விடவா இனிமேல் ஒன்று நடைபெறப் போகிறது... பட்ட மங்கலத்தைத் தலை குனிய வைத்த பாதகா! இதோ பார் அதற்குப் பழி தீர்க்க உன் தலை முடியை வெட்டி எறிகிறேன்!''

வல்லத்தரையன், ஒரு கையால் வாளை ஓங்கி இன்னொரு கையால் கறுத்த ஆதப்பனின் குடுமியைப் பிடித்துக் கொண்டான்!... கண் இமைக்கும் நேரத்தில் ஆதப்பன், தன்னை வல்லத்தரையனின் பிடியிலிருந்து விடுவித்துக் கொண்டு, தனது உடைவாளை உருவி, வல்லத்தரையனின் குடுமியை வெட்டி வீசி எறிந்தான்...

வீசி எறியப்பட்ட அந்தக் குடுமி அப்போது அங்கு வந்த வைரமுத்தனின் கைகளில் விழுந்தது. ''அண்ணே! என்ன வேலை செய்தாய்?'' என்று கல்யாணி நாச்சியார் அலறியடித்துக் கொண்டு குறுக்கே வந்து, வல்லத் தரையனின் கால்களைப் பிடித்துக்கொண்டு ''மன்னித்து விடுங்கள்!'' என்று மன்றாடினாள்.

மனோவேகத்தையும் மிஞ்சிக் கொண்டு வந்தது போல அங்கு நுழைந்த வாளுக்குவேலியின் கரங்கள் கறுத்த ஆதப்பனின் கன்னங்களில் ''சுளீர்! - சுளீர்!'' என்று சவுக்கடிகள் போல் விழுந்தன.

''முட்டாளே! என்ன காரியமடா செய்தாய்?'' என்று தம்பியைக் கடிந்து கொண்ட அவன், வல்லத்தரையனிடம் சென்று அவனைத் தழுவிக் கொண்டு தழுதழுத்த மொழியில் ''அம்பலக்காரரே! இது பட்டமங்கலத்திற்கு மட்டுமல்ல; பாகனேரிக்கும் ஏற்பட்ட அவமானமாக நான் கருதுகிறேன்'' என்றான்.

வல்லத்தரையன் பதில் பேசவில்லை! மௌனம்! பூமி திடீரெனப் பிளந்தது போன்ற ஒரு ஒலி கிளம்பியது அவன் வாயிலிருந்து! கைவாளைக் கறுத்த ஆதப்பனின் கழுத்துக்குச் சரியாக வீசினான். அந்த வீச்சில் வாழைத் தண்டு வெட்டுண்டு விழுவதுபோல ஆதப்பனின் தலை உருண்டிருக்க வேண்டும்; ஆனால் அதற்குள்- வைர

முத்தன் தனது வாளினால் அண்ணனின் வாளைத் தடுத்து நிறுத்தி, ''அண்ணா! நடந்தது நடந்து விட்டது! உங்கள் கருணை உள்ளத்தின் பெருந்தன்மையோடு ஆதப்பனை மன்னித்து விடுவதுதான் தங்களுக்குப் பெருமை!'' என்றான். வல்லத்தரையன் பிறகு அந்த இடத்தில் நிற்கவில்லை.

வானுக்கு வேலியின் ஆணைப்படி உறங்காப் புலியும் பட்டமங்கலத்துக் காளையும் விடுவிக்கப் படவும், வைரமுத்தன் வல்லத்தரையனைத் தொடர்ந்து அமைதியாக நடந்து செல்லவுமான அந்தப் பயங்கரம் நிறைந்த சூழ்நிலையிலும் வைரமுத்தனின் அணுகு முறையைத் தன் மனத்திற்குள்ளாகப் பாராட்டிக் கொண்டி ருந்தாள் கல்யாணி நாச்சியார்!

மயான அமைதி குடி கொண்ட அந்த இடம் சிறிது நேரத்தில் ஒவ்வொருவரையும் வழியனுப்பிக் கொண்டிருந்தது.

வல்லத்தரையனும், வைரமுத்தனும், உறங்காப் புலியும்-பட்டமங்கலத்துக் காளையுடன் ஊர் வந்து சேர்ந்தார்கள்!

அன்றிரவு பட்டமங்கலத்து மாளிகையில் யாருக் கும் உறக்கம் வரவில்லை; உறங்காப்புலியைத் தவிர! அவனைப் பொறுத்தவரையில் அவனது துரோகத் தொண்டுக்கு முதல் வெற்றி கிடைத்து விட்டது!

கர்னல் அக்னியூ துரையின் திட்டப்படி பாகனேரி யும் பட்டமங்கலமும் பகை நாடுகளாகவே நிலை பெற்றிட இதைவிட ஒரு நல்ல ஆரம்பம் எப்படி இருக்க முடியும்! இனிமேல் ஆங்கிலேயருக்கு எதிரான அணி வகுப்பில் இணைந்து எதிர்ப்புப் படையை வலுப்படுத்தும் காரியத்தை இரண்டு அம்பலக்காரர்களும் கவனிக்கப்

போவதில்லை! ஆனாலுங்கூட உறங்காப்புலிக்கு ஒரு பெரிய சந்தேகம்! விடை காண முடியாமல் தத்தளித்துக் கொண்டிருந்தான். பாகனேரியில் பட்டமங்கலத்துக்கு இவ்வளவு பெரிய இழுக்கு ஏற்பட்டு, அண்ணனின் தலைமுடியே வெட்டப் பட்டிருக்கும்போது வைர முத்தன் மாத்திரம் நிதானம் கடைப்பிடிக்க வேண்டிய காரணம் என்ன?

அதில் ஏதோ ஒரு மர்மம் இருக்க வேண்டும்-அல்லது பாகனேரியின் பலத்தைக் கண்டு பயப்பட வேண்டும்-இவ்வாறு எண்ணிக்கொண்டே அவன் அயர்ந்து தூங்கி விட்டான். அவனருகே அன்று வீரம்மாள் படுக்கவில்லை. கட்டிலுக்குச் சற்றுத் தொலைவில் பாய் ஒன்றில் கையைத் தலையணையாக்கிக் கொண்டு படுத்திருந்த அவள் விழிகளில் இருந்து நீர் வழிந்து கொண்டேயிருந்தது.

வைரமுத்தன், தனது படுக்கையில் புரண்டு புரண்டு சிந்தனையில் ஆழ்வதும், எழுந்து உட்கார்ந்து முழங் காலைக் கட்டிக்கொள்வதுமாயிருந்தான்.

வல்லத்தரையன் அறையில் விளக்கு ஒன்று ''மினுக்-மினுக்'' என எரிந்து கொண்டிருந்தது. அவன் மீசையை முறுக்கியபடி இங்குமங்கும் நடந்து கொண்டேயிருந்தான்.....

பட்டமங்கலத்தில் உள்ள மக்கள் பல பேர் அன்று தூக்கமில்லாமல்தான் அவதிப்பட்டுக் கொண்டிருந்தனர். நடு நிசியிருக்கும். எப்போதாவது ஒருமுறை நாய்கள் குரைக்கிற சத்தமும்-எங்கோ ஒரு மூலையில் இருந்து நரிகளின் ஊளையும், கேட்பதும் பிறகு அடங்குவதுமாக இருந்தன.

திடீரென மாளிகையின் ஒதுக்குப் புறமாக இருந்த தொழுவத்திலிருந்து சவுக்கடியின் ஒலியும்-காளை

மாட்டின் கதறலும் தொடர்ந்து கேட்கத் தொடங்கியது. வைரமுத்தன் அவன் அறையிலிருந்து ஓடினான். வீரம்மாள், உறங்காப்புலியை எழுப்பிவிட்டு அவனையும் அழைத்துக் கொண்டு தொழுவத்தை நோக்கி ஓடினாள். காவலர்களும் ஓடினார்கள். பாகனேரியிலிருந்து அம்பலக்காரர் ஆட்கள் வந்துதான் ஜல்லிக்கட்டுக் காளையை அடிக்கிறார்கள் என்று அவர்கள் முடிவு கட்டிக் கொண்டு கையில் கிடைத்த ஆயுதங்களை எடுத்துக் கொண்டு விரைந்தனர்.

ஆனால் அங்கே அவர்கள் கண்ட காட்சி என்ன?... தன் உயிரைப் போல் நேசித்து வளர்த்த காளையை வல்லத்தரையன் தனது கையில் வலுக்கொண்ட மட்டும் சவுக்கால் அடித்துக் கொண்டிருந்தான். அது கதறியது. எகிறிக் குதித்தது.

''அண்ணா! அண்ணா!'' என்று அலறியடித்துக் கொண்டு வைரமுத்தனும் வீரம்மாளும் தொழுவத்தை நெருங்கினார்கள்!

''யாரும் வராதீர்கள்! யாரும் குறுக்கிடாதீர்கள்! கொழுத்துப் பெருத்து வளர்ந்த இந்தக் கழுதை; என் குலத்திற்கே அவமானம் தேடிக் கொடுத்து விட்டது! எந்தக் கொம்புகளைப் பயன்படுத்தி என் குலப் பெருமையை நிலைநாட்டாமற் போனாயோ அந்தக் கொம்புகளாலேயே என் குலத்திற்கு விளைந்த களங்கத்தைக் கழுவு!''

மாறி மாறிச் சவுக்கால் அடித்தான்! அடி தாங்காத காளை கட்டுண்ட நிலையிலேயே அவன்மீது பாய முனைந்தது!

''இதைத்தான் நான் விரும்பினேன்; வாழ்க பட்டமங்கலத்தின் தன்மான உணர்வு! வாழ்க வாழ்க!''

என்றவாறு, வல்லத்தரையன் காளையின் கொம்புகளுக்கு நேராகத் தன் நெஞ்சைக் காட்டிக்கொண்டு பாய்ந்தான். சவுக்கடி பொறுக்கமுடியாமல் வலியால் துள்ளித் துவண்டு கொண்டிருந்த அந்தக் காளையும் வல்லத்தரையன் மீது ஏற்பட்ட சினத்தின் சிகரத்தில் அவன் தன் முன்னால் நீட்டிய நெஞ்சுக்கு நேராகத் தன் கொம்புகளைக் கீழிருந்து மேலாகப் பாய்ச்சியது. ஆம்; வளர்த்த கடா மார்பில் பாய்ந்தது! வல்லத்தரையனின் விலா எலும்புகளுக்குக் கீழே குத்திக் கொண்ட கொம்புகள், அவன் இருதயத்திலிருந்தே நேரடியாக இரத்தப் பிரவாகத்தை ஏற்படுத்தி உடனடி முடிவை அவனுக்கு ஏற்படுத்தின.

மலையொன்று சாய்ந்ததுபோல அந்த மாவீரன் அக்கணமே சாய்ந்து விட்டான். வைரமுத்தனும் வீரம்மாளும் மற்றவர்களும் அருகே நெருங்குவதற்குள் பட்டமங்கலத்துத் தன்மானத் தாமரையாக வல்லத் தரையன் குருதித் தடாகத்திலே-பூத்துக் குலுங்கிக் கொண்டிருந்தான்!

"தம்பி! மானங்காக்கும் சீமை இது! மானங்காக்கத் தவறாதே!" என்ற இறுதி உச்சரிப்புகளுடன் இரத்தம் தோய்ந்த அவன் இதழ்கள் மூடிக்கொண்டன. வீரம்மாளின் மடியில் அவளது அண்ணன் வீரர்குல திலகம் வல்லத்தரையனின் விழிகள் குத்திட்டு நின்றன. அண்ணனின் இமைகளைத் தங்கை வீரம்மாள் அவனுக்கு வலிக்குமோ என்ற உணர்வுடன் மெல்ல மூடினாள்.





# 23

பாகனேரியில் புகுந்த ஜல்லிக்கட்டுக் காளையை அடக்கியது தொடர்பான திடுக்கிடும் நிகழ்ச்சிகளுக்குப் பிறகு-பாகனேரி மாளிகையில், வாளுக்குவேலி தனது தம்பி ஆதப்பனை மிகவும் கடிந்து கொண்டான். வேண்டுமென்றே விரட்டி விடப்பட்ட காளையின் தாக்குதலால் எத்தனைப் பேர் உயிரிழந்தார்கள் என்ற கணக்கைக் காட்டி அண்ணனைச் சமாதானப் படுத்த நினைத்தாலும்கூட, ஆதப்பனுக்கு அவன் வல்லத்தரையனிடம் நடந்து கொண்ட விதம்-அவனுடைய மனச்சாட்சியே ஏற்றுக் கொள்ளாத அளவில்தான் இருந்தது.

வாளுக்குவேலி, தனது மனச்சுமையைக் குறைத்துக் கொள்ளச் சுந்தராம்பாள் வீட்டுக்குப் புறப்பட்டுச் சென்றான். கல்யாணி நாச்சியாரின் மனப்போராட்டம் ஒரு நிலைக்கு வந்த பாடில்லை! ஏற்கெனவே இரு நாடுகளுக்குமிருந்து வந்த பகையிடையே தனக்கும் வைரமுத்தனுக்கும் ஏற்பட்டுள்ள காதல், இப்போது வல்லத்தரைய அம்பலக் காரருக்கு இழைக்கப்பட்ட அவமானத்தின் மூலம் தடைப்பட்டுப் போய்விடக்கூடுமே என்று அவள் தவித்துக் கொண்டிருந்தாள்.

அன்று அவனும் அவளும் கட்டாரிக்குத் தந்த முத்தம்-அதை நினைத்துக் கொண்டாள். நாணமும் பிறந்தது! புன்முறுவலும் பூத்தது! கண்களும் கலங்கின!

பட்டமங்கலத்து அம்பலக்காரர் இறந்துவிட்ட செய்தி இன்னமும் பாகனேரியை எட்டவில்லை! அதற்குள்ளேதான் இவ்வளவு மனக்குழப்பங்களும்! எதிரி நாட்டானைப் போல ஒரு காளையை ஏவிவிட்டு-அதன் கூடவே வந்து உறங்காப்புலி, பாகனேரிக்குச் சவாலும் விடுத்து-அந்தச் சவாலை முறியடித்த வெற்றியைக்கூட அனுபவிக்க முடியாமல் பாகனேரி மாளிகை துயரத்தில் ஆழ்ந்து கிடந்தது.

திருக்கோட்டியூரில் சுந்தரி வீட்டு ஊஞ்சல் மெது வாக அசைந்து கொண்டிருந்தது. வாளுக்குவேலியின் தோளில் தலையைச் சாய்த்தவாறு சுந்தராம்பாள் ஊஞ்சலை உந்தி ஆட்டிக் கொண்டிருந்தாள்.

''இப்படி பேசாமலே எவ்வளவு நேரம் நோன்பு இருக்கப் போகிறீர்கள்-உங்கள் இருதயத்தைத் துளைத்துக் கொண்டிருக்கும் எத்தனையோ பிரச்சினைகளுக்கு நான் ஒரு ஆறுதலாக இருக்க முடியுமென்று நீங்கள் நம்பவே இல்லையா?''

வாளுக்குவேலி, சுந்தரியின் முகத்தைத் தனது குளிர்ந்த பார்வையால் நோக்கியவாறு, அவள் கூந்தலைக் கோதினான். அவளும் தனது பூப்போன்ற விரல்களால் அவனது கன்னத்தைத் தடவிக் கொடுத்தாள்.

''உன்னிடம் துன்பத்தைப் போக்கும் மருந்து கிடைக்கும் என்ற நம்பிக்கையில்லாமலா இங்கு ஓடோடி வந்தேன்?'' என்று சொல்வது போல் இருந்தது அவன் சுந்தரியைப் பார்த்த பார்வை!

''கவலையைத் தீர்க்கும் சக்தி வாய்ந்தது சங்கீத மென்று தெரியுமல்லவா?'' சுந்தரியின் கேள்வியை வாளுக்குவேலி தலையை அசைத்து ஆமோதித்தான்... அத்துடன் அவன் நிறுத்தவில்லை!

''ஆடற்கலையும் ஆயாசத்தைத் தீர்க்கும்! அதிலும் ஆசைக்குரிய அழகு மயில் ஆடினால் ஆயாசத்தின் நிழல் கூட நெஞ்சில் விழாது!'' என்றான்; புன்னகையைச் சிரமப்பட்டு வரவழைத்துக் கொண்டு!

''உம்! ஆடு!'' என்றான்!

''நீங்கள் பாடினால்தான்!'' அவள் ஊடினாள்! கூடலை எதிர்பார்க்கும் ஊடல் அல்ல; பாடலை எதிர் நோக்கும் ஊடல்! ஊஹூம்! ஊஹூம் என்று சற்று நேரம் சரசம்! செல்லக் கோபம்! கொஞ்சல்! கெஞ்சல்! பின்னர் இசையெழுந்தது! சுந்தரியின் பாதாதி கேசம் வரையில் பாகுமொழித் தமிழால் பாராட்டி வர்ணிக்கும் பாடல்!

அந்த வர்ணனைக்கு ஏற்றவள்தான் என நிரூபிக்கும் வகையில் அவளும் ஆடினாள்! ஆட்டத்தின் முடிவில் மயங்கிக் கீழே விழப்போன சுந்தரியைத் தனது கை நிறையத் தழுவித் தூக்கிக் கொண்டான் வாளுக்குவேலி!

அவளும் அப்படியே அவனது மார்பகத்தில் தனது மார்பகம் அழுந்த அவனைக் கட்டிப் பிடித்துக் கொண்டாள்.

''சுந்தரி! சுந்தரி! மயக்கமா?'' என்று பதறினான்.

''என்ன மயக்கமென்று தெரியவில்லையா?'' என்று மலர் விரல்களால் அவன் இதழ்களை வருடினாள் சுந்தரி!

''நாம் செய்து கொண்டுள்ள சபதம் மறந்து விட்டதா?'' அவன் மிகுந்த குழைவுடனும் அவள் மீது அனுதாபத்துடனும் கேட்டான்.

''மறக்கமாட்டேன் அந்த வாக்குறுதியை! அதற்காக உங்களை மறக்கவும் மாட்டேன்!'' என்று அவன் மடியில் படுத்துக் கொண்டாள் சுந்தரி!

கதவு 'படபட' வென்று தட்டப்படும் சப்தம் கேட்டது! சுந்தரி எழுந்தோடித் திறந்துவிட்டாள். வேலைக்காரி பரபரப்பாக உள்ளே நுழைந்தவள், ''அம்மா! பட்டமங்கலத்து அம்பலக்காரர் அவமானம் தாங்காமல் காளை மாட்டுக் கொம்பிலே அவரே பாஞ்சி தன்னைக் குத்திக்கிட்டுத் தற்கொலை பண்ணிகிட்டாராம்!'' என்றாள்.

''உண்மையாகவா?'' என்று அதிர்ந்தான் வாளுக்கு வேலி! உடைவாளை எடுத்து இடுப்பிலே கட்டிக் கொண்டு, சுந்தரியை நெருங்கி-''தாங்க முடியாத வேதனைச் செய்தி! என் தலையே வெடித்து விடும் போலிருக்கிறது! வருகிறேன்!'' என்று கூறி விட்டு மெய்மறந்து நின்ற அவளின் பதிலுக்காகக் கூடக் காத்திராமல் அந்த வீட்டிலிருந்து வெளியேறினான்.

பாகனேரி மாளிகை வாசலில் ஒரே கூட்டம்! பட்டமங்கலத்துச் செய்தியால் எல்லோருமே சோக வடிவங்களாகக் காட்சி தந்தனர். சாரட்டு வண்டியிலிருந்து வாளுக்குவேலி இறங்கி வந்தான். மாளிகையின் உள் கூடத்திற்கு மெதுவாக நடந்து சென்றான். அண்ணன் தன் மீது கொண்டுள்ள சீற்றம் இன்னமும் அதிகமாகுமே என்ற அச்சத்துடன் ஆதப்பன் ஓரமாக ஒதுங்கி நின்று கொண்டிருந்தான்.

கூடத்தில் வெள்ளை அய்யரும் மேகநாதனும் இருந்தது வாளுக்குவேலி மனத்திற்குச் சற்றுத் தெம்பினை அளித்தது.

''என்ன அய்யரே! இப்படியாகிவிட்டது!'' என்று மெல்லிய தொனியில் வாளுக்குவேலி கேட்டான்.

''பட்டமங்கலத்துக்கும் பாகனேரிக்கும் பகைமை வளர்த்துவிட வெள்ளைக் கம்பெனிக்காரன் செய்த சூழ்ச்சி பலிச்சிகிட்டே வருது!'' என்றார் அய்யர்!

''என்ன இருந்தாலும் மிகப் பெரிய வீரன் ஒருவனைக் கள்ளர் நாடு இழந்துவிட்டது! நான் இப்படி எதிர்பார்க்கவே இல்லை!'' வாளுக்குவேலியின் குரல் கம்மியது!

''அடடா! அந்த வல்லத்தரையன் சவமாச் சாஞ்சி கிடக்கிற காட்சியைப் பார்த்தா கல் மனசும் கரையும்! ஏ, அப்பா! எவ்வளவு பெரிய மானஸ்தன்!'' வெள்ளை அய்யரும் கண் கலங்கினார்.

''அய்யரே! குற்றம் பட்டமங்கலத்தாருடையது என்றாலும், இப்போது பாகனேரியல்லவா பழிக்கு உள்ளாக்கப்பட்டு விட்டது! உம்!...மேகநாதன்! உடனே நான் துக்கம் விசாரிக்கப் பட்டமங்கலம் புறப்பட்டாக வேண்டும்! உரிய ஏற்பாடுகள் நடக்கட்டும்!''

இதுவரையில் பொறுமையாக அறை வாயிலில் நின்று கொண்டிருந்த கல்யாணி நாச்சியார், தன்னை மறந்து கூடத்திற்கு ஓடிவந்து ''அண்ணா! வேண்டாம் அண்ணா! இந்தச் சமயத்தில் நீங்கள் அங்குப் போவது நல்லதல்ல! தயவு செய்து அந்த எண்ணத்தைக் கை விடுங்கள்!'' என்று கண்ணீர் வழிந்திடக் கெஞ்சினாள்.

''ஒரு தவறு செய்தான் உறங்காப்புலி! அதற்குப் பதிலாக ஒன்பது தவறுகளை நாம் செய்து விட்டோம்! கல்யாணி! உன் அண்ணனுக்கு என்ன நேர்ந்து விடுமென்று பயப்படுகிறாய்? அப்படியே ஏதாவது நடந்தால்தான் என்ன? உணர்ச்சி அலை வீசி ஓடிக் கொண்டிருக்கும் தமிழ் இரத்தம் அம்மா! அங்கே பட்டமங்கலத்தில் சிந்தப் பட்டுள்ள அந்த மாவீரன் வல்லத்தரையன் இரத்தத்துடன் என் இரத்தமும் கலந்தால் அது தமிழ் இனத்துக்கே பெருமைதானே! உன் அண்ணனுக்கும் புகழ்தானே!''

''இல்லையண்ணா! நான் சொல்வதைக் கேளுங் கள்!'' என்று அவன் கரங்களைப் பிடித்துக் கொண்டாள் கல்யாணி!

''யார் சொன்னாலும் என்னைத் தடுத்து நிறுத்த முடியாது! ஆயிரங் காரணங்களை ஆளுக்கு ஆள் அடுக்கிக் கொண்டிருக்கலாம்! ஆனால் என் காதுகளில் அவை விழமாட்டா! பட்டமங்கலத்தில் திருமண விழா-அதற்குப் போகாதே என்றால் அதைக்கூடச் சிந்தித்துப் பார்க்க இடமுண்டு! மானமுள்ள இனம் தமிழ் இனம்; உயிர் நீப்பர் மானம் வரின் என்ற குறள் போற்றும் இனம்-அந்த இனப் பண்பாட்டின் இலக்கணமாக, இழந்த மானத்திற்கு ஈடாகத் தன் உயிரையே கொடுத்திருக்கும் அந்தத் தலை தாழாச் சிங்கத்தின் கடைசி முக தரிசனத்தை நான் காணாமல் இருக்க முடியாது! அய்யர் அவர்களே! உங்கள் அபிப்பிராயம் என்ன?''

''வாளுக்குவேலித் தேவரின் கருத்தை நான் அப்படியே எழுத்துக்கு எழுத்து அட்சரம் பிசகாமல் வரவேற்கிறேன்! துக்கம் விசாரிக்கச் செல்வதுதான் நல்லது!''

''நன்றி! நான் இப்போதே புறப்படுகிறேன்! கல்யாணி! கலங்காமல் இரு!''

வாளுக்குவேலி, கூடத்தை விட்டு வெளியேறும் போது, ஒரு குரல் அச்சத்துடன் ஒலித்தது! சென்றவன் தலையை மட்டும் திருப்பிக் கவனித்தான்!

''துணைக்கு நானும் வருகிறேன் அண்ணா!'' கறுத்த ஆதப்பனின் வேண்டுகோள் அது!

''ஏன்? நடந்த குழப்பமெல்லாம் போதாதா? நீ வேறு எதற்காக? நான் மட்டுமே போகிறேன்.''

வாளுக்குவேலியை வழியனுப்ப வெள்ளை அய்யர் அவனுடன் வெளியே வந்தார். கல்யாணி, 'என்ன நடக்கப் போகிறதோ?-என்ன செய்தி வரப் போகிறதோ?' என்ற கவலையழுத்திட அப்படியே அறை வாயிற்படியில் உட்கார்ந்து விட்டாள்.

பட்டமங்கலத்து மாளிகைக் கூடத்தில் மக்களின் பார்வைக்காக வல்லத்தரையனின் உடல் அலங்கரிக்கப் பட்ட ஒரு மேடையில் வைக்கப்பட்டிருந்தது; தங்களின் அருமைத் தலைவனை இழந்துவிட்ட பட்டமங்கலத்து மக்கள் சாரை சாரையாக வந்து வல்லத்தரையனின் மூச்சற்ற உடலைக் கண்டு வாயிலும் வயிற்றிலும் அடித்துக் கொண்டு அழுது புலம்பினார்கள்.

உடல் வைக்கப்பட்டிருந்த மேடைக்கருகே நின்று கொண்டிருந்த உறங்காப்புலி, அங்கே குழுமிய மக்களிடம் பாகனேரி குறித்துப் பழியுரைக்கும் வேலையிலேயே மிகத் தீவிரமாக ஈடுபட்டிருந்தான். அவனுக்கு ஆங்கில அதிகாரி அக்னியூ கொடுத்திருந்த அரும்பணி அதுதானே! அந்தப் பணியை அவன் ஒழுங்காக நிறைவேற்றிக் கொண்டிருந்தான்.

ஜல்லிக்கட்டுக் காளையுடன் உறங்காப்புலி, பாகனேரிக்குச் சென்று சவால்விட்ட நிகழ்ச்சி மறைக் கப்பட்டு விட்டது! காளையின் கொம்புகளுக்குப் பாகனேரி வாலிபர்கள் பலர் பலியான செய்தியும் மறைக்கப்பட்டு விட்டது! வல்லத்தரையன், தன் தம்பி ரைவமுத்தனுடன் ஏதோ வேலையாகப் பாகனேரியைக் கடந்து சென்றபோது அவனை வழிமறித்துத் தலை முடியை வெட்டிவிட்டார்கள் என்ற ஒரு கற்பனைக் கதை மட்டுமே உறங்காப்புலியினால் பட்டமங்கலம் மக்களிடம் பரப்பப்பட்டது!

சிலர் நம்பினார்கள்! சிலர் சிந்தித்தார்கள்! அப்படியா நடந்திருக்கும் என்று சிலர் சந்தேகப்பட்டார்கள்! பாகனேரியில் இருந்து வந்துள்ள செய்திகளையும் பட்டமங்கலத்து மக்களால் அறவே புறக்கணித்துவிட முடியவில்லை.

துக்கம் விசாரிப்பதற்கும், வல்லத்தரைய அம்பலக் காரருக்கு இறுதி மரியாதை செலுத்துவதற்கும் வாளுக்கு

வேலி அம்பலக்காரர் புறப்பட்டுவிட்ட செய்தியும் பட்டமங்கலம் மாளிகைக்கு எட்டி விட்டது!

''அவன் வந்தால் உள்ளே அனுமதிக்கவே கூடாது! இந்த மாபெரும் இழப்புக்கு யார் காரணமோ அந்த மகாபாபியின் அண்ணனுக்கு நமது அம்பலக்காரருக்கு இறுதி அஞ்சலி செலுத்தும் தகுதியே கிடையாது! என் சொல்லையும் மீறி யாராவது வாளுக்குவேலியை உள்ளே அனுமதித்தால்-நான் அவனை அவமானப்படுத்தித்தான் அனுப்புவேன்! பழிக்குப் பழி! இரத்தத்திற்கு இரத்தம்!! பட்டமங்கலத்திற்கு ஏற்பட்ட கறையைப் போக்கப் பாகனேரி அம்பலக்காரனை விரட்டியடித்து வேடிக்கைப் பதுமையாக நம்மூர் நடுவீதியில் நிறுத்துவதின் மூலம்தான் என் மனம் நிம்மதி அடைய முடியும்!''

-என்று உறங்காப்புலி, சீறிக் கொண்டிருந்தான்! அவனது உணர்ச்சி மிக்க உரையில் வெறி கொண்டவர் களாகச் சில பேர் அவனைச் சுற்றி நின்று ''பழிக்குப் பழி!'' என்று கோஷம் போட்டுக் கொண்டிருந்தார்கள்.

தனது கருத்துப் பற்றி வைரமுத்தனின் எண்ணமென்ன என்பதை அறிவதிலும் உறங்காப்புலி ஆவல் கொண்டு அவனிடம் சென்று அவனையும் உசுப்பி விட்டான்!

''வாளுக்குவேலி வரவே போவதில்லை! ஒரு வேளை வந்தால் பார்த்துக் கொள்ளலாம்!'' என்று அலட்சியமாகப் பதில் அளித்த வைரமுத்தனின் விழிகள் அருவிகளாகப் பெருக்கெடுத்துக் கொண்டிருந்தன!

''வீரம்மா! உனக்கு எத்தனை முறைதான் சொல்வது! எனக்குத் திருமணமாகி ஒரு வாரிசு பிறந்து விட்டால், இதோ என் அருமைத் தம்பி வைரமுத்தன் பட்டமங்கலத்து அம்பலக்காரராகப் பதவியேற்கும் வாய்ப்பே இல்லாமற்

போய் விடுமல்லவா? அதனால்தான் நான் திருமணமே செய்து கொள்வதில்லையென்று சூளுரை மேற்கொண்டுள்ளேன். அதனால் இனியொரு முறை அந்தப் பேச்சைத் தொடங்காதே!''

முளைப்பாரித் திருவிழாவின்போது பட்டமங்கலத்துப் பிள்ளையார் முன்னால், தன்னைப் பற்றித் தனது அண்ணன் கொண்டிருந்த பாசம் வெளிப்பட்டதே! அதை இப்போது வைரமுத்தன் நினைத்துக் கொண்டான்! அந்த நினைவு அவன் நெஞ்சைப் பிழிந்தது! பிழியப்பட்ட அந்தச் சாறுதான் கண்ணீராக ஊற்றிக் கொண்டிருந்தது.

பாகனேரி வாளுக்குவேலியின் சாரட்டு வண்டி பட்டமங்கலம் எல்லைக்கு வந்துவிட்டது என்ற செய்தியை ஒரு காவலன் கொண்டு வந்தான்.

எல்லா நாட்டு அம்பலக்காரர்களும் வல்லத்தரையனுக்கு மாலை மரியாதைகளுடன் வந்து தங்களின் இறுதி அஞ்சலியைச் செலுத்திக் கொண்டிருந்தனர்.

பட்டமங்கலத்திற்கு வாளுக்குவேலியின் சாரட்டு வண்டி வந்து விட்டது என்றதும், உறங்காப்புலி ஆவேசம் கொண்டவனைப் போல ஆடினான்! உடைவாளை உருவினான்! பிறகு உறையில் போட்டான்! ஈட்டியை எடுத்தான்! தரையில் ஓங்கிக் குத்தினான்.

வாளுக்கு வேலியின் வண்டியைக் கண்ட பட்டமங்கலத்து மக்கள்; தெருவில் கும்பல் கும்பலாகச் சோக முகத்துடன் கூடியிருந்தோர் அந்த வண்டியைப் பின் தொடர்ந்து ஓடிவந்து கொண்டிருந்தார்கள்.

பட்டமங்கலத்து மாளிகையில் வாளுக்குவேலியின் வருகையால் என்ன நடக்கப் போகிறதோ என்ற எதிர்பார்ப்பு அவர்களை மிகுந்த பரபரப்புக்குள்ளாக்கியிருந்தது.

கடுமையான வார்த்தைகளால் வாளுக்குவேலியை யும் ஆதப்பனையும் உறங்காப்புலி அர்ச்சனை செய்து கொண்டிருந்ததை வீரம்மாள் கேட்டுக் கொண்டிருந்தாள் என்றாலும், அவள் விழிகள் தனது அன்பு அண்ணனின் முகத்தை விட்டு அகலாமல் நீரைப் பொழிந்து கொண்டிருந்தன.

உறங்காப்புலி மீண்டும் வைரமுத்தனை நெருங்கி னான். ''என்னதான் முடிவு? வாளுக்குவேலிதான் வந்து கொண்டிருக்கிறானாமே; அவனை உள்ளே வராதே என்று தடுக்க வேண்டியதுதானே! என்ன; சரிதானே? அப்படியே செய்யட்டுமா?''

வைரமுத்தன், உறங்காப்புலிக்குப் பதில் சொல்வதற் குள், வாளுக்குவேலியின் வண்டி, பட்டமங்கலம் மாளிகையின் வாயிலில் வந்து நின்றது.







# 24

குன்றெடுக்கும் நெடுந்தோள் படைத்தவனும், குமிழ்க் கண்களை உருட்டி விழித்தாலே எதிரிகளைக் குலை நடுங்கச் செய்யக்கூடிய தோற்றம் வாய்ந்தவனும், பூமி அதிர்ந்திட நடக்கக்கூடிய வலிமை படைத்தவனுமான வாளுக்குவேலி, சாரட்டு வண்டியிலிருந்து கீழே இறங்கினான். வண்டியில் வந்த ஒரு காவலன் பெரிய மாலையொன்றைத் தூக்கிக் கொண்டு அவன் பின்னால் இறங்கினான்.

கூடியிருந்தோர் கண்கள் அத்தனையும் அகன்று விரிந்து என்ன நடக்கப் போகிறது என்பதை ஆவலோடு எதிர்பார்த்தன. கூரிய நுண்ணறிவு கொண்டவன் வாளுக்கு வேலி என்பதால் அந்தக் கூட்டத்தின் முகங்களைப் பார்த்தபோதே-தனது வருகைக்கு முன்பு அங்கே என்னென்ன பேசப்பட்டிருக்குமென்பதை அவனால் உணர்ந்து கொள்ள முடிந்தது.

கள்ளர் நாடுகளில் சிறந்த நாடான ஒன்றின் தலைவனை இழந்துவிட்ட சோகம், வாளுக்குவேலியின் முகத்தில் புகை மூட்டமாய்க் குவிந்திருந்தது. வண்டியில் இருந்து இறங்கியவுடனே எப்போதும் நிமிர்ந்தே இருக்கக்கூடிய அவனது தலை, சற்றே தாழ்ந்தது. உள்ளம் தளர்ந்திருந்தாலும் நடையில் வழக்கமான வீரம்! மாளிகை வாசலில் கூடியிருந்தோர் அவர்களையறியாமலே ஒதுங்கி நின்று அவனுக்கு வழிவிட்டனர்.

வல்லத்தரையனின் உடல் வைக்கப்பட்டிருந்த மேடையை நோக்கி நடந்தான். அவனது இரு கரங்களையும் பின்புறமாகக் கட்டிக்கொண்டு மேலும் முன்னோக்கி நடந்தான். மறைந்துவிட்ட அண்ணனின் காலடிப் பக்கம் அமர்ந்திருந்த வைரமுத்தன் வாளுக்குவேலியைக் கண்டதும் எழுந்து நின்று மரியாதை தெரிவித்தான்.

அண்ணனின் தலைப் பக்கமாக அமர்ந்திருந்த வீரம்மாளும் எழுந்து நின்றாள். வாளுக்குவேலி, வைரமுத்தனின் தோள்களைத் தன் கரங்களால் அணைத்துக் கொண்டு சில விநாடிகள் நின்றான்.

பிறகு அவன் முதுகில் தட்டிக் கொடுத்தான். காவலன் தூக்கிக் கொண்டு வந்த பெரிய மாலையை வாங்கி வல்லத்தரையனின் உடல்மீது சூட்டினான்.

அப்போது மின்னல் வேகத்தில் வாளை உருவிய உறங்காப்புலியின் கரத்தை அதே மின்னல் வேகத்தில் தடுத்துத் தட்டி விட்டான் வைரமுத்தன். அந்த ஒருகண நிகழ்ச்சியை வாளுக்குவேலி கவனித்தானோ இல்லையோ, மாலையை அணிவித்துத் தனது கரங்கூப்பி இறுதி அஞ்சலியைச் செலுத்தினான். அப்போது அவன் கண்களில் இருந்து பொலபொலவென நீர் உதிர்ந்தது. வீரம்மாள் கேவியழுத ஒலியைத் தவிர வேறெதுவும் அந்தச் சோகம் சூழ்ந்த அமைதியைக் குலைக்கவில்லை. வாளுக்குவேலி வீரம்மாளிடம் சென்றான்.

அவள் கைகளைப் பிடித்துக் கொண்டு ஆறுதல் சொல்ல முயன்றான், ஆனால் வார்த்தைகள் வரவில்லை. பிறகு அந்தக் கூடத்திலிருந்து வெளியே நடந்துவந்து மற்ற நாட்டு அம்பலக்காரர்களுடன் அவனும் ஒரு நாற்காலியில் அமர்ந்து கொண்டான்.

சிறிது நேரத்திற்கெல்லாம் பூக்களால் அலங்கரிக்கப்பட்ட வண்டியொன்றில் வல்லத்தரையனின் உடல் ஏற்றி வைக்கப்பட்டது. வண்டி நகரத் தொடங்கியதும் வீரம்மாள் ''அண்ணா! அண்ணா!'' என்று தரையில் விழுந்து புரண்டு அழுதாள்.

அவளை மற்ற பெண்கள் தாங்கிப் பிடித்து மாளிகைக்குள் அழைத்துப் போனார்கள். எல்லா நாட்டு அம்பலக்காரர்களுடன் வாளுக்கு வேலியும் வல்லத்தரையனின் உடலுக்குப் பின்னால் நடந்து சென்று இறுதிச் சடங்குகள் முடியும் வரையில் இருந்தான்.

பட்டமங்கலத்திற்குச் சென்றிருந்த அண்ணன், நெருப்பாற்றையே குளிர வைத்துவிட்டு அதிலே நீந்திக் கரை சேர்ந்து திரும்பவும் பாகனேரிக்கு வந்து விட்டான் என்று மகிழ்ச்சியில் கல்யாணி ஆனந்தக் கண்ணீர் வடித்தாள்.

வைரமுத்தனின் பரந்த மனப்பான்மைதான் இத்தனைக்கும் காரணமாக இருக்குமென்று அவள் யூகம் செய்து கொண்டு அதிலோர் தனி மகிழ்ச்சியடைந்தாள். அனைத்துக்கும் மேலாக வாளுக்கு வேலிக்கென்று ஒரு தனி மரியாதையை மாற்றாரும் அளித்திடத் தவற மாட்டார்கள் என்பதுதான் பட்டமங்கலத்தில் அவனுக்கு எதிராக எந்தச் சலசலப்பும் காட்டப்படாததற்குக் காரணம் என்பதைப் பாகனேரி மக்கள் அறிந்தே இருந்தனர்.

வலுவில் தொடுக்கப்பட்ட வம்பு வல்லத்தரையனின் உயிரையே மாய்க்கிற அளவுக்கு முற்றிப் போய் விட்டது. அதற்குப் பின்னணியாக இருந்து துரோகிகளை ஆட்டிவிட்டு ஆங்கிலேயக் கம்பெனியின் அதிகாரிகள் வெற்றி மேல் வெற்றிகளைக் குவித்துக் கொண்டிருந்தனர்.

சந்ததியாக ஒரு மகனோ மகளோ இல்லாத நிலையில் வல்லத்தரையன் மாண்டுவிட்டான். அவன் தான் திருமணமே வேண்டாமென்று வெறுத்து விட்ட வனாயிற்றே! அவனது ஆசைப்படி அவனுக்குப் பிறகு வைரமுத்தன் பட்டமங்கலத்து அம்பலக்காரராகப் பொறுப்பேற்றுக் கொண்டான் என்ற செய்திகேட்டு, யார் பூரிப்புக் கொண்டார்களோ இல்லையோ, கல்யாணி நாச்சியாருக்கு எல்லையற்ற பூரிப்பு! நேரில் சென்று வாழ்த்த வேண்டும் போலிருந்தது! அம்பலக்காரர் என்பதற்கு அடையாளமாக அணிவிக்கப்படும் அந்தப் பதக்கத்தை எடுத்துக் கண்ணிலே ஒத்திக் கொண்டு இதழ் அமுதால் அந்தப் பதக்கத்தை நனைத்திட வேண்டுமெனவும் துடித்தாள்.

''கௌதாரீ! தெரியுமாடி சேதி! அவர் பட்ட மங்கலத்துக்கு அம்பலக்காரராகி விட்டார்!'' என்று சமையற்காரியின் கன்னங்களைச் செல்லமாகக் கிள்ளிக் கொஞ்சிக் குதித்தாள்!

''எனக்குத்தான் இப்படி நடக்கும்னு முன்னமே தெரியுமே!''

''என்னடி தெரியும்?''

''அவரு அம்பலக்காரர் ஆனா கல்யாணி நாச்சியார் இப்படிக் குதிப்பாங்கன்னு!''

''எப்படித் தெரியும்?''

''ஏன் தெரியாது? கட்டாணி முத்தம்னு கேள்விப் பட்டிருக்கேன்; நீங்கதான் கட்டாரிக்கே முத்தம் கொடுத்துக்கிட்டீங்களே!''

வண்டிக்குள்ளிருந்த கௌதாரியைப் பற்றிய நினைவில்லாமலே அன்றைக்குத் தன்னை மறந்து கல்யாணி நடந்து கொண்டதை எண்ணி, வெட்கம் துரத்திட அங்கிருந்து ஓடி விட்டாள்!

அன்றைக்கிருந்த உற்சாகத்தில், வடிவாம்பாள் கற்றுத் தந்த நாட்டியங்கள் அனைத்தையும் ஆடிவிட வேண்டும் போல் தோன்றியது. சொல்லி வைத்தாற் போல் மாளிகைக் கூடத்தில் வடிவாம்பாளும், நாதமுனி, லலிதாங்கி ஆகியோரும் தயாராக இருந்தார்கள்.

நினைத்ததெல்லாம் நடக்கிறதே என்று அவள் கும்மாளம் போட்டுக் கொண்டு சில விநாடிகளுக்குள்ளாக நடன உடையுடன் வடிவுக்கு நேராக வந்து நின்றாள். வடிவாம்பாளின் முகமும் வழக்கத்திற்கு மாறாக அன்றைக்கு மிகவும் பிரகாசமாக இருந்தது. வேறொன்று மில்லை! நடனப் பயிற்சி தருவதற்கு அவள் வரும் போதெல்லாம் பாகனேரி மாளிகையில் காண முடியாத வாளுக்குவேலி அன்றைக்கு மாளிகையில் தங்கியிருப்பது தான் வடிவுக்கு ஏற்பட்ட புதிய பொலிவுக்குக் காரணம்!

அது மட்டுமா? வடிவு மேலும் புல்லரித்துப் போய்விடுகிற அளவுக்கு நடனப் பயிற்சிக் கூடத்திற்கே வாளுக்குவேலி வந்து அமர்ந்து விட்டான்.

''கடவுள் அருளால் காரியம் கைகூடப் போகிறது. இன்று எனது கலைத்திறன் முழுவதையும் காட்டி அவனை வளைத்துப் போட வேண்டும்! சுந்தரியிடம் சொர்க்கத் தைத்தான் கண்டேன்; இவளிடம் இந்திரலோகத்தையு மல்லவா இணைத்துக் காண்கிறேன் - என்று அதிசயித்துப் ''போய் அதிரசவல்லி நீதான்! என்அம்ச தூளிகா மஞ்சத்திற்கு ஏற்ற சொர்ணக்கிளி நீதான்!'' என்று கூறி என்னருகே சொக்கிக் கிடக்க வேண்டும்-அதற்கேற்றபடி என் கலையை வலையாக்குகிறேன்!'' என்று தனக்குள்ளாக முடிவு செய்து கொண்டு சதங்கை கொஞ்சும் பாதங்களைத் தாளத்தோடு தரையில் மேவ விட்டாள்!

''என்னம்மா வடிவூ! கல்யாணி உன்னைப் போல ஆடுகிற அளவுக்குப் பயிற்சி கொடுத்து முடித்திருப்பாயா?''

''ஏன் சந்தேகம்? இப்போது இருவருமே ஆடுகிறோம்! பார்த்துவிட்டுச் சொல்லுங்களேன்!''

வடிவாம்பாள், கல்யாணிக்குக் கற்றுத் தந்த நாட்டியங்களை ஆடத் தொடங்கினாள். கல்யாணியும் அவளுடன் சேர்ந்து ஆடினாள்! கல்யாணிக்காக ஆடுவது போலத் தோற்றமே தவிர, வடிவாம்பாளின் நோக்கம் முழுதும் வாளுக்குவேலியை வளைப்பதிலேயே இருந்தது.

பாவம்! கல்யாணி பயிற்சியில் கற்றதை ஆடிக் கொண்டிருந்தாள். வடிவாம்பாளோ நடனத்தில் தனது நளினத்தைக் குழைத்தாள். நயனங்களைக் காமன் கணைகளாக்கி வாளுக்குவேலி மீது பொழிந்து தள்ளினாள்.

நடனத்திற்கெனத் தனக்குக் கற்றுத் தந்திருந்த பாட்டிலிருந்து, வடிவாம்பாள் மாறுபடுவதையும்-ஆண்டவனைப் பற்றிய பாடல் திடீரென ஆள்மயக்கிப் பாடலாக வேறுபடுவதையும் கல்யாணி நாச்சியார் உணர்ந்து, தனது ஆட்டத்தை நிறுத்திக்கொண்டு அப்படியே நின்று விட்டாள்!

வடிவு ஆடிக் கொண்டேயிருந்தாள்! வாளுக்கு வேலியும் கல்யாணியின் சங்கடத்தைப் புரிந்து கொண்டு வடிவாம்பாளின் நடனத்தை மிகவும் இரசிப்பதைப் போல நடித்துக் கொண்டிருந்தான். அது போதாதா வடிவுக்கு?

அவனை மிகவும் நெருங்கி ஆடினாள்! பொன்னிழை போலப் பூவையின் இடை நெளிந்தது-அந்த இழையால் அவனை இழுத்துக் கட்டிவிடலாமென எண்ணித்தான் ஆடினாள்! மெல்லக் குலுங்கின மாங்கனிகள்! அவற்றைச் சுவைக்கத் துடித்துச் சுருண்டு விடுவான் என்றுதான் அவள் நம்பி ஆடினாள்! வண்டே வா என அழைத்தன வடிவின் தேனிதழ்கள்! அந்த மது அருந்த

மலர்மீது தாவிடுவான் என்ற எதிர்பார்ப்புடன்தான் அவள் ஆடினாள்! ஆடினாள்! ஆடினாள்! ஆடிக்கொண்டே யிருந்தாள்.

வடிவாம்பாளின் உள்ளத்தை முழுமையாகப் புரிந்து கொண்ட வாளுக்குவேலி, எழுந்து நின்று ''சபாஷ்! சபாஷ்! பிரமாதம்!'' என்று கைதட்டிப் பாராட்டினான்.

''மிகவும் நன்றி! உண்மையிலேயே என் கலையை நீங்கள்...'' என்று இழுத்தாற் போலக் கேட்டாள் வடிவாம்பாள்!

''நன்றாகவே இருந்தது வடிவு! மிக அற்புதம்!''

''என்ன புரிந்து கொண்டீர்கள்?''

''எல்லாமே புரிந்து கொண்டேன்!''

உரையாடல் வேறு திசையில் திரும்புவதை உணர்ந்துகொண்ட கல்யாணி நாச்சியார், அங்கிருந்து மெல்ல நகர்ந்து-தன்னுடைய அறைக்குச் சென்று விட்டாள். தங்கையின் செயலையும் வாளுக்குவேலி கடைக்கண்ணால் கவனித்துக் கொண்டே வடிவாம்பாளுக் குப் பதில் சொல்லிக் கொண்டிருந்தான்.

''எல்லாவற்றையும் அதற்குள் புரிந்து கொண்டிருக்க முடியாதே!''

உதடுகள், தரையில் விழுந்த மீன்களைப் போலத் துடித்திட, அவள்-அவனைப் பார்த்துக் கூறினாள்.

''இந்த வாளுக்கு வேலியின் கலைத்திறனை நீ மிக மலிவாகக் கணக்கிட்டு விட்டாயா? எல்லாம் புரிகிறது என்றால் நீயும் அதைப் புரிந்து கொள்ள வேண்டியதுதானே!''

இப்படிச் சொல்லிய வாளுக்குவேலி, போலித் தனமாக ஒரு புன்னகை புரிந்தான்!

''நம்பிக்கையோடு போய் வருகிறேன்! புரிந்து கொண்டதைச் செயல்படுத்தும் நாள் விரைவில் வந்திட ஆண்டவன் அருள் புரியட்டும்'' என்று வடிவாம்பாள் அவனை வணங்கி நின்றாள்!

''கொஞ்சம் இரு!... இத்தனை நாள் நடனப் பயிற்சி நடத்தியதற்காக...உனக்குத் தர வேண்டிய சன்மானத்தை இன்றைக்கு வழங்குவதாக இருக்கிறேன்'' எனக் கூறிய வாளுக்கு வேலி, கல்யாணியின் அறைக்குள்ளே நுழைந்து அவளை அழைத்துக் கொண்டு வெளியே வந்தான். கல்யாணியின் கையில் ஒரு வெள்ளித்தட்டு இருந்தது. அதில் தேங்காய், பழம் ஆகியவற்றுடன் வெற்றிலையும்-அதன் மீது பொற்காசுகளும் நிறைந்திருந்தன. கல்யாணி வெள்ளித் தட்டினை வடிவாம்பாவிடம் நீட்டினாள்.

''சன்மானமா? எனக்கா? இந்தச் சன்மானமா நான் கேட்டேன்?'' என்று வடிவாம்பாள் முகத்தைச் சுளித்துக் கொண்டு வாளுக்கு வேலியைப் பார்த்தாள்.

''எங்கள் கடமையை நாங்கள் செய்ய வேண்டாமா? வாங்கிக் கொள் வடிவு!'' என்று அவன் சொன்னதும் வடிவாம்பாள் அந்தத் தட்டினைப் பெற்றுக் கொண்டாள். நாதமுனிக்கும், லலிதாங்கிக்கும் கூட சன்மானங்கள் வழங்கப்பட்டன.

வடிவாம்பாள் கல்யாணியைப் பார்த்து, ''அப்படி யானால் நடனப் பயிற்சி இன்றுடன்...'' என்று கேட்டு முடிப்பதற்குள் வாளுக்குவேலி குறுக்கிட்டு,

''ஆமாம் வடிவு! நடனப் பயிற்சி நிறுத்தப் படுகிறது! கல்யாணிக்கு மிக விரைவில் திருமணம் செய்ய ஏற்பாடுகள் நடைபெற்றுக் கொண்டிருக்கின்றன'' என்றான்.

''அப்படியா? மாப்பிள்ளை எந்த ஊர்? யார்?...'' என்று வடிவாம்பாள் புகையும் உள்ளத்தைக் காட்டிக் கொள்ளாமல் புன்னகை சிதறிடக் கேட்டாள்!

''எல்லாம் விரைவில் நிச்சயமாகும்!'' என்றான் அவன். வடிவாம்பாள் கல்யாணியின் கையைப் பிடித்துக் கொண்டு, ''கல்யாணத்துக்கு என் நடனக் கச்சேரி நிச்சயம் இருக்க வேண்டும்! என்ன சரிதானா?'' என்றாள்.

கல்யாணி சரியென்று தலையசைத்தாள்.

''தலையசைத்தால் போதாது! கையில் அடித்துச் சொல்ல வேண்டும்!'' என்றாள் வடிவு!

அவள் விரும்பியவாறே கல்யாணியும் வடிவாம் பாளின் கையிலடித்து உறுதி கொடுத்தாள். அவர்கள் விடைபெற்றுக் கொண்டு புறப்பட்டதும், மேகநாதன் உள்ளே வந்தான்; சிரித்த முகத்துடன்!

''என்ன விசேஷம்? ஏன் இத்தனை மகிழ்ச்சி?''

வாளுக்குவேலி மேகநாதனின் தோளைத் தட்டிக் கேட்டான்.

''நல்ல விசேஷம்தான்! கல்யாணி நாச்சியாருக்கு சுபயோக சுபதினம் வந்து கொண்டிருக்கிறது! திருமணம் பற்றிப் பேச மிகுந்த தயாரிப்புடனும் பழைய பஞ்சாங்கங் களுடனும் வெள்ளை அய்யர் வந்திருக்கிறார்.''

''அப்படியா? உண்மைதானா மேகநாதா?''

''ஆமாம் - அது மட்டுமல்ல; மணமகன்கள் ஏழெட்டுப் பேருடைய படங்களுடனும் வந்திருக்கிறார்.''

''இதோ வந்து விட்டேன்!'' எனக் கூறிய வாளுக்கு வேலி, கல்யாணி நாச்சியாரின் உச்சந்தலையில் முத்த மிட்டு விட்டு ''உம்! சந்தோஷமாயிரம்மா! கல்யாணம் வரப் போகிறது! மாப்பிள்ளை படங்களைக் கௌதாரி யிடம் அனுப்பி வைக்கிறேன்... படங்களைப் பார்த்துத் தேர்வு செய்யும்போது நான் உடனிருந்தால் உனக்கு வெட்கமாயிருக்குமல்லவா? நீ தேர்வு செய்து முடித்த பிறகு வருகிறேன். பிறகு தீர்மானிக்கலாம்! என்ன

சரிதானா?'' என்று கேட்டுத் தங்கையின் முகத்தையே உற்றுப் பார்த்துக் கொண்டு நின்றான்.

எதையோ சொல்லி விட வேண்டுமென்று ஆவல் அவளது அகத்தில் அலை மோதுவதை முகத்தில் காண முடிந்தது.

''என்னம்மா?'' என்று அன்பு குழைந்திடக் கேட்டான்.

அதற்குள்ளாக அவளுக்கு ஒரு நம்பிக்கை வெள்ளை அய்யர் கொண்டு வந்திருக்கும் அந்தப் படங்களில் வைரமுத்தனின் படம்கூட இருக்கக் கூடுமென்று!

அண்ணனை நோக்கி ''ஒன்றுமில்லையண்ணா'' என்று பதில் கூறிவிட்டுத் தலை குனிந்து நின்றாள். கூடத்து மாடத்திலிருந்த குங்கமச் சிமிழை எடுத்தான். ஏற்கெனவே அவள் இட்டிருந்த பொட்டின் மீது குங்குமத்தை வைத்தான். அவள், அவன் காலில் விழுந்து வணங்கியெழுந்தாள்.

மணமகன் தேர்வு முடிந்து, திருமணமாகி-அதன் பிறகு அண்ணனும் தங்கையும் பிரிய நேரிடுமே என்பதை எண்ணிட இப்போதே அவள் கண்கள் கலங்கின! அதற்காக மாத்திரமல்லாமல் யார் யாருடைய படங்களுடன் அய்யர் வந்திருக்கிறாரோ என்ற கவலையும் சேர்ந்து கல்யாணி சோர்ந்து போனாள்.

வெள்ளை அய்யரைச் சந்திக்க வாளுக்குவேலி மேகநாதனுடன் வெளிக்கூடத்துப் பக்கம் போனான்.

''அவர் படமும் இருக்குமா?''

விழிகள் படபடக்க வினாக்குறியாக நின்று கொண்டிருந்தாள் கல்யாணி நாச்சியார்.





# 25

வெள்ளை அய்யர், மணமகன்களின் படங்கள் திறமை மிக்க ஓவியர்களால் தீட்டப்பட்டு அளவில் சிறியதாகவும் மணமகன்களின் முழு உருவமும் அமைந்ததாகவுமிருந்தவைகளை ஒவ்வொன்றாக வாளுக்குவேலியிடம் காட்டுவதற்கு முனைந்தார். அழகிய அட்டைகளில் அந்தப் படங்கள் வரையப்பட்டிருந்தன. வாளுக்குவேலியைப் போலவே ஆவலுடன் மேகநாதனும், காடையும், கௌதாரியும் அந்தப் படங்களைப் பார்க்கத் தலையை நீட்டிக் கொண்டிருந்தனர். அப்போது கறுத்த ஆதப்பனும் அங்கு வந்து சேர்ந்தான்.

''வா, ஆதப்பா வா! நல்ல நேரத்தில்தான் வந்திருக்கிறாய்... இவர்களில் யார் நமது கல்யாணிக்குத் தகுந்த கணவன் என்று தேர்ந்தெடுக்க நீயும் இந்தக் குழுவில் சேர்ந்து கொள்!'' என்றான் வாளுக்குவேலி.

ஆதப்பனும் அய்யர் காட்டப்போகும் படங்களுக்காக அவரை நெருங்கி உட்கார்ந்து கொண்டான். ஒவ்வொரு படமாக அய்யர் எடுத்து விளக்கிடத் தொடக்கம் செய்தார்.

''இதோ இவன் எழுகோட்டை நாட்டு அம்பலக்காரரின் மகன்-வாட்போர், மற்போரில் வல்லவன்! சாமந்தன் என்பது இவன் பெயர்! வாட்கோட்டை நாட்டு

வாளுக்கு வேலி வீட்டுச் சம்பந்தத்தை இவர்கள் மிகவும் விரும்புகிறார்கள்.''

-படத்துடன் இணைத்து எழுதி வைக்கப்பட்ட மணமகனைப் பற்றிய குறிப்புகளை, வெள்ளை அய்யர் இவ்வாறு படித்துக் கொண்டே படங்களையும் காட்டிக் கொண்டிருந்தார்.

மணமகன் அவ்வளவு அழகனாயில்லையென்று கூறுவதின் அடையாளமாக எல்லோரும் உதட்டைப் பிதுக்கினார்கள்.

''உம்! அடுத்தது!'' என்றான் வாளுக்குவேலி.

''இதோ இளையாங்குடி கூற்றத்துத் தலைவனின் தம்பியின் படம்! வாட்டசாட்டமான உருவம் படைத்தவன். வசீகர மிக்கவன். இவனுக்கு அரும்பூர்க் கூற்றத்தில் பெண் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். கல்யாணியை இவன் பார்த்துவிட்டால் பிறகு வேறொரு பெண்ணை மணக்கவே விரும்ப மாட்டான். நற்குணமிக்கவன். பார்வைக்குச் சாது, பாய்ந்தால் புலி! பெயர் வளவன்!'' அய்யர் காட்டிய வளவனின் படத்தைச் சிறிது நேரம் ஆழ்ந்து கவனித்தான் வாளுக்குவேலி!

தங்கையின் அழகிற்குப் பொருத்தமானவன்தான் என்பதுபோலத் தலையை அசைத்தான்! ஆனால் அவன் தான் விரும்பியதுபோலப் பட்டினத்து வாசியாக இல்லையே என்ற குறையையும் வெளிப்படுத்தி விட்டு ''உம்! அடுத்தது?'' என்றான்.

''இதோ-இந்த மணமகன் வாழவந்தி நாட்டுக்காரன்! பட்டினக்கரைதான் இவனுக்குப் பிடிக்கும்! பிறந்த ஊரில் தங்குவதுமில்லை! அம்பலக்காரரான தந்தைக்குத் துணையாக இருப்பதுமில்லை. ஆங்கிலேயர்களில் சில நண்பர்கள் கூட இவனுக்கு உண்டு! பெயர் சிகாமணி!

போர்ப் பயிற்சி எதுவும் கிடையாது! பாகனேரி சம்பந்தம் கொள்வதிலே இவன் தந்தைக்கு மிகுந்த ஆசை!''

அந்தக் குறிப்பு ஓரளவுதான் மன நிறைவைத் தந்தது வாளுக்குவேலிக்கு!

ஆங்கிலேய நண்பர்கள் இருக்கிறார்கள் என்பதைத் தெரிந்துகொண்ட பிறகு அந்தச் சம்பந்தத்தில் விருப்பமில்லையென்பதை அவனும் ஆதப்பனும் தங்களின் புருவங்களை நெரிப்பதின் வாயிலாகவே வெளியிட்டு விட்டார்கள்.

''உம்! அடுத்தது?''

''இதோ - ஜெயசிங்க குல கால வள நாட்டு மாப்பிள்ளை.''

''உம்! அடுத்தது?''

''இதோ-பூந்துறை நாட்டு மாப்பிள்ளை!''

''உம்! அடுத்தது?''

-வெள்ளை அய்யர், சற்று அவகாசம் கொடுத்து மற்றொரு மணமகனின் படத்தை எடுத்து, அனைவரது முகத்தையும் குறும்புத்தனமாகப் பார்த்துக் கொண்டே நீட்டினார். அந்தப் படம்தான் பட்டமங்கலத்து வைரமுத்தனின் படம்!

''இந்த மாப்பிள்ளையைப்பற்றி நான் வர்ணிக்கவே தேவையில்லை! வல்லத்தரையனின் தம்பி-வலிமையில் அர்ச்சுனனுக்கு ஒப்பானவன், ஏன், இலட்சணத்திலும் கூட அப்படித்தான்'' என்று அய்யர் சொல்லி முடிப்பதற்குள், ''பகையாளி வீட்டில் சம்பந்தமா? கூடவே கூடாது! இவன் படத்தைக்கூட கல்யாணி பார்க்கக் கூடாது!'' என்று ஆத்திரம் பீறிட ஆதப்பன் வைரமுத்தனின் படத்தைப் பிடுங்கி நாலைந்து துண்டுகளாகக் கிழித்தெறிந்தான்.

வாளுக்கு வேலி, தம்பி ஆதப்பனின் செய்கையை ஆதரித்தானா இல்லையா என்பது தெரியவில்லை! ஆனால் அந்தச் சம்பந்தத்தில் அவனுக்கும் விருப்ப மில்லையென்பது புரிந்தது! அதனால் ''உம்! அடுத்தது?'' என்றான் அய்யரைப் பார்த்து!

''இதோ! நீர்வதி நாட்டு மாப்பிள்ளை! இதோ வாராப்பூர் நாட்டு மாப்பிள்ளை! இதோ குன்னு வாரந்திய நாட்டு மாப்பிள்ளை...!''

-என்று படங்களின் பட்டியலை முடித்தார் வெள்ளை அய்யர்!...இதற்கிடையே ஆதப்பனால் கிழித்தெறியப்பட்ட வைரமுத்தனின் படத்தை எடுத்துக் கௌதாரி தனது சேலைத் தலைப்பில் மறைத்துக் கொண்டாள். மற்ற மணமகன்களின் ஓவியப் படங்களைப் பார்ப்பதில் ஆழ்ந்திருந்தவர்கள், கௌதாரியின் அந்தச் செயலைக் கவனிக்கவில்லை.

''முதலில் எல்லாப் படங்களையும் கல்யாணியிடம் அனுப்பலாம். அங்கிருந்து வரவேண்டிய அபிப்பிராயம் தானே முக்கியமானது! இந்தாம்மா கௌதாரி! இந்தப் படங்களையெல்லாம் நாச்சியாரிடம் எடுத்துக் கொண்டு போய்க் காட்டு. நாங்கள் யாரும் இருந்தால் கல்யாணி வெட்கப்படக் கூடும்! நீ கல்யாணியுடன் மனம் விட்டுப் பேசிக் கல்யாணியின் இஷ்டத்தைத் தெரிந்து கொள்!''

என்று வாளுக்கு வேலி கூறியவாறு படங்களைக் கௌதாரியின் கைகளில் ஒப்படைத்தான். அவள் அவை களை வாங்கிக் கொண்டு துள்ளிக் குதித்துக் கல்யாணி இருக்குமிடம் தேடி ஓடினாள்.

''திருமணத்தை எப்படியும் விரைவில் முடித்து விட வேண்டுமென்று விரும்புகிறேன். வெள்ளையரை எதிர்த்து மருது சகோதரர்களும் கோபால நாயக்கரும் நமது

கள்ளர் நாடுகளைச் சேர்ந்த படைவீரர்களும் நடத்துகிற போராட்டம் எங்குப் போய் முடியுமோ தெரியவில்லை! அதனால் அதற்குள் தங்கையின் மணவிழாவைக் கண்டு களித்திட வேண்டும்! என்ன அய்யர் அவர்களே! நான் சொல்வது சரிதானா?''

''வாளுக்குவேலித் தேவரின் வேதனை எனக்கும் புரிஞ்சுதான் இருக்கு! ஆனா ஒண்ணு! இப்போதைக்குச் சில இடங்களில் இங்கிலீஷ் கம்பெனியான் தோற்பது மாதிரி இருந்தாலும் முடிவான நிலைமை அவனுக்குத் தான் சாதகமா இருக்கும் போலத் தோணுது! ஒரு உண்மையைச் சொல்றேனே! பாகனேரியும் பட்ட மங்கலமும் கேவலம் ஒரு ஜல்லிக்கட்டுக் காளையை வச்சு இந்த அளவு மோதிக்கொள்ற நிலைமையை ஏற்படுத்தித் தீராத விரோதத்தையும் ஏற்படுத்தியிருக்கிறது அந்தக் கம்பெனிக்காரன் சூழ்ச்சிதானே!''

''அய்யர் அவர்களே! நீங்கள் சொல்வது எனக்குத் தெரியாமல் இல்லை! பாகனேரி மீது பட்டமங்கலத் தாருக்கு நீண்ட நாள் பகையிருக்கிற காரணத்தால்தானே ஆங்கிலேய அதிகாரிகள் சொல்வதையெல்லாம் கேட்டுப் பட்டமங்கலத்து அம்பலக்காரக் குடும்பத்தினர் நம்மீது பகை கக்குகிறார்கள்... எனக்குக் கிடைத்த தகவலின்படி அந்த உறங்காப்புலி உசுப்பிவிட்டுத்தான் வல்லத்தரையன் திடீரென வம்புக்கு வர நேரிட்டது என்பதுதான் உண்மை!''

''என்னமோ, விதி வசத்தால் வல்லத்தரையன் வாழ்வும் முடிந்து விட்டது! ஆனால் தம்பிக்காரன் வைர முத்தன் இருக்கிறானே அவன் கொஞ்சம் நிதானமானவன். என்னோடு அவன் கலந்து பேசின பல நேரங்களில் கவனிச் சிருக்கேன்; பாகனேரி மீது பகை உணர்ச்சியோட அவன் பேசினதா தெரியவே இல்லை!''

வெள்ளை அய்யரும் வாளுக்குவேலியும் இவ்வாறு உரையாடிக் கொண்டிருக்கும்பொழுது கறுத்த ஆதப்பனால் குறுக்கிடாமல் இருக்க முடியவில்லை. தன்னுடைய மறுப்புக் கருத்தை வெளியிடத் தயங்காமல் அவன் அவர்களிடம் சற்று சீற்றத்துடனே சொன்னான்:

''வைரமுத்தனைப் பற்றி நீங்கள் போட்டிருக்கிற கணக்குத் தவறு! தவறு! அவனும் நமக்குப் பரம எதிரி தான்! பார்ப்பதற்கு நல்லவனைப் போலவும், பாகுமொழி பேசுபவனாகவும் இருப்பதைக் கண்டு நான் ஏமாறத் தயாராக இல்லை! பாகனேரி-பட்டமங்கலம் இரு நாடுகளும் ஒற்றுமையாக இருக்க வேண்டுமென்று விரும்புகிறவனைப்போலப் பாசாங்கு செய்கிறான். ஆனால் -சமயம் கிடைத்தால் பாகனேரியை விழுங்கு வதற்குச் சதி நடத்தத் தயங்க மாட்டான்!''

அண்ணன் குறுக்கிட்டான்; ''ஆதப்பா!'' என்று சற்றுப் பதட்டமுடன்!

''மன்னித்துக் கொள்ளுங்கள் அண்ணா! நான் இளமைத் துடிப்பில் ஆத்திரப்பட்டுப் பேசுவதாக நினைப்பீர்கள். உண்மை சில நேரங்களில் கரடு முரடான சொற்களின் மீதும் நடக்கும்! பொய்யைப் போல அதற்கு வழுவழுப்பான பளிங்குத் தரையில் நடை பயிலத் தெரியாது!''

-என்று அண்ணனுக்குப் பதில் அளித்தான் ஆதப்பன். இவர்களுடைய வாக்குவாதம் தொடர்ந்து நடைபெற்றுக் கொண்டிருக்கும்போது, உள்ளே சென்ற கௌதாரி இன்னமும் திரும்பி வரவில்லையே என்று அடிக்கடி அவள் காலடி ஓசை கேட்கிறதா என்பதையே காதைத் தீட்டிக் கவனித்துக் கொண்டிருந்தான் வாளுக்கு வேலி!

கௌதாரி ஒவ்வொரு மணமகனின் படமாகக் கல்யாணியிடம் காட்டியபோது, குவித்திருக்கும் முத்துக் களிலே கொற்கை முத்தினைத் தேடுவதுபோல -வண்ண மிகு சங்கினங்களுக்கிடையே வலம்புரிச் சங்கினைத் தேடுவது போல - அத்தனைப் படங்களுக்கிடையிலே, தன் மனத்தில் அத்தானாக வரித்துக் கொண்டவனின் படத்தைத்தான் அவள் கண்கள் தேடின. ''அந்தப் படம் இல்லையா?'' கல்யாணி கௌதாரியிடம் கேட்டே விட்டாள்!

கௌதாரி தயங்கினாள்; ஆனாலும் சேலைத் தலைப்பில் மறைத்து வைத்திருந்த அந்தக் கிழிக்கப்பட்ட படத்தின் துண்டுகளைக் கல்யாணியிடம் கை நடுக்கத் துடன் கொடுத்தாள். கிழிந்த பகுதிகளை இணைத்து வைத்துப் பார்த்த நாச்சியாரின் விழி நீர், ஆடிப் பெருக்கில் ஆற்றுவெள்ளமென இமை புரண்டு வழிந்தோடியது.

''என்னம்மா முடிவு செய்தாய்?'' என்று ஆவல் ததும்பிடக் கேட்டுக் கொண்டே வாளுக்குவேலி அங்கு வந்து சேர்ந்தான். தொடர்ந்து வந்த கறுத்த ஆதப்பனும் வெள்ளை அய்யரும் சற்றுத் தொலைவிலேயே நின்றனர்.

அண்ணன் குரலைக் கேட்டதும் கல்யாணி எல்லாப் படங்களையும் ஒன்றாக அடுக்கிக் கொண்டு அவனைத் திரும்பிப் பார்த்தாள்! தங்கை அழுது கொண்டிருக்கிறாள்! வாளுக்குவேலியின் இருதயத்தில் இரத்தம் கசிந்தது!

''கல்யாணி! என்ன இது? ஏன் அழுகிறாய்?''

அவளுக்கு எங்கிருந்துதான் அந்தத் தைரியம் வந்தது? அண்ணனை எதிர்த்துக் கடுமையாக ஒரு சொல் பேசி அறியாதவள்; அழுதபடியே கேட்டாள்-ஆனால் அழுத்தம் திருத்தமாகக் கேட்டாள்!

''இந்தப் படத்தை யார் கிழித்தது?''

வாளுக்குவேலி மௌனமானான்!

தொலைவில் நின்ற ஆதப்பன் ''நான்தான் கிழித்தெறிந்தேன்!'' என்று சொல்லிக் கொண்டே அவர்களின் அருகே வந்தான்.

''என் கணவன் யாராக இருக்கவேண்டுமென்று தேர்வு செய்யத்தானே என்னிடம் இந்தப் படங்களை அனுப்பினீர்கள்; பிறகு எதற்காக அந்தத் தேர்வுக் குள்ளேயே ஒரு தலையீடு?''

''தலையீடு இல்லை கல்யாணி! தம்பிக்குப் பட்ட மங்கலத்துச் சம்பந்தம் பிடிக்கவில்லை! எனக்கும் கூட...''

''இருவருக்கும் பிடிக்கவில்லையென்றால்...எனக்கும் பிடிக்காமல் இருக்க வேண்டுமென்பதுதான் நியாயம்! அந்த நியாயத்தின் அடிப்படையில் உங்களிருவரின் விருப்பம்போல என் மனதை மாற்றிக் கொள்கிறேன்!''

அண்ணனுக்கும் தம்பிக்கும் நிலை கொள்ளாத மகிழ்ச்சி! தங்கை இவ்வளவு சீக்கிரம் தங்கள் கருத்தை ஒப்புக் கொள்வாள் என்று வாளுக்குவேலி எதிர்பார்க்க வில்லை!

''ஆனால் ஒரு நிபந்தனை அண்ணா! எப்படி உங்கள் அபிப்பிராயத்துக்கு நான் உடன்பட்டேனோ அதே போல என் நிபந்தனையொன்றுக்கும் நீங்கள் உடன்பட வேண்டும்!''

-என்று அவள் சொல்லி முடிப்பதற்குள் ''அப்படி யென்னம்மா நிபந்தனை?'' என்று பெரிய அண்ணன் கேட்டான். சின்ன அண்ணன் தங்கையின் முகத்தையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தான்.

''பட்டமங்கலத்துச் சம்பந்தம் உங்களுக்குப் பிடிக்க வில்லை! சரி! நான் திருமணமே செய்து கொள்வதில்லை யென்று முடிவு எடுத்திட நீங்கள் என்னை அனுமதிக்க வேண்டும்! ஏன் என்றால் அது என் இஷ்டத்தைப் பொறுத்தது.''

வாளுக்கு வேலியினால் வேதனையை அடக்கிக் கொள்ள முடியவில்லை! ''கல்யாணீ!'' என்று கதறி விட்டான்.

அவள் செந்தாமரைக் கன்னங்களில் உருண்டோடும் கண்ணீர்த் துளிகளைத் தன் கரம் கொண்டு துடைத்தவாறே ''இப்படியொரு முடிவு எடுக்க உனக்கு என்னம்மா நாங்கள் தீங்கு செய்து விட்டோம். ஏன் கல்யாணி திடீரென்று இந்தத் தீர்மானத்திற்கு வந்தாய்?'' என்று நாத் தழுதழுத்திடக் கேட்டான்.

''இதைக்கூடவா உங்களால் புரிஞ்சிக்க முடியலே! ஒரு அடக்கமான தங்கச்சி தன்னோட அண்ணன்களுக்கு நேராக-நான் வைரமுத்தன் மீது காதல் கொண்டு விட்டேன். அவரை மணக்க என் மனதில் கோட்டை கட்டி விட்டேன். அவரைப் பிரிந்து என்னால் வாழ முடியாது. அப்படிப் பிரியத்தான் வேண்டுமென்று நீங்க வற்புறுத்தினா எனக்குக் கல்யாணமே தேவையில்லை!... வாழ்ந்தா வைரமுத்தனோடு வாழ்வேன்... இல்லேன்னா கன்னிகையாகவே என் காலத்தைக் கழிக்கிறேன், அப்படின்னு விபரமாகவா சொல்லிக்கிட்டிருக்க முடியும்! வேணும்னா, கல்யாணியோட மனசைப்பத்தி கௌதாரி கிட்ட கேளுங்களேன்...''

வெள்ளை அய்யர், கல்யாணிக்காக நன்றாகவே வக்காலத்து வாங்கிப் பேசி விட்டார்.

வாளுக்குவேலி, தூண் மறைவில் நின்ற கௌதாரியை நோக்கி-அமைதியாகக் கேட்டான்; ''என்னம்மா கௌதாரி?'' என்று!

''ஆமாங்க எஜமான்! கல்யாணி அம்மாவுக்கு பட்ட மங்கலத்து மாப்பிள்ளை மேலே உசிருன்னா உசிரு!''

கௌதாரியின் பதில் வாளுக்குவேலியையும் ஆதப்பனையும் திணறச் செய்தது.

வெள்ளை அய்யர் தொடர்ந்து வாதிட்டார்.

''இப்படிக் கூட யோசனை பண்ணிப் பார்க்கலாம்! பல காலமா வளர்ந்து வர்ற விரோதம், சூரியனைக் கண்ட பனி போல விலகி-பாகனேரிக்கும் பட்டமங்கலத்துக்கும் ஒரு பாசமே உருவாகி, யாராலும் அசைக்க முடியாத ஒற்றுமைக்கு, கல்யாணி-வைரமுத்தன் கல்யாணமே காரணமா அமையலாம் இல்லியா? பொழுது விடிஞ்சு பொழுது போனா, பொது எதிரியை மறந்துட்டு உங்களுக்குள்ளே ஒருத்தருக்கொருத்தர் உறுமிகிட்டு நிக்கிறது நல்லதான்னு நினைச்சுப் பாருங்க!''

''அய்யர் அவர்களே! என்னதான் அமைதியாகப் போனாலும், அமைதியைக் கோழைத்தனம் என்று கருதிக் கொக்கரிக்கும் குதர்க்க மதி கொண்டவர்களாகத்தானே பட்டமங்கலத்து அம்பலக்காரக் குடும்பத்தினர் இது வரையில் நடந்து கொண்டிருக்கிறார்கள்- இனியும் அப்படித்தானே நடப்பார்கள்?''

-கறுத்த ஆதப்பன் கடுமையான தொனியிலேயே தனது மறுப்பைத் தெரிவித்தான்.

''தம்பி! அய்யர் சொல்வது சரியோ இல்லையோ- அதைப் பற்றி எனக்குக் கவலையில்லை! ஆனால் ஒன்று - கல்யாணிக்குத் தனது வாழ்க்கைத் துணைவனைத் தேர்ந்து எடுத்துக் கொள்ள முழு உரிமையும் உண்டு! இதுவரையில் கல்யாணியைக் கண் கலங்க விட்டதில்லை! இனியும்...''

''கண் கலங்கக் கூடாது என்றுதான் அண்ணா, எனது கருத்தைச் சொல்லுகிறேன்.''

ஆதப்பனும், வாளுக்கு வேலியும் மாறி மாறிப் பேசிக்கொண்டிருப்பதைக் கல்யாணி விரும்பவில்லை.

''அண்ணா! என் பிரச்சினையை உங்கள் முடிவுக்கே விட்டு விடுகிறேன்.''

அப்படிச் சொன்னாளே தவிர, அவளது உள்ளக் குமுறலை அவளால் மறைத்துக் கொள்ள முடியவில்லை!

வாளுக்குவேலி சிறிது நேரம் அசைவற்று நின்றான். ''என் முடிவுக்கே விட்டு விடுகிறாய் அல்லவா?'' என்று நிதானமாகக் கேட்டான்!

கல்யாணி தலை நிமிரவில்லை.

''என் முடிவு யாரும் மாற்ற முடியாத முடிவு! வைரமுத்தன்தான் கல்யாணிக்கு ஏற்ற வரன்!''

இப்படி அறிவித்தவன் அய்யரிடம் கேட்டான்: ''இதற்கு வைரமுத்தன் சம்மதம் வேண்டாமா?'' என்று!





# 26

வாளுக்கு வேலியின் திடீர்ச் சந்தேகத்தைப் போக்குகிற வகையில் வெள்ளை அய்யர், தனக்கே உரித்தான ஒரு சிரிப்பைச் சிரித்துவிட்டு, ''பிரச்சினையை என்னிடம் விட்டாச்சு! இதை வெற்றிகரமா முடிச்சி, 'ஜாம் ஜாம்'னு கல்யாணத்தை நடத்திட வேண்டியது என் பொறுப்பாகும்!'' என்று உறுதியளித்துவிட்டு, அன்றைக்கே பட்டமங்கலத்திற்குப் புறப்பட்டு விட்டார்.

அய்யர் கொண்டுவந்த செய்தி கேட்டு உறங்காப்புலி தாண்டிக் குதித்தான். ''வைரமுத்தனுக்கும் கல்யாணிக்கும் திருமணமா? பாகனேரியை வேரோடும் வேரடி மண்ணோடும் சாய்ப்பதை விட்டுவிட்டு அந்தப் பாவிகளுடன் பட்டமங்கலத்துக்குச் சம்பந்தி உறவா? வெள்ளை அய்யர் அவர்களே! இந்த வீண் முயற்சியைக் கை கழுவிவிட்டு வேறு வேலையிருந்தால் பாருங்கள்!''

கணவரின் கருத்தேதான் தனது கருத்தும் என்று வீரம்மாள், கண்கள் சிவக்கக் கூறினாள்.

நீண்ட விவாதம் நடைபெற்றது. ஆனால் வைரமுத்தன் வாய் திறக்கவேயில்லை. அவனது மனத்திரையில் கடந்த கால நிகழ்ச்சிகள் வண்ண ஓவியங்களாக, வானத்து முகில்களைப் போல் ஓடிக் கொண்டிருந்தன.

பாகனேரித் தேர்த் திருவிழாவில் கல்யாணியின் கண்களும் வைரமுத்தனின் கண்களும் மலர்க்கணை களாகப் புறப்பட்டு ஒன்றோடொன்று மோதிக் காதல் மணம் பரப்பியதும்-தேர் இழுக்கத் தொடங்கிய போது வடத்தைப் பிடித்திருந்த இருவரின் உடல்களும் ஒன்றோடொன்று மோதி, இருவர் இதயங்களையும் இன்ப இசை கொட்டும் இனிய வீணையாக மாற்றியதையும்-விருந்துக்குப் போனபோது விரகதாபம் தணிக்க மருந்தின்றி இருவரும் தவித்ததையும் பாகனேரிக் குள் புகுந்த காளையை எதிர்த்திட வந்த அந்த எழிலார் பாவையிடமிருந்து கட்டாரியை வாங்கி முத்தமிட, இவளும் அந்தக் கட்டாரிக்கு முத்தமிட்டதையும்-நெஞ்சினிக்க அவன் நினைத்துச் சுவைத்து ஆனந்தத் தென்றலில் மிதந்து கொண்டிருந்தபோது - அம்மவோ! அந்தத் திடீர் மின்னல் - பேரிடி முழக்கம்-பெருமழையின் சாட்டையடி - புலியின் சீற்றம் - எல்லாமே அவனை நிலை குலைத்தன!

தனது ஆருயிர் அண்ணன் வல்லத்தரையன் தலைமுடி வெட்டப்பட்ட அவமானகரமான நிகழ்ச்சி! மானம் மானமென எக்காளக் குரல் கொடுத்துக் கொண்டு அந்த மாவீரன்-கள்ளர்குலப் பெருந்தலைவன்; காளையின் கொம்புகளில் தன் உயிரைப் பட்டுக் குஞ்சமாகக் கட்டிய அந்தக் குலைநடுங்கும் காட்சி!

வைரமுத்தன், அய்யரும் மற்றவர்களும் உரையாடிக் கொண்டிருந்த இடத்தை விட்டு மாளிகையின் பின்புற மாடத்திற்குச் சென்று, ஒரு பெரிய தூணில் கையை அழுத்திக் கொண்டு வானப்பரப்பை வெறிக்கப் பார்த்துக் கொண்டிருந்தான். குளமாகியிருந்த கண்கள், கொஞ்ச நேரத்தில் வறட்சி காலத்துச் செம்மண் ஏரியைப்போல் ஆகிவிட்டன.

வல்லத்தரையன் உயிரோடு இல்லை! ஆனால் அவன் வலிமை வாய்ந்த சிங்கக்குரல் வைரமுத்தனின் இதய அரங்கத்தில் ஓங்கி ஒலித்துக் கொண்டிருந்தது.

"தம்பீ! வைரமுத்தா! உன்னை வயிற்றில் சுமந்தாள் நமது அன்னை! நான் நாளெல்லாம் தோளில் சுமந்தேனடா உன்னை! உன்மீது ஒரு தூசு தும்பு படக் கூடாதென்று நம் தாயும் தந்தையும் பாதுகாத்ததை விட, நான்தானடா அதில் மிக அக்கறை எடுத்துக் கொண்டேன்! எனக்கு மணமாகி எனக்கொரு பிள்ளை பிறந்தால் பட்டமங்கலத்து வாரிசு நீ இல்லை என்று ஆகிவிடுமே என்பதற்காகத்தானடா பிரம்மசாரியாகவே வாழ முடிவெடுத்தேன். இப்படியொரு அன்புத் தம்பிக்காக நெஞ்சக் கூடாரம் முழுவதையும் ஒதுக்கி வைத்துள்ள அண்ணனைப் பார்ப்பது அவ்வளவு எளிதல்லடா எனதருமை வைரமுத்தா!

"ஆனால் எனக்கேற்பட்ட களங்கத்தைக் கண்டாயா? பட்டமங்கலத்துக் கீர்த்தி மகுடத்தால் அணி செய்யப்பட்ட உன் அண்ணனின் தலைமுடி, பாகனேரித் தரைப் புழுதியில் புரண்ட காட்சியை உன்னால் எண்ணிப் பார்க்கவாவது முடிகிறதா? நமது குலம் மண்ணை இழக்கலாம்! மாடமாளிகைகளை-மணி மகுடங்களைக்கூட இழக்கலாம்! ஆனால் மானத்தையிழக்க முடியுமாடா தம்பீ!

நம்பவே முடியாத ஒன்று நடந்து விட்டதே! மான உணர்வுக்கு என் ஆவியையே அர்ப்பணம் செய்து விட்டேனே! இவ்வளவுக்கும் பிறகு-திருமணம், சம்பந்தம் என்று இச்சகம் பேசிக்கொண்டு வருகிறார்களே எவ்வளவு கீழான எண்ணம் இவர்களுக்கு நம்மைப் பற்றி!

பாவம்; உனக்குப் பெரிய சிக்கல்தான்! இங்கே பார்த்தால் அண்ணன்-அங்கே பார்த்தால் ஆருயிர்க் காதலி! பழைய பாசமா? புதிய நேசமா? இப்படியொரு பயங்கரப் போராட்டத்தில் தவிக்கிறாய் நீ!

என்ன இருந்தாலும் இறந்து விட்டவன் நான்! முடிந்து போன கதை! இனித் தொடர வேண்டிய கதையின் இன்பக் கனவுகளின் பாதிப்புத்தானே உன்னை ஆட்டிப் படைத்துக் கொண்டிருக்கும்!

இல்லையா தம்பி-ஏனப்பா மௌனம்? உன் அக்காள்! என் தங்கை வீரம்மாளின் கணவன் செக்கு மாடாக ஆக்கப்பட்டான். நமது குலப்பெருமை கூறும் காளைக்கும் அதே கதிதான்.

எனக்கு ஏற்பட்ட மானபங்கமோ என் இரத்தத்தால் மட்டும் கழுவக் கூடியதல்ல. நீ இருக்கிறாய்-உன் நெஞ்சில் அணையாத வீரத் தீயிருக்கிறது என்று நம்பித் தான் நான் திரும்பாதவூருக்குச் சென்றேன். இப்போதோ விரும்பாதவூர்ச் சம்பந்தம் உன்னை விழிகாட்டி அழைக்கிறது!

ஏற்றுக் கொள்ளத்தான் போகிறாயா? உறங்காப் புலியின் உள்ளத்தில் குடிகொண்டிருக்கிற உறுதியும் துணிவும் பழி வாங்கும் வீரமும் உன்னிடமில்லாமல் எப்போதடா தம்பி-பட்டுப்போனது? வீரம்மாள் பெண் தானே! அந்தப் பெண்புலி இன்னும் சீறிக் கொண்டிருக் கிறது - நீ மட்டும் எப்படியப்பா வெண்ணிலவாய்க் குளிர்ந்துவிட முடிந்தது? உறங்காப்புலி மட்டுமல்ல- வீரம்மாள் மட்டுமல்ல-இந்தப் பட்டமங்கலமே ஏற்றுக் கொள்ளாத சம்பந்தம்; என் ''ஆத்மா''வைச் சாந்தியடைய வைக்க முடியாத சம்பந்தம்; அதையா நீ ஏற்றுக் கொள்ளப் போகிறாய்?

பட்டமங்கலத்தின் மான உணர்ச்சிப் போர்க் கொடியைத் தூக்கிப் பிடிப்பாய் என்றல்லவா எதிர்பார்த்தேன்! நீ அந்தப் பாகனேரிக்காரியின் கழுத்தில் கட்டத் தாலிக் கொடியை அல்லவா தாங்கிப் பிடிக்க யோசனை செய்கிறாய்? என்னுடன் பிறந்தவனே! எல்லோரும் ஏற்காத ஒன்றை நீ எப்படி ஏற்கப்போகிறாய்''

-உள்ளத்தில் ஒலித்த அண்ணனின் கேள்விகள் ஒன்று பத்து நூறு ஆயிரம் என்று உருவெடுத்தன!

''ஏற்கத்தான் போகிறேன்'' என்று வாய்விட்டுக் கூறிக்கொண்டே வைரமுத்தன் வேகமாகத் திரும்பினான்.

அவன் திரும்பிய பக்கத்தில் வெள்ளை அய்யரும், உறங்காப்புலி, வீரம்மாள் ஆகியோரும் இருந்தனர்.

''வைரம்! என்ன சொல்லுகிறாய்? நீதான் பேசுகிறாயா? ஏற்கத்தான் போகிறாயா? யாரை?''

''அக்கா! பாகனேரி சம்பந்தத்தைத்தான் ஏற்றுக் கொள்ளப் போகிறேன்!''

உறங்காப்புலி உறுமிக் கொண்டே முத்தனின் முன்னே வந்து நின்று ''இதைவிடப் பெரிய துரோகம் உன் அண்ணனுக்குச் செய்யவே முடியாது!'' என்று கத்தினான்.

''அப்படியானால் என்னை நம்பியிருக்கும் அந்தக் கள்ளமிலாப் பாவை கல்யாணிக்குத் துரோகம் செய்யலாம் என்கிறீர்களா?''

வைரமுத்தன் உறங்காப்புலியையும் வீரம்மாளையும் ஒருசேர நோக்கினான்.

''நீ நினைத்தால் நிலவையே பிடித்துப் பெண்ணாக்கிக் கொண்டு வரலாம்! அதை விடுத்து நெருப்புக்குப் பஞ்சு மெத்தை விரிக்கப் போகிறேன் என்கிறாயே நியாயமா?'' உறங்காப்புலியின் குரல் சற்றுத் தணிந்து பணிந்து அறிவுரை கூறும் பாணியில் அமைந்திருந்தது.

வைரமுத்தன் கல்யாணியின் மீது கொண்ட காதலையே முதலாக வைத்துப் பட்டமங்கலம் பாகனேரிப் பகைமையைக் களைந்திட இதுவே தக்க தருணமென்று கருதிய வெள்ளை அய்யர் குறிப்பிட்டார் -

''பெண் பாவம் பொல்லாதது உறங்காப்புலி! வீரம்மா! நீயும் யோசித்துப் பார்! உனக்கு இப்படியொரு அனுபவம் ஏற்படாத காரணத்தால் கல்யாணி எப்படிக் கலங்கித் தவிப்பாள் என்பதைப் புரிந்து கொள்ள முடியவில்லை. தெய்வ சங்கல்பம் கல்யாணியையும் வைரமுத்தனையும் பிரேமை கொள்ளச் செய்துவிட்டது. இன்னார்க்கு இன்னார் என்று அவரவர் தலையிலே எழுதிப் போட்டிருக்கும்போது அதை மாற்ற முடியுமோ? எப்படியோ இரண்டு அம்பலக்காரர் குடும்பங்களுக்கும் பகை வளர்ந்து போச்சு. அதைப் பெரிசா ஆக்கிட்டே போயி இரண்டு நாடுகளும் அழிஞ்சு போறதிலே யாருக்கு இலாபம்? இங்கிலீஷ் கம்பெனிக்காரனுக்குத்தான் இலாபம்! சரித்திரத்திலே எத்தனையோ அரச குடும்பங்கள் ஒன்றோடொன்று வெட்டுப்பழி குத்துப்பழியா சண்டை போட்டுக்கிட்டிருந்து, கடைசியிலே கொள்வினை கொடுப்பினைகளாலே ஒற்றுமையா ஆகியிருக்கின்றன! பேசாம வைரமுத்தன் இஷ்டத்துக்கு விடுங்க! எல்லாம் நல்லதா நடக்கும்!''

அய்யரின் இந்த உபதேசத்தை உறங்காப்புலி ஒப்புக் கொள்ளத் தயாராயில்லை. எல்லாம் நல்லதாக நடப்பதா? அப்படி நடக்காமல் பார்த்துக் கொள்ளத்தானே அவன் அக்னியூ துரையிடம் அவ்வப்போது பெற வேண்டியதைப் பெற்றுக் கொண்டு காரியமாற்றுகிறான். வெள்ளை அய்யர் பேச்சைக் கேட்டால் அவனது குறிக்கோள் நிறைவேறுமா?

''சாமீ! நாங்களே ஒத்துக்கிறதா வச்சுக்கிங்க! நாளைக்கு இந்த ஊர் ஒத்துக்குமா? பாகனேரிக்காரங்க பட்டமங்கலத்தை அவமானப்படுத்தினது மாத்திரமல்ல; பெண்ணையும் கொடுத்து இப்படிப் பெட்டிப்பாம்பா அடக்கியும் போட்டுட்டாங்கன்னு ஊர் பேசாதா? என்ன வந்து கிடக்கு சகோதரப் பாசம்? அண்ணன் செத்து

மடிஞ்சது கூடப் பெரிசில்லே; மானபங்கப்பட்டுத் தற்கொலையே செய்துக்கிட்டிருக்கார்! அதுக்குக் காரணம் யாரோ அவுங்க வீட்டுப் பெண்ணுக்கே தம்பி தாலி கட்டி விட்டான்னு ஊர் சிரிக்காதா?''

வீரம்மாளின் கண்கள் நீரைப் பொழிந்தன. உறங்காப்புலி அவளைச் சமாதானப்படுத்தினான்.

''நீ ஏன் அழுகிறாய்? என் இளைய மைத்துனர் அப்படியொன்றும் சிந்திக்கும் ஆற்றலை இழந்துவிட்டவரல்ல! பட்டமங்கலத்துப் பெருமையைக் காப்பாற்றுவதில் நம்மை விட அதிகப் பொறுப்பு அவருக்கு இருக்கிறது!''

உறங்காப்புலி வீரம்மாளின் கண்ணீரைத் துடைத்து விட்டான். சமாதானம் செய்யச் செய்ய அவள் அழுகை அதிகமாயிற்று. அய்யர் வைரமுத்தனைப் பார்த்து ''நான் அங்கே திரும்பிப்போய் என்ன சொல்லட்டும்?'' என்று கேட்டார். அவன் விடையளிப்பதற்குள் உறங்காப்புலியே அய்யரைப் பார்த்து ஆத்திரமாகக் கத்தினான்.

''என்ன சொல்வது? அதோ தெரியும் சகோதரனின் கல்லறையையும் இதோ பொழிந்திடும் சகோதரியின் கண்ணீரையும் காணுகிற எந்த ஒரு உடன்பிறப்பும் பகைவனுக்கு இரையாகிப் பட்டமங்கலத்தைக் காட்டிக் கொடுக்க மாட்டான்! இதையே போய்ச் சொல்லுங்கள் பாகனேரிக்காரர்களிடம்!''

இப்படி உறுதி தொனிக்கப் பேசிப் பிரச்சினையை முடித்து விட்டதாக எண்ணிய உறங்காப்புலி, வைரமுத்தனின் தோளைக் குலுக்கி ''என்ன மைத்துனரே! சரிதானே!'' எனக் கேட்டான்.

''சரிதான் என்று சொல்லு தம்பி!'' எனக் கெஞ்சினாள் வீரம்மாள்.

''ஏன் அவசரம்? ரெண்டு நாட்கள் நேரம் எடுத்துக் கொண்டு நன்றாக யோசனை பண்ணச் சொல்லுங்களேன்'' என்று சமாளிக்க முயன்றார் வெள்ளை அய்யர்!

''அதெல்லாம் வெட்டு ஒன்று துண்டு ரெண்டுதான்! இதில் யோசிப்பதற்கு என்ன இருக்கிறது?''

வீரம்மாள் தீர்மானமாகப் பேசினாள்.

''ஆமாம்! வீரம்மா சொல்வதுதான் சரி!'' என்று முத்தாய்ப்பு வைத்தான் உறங்காப்புலி!

''வைரமுத்தா! உன் அக்காளும் உன் மைத்துனரும் கொண்டுள்ள கொள்கையே உன்கொள்கை! ஆமாம்; அப்படித்தான் இருக்க வேண்டும்! இங்கு வந்து வாழ வேண்டிய பெண் கல்யாணி! வாழவைக்க வேண்டியவர் களில் நீதான் பிரதானமானவன் என்றாலும் உன் அக்காள் ஒப்புதலும் அன்பும் இல்லாமல் அவளால் இங்கு அமைதியான வாழ்வு நடத்த முடியாது; அதனால் நான் போகிறேன்'' என்று முடிவுரை கூறிவிட்டுக் கிளம்பினார் வெள்ளை அய்யர்!

''இருங்கள்!'' என்று அவரைத் தடுத்தான் வைரமுத்தன்.

''ஓ! யோசிப்பதற்கு இரண்டு நாள் அவகாசம் கொடுங்கள் என்கிறாயா?''

''இல்லை அய்யர் அவர்களே! இப்போதே பதில் சொல்லிவிடுகிறேன்! வெட்டு ஒன்று துண்டு இரண்டு என்ற முறையிலேயே பதில் சொல்லி விடுகிறேன்.''

''பாகனேரி சம்பந்தம் வேண்டவே வேண்டாம் என்ற பதில்தானே?''

''இல்லை! கல்யாணியைத் திருமணம் செய்து கொள்ள நான் சம்மதிக்கிறேன்.''

''தம்பி!''

''மைத்துனரே!''

வீரம்மாளும் உறங்காப்புலியும் வியப்புடன் அவனைப் பார்த்தனர்.

''ஆமாம்! இந்த முடிவில் மாறுதலே இல்லை!'' என்று வைரமுத்தன் கூறிவிட்டு அந்த இடத்தை விட்டு வேகமாகச் சென்றான்.





# 27

வைரமுத்தனுக்கும் கல்யாணிக்கும் திருமணம் நிச்சயிக்கப்பட்ட செய்தி கேட்டுப் பட்டமங்கலத்து மக்கள் வியப்புற்றார்கள் என்றாலும் பலநாள் பகை ஒழிகிறது என்ற பெருமூச்சுடன் தங்களின் மகிழ்ச்சியையும் வெளிப்படுத்தினார்கள். பாகனேரி மக்களும் விவாக உறவு உதயமாவதின் காரணமாக நெடுநாள் விரோத உணர்வென்னும் பனி மூட்டம் விலகுகிறது என எண்ணிப் பூரித்துப் போயினர்.

கைக்கெட்டாது போய்விடுமோ கரும்பு என்று கலங்கிய நேரத்தில் அந்தக் கரும்பே தன்னைத்தானே பிழிந்து கொண்டு இனிய சாறினை இளம் பிள்ளையின் வாயில் பொழிந்தால் எப்படியிருக்குமோ அப்படியொரு இன்ப சுகத்தால் இதயம் மலர்ந்திடக் கல்யாணி நாச்சியார் களிபேருவகைக் கூத்தாடினாள்.

காடை, கௌதாரி இருவரின் பாடு மிகவும் திண்டாட்டமாகப் போய் விட்டது! திருமணம் நிச்சயிக்கப்பட்டது என்ற செய்திக்கே அவர்களுக்கு அவ்வளவு பரிசுகளை அவள் வாரி வாரி வழங்கினாள்.

சுந்தராம்பாளிடம் வாளுக்கு வேலி இந்தச் செய்தியைச் சொன்ன போது அவள் கொண்ட மகிழ்ச்சிக்கும் அளவே இல்லை. இருந்தபோதிலும் அவள்

அவனிடம் கேட்டாள்: ''நீண்ட நாள் விரோதமாயிற்றே - நெருப்பும் நீரும் போல! இரண்டு குடும்பங்களுக்கும் ஒத்து வருமா?'' என்று. அதற்கு வாளுக்கு வேலி சிரித்துக் கொண்டே பதில் சொன்னான்!

''நீரின் இயல்பு நெருப்பை அணைப்பதுதானே! நெடுநாளைய பகைத் தீ அணையவும் கூடுமல்லவா? அதனால்தான் கல்யாணியின் விருப்பத்திற்கு நான் கடுமையான எதிர்ப்புத் தெரிவிக்கவில்லை! அது மட்டுமல்ல; நீயும் எவ்வளவு நாளைக்குக் காத்திருப்பாய்?''

சுந்தராம்பாளை வெட்கம் முற்றுகையிட்டது! தலையைக் குனிந்து கொண்டே அவனிடம் கேட்டாள்: ''உங்களுக்கு மட்டும் என்னவாம்! எனக்கு மட்டுந்தானா?'' என்று! வாளுக்கு வேலி, அவள் தலை கவிழ்ந்து நாணத்துடன் பேசுவதிலும் கூட ஒரு கலையழகு மிளிர்வதைக் கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தான். சுந்தராம்பாள் சற்றுத் துணிவு பெற்றவளாய் அவனது கரங்களைப் பற்றிக் கொண்டு சொன்னாள்:

''ஒன்று மட்டும் நினைவிலே வைத்துக் கொள்ளுங்கள்! நீங்கள் என்னிடம் கொண்டுள்ள அன்பைச் சுமந்து கொண்டு என் வாழ்நாள் முழுவதும் இப்படியே இருந்து விடுவதற்கும் நான் தயார்!''

அவளது தூய்மையான நெஞ்சத்திற்கு அடிமையாகி விட்ட நிலையில் ''சுந்தரி!'' என்று கண்கள் பனிக்க அவள் முகத்தைத் தனது மார்பில் பதித்துக் கொண்டான் வாளுக்கு வேலி!

பாகனேரியும் பட்டமங்கலமும் விழாக்கோலம் பூண்டன. இருநாட்டு ஆலயங்களிலும் விசேச பூஜைகள் நடத்தப்பட்டன. தஞ்சாவூர்க் கிற்று வேலைக்காரர்களால் வண்ண வண்ண முகப்புகள் அமைந்த பந்தல்கள்,

கொட்டகைகள் பாகனேரியை அலங்கரித்தன. முளைப் பாரிகளை யேந்திக் கொண்டு மங்கைநல்லார் மங்கலப் பாடல்களை எங்கெங்கும் பாடி ஆடிப் பரவசங் கொண்டனர். கள்ளர் நாடுகளிலிருந்து எல்லாப் பாதைகளும் பாகனேரிக்கு என்பது போல் மணவிழாவிற் கலந்து கொள்ள விருந்தினர் அணிவகுத்து வந்தனர்.

மணப்பெண்ணை அலங்கரிக்கச் சுந்தராம்பாளும் வடிவாம்பாளும் ஆர்வம் காட்டினர் என்றாலும், வடிவாம் பாளின் முகத்தில் மட்டும் களையில்லை! ஆனால் அவள் மிகுந்த குதூகலமாக இருப்பதாகக் காட்டிக் கொண்டாள்.

வாளுக்குவேலி, விழாவுக்கு வருவோரையெல் லாம் வாயிற்புறம் நின்று வரவேற்றுக் கொண்டிருந்தான். வந்தவர்களை உரிய இடத்தில் அழைத்துச் சென்று அமர வைக்கும் பணியினைக் கறுத்த ஆதப்பனும் மேகநாதனும் மேற்கொண்டிருந்தனர். வாளுக்குவேலியின் அருகே வெள்ளை அய்யர் நின்று கொண்டிருந்தார். பட்ட மங்கலத்தைச் சார்ந்த ஊர்க்காரர்கள், முக்கியமானவர்கள் எல்லாம் வண்டிகளில் வந்து இறங்கிய வண்ண மிருந்தனர்.

மாளிகைக்குள் மணப்பெண் அலங்காரம் முடிந்து அவளைச் சுந்தராம்பாளும் வடிவும் இருபுறம் நின்று மணமேடைக்கு அழைத்து வர ஆயத்தமாயினர்.

இன்னும் பட்டமங்கலத்திலிருந்து மணமகன் வைரமுத்தனும், வீரம்மாள், உறங்காப்புலி ஆகியோரும் வந்து சேரவில்லை! ஏன்? என்ன காரணம்? எதற்காக இவ்வளவு தாமதம்? வாளுக்குவேலி பரபரப்படைந் தான். வெள்ளை அய்யர் அவனை அமைதிப்படுத்திக் கொண்டிருந்தார்.

ஒரு வேளை வராமலே இருந்து பாகனேரிக்குத் தீராத களங்கத்தை ஏற்படுத்தி விடுவார்களோ? அவனது

சந்தேகம் நியாயமானதுதான்! ஆனால் அய்யர் அவனுக்கு உறுதியளித்தார்! வைரமுத்தன் வார்த்தையைக் காப்பாற்றக் கூடியவன் என்றும் அவனை நம்பலாம் என்றும் திடமாகச் சொன்னார்.

மணமகள் கல்யாணி நாச்சியார் மணவிழா மேடைக்கு வந்தாயிற்று - இன்னும் மணமகனைக் காணவில்லையே! பந்தலில் சுற்றுமுற்றும் பார்த்தனர்! நாயன இசை அமுதவாரியெனப் பெருக்கெடுத்துக் கொண்டிருந்தது. புரோகிதர்களின் மந்திரங்கள் உரக்க ஒலித்த வண்ணமிருந்தன!

''என்ன அய்யரே! இன்னமும் காணவில்லை?'' ஒரு வறண்டு போன பார்வையுடன் வாளுக்கு வேலி கேட்டான். ''அவசரப்பட வேண்டாம்'' என்று அய்யர் சொல்லி முடிப்பதற்குள் பட்டமங்கலத்து அம்பலக்காரர் வீட்டுப் பெட்டி வண்டிகள் பத்துக்கு மேற்பட்டவை பந்தல் வாசலில் வந்து நின்றன.

முதல் நாலைந்து வண்டிகளில் இருந்து பட்டமங்கலத்துக் குடும்பத்தின் உற்றார் உறவினர்கள் இறங்கி வந்தனர். அவர்களை உபசரித்து வரவேற்றான் வாளுக்கு வேலி! ஆனாலும் அவனது கவனமெல்லாம் வைரமுத்தன் எந்த வண்டியில் இருந்து இறங்கப் போகிறான் என்பதிலேயே இருந்தது. அடுத்து ஒரு வண்டியில் இருந்து உறங்காப்புலியும் வீரம்மாளும் இறங்கினார்கள். கறுத்த ஆதப்பன் அவர்களை எதிர் கொண்டழைத்து வரவேற்றான். அவர்கள் முகத்தில் மருந்துக்குக்கூட மகிழ்ச்சியின் சாயல் இல்லை. அந்த வண்டி நகர்ந்த பிறகு அந்தப் பெரிய வண்டி பந்தல் முகப்பில் வந்து நின்றது. அதிலிருந்து யாரும் உடனே இறங்கக் கூடாதா? வாளுக்குவேலியை அப்படியா சோதிக்க வேண்டும்! என்னதான் சமாதானம் சொன்னாலும்கூட வெள்ளை அய்யருக்குக் கூடக் கொஞ்சம் அச்சம்தான்!

ஆனால் யாரையும் ஏமாற்றாமல் அந்த வண்டியில் இருந்து வைரமுத்தன் இறங்கி வந்தான். ஓடிப்போய் அவனைத் தழுவிக் கொண்டு பந்தலுக்குள் அழைத்துச் சென்றான் வாளுக்குவேலி!

இருவரும் ஒரு சேர மண மண்டபத்திற்குள் வருவது கண்டு, பந்தலில் இருந்தோர் கையொலி செய்து வாழ்த்து முழக்கமிட்டனர்.

தன்னுடையவர் வரும் கம்பீரத் தோற்றம் கண்டு அந்த நடையில் மயங்கி நின்றாள் சுந்தரி.

தன்னுடையவர் வருவதைக் காண முடியாமல் தலையைக் கவிழ்த்துக் கொண்டிருந்தாலும் அவர் எப்படி ஏறுபோல் நிமிர்ந்து நடப்பார் என்பதைக் கற்பனை செய்து கொண்டு முகமலர்ந்தாள் கல்யாணி!

''என்னுடையவர் என்று சொல்லிக் கொள்ள யாருமில்லையே!'' என்ற விரக்தியுடன் 'வெறுப்பு நிழல்' படிந்திருந்த தனது உள்ளத்தைப் பிறருக்குக் காட்டாமல் சமாளித்துக் கொண்டிருந்தாள் வடிவு!

மந்திரங்கள் உச்சகட்டத்திற்குச் சென்றன! மங்கல இசையும் அவ்வாறே! ''கெட்டி மேளம்! கெட்டி மேளம்!'' என்று பெரிய புரோகிதர் கூவிட, மங்கல நாணை அவர் கையிலிருந்து பெற்று வைரமுத்தன்-அதனைக் கல்யாணி நாச்சியாரின் மணிக் கழுத்தில் கட்டினான்.

வாளுக்குவேலி, கறுத்த ஆதப்பன் கண்களில் நீர்த் திவலைகள்! எல்லையற்ற மகிழ்ச்சியின் அடையாளம்! - வீரம்மாள் விழிகளிலும் நீர்! அது சோகத்தின் பிரவாகம்!

கல்யாணி தனது அண்ணன்கள் கால்களில் விழுந்து வணங்கினாள். வீரம்மாளின் கால்களிலும் விழுந்தாள். மாலையும் கழுத்துமாக இருந்த வைரமுத்தன், தனது

நண்பர்களின் வாழ்த்துக்களுக்கு நன்றி கூறிக் கொண்டே அந்த இடத்தை விட்டுச் சற்று நகர்ந்து சென்றான்.

''ஏக தடபுடல்! பிரமாதம்! பிரமாண்டமான கல்யாணம்!'' இப்படி ஊரெல்லாம் பரவலாகப் புகழப்பட்டது பாகனேரி திருமணத்தைப் பற்றி!

அன்று மாலையே பெண்ணை அழைத்துக் கொண்டு பட்டமங்கலம் போக வேண்டுமென்றும்-சாந்தி முகூர்த்தத்தை நடத்த வேறு நல்ல நாள் தோதாக இல்லையென்றும் வீரம்மாள் வற்புறுத்தியதன் பேரில் வேறு வழியின்றி வாளுக்கு வேலியும் சம்மதித்தான்.

தங்கையைப் பிரிய வேண்டுமேயென்று அண்ணனும், அண்ணனைப் பிரிய வேண்டுமேயென்று தங்கையும் தவித்திடத்தான் செய்தனர்.

''வைரம்! நாங்கள் உன்னிடம் ஒப்படைத்திருப்பதும் ஒரு வைரம்! கொஞ்சம் கூட அதன் ஒளிமங்காமல் வைத்துக் காப்பாற்றுவது உன் பொறுப்புத்தான்.''

இதை வைரமுத்தனிடம் சொல்லும்போது வாளுக்கு வேலி ஒரு குழந்தை போலானான். வைரமுத்தனுடன் புறப்படத் தயாராயிருந்த கல்யாணியும் தேம்பித் தேம்பி அழுதாள். அதைக் கண்ட வைர முத்தன், அவளை நெருங்கி ''ஏன்? என்னுடன் வர இஷ்டமில்லையா?'' என்று வேடிக்கையாகக் கேட்டான். உடனே அவள் பரபரப்புடன் சேலைத் தலைப்பால் தன் கண்களைத் துடைத்துக் கொண்டு அண்ணனிடம் சென்று, ''வருகிறேன் அண்ணா!'' என்றாள். வாளுக்குவேலியினால் மெல்லத் தலையைத்தான் அசைக்க முடிந்தது. கறுத்த ஆதப்பன் அவளைப் பார்த்து ''கல்யாணி! கவலைப்படாமல் போய் வா! தொலை தூராமா போகப் போகிறாய்? பாகனேரி பட்டமங்கலம் பக்கத்துப் பக்கத்து நாடுகள் தானே!'' என்று கூறி அவளைத் தேற்றினான்.

கல்யாணி, பட்டமங்கலத்து வண்டியில் ஏறிக் கொண்டாள். வைரமுத்தனும் அந்த வண்டியிலேறி உட்கார்ந்தான்.

எல்லா வண்டிகளும் புறப்பட்டன. அவைகள் பார்வையில் இருந்து மறையும் வரையில் வாளுக்கு வேலி அங்கேயே நின்று கொண்டிருந்தான்.

பட்டமங்கலத்து மாளிகையில் முதலிரவுக்கான ஏற்பாடுகள் விமரிசையாக நடைபெற்றுக் கொண்டிருந்தன. வீட்டுக்கு வந்த மணமக்களை வீரம்மாள் ஆரத்தி சுற்றி வரவேற்று இருவரையும் கூடத்து மேடையொன்றில் அமர்த்தி திருஷ்டி கழித்துப் போட்டாள். தனது வார்த்தையைத் தட்டிவிட்டுத் தம்பி பிடிவாதமாக அந்தத் திருமணத்தை முடித்துக் கொண்ட போதிலும் வீட்டுக்கு வந்துவிட்ட பெண்ணை இனி விரட்டியடிக்க முடியுமா என்பதைப் போல வீரம்மாளின் செய்கைகள் இருந்தன.

மணமக்கள் வரவேற்புக்காக அமைக்கப்பட்டிருந்த அழகிய பந்தலில் வேலைப்பாடுகள் நிரம்பிய ஊஞ்சலில் வைரமுத்தனையும் கல்யாணியையும் உட்கார வைத்து விழா எடுக்கப்பட்டது.

அந்த விழாவின் சிறப்புக்குச் சிறப்புச் சேர்ப்பது போல வடிவாம்பாளின் நடன நிகழ்ச்சி தொடங்கியது. ஏற்கெனவே வடிவு கல்யாணியிடம் கேட்டுப் பெற்ற வரமல்லவா அது!

நாட்டிய நிகழ்ச்சியில் வடிவாம்பாளின் கண்கள், வைரமுத்தனின்-உடல் மீது மேய்ந்தன! கல்யாணியோ இன்னமும் நாணத்திலிருந்து விடுபடாமல் கடை விழியால் தன் அன்புக் கணவனைக் கண்டு இன்ப மயக்கமுற்றாள்.

ஒரு வழியாக நடனம் முடிந்தது! வைரமுத்தன் வடிவுக்கும் நாட்டியக் குழுவினருக்கும் சன்மானங்களை வழங்கினான். வடிவு அவனிடம் விடைபெற்றுக் கொண்டு ஊருக்குத் திரும்புவதாகச் சொன்னபோது வைரமுத்தன் வடிவாம்பாளைத் தடுத்து- ''வேண்டாம்! வேண்டாம்! இந்த இருட்டில் பயணம் செய்ய வேண்டாம்! இரவு மாளிகையிலேயே தங்கிவிட்டுக் காலையிலே போகலாம்! நீ வசதியாகத் தங்குவதற்கான ஏற்பாடுகளைச் செய்யச் சொல்கிறேன்'' என்று கூறினான்.

பெரிய இடத்து யோசனை! அதை மறுக்க முடியுமா? வடிவாம்பாளும் இரவு பட்டமங்கலம் மாளிகையில் தங்கிச் செல்லச் சம்மதித்தாள்.

முதலிரவு ஜோடனைகளால் பட்டமங்கலத்து மாளிகையின் பள்ளியறை ஜொலித்துக் கொண்டிருந்தது! மலர் மஞ்சம்-மணங்கமழும் சந்தனம்-பழம்-பால்-பாதாம் பருப்பு-எல்லாமே அந்த இருவரின் வருகைக்காகக் காத்திருந்தன. முதலில் வைரமுத்தன் உள்ளே நுழைந்தான். சிறிது நேரத்திற்கெல்லாம் சிங்காரித்த ரதம் போலக் கல்யாணி நாச்சியாரை அறைக்குள்ளே மெல்லத் தள்ளி விட்டு வீரம்மாளும் வேறு சில பெண்களும் வேகமாக அகன்று விட்டனர். கதவோரத்தில் கண்ணாடிக் கன்னம் காட்டிக் கல்யாணி நின்று கொண்டிருந்தாள். அவளிடம் வைரமுத்தன் வந்து நின்றான். கல்யாணி, அவனை ஓர விழியால் தரிசித்துவிட்டு, அவன் பாதங்களில் விழுந்து வணங்கினாள்!

''கல்யாணி! நாம் இருவரும் வணங்க வேண்டிய தெய்வம் ஒன்று இருக்கிறது-வா இங்கே!'' என்று அவளை அழைத்துக் கொண்டு வேறு பக்கம் சென்றான். அங்குள்ள ஒரு திரையைப் பட்டென்று விலக்கினான். கல்யாணி திடுக்கிட்டாள்.

இரத்தக் கறை படிந்த ஒரு உடை!

அறுக்கப்பட்ட குடுமி!

இந்த இரண்டும் பயங்கரமாகக் காட்சியளித்தன!

''கல்யாணி! இவற்றை நான் நினைக்காமல் இருக்க மாட்டேன்! இவை என் அண்ணன் விட்டுச் சென்ற தன்மான உணர்வைத் தூண்டும் பொருள்கள்! இவற்றை நினைக்கும்போது, நான் பாகனேரியையும் நினைக்காமல் இருக்க மாட்டேன்!'' என்று வைரமுத்தன் அழுத்தம் திருத்தமாக உறுதி வாய்ந்த குரலில் கூறினான்.





# 28

பாகனேரியில் கறுத்த ஆதப்பன் வெட்டியெறிந்த வல்லத்தரையனின் தலைமுடியும்-அந்தக் களங்கத்தைக் கழுவிக்கொள்ள அந்த மான மாவீரன் காளையின் மீது பாய்ந்து உயிரைப் போக்கிக் கொண்டபோது உடையினில் கொட்டிக் காய்ந்து போயிருந்த இரத்தப் பெருந்துளிகளும் - ஏதோ துஷ்டதேவதையின் சன்னிதானத்தைப் போலப் பார்ப்போரைப் பயங்கொண்டு அலறிடச் செய்யும் வகையில் காட்சி தந்தன!

கல்யாணி நாச்சியாருக்குத் தலை சுற்றியது. அவற்றைப் பார்த்ததால் அல்ல. அவற்றைப்பத்திரப் படுத்திப் படுக்கையறையிலே வைத்திருப்பதற்கு என்ன காரணம்? அவற்றையும் நினைப்பேன் - அண்ணனையும் நினைப்பேன் - அத்துடன் பாகனேரியையும் நினைப் பேன் என்று வைரமுத்தன்-அந்த வீட்டுக்குள் அவள் வந்ததும் வராததுமாகச் சொல்வதற்கு என்ன காரணம்?

அதுவும் அப்பொழுதுதான் திருமணம் முடிந்து முதலிரவைத் தொடங்க வேண்டிய அந்த இன்பமான வேளையில் ஈட்டியால் இதயத்தைக் குத்துவது போல அவன் சூறாவளிச் சொற்களை வீசுவானேன்?

திரைக்குப் பின்னால் தலைமுடியும், இரத்தம் தோய்ந்த ஆடையும்! அய்யோ-அதற்குப் பின்னால் என்ன விபரீதமான விளைவுகள் ஒளிந்திருக்கின்றனவோ?

இந்த ஐயப்பாடுகள்தான் கல்யாணியின் சிந்தனையைப் பம்பரமாகச் சுழற்றின. அங்கிருந்த அழகிய தூண் ஒன்றில் சாய்ந்து கொண்டு நின்றாள். அவள் கண்களில் இருந்து அவள் கட்டுப்பாட்டையும் மீறி நீர் வழிந்து கொண்டிருந்தது. கல்யாணியை ஜாடையாகக் கவனித்த வைரமுத்தன் அவளைக் கவனிக்காதது போலப் படுக்கையருகே சென்று பால் கிண்ணங்களை எடுத்தான்.

தனக்கேற்பட்ட அதிர்ச்சியைக் கூடப் பொருட் படுத்தாமல் அவன் படுக்கையில் போய் உட்கார்ந்து கொண்டானேயென்று அவள் கலங்கினாள்.

''ஏன் கண்ணீர் எனக் கேட்டு அவரது விரல்களால் எனது கன்னத்தில் உருண்டோடும் நீர் முத்துக்களைத் துடைத்து விட்டால் எவ்வளவு இதமாக இருக்கும் நெஞ்சுக்கு!'' கல்யாணியின் நினைவுகள் அறுந்து போன பட்டங்களாக மூலைக்கொன்றாய்ச் சிதறின. ஆனால் அவளது ஏக்கத்தை நீடிக்கவிடாமல் வைரமுத்தன் பால் கிண்ணங்களோடு அவளருகே வந்து விட்டான்.

''என்ன கல்யாணி! வீட்டு நினைப்பா?... ஏன் அழுகிறாய்?''

அந்தக் கேள்விக்கு ''இல்லை'' என்ற பதிலை அவள் தலையசைத்துத் தெரிவித்தாள்.

''பிறகென்ன?''

கல்யாணி விரலை நீட்டி அந்தத் திரையைக் காட்டினாள்!

வைரமுத்தன் சிரித்தான்.!

''ஓ! என் அண்ணனின் நினைவு வந்து அழுகிறாயா? ஏ, அப்பா! இங்கு வந்து ஒருநாள் கூட ஆகவில்லை- அதற்குள் இந்தக் குடும்பப் பாசம் உன்னை வந்து வளைத்து விட்டதா?''

-மேலும் அதைப்பற்றிப் பேசி விவாதத்தை வளர்த்தவோ அல்லது விரிவான விளக்கம் பெறவோ அவள் தயாராக இல்லை! அதன் மூலம் எதிர்பாராத விபரீதம் எதுவும் ஏற்பட்டுவிடக் கூடாது என்பதில் அவள் எச்சரிக்கையாக இருந்தாள். அதனால் கண்களைத் துடைத்துக்கொண்டு அவனை மிகுந்த மரியாதையுடன் பார்த்தாள்.

''உம்! பாலைச் சாப்பிடு!'' என்று ஒரு கிண்ணத்தை நீட்டினான். அதை அவள் வாங்கித் தலையைக் குனிந்து கொண்டே அவன் வாயருகே கொண்டு போனாள்.

அவள் தந்த கிண்ணத்துப் பாலை அருந்திக் கொண்டே, தன் கையிலிருந்த பால் கிண்ணத்தை அவளது இதழ்களுக்கிடையே பொருத்தினான். அவளும் ஒரு புதிய சுகம் கிடைக்கப் பெற்றவளாக உடம்பெல்லாம் சூடேறிக் கொண்டிருக்கும் நிலையில் அவன் தந்த பாலைக் குடித்தாள்.

''கல்யாணி!...உனக்கு நடனம், வீணை, பாட்டு எல்லாம் தெரியுமாமே! உம்!உம்! உண்மைதானா?''

விளக்கொளியில் அவள் சிவந்த கன்னங்களில் நாணப் புன்னகை விளைவித்த ரோஜாக் குழிகள் தோன்றி மறைந்தன! தெரியும் என்பதற்கான சைகை போலும் அது! வைரமுத்தன், அவளை முதுகுப்புறம் அணைத்தவாறு அழைத்துச் சென்று, மஞ்சத்தில் உட்கார வைத்தான்.

அவளது நாடி நரம்புகளில் குருதியோட்டம் துள்ளிக் குதியாட்டம் போட்டது. இதயம் பல மடங்கு வேகமாகப் படபடத்தது. தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்ள முடியாமல் தவித்தாள். பாகனேரி எல்லையில் கட்டாரிக்கு முத்தம் கொடுத்தபோது இருந்த தெம்பும் தைரியமும் இப்போது எங்கோ பறந்து விட்டன!

வைரமுத்தன் படுக்கையிலிருந்து எழுந்து சென்றான். அவள் மீண்டும் நடுக்கிட்டாள். ஒரு வேளை அந்தப் பயங்கரமான நினைவுச் சின்னங்களை எடுத்துக் கொண்டு வந்து விடுவானோ என்றுதான் அஞ்சினாள். காதல் மழைப்பொழிவு ஒரு புறம்; கலக்கமளிக்கும் பேரிடியோசை யொருபுறம்!

நல்ல வேளை! அவள் பயந்தது போல நடக்க வில்லை. அங்கே ஒரு மூலையில் வைக்கப்பட்டிருந்த வீணையைத்தான் அவன் தூக்கிக் கொண்டு வந்தான்; அதைப் படுக்கையில் வைத்தான்.

''உம்! மீட்டு!'' என்றான். அவள் மெதுவாகத் தலையைத் தூக்கிப் பார்த்து ''நீங்கள் மீட்டுங்கள்!'' என்ற சொற்களைக் கண்வழியே நடமாட விட்டாள்.

''நான் மீட்டப் போகும் வீணைதான் பேசும் வீணையாயிற்றே! நீ இந்தப் பேசாத வீணையை உன் காந்தள் விரல்களால் பேச வை! கேட்கிறேன்!'' என்றான்.

தயங்கினாள். அவள் தளிர்க் கரத்தை யெடுத்து வீணை மீது மென்மையாக வைத்தாள். மெல்ல அதிர்ந்தன வீணையின் நரம்புகள்! ஆனால் அவள் நரம்புகளோ பச்சை வண்ணங் கொண்டு அந்தச் சிவந்த மேனியில் கொடிகளைப் போல் படரத் தொடங்கின!

இசை வெள்ளம்! தேனருவி! தெவிட்டாத அமிழ்தம்! இன்ப நாதம்!... வைரமுத்தன் இசையைப் பருகித் திளைப்பவனைப் போல அறையின் பலகணிப் பக்கம் சென்று நின்று கல்யாணியையே கவனித்துக் கொண்டிருந்தான்.

நரம்புகளைத் தடவி இசை வாரிதியை வர வழைத்துக் கொண்டிருந்த அவள் விரல்கள் மெல்ல மெல்லத் தங்கள் அசைவை நிறுத்திக் கொண்டன.

-மேலும் அதைப்பற்றிப் பேசி விவாதத்தை வளர்த்தவோ அல்லது விரிவான விளக்கம் பெறவோ அவள் தயாராக இல்லை! அதன் மூலம் எதிர்பாராத விபரீதம் எதுவும் ஏற்பட்டுவிடக் கூடாது என்பதில் அவள் எச்சரிக்கையாக இருந்தாள். அதனால் கண்களைத் துடைத்துக்கொண்டு அவனை மிகுந்த மரியாதையுடன் பார்த்தாள்.

''உம்! பாலைச் சாப்பிடு!'' என்று ஒரு கிண்ணத்தை நீட்டினான். அதை அவள் வாங்கித் தலையைக் குனிந்து கொண்டே அவன் வாயருகே கொண்டு போனாள்.

அவள் தந்த கிண்ணத்துப் பாலை அருந்திக் கொண்டே, தன் கையிலிருந்த பால் கிண்ணத்தை அவளது இதழ்களுக்கிடையே பொருத்தினான். அவளும் ஒரு புதிய சுகம் கிடைக்கப் பெற்றவளாக உடம்பெல்லாம் சூடேறிக் கொண்டிருக்கும் நிலையில் அவன் தந்த பாலைக் குடித்தாள்.

''கல்யாணி!...உனக்கு நடனம், வீணை, பாட்டு எல்லாம் தெரியுமாமே! உம்!உம்! உண்மைதானா?''

விளக்கொளியில் அவள் சிவந்த கன்னங்களில் நாணப் புன்னகை விளைவித்த ரோஜாக் குழிகள் தோன்றி மறைந்தன! தெரியும் என்பதற்கான சைகை போலும் அது! வைரமுத்தன், அவளை முதுகுப்புறம் அணைத்தவாறு அழைத்துச் சென்று, மஞ்சத்தில் உட்கார வைத்தான்.

அவளது நாடி நரம்புகளில் குருதியோட்டம் துள்ளிக் குதியாட்டம் போட்டது. இதயம் பல மடங்கு வேகமாகப் படபடத்தது. தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்ள முடியாமல் தவித்தாள். பாகனேரி எல்லையில் கட்டாரிக்கு முத்தம் கொடுத்தபோது இருந்த தெம்பும் தைரியமும் இப்போது எங்கோ பறந்து விட்டன!

வைரமுத்தன் படுக்கையிலிருந்து எழுந்து சென்றான். அவள் மீண்டும் திடுக்கிட்டாள். ஒரு வேளை அந்தப் பயங்கரமான நினைவுச் சின்னங்களை எடுத்துக் கொண்டு வந்து விடுவானோ என்றுதான் அஞ்சினாள். காதல் மழைப்பொழிவு ஒரு புறம்; கலக்கமளிக்கும் பேரிடியோசையொருபுறம்!

நல்ல வேளை! அவள் பயந்தது போல நடக்க வில்லை. அங்கே ஒரு மூலையில் வைக்கப்பட்டிருந்த வீணையைத்தான் அவன் தூக்கிக் கொண்டு வந்தான்; அதைப் படுக்கையில் வைத்தான்.

''உம்! மீட்டு!'' என்றான். அவள் மெதுவாகத் தலையைத் தூக்கிப் பார்த்து ''நீங்கள் மீட்டுங்கள்!'' என்ற சொற்களைக் கண்வழியே நடமாட விட்டாள்.

''நான் மீட்டப் போகும் வீணைதான் பேசும் வீணையாயிற்றே! நீ இந்தப் பேசாத வீணையை உன் காந்தள் விரல்களால் பேச வை! கேட்கிறேன்!'' என்றான்.

தயங்கினாள். அவள் தளிர்க் கரத்தை யெடுத்து வீணை மீது மென்மையாக வைத்தாள். மெல்ல அதிர்ந்தன வீணையின் நரம்புகள்! ஆனால் அவள் நரம்புகளோ பச்சை வண்ணங் கொண்டு அந்தச் சிவந்த மேனியில் கொடிகளைப் போல் படரத் தொடங்கின!

இசை வெள்ளம்! தேனருவி! தெவிட்டாத அமிழ்தம்! இன்ப நாதம்!... வைரமுத்தன் இசையைப் பருகித் திளைப்பவனைப் போல அறையின் பலகணிப் பக்கம் சென்று நின்று கல்யாணியையே கவனித்துக் கொண்டிருந்தான்.

நரம்புகளைத் தடவி இசை வாரிதியை வரவழைத்துக் கொண்டிருந்த அவள் விரல்கள் மெல்ல மெல்லத் தங்கள் அசைவை நிறுத்திக் கொண்டன.

வீணையின் நாதமும் நின்றது. கல்யாணி அந்த வீணையின் மீதே அப்படியே மயங்கிச் சாய்ந்திருந்தாள்.

தூக்கமா? மயக்கமா? வைரமுத்தன் சிறிதுநேரம் அவளைப் பார்த்துக் கொண்டிருந்தவன் அருகே வந்து உற்றுக் கவனித்தான். அவள் அசையவில்லை. ஆனால் உயிருக்கு ஒரு ஆபத்துமில்லை. சாதாரண மயக்கம்தான்! ஆம்; வைரமுத்தன் ஏற்பாடு செய்த மயக்கம்தான்!

படுக்கை அறையிலிருந்த வைரமுத்தன் படிக்கட்டுகள் வழியே கீழே இறங்கினான். அந்த மாளிகையின் நடுக் கூடத்தையொட்டிய பெரிய அறையொன்றின் கதவருகே சென்று அதைத் தட்டினான்!

அந்த அறையில்தான் வடிவாம்பாள் தங்கியிருக் கிறாள். அவளுடன் வந்தவர்கள் மற்ற அறைகளில் தங்க வைக்கப்பட்டிருக்கிறார்கள். கதவு உடனே திறக்கப்பட வில்லை. வைரமுத்தன் தட்டிக் கொண்டேயிருந்தான். நீண்ட நேரத்திற்குப் பிறகு கதவைத் திறந்து கொண்டு வடிவாம்பாள் வெளியே வந்தாள். வைரமுத்தனைப் பார்த்ததும் திகைத்துப் போனாள்.

''நீங்களா!''

''ஆம் நானேதான்!''

''ஏன்? என்ன விசேஷம்?''

''ஒன்றுமில்லை! உன்னைப் பார்க்க வேண்டும் போலிருந்தது!''

''வேடிக்கையாயிருக்கே! முதல் இரவும் அதுவுமா கட்டிய மனைவியைக் கட்டிலறையிலே விட்டுவிட்டு...!''

''இதிலிருந்து எனக்கு உன் மேல் உள்ள ஆசையைத் தெரிந்து கொள் வடிவு!''

''சரி! சரி! போய்ப் படுங்கள்! காலையில் எல்லாம் பேசிக் கொள்ளலாம்!''

''இப்போது பேசினால்தானே இனிக்கும் வடிவு!''

''என்னை என்னவென்று நினைத்துக் கொண்டீர்கள்? அப்படி உங்களுக்கு இஷ்டமென்றால் -ஏதோ ஒரு நாள் கதையோடு விட முடியாது! சம்பிரதாயப்படி என் வீட்டுக்கு அனுப்ப வேண்டிய சீர்வரிசைகளை அனுப்புங்கள்! அதன் பிறகு வாருங்கள்! ஆயுள் வரையில் காப்பாற்றுவேன் என்று உறுதியளியுங்கள்!''

''வடிவு! எல்லாவற்றையும் ஒப்புக் கொள்கிறேன்- நீயும் ஒப்புக் கொண்டதற்கு அடையாளமாக-இதோ, என் கன்னத்தில் ஒரு முத்தம் மட்டும் கொடுத்துவிடு!''

''அதெல்லாம் முடியாது! இதென்ன கூத்து-நடுக் கூடத்தில் நின்றுகொண்டு!...''

''நடுக்கூடமென்றால் என்ன? யாரும் பார்க்க மாட்டார்கள்-எல்லோரும் தூங்குகிறார்கள்! உம் கொடு!''

''முடியாது!''

''நான் உன்னை விட முடியாது!''

வைரமுத்தன் அவளைத் தழுவிடச் சென்றான். வடிவு, அதற்கு இணங்காமல், அவனைப் பிடித்துத் தள்ளிவிட்டாள். அந்த வேகத்தில் அங்குள்ள நாற் காலியொன்றில் விழுந்து உருண்டான். உருண்டவனின் விழிகள், அவனது படுக்கையறைப் பலகணியை நோக்கின! அங்கே கல்யாணி நாச்சியார் நின்று கொண்டிருந்தது காற்றில் அசைந்து கொண்டிருந்த திரையொன்றின் நிழல் மூலமாகத் தெரிந்தது.

அவள் தன்னைப் பார்க்கிறாள் என்று புரிந்து கொண்டும் கூட அவன் வடிவாம்பாளை வற்புறுத்து

வதையோ, தொட்டிழுப்பதையோ நிறுத்தவில்லை. ஒரு வேளை, அதைக் கல்யாணி காண வேண்டும் என்பதுதான் அவனது நோக்கமாக இருக்கக் கூடுமோ?

அதனால்தான் அவள் பார்ப்பதைப் பற்றிக் கவலைப்படாமல்-அவளை அவன் கவனிக்காதது போல-மீண்டும் வடிவாம்பாளிடம் வம்புக்குப் போகிறான் போலும்!

''வடிவழகே! வா! ஓடாதே! நான் சொல்வதைக் கேள்! எனக்கு வாய்த்திருக்கிறாளே ஒருத்தி; கல்யாணியாம் கல்யாணி! கர்மம்! சரியான பட்டிக்காடு! பஞ்சு மெத்தையைக் கண்டதும் சுருட்டிக் கொண்டு படுத்துவிட்டது!''

''ஏன் அப்படிச் சொல்றீங்க? கல்யாணி வீணை வாசித்ததை நான் காதாரக் கேட்டுக் கொண்டுதானே படுத்திருந்தேன்!''

''அய்யோ! அவளா? இல்லவே இல்லை, நான்தான் வீணையை மீட்டிக் கொண்டிருந்தேன். அதற்குள் அந்தச் சனியன் தூங்கிவிட்டது! நான் இந்த வீணையை-தொட்ட இடமெல்லாம் சுவைக்கின்ற பட்டுடல் கொண்ட வீணையை-மீட்டலாம் என்று ஓடி வந்தேன்!''

''நீங்கள் என்னை உண்மையிலேயே விரும்புகிறீர்கள் என்றால்... முறைப்படி என் வீட்டுக்கு வாருங்கள்! மனம் விட்டுப் பேசுவோம். என் வாழ்க்கைக்கும் ஒரு ஆண் துணை தேவைதான். ஆனால் அதற்காக என் கலைத் தொழிலை நடத்த வந்த இடத்தில் தவறாக நடந்து கொண்டால் அது என் கலைக்கே நான் செய்யும் பிராயச்சித்தமில்லாத பாபமாகும்.''

வடிவாம்பாள் சொல்வதில் உள்ள நியாயத்தை வைரமுத்தனால் உணர முடிந்தது. ஆனால் அவன் நியாய அநியாயங்களைப் பற்றிக் கவலைப்படும் கட்டத்திலே இல்லை!

காம உணர்ச்சி அவனைக் காண்டாமிருகமாகவோ அல்லது காட்டாற்றுப் பாய்ச்சலாகவோ ஆக்கி விட்டதா என்றால் அதுவுமில்லை! பிறகென்ன அவனது குறிக்கோள்? கல்யாணியை அணு அணுவாகச் சித்ரவதை செய்ய வேண்டும், அவள் துடிக்க வேண்டும், துவள வேண்டும்? வேதனையால் அலற வேண்டும், வெந்து கருகிடும் உள்ளத்தோடு நொந்து கிடக்க வேண்டும்.

அதற்காகத்தான் அண்ணனின் நினைவுச் சின்னங்களை அம்ச தூளிகா மஞ்சமிருக்கும் அறையிலே மாட்டி வைத்தான். பாலில் மயக்க மருந்து கலந்து அவளை வீணையின்மீது சாய வைத்தான்.

விரைவில் மயக்கம் தெளிந்து விழித்துக் கொண்டு அவள் எழும்போது, இப்படியொரு அலங்கோலக் காட்சியைக் காண வேண்டுமென்றுதான் வடிவாம்பாளைத் தங்க வைத்து அவளிடம் சென்று காமச் சேட்டைகளை ஆரம்பித்தான். அதன் உச்சகட்டமாக அவன் வடிவாம்பாளை இறுகத் தழுவி அவள் எவ்வளவோ தடுத்தும் நிறுத்தாமல் அவளது ஆடைகளை அவிழ்த்து விட்டான்.

அதற்கு மேல் பலகணிப் பக்கம் நிற்க முடியாத கல்யாணி அந்த இடத்தை விட்டு வீணையிருந்த இடத்தை நோக்கி ஓடினாள். கல்யாணி போய் விட்டாள் என்று தெரிந்த பிறகும் வைரமுத்தனின் ''வஸ்திராபகரணப்பணி'' நின்றபாடில்லை.

முகில் அகன்றிட முழு நிலவு தெரிவது போலவும், இலைகள் விலகிட முற்றிய கனிகள் தெரிவது போலவும், துகில் அகன்றிட அந்தத் தோகையாள் தோகையின்றி நின்றாள். அவனைக் கொஞ்சம் கொஞ்சமாகக் கவர்ந்து காலடியில் வீழ்த்திட வடிவாம்பாள் கற்ற கைவரிசை அது!

நெருங்கினான் நெல்லிக்கனியே தாகம் தணித்திடுக இப்போதேயென்று! வடிவாம்பாளா அசைந்து கொடுப்பாள்? உடை குறைந்த உடலை ஒரு குலுக்குக் குலுக்கிவிட்டு -

தளுக்கி மினுக்கி-தடாலென்று அறைக்குள் நுழைந்து கதவைத் தாழிட்டுக் கொண்டாள்.

இந்த அரிய நிகழ்ச்சிக் கோர்வையைப் பக்கத்து அறைகளில் தங்கியிருந்த நாதமுனியும், லலிதாங்கியும் கதவு இடுக்குகளின் வழியாகக் கழுத்து வலியெடுக்கிற வரையில் கண்டு இரசித்தனர். அறைக்குள் ஓடிய வடிவாம்பாள் வேறு ஆடை உடுத்தி, தனது பெட்டியைத் தூக்கிக் கொண்டு வெளியே வந்து-''இனிமேல் ஒரு விநாடி கூட இங்கே இருக்க மாட்டேன். இப்போதே போகிறேன்!'' என்று கூறிவிட்டு ''நாதமுனி மாமா! லலிதாங்கியம்மா!'' எனக் கூவினாள். அவர்களும் மூட்டை முடிச்சுகள் சகிதம் ஓடி வந்தனர்.

அதற்கு மேல் அங்கு நிற்க விரும்பாத வைரமுத்தன் வடிவாம்பாள் குழுவினர் செல்வதையே பார்த்தபடி படிக்கட்டுகளில் ஏறி, படுக்கையறைக்குள் நுழைந்தான்.

அங்கே கல்யாணி வீணையின் மீது சாய்ந்தவாறு பழைய நிலையிலேயே இருந்தாள். கணவன் ஆடிய காமவெறியாட்டத்தைத் தான் கண்டு கொள்ளவில்லையென்று கணவன் நம்பியிருக்க வேண்டுமென்பது அவள் எண்ணம். அதை அவள் பார்த்ததாகத் தெரிந்தால் அதனால் அவனுக்கு அவள் மீது ஒரு வெறுப்பு ஏற்பட்டு விடக்கூடும். அதற்காகப் பயந்தாள்.

ஆனால் கல்யாணி நன்றாக நடிக்கிறாள் என்பதாகக் கருதித் தனக்குள்ளாகவே சிரித்துக்கொண்டு வைரமுத்தன் அங்கிருந்த ஒரு நீண்ட மயிலாசனத்தில் படுத்து உறங்கத் தொடங்கினான்.

வீணையைக் கண்ணீர் அலைகள் அடித்துக்கொண்டு போய்விடுமோ என்கிற அளவுக்குக் கல்யாணி அழுது தீர்த்தாள்.

அந்தப் பேதை நாடி வந்தது என்ன? ஆனால் குறுக்கே ஓடிவந்து நிற்கும் அதிர்ச்சியின் அபாயகரமான வடிவம்தான் என்ன? எத்தனை ஆசைகளைத் தங்கத்

தகடுகளாக்கி எதிர்கால வாழ்வுக்கென விதானம் அமைத்தாள் அந்த ஏந்திழையாள்! அத்தனையும் வீண்தானா? அவள் கட்டிய மனக்கோட்டையெல்லாம் மண்தானா? முத்துச்சிப்பி எடுப்பதற்குக் கடலில் மூழ்கி, முரட்டுத் திமிங்கிலத்தின் வாய்க்குள் அகப்பட்டுக் கொண்ட அவலக் கதைதானா அவள் கதை? இந்தக் கேள்விகளை வீணையின் மீது அவளது கண்ணீர்த் துளிகள் எழுதிக் கொண்டிருந்தன.

அந்தச் சோர்வோடு விடியற்காலை வரை விழித்திருந்து படுக்கையில் உருண்டு உறங்கிப் போய்விட்டாள் கல்யாணி.

காலைக் கதிரின் ஒளி கட்டிலறைக்குள் பரவியதும் திடுக்கிட்டு எழுந்தாள். வைரமுத்தனும் துயில் நீங்கி எழுந்து உலவிக் கொண்டிருந்தான். பரபரப்புடன் எழுந்த கல்யாணியைப் பார்த்து,

''என்ன! முன் தூங்கிப் பின் எழும் பாவையென் பார்களே; அது நீதானா கல்யாணி?'' என்று கலகலவெனச் சிரித்தவாறு கேட்டான்.

அவள் அவனைப் பார்த்து, ''மன்னிச்சிடுங்க!'' என்று சொல்லிவிட்டுத் தாலியை எடுத்துக் கண்ணில் ஒத்திக் கொண்டு-அவன் பாதங்களைத் தொட்டு வணங்கி விட்டு, பிறகு அங்கு நிற்காமல் அறையை விட்டு வெளியேறிப் படிகளின் வழியே கீழே இறங்கினாள்.

நடுக்கூடத்தில் இருந்த வீரம்மாள் அவளை ஒரு விஷமப் புன்னகையுடன் வரவேற்று ''ரொம்ப அசதியாயிருக்கும். நல்லா வெந்நீரிலே தலை முழுகு கல்யாணி!'' என்று யோசனை சொன்னாள்.







# 29

உயர்ந்த குன்றிலிருந்து சரிந்து விழுந்தால் இடையில் ஏதாவது ஒருகொடியையோ செடியையோ கொப்பையோ கிளையையோ பிடித்துக் கொண்டு தப்பித்துக் கொள்ளலாம் என்ற நம்பிக்கையோடு கைகள் துடிக்கும். ஏதோ ஒரு பிடிப்புக் கூடக் கிடைக்கும். ஆனால் கல்யாணியின் நிலை அதுவல்ல! செழித்துக் குலுங்கும் மலர்ச் செடிகளையும் தழைத்துக் கிடக்கும் பச்சைக் கொடிகளையும் பரவசத்தோடு பார்த்து இரசித்தவாறு மேலே ஏறிக் கொண்டிருக்கும்போது திடீரென அந்தச் செங்குத்தான பாறையிலிருந்து தங்கு தடையின்றிக் கீழே விழுந்து சிதறி உடைவது போல ஆயிற்று அவளது எதிர்கால இன்ப நினைவு!

மணக் கோலத்தில் வைரமுத்தனுடன் இருந்த போது ஏற்பட்ட பூரிப்பு

அண்ணன்மார்களைப் பிரிந்த துயரத்தைக் கூட மறக்கச் செய்கிற அளவுக்கு ஆசை அத்தானுடன் பாகனேரியிலிருந்து பட்டமங்கலத்திற்கு வண்டியில் பயணம் செய்தபோது ஏற்பட்ட புளகாங்கிதம்-

பட்டமங்கலம் மாளிகையில் இருவரும் அமர்ந்து ஊஞ்சல் ஆடிய வரவேற்பு நிகழ்ச்சியில் ஏற்பட்ட மெய்சிலிர்ப்பு-

இரவு பள்ளியறைக்குள் நுழையும் வரையில்-ஏன், நுழைந்த பிறகு கூட-கதவோரத்தில் நின்ற வரையில் நெஞ்சில் அலைமோதிய எதிர்பார்ப்புகள்-

இவ்வளவையும் உணர்வு பூர்வமாக அனுபவித்த அந்தக் கல்யாணிதானா இப்போது உடலைச் சுமக்க முடியாதவளைப்போலச் சுமந்துகொண்டு தோட்டத்துக் குளியலறைப் பக்கம் வந்து கொண்டிருக்கிறாள்? ஆம்; அவளேதான்! திடீரென ஏற்பட்ட விபத்தினால் மனம் குழம்பிப் போயிருந்தாள்!

இதுதான் காரணம் என்று ஆணியடித்து மாட்ட முடியாத ஓர் அதிர்ச்சியினால் தாக்குண்டு சோர்ந்து போயிருந்த அவளைத் தோட்டத்துப் பக்கம் காத்திருந்த கௌதாரி குறும்புச் சிரிப்புடன் ஓடி வந்து தழுவிக் கொண்டாள். கல்யாணியுடன் இரண்டு நாட்கள் துணையாக இருப்பதற்கு அவளும் அப்போது அவர்களுடன் பட்டமங்கலத்திற்கு வந்திருந்தாள்.

''எம்மாடி! எங்க ராஜாத்தியம்மா! மாப்பிள்ளை நல்லவிதமா நடந்துகிட்டாரா?... இல்லை... ரொம்ப முரட்டுத்தனமா?''

கல்யாணி சிரிக்கவும் முடியாமல் அழவும் முடியாமல் தவித்தாள். இரவு நடந்த நிகழ்ச்சிகளை யெல்லாம் இருட்டுக்குள்ளேயே கிடத்திட வேண்டு மென்பதுதான் அவள் முடிவு அப்போது!

இந்தச் செய்தி அண்ணன் வரையில் எட்டி விட்டால் அவன் என்ன துடிதுடிப்பான் என்று கல்யாணிக்குத் தெரியும். அதனால் வெட்கப்படுபவளைப் போல நடித்துக் கொண்டு குளியலறைக்குள் சென்றாள்.

''நாச்சியாரம்மா! நானும் வர்றேன்! சூடா உடம்பிலே தண்ணியை ஊத்தி கொஞ்சம் அமுக்கி

விடுகிறேன். அப்பத்தான் உடம்பு வலியெல்லாம் பறக்கும்.''

கௌதாரி கல்யாணியுடன் குளியலறைக்குள் நுழைந்து விட்டாள். ''தயவு செய்து நீ வெளியே போ!'' என்று செல்லமாக அதட்டினாள்.

''எம்மாடி! கொஞ்சம் பொறுமையா இருக்கணும்! நானே உடையெல்லாம் கழட்டுவேனாம்!'' என்று கல்யாணியின் சேலைத் தலைப்பைக் களைந்தாள்.

கல்யாணி, சரேலெனச் சேலையை இழுத்துப் போர்த்திக் கொண்டு, ''நீ வெளியே போறியா இல்லையா?'' என்று கோபத்தைக் காட்டிக் கொள்ளாமல் மிரட்டினாள்.

கௌதாரி விடவில்லை. குறும்புப் பேச்சு எல்லை மீறியது. ''ஓ! புரியுது! புரியுது! நான் உடம்பைப் பாத்துடக் கூடாதோ? தெரியும்! தெரியும்!... நகக்குறி பற்குறி யெல்லாம் என் கண்ணிலே பட்டுடுமாக்கும்!''

-கௌதாரியின் கள்ளமில்லா உள்ளத்திலிருந்து எழுந்த அந்தக் கேலியைக் கல்யாணியால் இரசிக்க முடியவில்லை! அதற்கு மாறாக ஒரு நீண்ட பெருமூச்சே வெளிப்பட்டது! அப்போதும் கௌதாரி விடவில்லை.

''என்ன இது பெருமூச்சு? அவசரம் புடிச்ச பொழுது அதுக்குள்ளேயே விடிஞ்சிட்டுதேன்னு கவலையா? இருக்கும் இருக்கும்... எனக்குக் கூட முதல் நாள் அப்படித்தான் இருந்தது. இந்த காடையிருக்கே அது அன்னைக்கு என் தாடையெல்லாம் முத்திரை குத்தி வச்சுட்டுது! நாலு நாள் யார் முகத்திலேயும் என்னால முழிக்க முடியலே! கன்னம், கழுத்து, மூக்கு எல்லாம் காயம்!... சரியான முரடு... இந்த மாப்பிள்ளை நல்லவரு போல இருக்கு! கழுத்துக்குக் கீழேதான் கைவரிசையைக் காட்டியிருப்பாரு! இல்லையா அம்மா!''

குறும்புச் சொற்கள்... கரும்பாக இனிக்க வேண்டியதற்குப் பதிலாகக் கல்யாணியின் செவி வழியாகக் குத்தீட்டிகள் எனப் பாய்ந்தன. ஆத்திரத்தையும் அழுகையையும் அடக்கிக் கொண்டு, போலிப் புன்னகையொன்றை அந்தப் பொல்லாத இரவு நிகழ்ச்சிக்கு மூடியாகப் போட்டு விட்டு ''இப்ப நீ வெளியே போறியா இல்லையா? நான் தனியா குளிக்கணும்!'' என்று கௌதாரியை இழுத்து வெளியே தள்ளிவிட்டு, குளியலறைக் கதவைத் தாழிட்டுக் கொண்டாள்.

முதலில் தனது தலையில் கை வைத்தாள். வலி தெரியாமலேயே, வாடிப் போயிருந்த மல்லிகைப் பூச்சரத்தை எடுத்துக் கீழே எறிந்தாள். குளியலறையில் இருந்த ஒரு பளிங்கு மேடையில் முழங்காலைக் கட்டிக் கொண்டு உட்கார்ந்தவள் விக்கி விக்கி அழத் தொடங்கினாள்...

அந்த அழுகையொலி மிக மெல்லியதாகக் குளியலறைக்கு வெளியே இருந்த கௌதாரியின் காதுகளில் விழவே, அவள் சந்தேகத்துடன், ''நாச்சியாரம்மா!'' என்று கூப்பிட்டுப் பார்த்தாள். உடனே பரபரவென்று கல்யாணி வெந்நீரை மொண்டு குவளை குவளையாகத் தலையில் ஊற்றிக் கொண்டு அந்த ஒலியில் தனது அழுகை ஒலியை மறைத்தாள்... அவள் விரைந்து குளித்த வேகத்தில் அணிகலன்களைக் கழற்றவும்- ஆடையை அகற்றவும் கூட மறந்து போனாள். கௌதாரி வெளியில் இருந்தபடியே விரிவுரையாற்றிக் கொண்டிருந்தாள்.

''புகுந்த வீட்டிலே பிறந்த வீட்டை நினைச்சுகிட்டு இனிமே கவலைப்படக்கூடாது!''

இந்த அறிவுரை கல்யாணியின் காதுகளிலும் விழுந்தது. அவள்தான் தனது வாழ்க்கையின் தொடக்கம்.

எவ்வளவு பெரிய விபத்துடன் உருவாகியிருக்கிறது என்பதை மறைத்து விடுவது என்று மனத்தில் சங்கற்பம் செய்து கொண்டிருக்கிறாளே!

அன்னையாய் தந்தையாய்த் திகழும் தனது அண்ணனுக்கு அணுவிலோர் பாதியாய்ச் சேதி எட்டினாலும் அனலிடை மெழுகென ஆகிவிடுவாரேயென்று கல்யாணி நினைத்திடும் போதெல்லாம் நீர்த்துளிகள் அவளது இமைகளில் முத்துக்களாய்த் தொங்கின.

பாசத்திற்குரிய தங்கை பட்டமங்கலத்தில் படரும் பூங்கொடியாகி எவ்வித இடரும் இன்னலுமின்றி வாழ்வாள் என்ற மனம் நிறைந்த நம்பிக்கையோடு சாரட்டு வண்டியில் திருக்கோட்டியூர் நோக்கிச் சென்று கொண்டிருந்தான் வாளுக்குவேலி! சில நாட்கள் தனது செல்வத் தங்கையைப் பிரிந்திருக்கும் துயரத்தைத் தாங்கிக் கொள்ள முடியாதவன், ஒரு மன மாற்றத்திற்காகச் சுந்தரியை நாடிச் சென்றான். அவன்பால் ஏற்கெனவே இதயத்தைப் பறிகொடுத்துவிட்ட காரணத்தால் அவனை நினைத்து மகிழ்வதற்குப் பிறிதோர் இதயமின்றி அந்தச் சோகத்தில் படுக்கையில் இருப்புக் கொள்ளாமல் ஊஞ்சலில் மெல்ல அசைந்து கொண்டிருந்தாள் சுந்தரி.

வீட்டு வாசலில் வந்து நிற்பது பாகனேரி வண்டிதான்! ஓசையிலேயே கண்டுகொண்டாள்! சிறிதும் அவள் எதிர்பார்க்கவில்லை! அதனால் அணிமணிகள் எதுவுமின்றி ஒரு சாதாரண நீல உடையில் தோன்றிக் கதவைத் திறந்தாள்! வாளுக்குவேலி அவளைத் தனது விழிகளால் வளைத்தான். நீல வானில் நிலவு முளைத்தது போலிருந்தது அவளது உடையும் முகமும் அவனுக்கு! வாய்ச்சொற்கள் என்ன பயனுமிலாத நிலையைப் பெற்றனர் இருவரும் ஒருகணம்!

இரண்டொரு தடவைதான் அந்த வீட்டுக்கு வாளுக்குவேலி வந்திருக்கிறான் என்றாலும் அந்த

வீட்டுக்கு முற்றிலும் உரிமையுடைய குடும்பத் தலைவனாக மளமளவென்று மாடிப் படிகளில் ஏறிச் சென்றான்.

அவனது நடையழகைக் கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்த சுந்தராம்பாள், வேலைக்காரியை அழைத்துத் தெருக்கதவைத் தாழ் போடச் சொல்லிவிட்டு, அவளே அடுக்களைப் பக்கம் சென்று அவசர அவசரமாகப் பாலை எடுத்துக் கிண்ணத்தில் ஊற்றிக்கொண்டு, கூடத்தில் இருந்த பழத்தட்டையும் ஒரு கையில் தூக்கிக் கொண்டு மாடிக்குக் கிளம்பினாள்.

படிகளில் கால் ஊன்றும்போதெல்லாம் நடனக்கலை காட்டும் அவளது அசைவு, அன்றைக்கு ஏனோ நாணிக் கோணி நெளிந்தது!

''கல்யாணிக்குத் திருமணம் ஆகிறவரையில்'' என்று அவன் விதித்த நிபந்தனைகளுக்கான கெடு முடிந்த பிறகு இன்றுதானே வந்திருக்கிறார்! அவளுக்குத் திருமணம் முடித்துவிட்டல்லவா வந்திருக்கிறார். ''அதனால்...அதனால்... இன்றிரவு...இன்றிரவு...''

அதற்குமேல் வார்த்தைகளை உச்சரிக்க முடியாமல் அவளது இதய அதரங்கள் தடுமாறின! அதற்கு அடையாளமாக அவளது கால்கள் ஒன்றோடொன்று பின்னிக் கொண்டன!

''என்னடி இப்படியொரு சந்தோஷம்!'' என்று யாரோ அவளைக் கேலி செய்வது போலிருந்தது.

தனக்குள்ளாகவே சிரித்துக் கொண்டாள். மின்னிடும் பொன் பூக்களையொத்த கன்னியின் இதழ்கள் துடித்தன. ஒரு வழியாக மாடியறைக்கு வந்து சேர்ந்தாள். பழத் தட்டையும் பால் கிண்ணத்தையும் வாளுக்குவேலி உட்கார்ந்திருந்த இருக்கைக்கு எதிரே வைத்தாள்.

''உட்கார்'' என்று அவள் கரம் தொட்டு இழுத்தான் அவன்! ''ஒன்றும் வேண்டாம்'' எனச் சிணுங்கியபடி அவள் அப்பால் நகர்ந்து கொண்டாள்.

''ஓ! இத்தனை நாள் வரவில்லை என்ற கோபமா?'' எனச் சிரித்தான் வாளுக்குவேலி!

சுந்தரி முகத்தை வேறு பக்கம் திருப்பிக் கொண்டாள்.

''ஊடலில் தோற்றவர்தான் வென்றவராகக் கருதப்படுவார் என்று திருக்குறள் கூறுகிறது-தெரியுமா உனக்கு? அதனால் நீதான் தோற்க வேண்டும் இப்போது!''

எனக் கூறிய வாளுக்குவேலி, தட்டில் இருந்த ஒரு பழத்தையெடுத்து கைகளில் உருட்டியவாறு எழுந்து அவளிடம் வந்து நின்றான். மிகவும் சிரமப்பட்டுச் சுந்தராம்பாள் கோபத்தைத் துணைக்குக் கூப்பிட்டுக் கொண்டு, அவளையும் மீறித் துள்ளிப் பாய்கிற புன்னகையை இதழ்ப் பேழைக்குள் பூட்டிப் போட்டு விட்டு வாளுக்குவேலியைப் பார்த்தாள்!

''உங்களைப் போர்க்களத்தில்தான் யாரும் ஜெயிக்கக் கூடாது! இங்கேயும் அப்படித்தானா?''

''போர்க்களம்! அதில் பல களங்களைச் சந்தித்தவன் நான்! ஆனால் இந்தக் களம்-இது ஒரே களம்தான் எனக்குப் பரிச்சயம்! வெற்றி தோல்வி யாருக்கு என்பதைப் பற்றிக் கவலைப்படாமல் மோதிப் பார்க்க வேண்டியதுதானே!''

சுந்தராம்பாளுக்கு ஏற்பட்ட வெட்கம், அவளை அந்த இடத்தில் நிற்க விடாமல் துரத்தியடித்தது. பொய்க் கோபம் பறந்தது. ஓடிப்போய்ப் பஞ்சணையின் தலையில் முகத்தைப் புதைத்துக் கொண்டாள். அவள் குலுங்கிக் குலுங்கிச் சிரிப்பது அவளது துடியிடையின் அசைவினாலே அவனுக்குப் புரிந்தது. அவனும் போய்ப் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டு அவளது முதுகைத் தடவிக் கொடுத்துக்

கொண்டே ''அதற்குள் போரில் புறமுதுகு காட்டித் தோற்று விட்டாயே!'' என்றாள்.

''ம்...போங்கள்!'' என்றாளே தவிர அவனைப் போகவிடாமல் அவன் மடியில் தன் தலையைத் தூக்கி வைத்துக் கொண்டாள்.

''பெண்ணைக் கொடி என்கிறார்களே, எந்தக் கொடியாவது இப்படிச் சேலையால் தன்னுடைய அழகை மூடிக் கொள்கிறதா?'' வாளுக்குவேலி இந்தக் கேள்வி கேட்டதோடு நிறுத்தாமல் அவள் முதுகின் பக்கம் முத்தமிட்டு விளையாடிக் கொண்டிருந்த சேலையின் தலைப்பைப் போட்டி உணர்வோடு இழுத்து விட்டான். அதைத் தடுக்க வேண்டுமென்று அவள் நினைத்தாலும் அந்த நேரத்தில் அவள் மூளையின் கட்டளையை அவள் கைகள் ஏற்றிடவில்லை.

''சுந்தரி! நீ அலங்காரமில்லாமல் எவ்வளவு அழகாக இருக்கிறாய்!''

''அலங்காரமின்றிப் பார்ப்பதற்காகத்தானே சொல்லாமல் கூட வந்திருக்கிறீர்கள்...!''

''அலங்காரமில்லாமல் மட்டுமல்ல! உன்னை எதுவுமே இல்லா...''

வார்த்தைகளை அவன் முடிப்பதற்கு முன்பே அவளது தாமரைக் கை விரைந்து சென்று அவன் வாயைப் பொத்தியது. அந்த மிருதுவான உள்ளங்கையை அவனது உதடுகள் சற்று முரட்டுத்தனமாகச் சுவைத்தன. அந்தக் கையில் அவனது மீசையின் ரோமங்கள் பட்டதால் ஏற்பட்ட உணர்ச்சி அவளைப் புல்லரிக்க வைத்து இன்பபுரியின் ஏணிப்படிகளில் ஏற்றிவிட்டன. குப்புறப்படுத்தவாறு மடியில் தலை வைத்திருந்தவளின் இடையினை இறுகப்பற்றி அவள் முகம் தனக்குத் தெரியுமாறு மல்லாந்த நிலையில் தன் மடியில் படுக்க வைத்துக் கொண்டான்.

சேலையகன்று கச்சை அணிந்த மார்பகமும், சேலை நிகர்த்த விழிகளும் அவனை ஆலையிட்ட பொருளாக்கிற்று. தன்னைத் தள்ளாட வைத்துவிட்ட இன்ப போதையிலிருந்து சற்று மீண்டவளாய் அவள் எழுந்து உட்கார்ந்து கொண்டு அவன் தோள்களை இரு கரங்களாலும் பற்றியவளாய், ''ஆமாம்! கல்யாணி நாச்சியார் நலம்தானா? யாராவது அங்கிருந்து வந்தார்களா?'' என்று கேட்டாள்.

சுந்தரி தனது குடும்பத்தில் ஒருத்தியாக ஆகிவிட்டாள் என்ற மகிழ்ச்சி பொங்கிட, ''உம்! நலமாக இருக்கிறாள். க்ல்யாணியுடன் கௌதாரியை அனுப்பி யிருந்தேன். அவள் இன்றைக்குத்தான் வந்தாள். நாச்சியார் ரொம்ப சந்தோஷமா இருக்கிறாங்க எஜமான்னு கௌதாரி மனத் திருப்தியோடு சொன்னாள்!'' என்றான்.

''ஓ! அதுதானே பார்த்தேன்! இல்லாவிட்டால் இன்றைக்கு வந்திருக்க மாட்டீர்கள்; இல்லையா?''

''சுந்தரி! கல்யாணியின் திருமணம் முடித்த மறுநாளே நான் உன்னை வந்து பார்க்கவில்லையென்ற கோபத்திலேயே இன்னும் இருக்கிறாய்! உனக்குத் தெரியாது சுந்தரி! பார்த்திபனூரில் நமது சுதந்திரப் படையினரால் சிதற அடிக்கப்பட்டுப் பரமக்குடி வழியாக ஓடிய பரங்கியர் பட்டாளம் கமுதிக்கோட்டையில் கர்னல் அக்னியூ தலைமையில் பாசறையை அமைத்துக் கொண்டு மருது பாண்டியரைப் பிடிக்க நேரம் கணித்துக் கொண்டிருக்கிறது. அந்தச் செய்தி கேட்டவுடன் மருது பாண்டியருக்கும் கோபால நாயக்கருக்கும் ஊமைத்துரைக்கும் உதவியாக நமது கள்ளர் நாடுகளைச் சேர்ந்த இன்னும் ஓராயிரம் வீரர்களை அனுப்பி வைத்திருக்கிறோம். தம்பி கறுத்த ஆதப்பனும்கூட என் கட்டளையை ஏற்றுக் களத்திற்குத்தான் சென்றிருக்கிறான். இவ்வளவு விஷயம் நடந்திருக்கிறது இடையிலே இந்தப் பத்து நாட்களில்! நீ

என்னவோ கோபித்துக் கொள்கிறாய்... நான் இவ்வளவு சொன்ன பிறகும் உன் ஆத்திரம் தீரவில்லையென்றால் அதற்கேற்ற தண்டனையைக் கொடு!''

''தண்டனைதானே! இதோ தரத்தான் போகிறேன்!'' அவனை இறுகத் தழுவிக் கொண்டாள். முதல் தண்டனையாக அவன் உதட்டில் முத்தம் பதித்தாள்! அவனோ அவள் கன்னங்களில் முத்தங்களைப் பறித்தெடுத்தான்! ஒட்டிக் கொண்டனர் இருவர் ஒருவராய்! அவன் கரங்கள் அவள் ஆடைகளையும்.. அவளது கரங்கள் அவனது ஆடைகளையும்... அதற்குள் விளக்கு அணைக்கப்பட்டுவிட்டது...

''இச்'' ஒலியின் இசையோடு இன்ப லோகப் பயணத்தின் தொடக்க விழா; ஒருவரையொருவர் மறந்த நிலையில்... அதற்குள் படுக்கையறைக் கதவு படபடவென்று தட்டப்படும் சப்தம்!

கட்டிக் கிடந்தோரை வெட்டிப் பிரித்த ஓசை! திடுக்கிட்டு எழுந்தனர்! சபித்துக் கொட்ட வேண்டிய அந்த எதிர்பாராத நிகழ்ச்சிதான் என்ன? இருவருமே அதையறிந்து கொள்ளும் பரபரப்பில் உடைகளை அவசர அவசரமாக அணிந்து கொண்டு-கதவைத் திறந்து வெளியே ஓடி வந்தனர்.

வேலைக்காரி நின்றாள்.

''என்னடி சனியனே!'' என்று சுந்தரி சினம் பொங்கிடக் கேட்டாள்.

''யாரோ மேகநாதனாம்! ரொம்ப ஆபத்தான சேதியாம்! அய்யாவைப் பார்க்க வந்திருக்காரு!'' அவள் நடுங்கிக்கொண்டே பதில் கூறியதும்-''யார்-மேகநாதனா?'' என்று கேட்டபடி வாளுக்குவேலி படிகளைத் தாண்டிக் கீழேயுள்ள ஊஞ்சல் கூடத்திற்கு வந்தான்.

மேகநாதன், ''மன்னிக்கவும்'' என்று கூறிவிட்டுச் செய்தியைச் சொன்னான்.

''கர்னல் அக்னியூ ஏழெட்டாயிரம் வீரர்களைக் கொண்ட பெரிய பட்டாளத்துடன் ஒக்கூரை முற்றுகையிட்டானாம்! நமது விடுதலைப்படைகள் மிக மூர்க்கமாகப் போரிட்டிருக்கின்றன. ஒக்கூரைப் பிடிக்க முடியாது எனத் தெரிந்து கொண்ட அக்னியூ, தனது படைகளைக்கொண்டு ஒக்கூரையே தீ வைத்துக் கொளுத்தி நாசமாக்கிவிட்டு, சின்ன மருதுவின் தலை நகரமான சிறுவயலை நோக்கிப் படையுடன் போய்க் கொண்டிருக்கிறானாம். தம்பி கறுத்த ஆதப்பன் மூலமாக இந்தச் செய்திகள் கிடைத்திருக்கின்றன.

''அப்படியா? இப்போது ஆதப்பன் எங்கே?''

''சிறுவயலைக் காப்பாற்ற ஏதாவது செய்ய வேண்டுமென்று சில வீரர்களுடன் போயிருப்பதாகத் தகவல்! அதுமட்டுமல்ல-மருது பாண்டியர்களுடன் நமது கள்ளர் நாடுகள் கொண்டுள்ள உறவு, கர்னல் அக்னியூவுக்குத் தெளிவாகவே புரிந்து விட்டதாம்! அதனால் கறுத்த ஆதப்பனைக் கைது செய்ய உத்தரவிட்டிருக்கிறானாம்!''

''ஆ! அப்படியா?''

வாளுக்கு வேலியின் முகம் பாயும் வேங்கையைப் போல் மாறியது! சுந்தரியைத் திரும்பிப் பார்த்தான்! நிலைமையறிந்து மேகநாதன் வெளியே சென்றான்!

''சுந்தரி! என்னை மன்னித்துக்கொள்! பிறகு வருகிறேன்'' என்று கூறி-அவளது கரங்களுக்கு முத்தமளித்துவிட்டு வாளுக்கு வேலியும் மேகநாதனுடன் புறப்பட்டான்!





# 30

சிறுவயல் என்ற பெயர் கம்பீரமாகத் தோன்றா விட்டாலும் சின்ன மருதுவின் மாளிகை அங்கே கம்பீரமாகக் காட்சியளித்துக் கொண்டிருந்தது. அந்நியப் பகைவனான ஆங்கிலேயத் தளபதியொருவனே அந்தச் சிறுவயல் நகரத்தின் சிறப்பைப் பற்றிக் குறிப்பிடுகிறான்.

சிறிய மாளிகையாயினும் எழிலுறக் கட்டப்பட்டது என்றும், இந்தியாவில் அவன் சென்று பார்த்த நகரங்களிலேயே சிறுவயல் நகரம் தனிப் பெருமையும் அழகும் வாய்ந்தது என்றும், வீதிகள் மிகக் கச்சிதமாக அமைந்திருந்தன என்றும், அந்தத் தளபதி வர்ணிக்கிறான். அங்கேதான் ஆதிக்க வெறியின் தாண்டவத்தை நடத்த கர்னல் அக்னியூவின் படையினர் அணிவகுத்துக் கிளம்பினர். அவனது படையுடன் தமிழ்நாட்டைச் சேர்ந்த துரோகிகளின் படைகளும் இணைந்து கொண்டன!

நள்ளிரவுக்குள் எப்படியும் சிறுவயல் நகரைக் கைப்பற்றிச் சின்னமருதுவைக் கைது செய்ய வேண்டுமென்ற உறுதியுடன் கடுமையான போர் நிகழ்த்தினான் கர்னல் அக்னியூ! நகரின் நாலா திசைகளிலும் அக்னியூவின் படைகள் சூழ்ந்து விடுதலை வீரர்களைப் பயங்கரமாகத் தாக்கின. அக்னியூ ஒரு குதிரையில் அமர்ந்து படையினருக்கிடையே பலமுறை நுழைந்து அவர்களை உற்சாகப் படுத்திய வண்ணமிருந்தான்.

''விடாதீர்கள்! விடுதலைக் கும்பலை விரட்டி யடியுங்கள்! சிறுவயல் வீழ்ந்தால் அடுத்தது காளையார் கோயில் நமது காலடியில்தான்! உம்... முன்னேறுங்கள்!'' கர்னலின் முழக்கத்திற்கு ஏற்ப அவனது படை, சிறுவயல் நகரத்தைக் கைப்பற்றக் கங்கணம் கட்டிக் கொண்டு, மருது பாண்டியரின் வீரர்களை வளைத்துக் குண்டு மாரி பொழியத் தொடங்கியது.

உயிரினும் மேலாகத் தங்கள் மண்ணை நேசித்த அந்த மறவர்குல திலகங்கள், தங்களது தலைவர்களில் ஒருவனான சின்னமருதுவைப் பகைவர்களின் கையில் சிக்கவிடாமல் பாதுகாக்கும் பொறுப்பையும் ஏற்றுக் கொண்டு, சிறுவயலுக்குள் அவர்கள் நுழைந்து விடாமலும் தடுத்திடத் தங்கள் பிணங்களையே குறுக்கே போட்டிடத் தயார் என்ற நிலையில் சமர் புரிந்தனர்.

ஆயிரக் கணக்கானோர் துப்பாக்கிகளைப் பயன்படுத்திப் போரிடும்போது அவர்களை எதிர்த்து நூற்றுக் கணக்கான விடுதலை வீரர்கள் குறைந்த அளவில் துப்பாக்கிகளையும், மற்றும் ஈட்டிகளையும் வாட்களையும் கொண்டு சமாளிப்பது சாதாரண காரியமா? எதிரிகளுக்குச் சாதகமாக இருளும் அமைந்துவிட்டது!

அவர்களுக்குச் சாதகமான அந்த இருளைத் தனக்கும் சாதகமாகப் பயன்படுத்திக் கொண்டு சின்னமருது சில வீரர்களுடன் கோட்டையிலிருந்து தப்பிவிட்டான் என்ற செய்தி கர்னல் அக்னியூவின் காதுக்கு எட்டியது. சிறுவயலில் இருந்து காளையார் கோயில் வரையில் அடர்ந்து நீண்டுள்ள காட்டுப் பாதை வழியாகத்தான் சின்னமருது சென்றிருக்க வேண்டும் என்று யூகித்துக் கொண்ட அக்னியூ சிறு வயலில் நகரத்தைத் தனது ஆதிக்கத்தின்கீழ்க் கொண்டு வர மிக அவசரம் காட்டினான்.

அந்த நகரத்தைப் பிடித்துக் கொண்டால் காளையார் கோயில் செல்லும் காட்டுப்பாதை வழியாகத் தனது படையை நடத்திச் செல்வதற்குத் தடையாக இருக்கும் அந்த வலிவான போர்ப் பாசறையை அழித்துவிட்டதாகப் பொருள் என அவன் கருதினான். சிறுவயலை வெற்றி கொண்டால் அடுத்த திட்டம் காட்டையழித்தவாறு காளையார் கோயிலை நெருங்குவதே என்பது கர்னலின் கணிப்பு!

''சின்னமருது தப்பி விட்டதற்காக யாரும் சோர்ந்து விடாதீர்கள்! அவனையும், பெரியமருதுவையும், ஊமைத்துரை, கோபால நாயக்கர் கூட்டத்தையும் பிடித்துத் தண்டிப்பது நமது போரின் இறுதிக் கட்டம்! அதற்கிடையே எதிர்ப்படும் தடைகளையெல்லாம் தகர்ப்போம்! சிறுவயல் அரண்மனையையும், இந்த நகரின் போர்த் தளத்தையும் குறி வைத்துப் பாயுங்கள்!'' எனக் கர்ச்சனை செய்தவாறு கர்னல் துரை தனது குதிரையை முடுக்கிவிட்டான்.

அவனது கையிலிருந்த துப்பாக்கி எதிர்த்து வரும் விடுதலை வீரர்கள் மீது குண்டுகளைப் பொழிந்தபடி யிருந்தது. அவனைத் தொடர்ந்து வந்த நாலைந்து ஆங்கிலேயக் குதிரை வீரர்களும் விடுதலை வீரர்கள் பலரின் உயிரைக் குடிக்கத் தவறவில்லை.

நகருக்குள் போர் முழக்கம் கேட்டு மக்கள் பீதியடைந்து திசை கெட்டு ஓடத் தொடங்கினார்கள். அவ்வாறு ஓடிய முதியோர், பெண்டிர், மழலைகள் பலரின் இரத்தத்தைச் சுவைத்துக் குண்டுகள் கூத்தாடின.

''அய்யோ!'' என்ற அலறலையும் - ''விடாதே! பிடி!குத்து!சுடு!'' என்ற கூச்சல்களையும் அந்த நகரம் தாங்காமல் குலுங்கிக் கொண்டிருந்த பொழுது அங்கே இருளைக் கிழித்துக் கொண்டு பத்துப் பதினைந்து தீப்பந்தங்கள் வெகு வேகமாக வந்து கொண்டிருந்தன!

அவர்கள் குதிரை வீரர்களாகத்தான் இருக்க வேண்டும். அவர்கள் கைகளில் ஏந்தியுள்ளவை தீப்பந்தங்கள் என்பதால்தான் அவை அவ்வளவு வேகமாகச் சுழன்றோடி வருகின்றன.

அந்தக் குதிரை வீரர்களின் குழுவுக்குள் இருந்து ஒரு எக்காளக்குரல் எழுந்தது!

''நகரம் நாசகாரப் பகைவர்களின் கையில் சிக்கிடப் போவது உறுதியாகி விட்டது! எதிரிகளின் ஆயுதங்களால் மோதுண்டு இந்தச் சிறுவயல் சின்னா பின்னமாவதைவிட நமது கையாலேயே தீயுண்டு அழியட்டும். புறப்பாடல் இயற்றிய மாசாத்தியார் பிறந்த ஒக்கூரைப் பொல்லாப் பகைவர் எரித்துப் பொசுக்கியது போன்ற கொடுமைக்குச் சிறுவயலும் உட்பட வேண்டாம்! நமது கரங்களாலேயே நமது அன்புக்குரிய இந்த நகரைத் தீக்குளிக்கச் செய்து இதன் புனிதத்தைக் காப்பாற்றுவோம். பகைவன் நுழைந்து அவன் பயன்படுத்துவதற்கென்று சிறு பொருளும் சிறுவயலில் இருத்தலாகாது! உம்! பரவட்டும் தீ! மருளட்டும் பகைவர்!''

இந்தக் குரலுக்குச் சொந்தகாரன் அந்தக் குதிரை வீரர்கட்கு மத்தியில் நரைத்துப் பழுத்த தாடி மீசையுடனும் பெரிய தலைப்பாகையுடனும் மார்பில் கவசமுடனும், கையில் நீண்ட துப்பாக்கி, இடையில் உடை வாளுடனும் காட்சி தந்தான். அவன் கட்டளையை நிறைவேற்ற அவனைச் சுற்றியிருந்த வீரர்கள் தீப்பந்தங்களுடனும் பறந்தனர்.

''ஊரார் ஓடிவிடுங்கள்! குழந்தை குட்டிகளுடன் வீடுகளைக் காலி செய்யுங்கள்! முடிந்த அளவு நீங்களே உங்கள் உடைமைகளுக்கு நெருப்பு வைத்துவிட்டுக் காளையார் கோயில் செல்லும் மார்க்கத்தில் பயணப் படுங்கள்!''

அந்த வீரர்களின் உருக்கமும் உணர்ச்சியும் கலந்த வேண்டுகோளுக்குச் சிறுவயல் மக்கள் செவி சாய்த்துத் தங்களால் முடிந்தவரையில் அந்த எழில் நகரத்தை எரிதழலுக்கு இரையாக்கி விட்டு வெளியேறிக் கொண்டிருந்தனர்.

கர்னல் அக்னியூ, குதிரையில் வட்டமிட்டபடியே தீப்பந்த வீரர்களை நோக்கிச் சுட்டுக் கொண்டேயிருந்தான். அவன் குறி தப்பாமல் பல வீரர்கள் மண்ணில் சாய்ந்தனர். அந்தக் கோரக்காட்சி கண்டு துடித்துப் போன தாடிக்காரக் கிழவன், தனது துப்பாக்கி கொண்டு கர்னல் அக்னியூ துரையின் மீது குண்டுகளைப் பாய்ச்சினான். குதிரை சுருண்டு விழுவதற்குள் அதிலிருந்து வேகமாகக் குதித்துவிட்ட கர்னல் துரை அக்னியூ அந்தக் கிழவனை நோக்கிச் சுட்டான். ஆனால் குண்டு பாயவில்லை. துப்பாக்கியில் குண்டு தீர்ந்து போயிருந்தது. கிழவன் இதுதான் சமயமென்று அக்னியூவின் மீது தனது துப்பாக்கியை நீட்டினான். ஒரே குண்டு! அதில் அக்னியூவின் தலை நொறுங்கி அங்கேயே சாக வேண்டும்-ஆனால் அந்தக் கிழத் தளகர்த்தனுக்குப் பெருத்த ஏமாற்றம்! அவனது துப்பாக்கித் தோட்டாக்களும் தீர்ந்து போயிருந்தன.

கர்னல் அக்னியூ, தனது வாளை உருவிக்கொண்டு கிழவனை நோக்கி முன்னேறினான். கிழவனும் குதிரையிலிருந்து ஒரே தாவாகத் தாவி அக்னியூவின் முன்னால் வாளுடன் நின்றான். அந்த இருளில் அங்கொன்றும் இங்கொன்றுமாக எரிந்து கொண்டிருந்த வீடுகளின் நெருப்பு ஜுவாலையில் இருவரின் போர் வாட்களும் பளபளவென்று மின்னிக் கொண்டிருந்தன! கர்னல் கலகலவெனச் சிரித்தான். அது கனல் கக்கும் சிரிப்பாகவும் ஏளனத்தை வெளியிடும் எகத்தாளச் சிரிப்பாகவும் இருந்தது.

''ஓ! சின்ன மருதுவா? ஒல்ட் மேன் மேக் அப் நன்றாகத்தானிருக்கிறது! தப்பித்து ஓடுவதற்கு இப்படியொரு தந்திரமா? என் அன்புள்ள மருது! இப்போதும் ஒன்றும் கெட்டுவிடவில்லை! வாளைக் கீழே போட்டு விட்டு வாயைத் திறந்து ஒரேயொரு மன்னிப்பு! ஆமாம்-மண்டியிட்டவர்களை மன்னிக்கும் சுபாவம் கொண்டதுதான் ஆங்கிலேயக் கம்பெனி ஆட்சி! கொஞ்சம் சிந்தித்துப்பார் மருது! பெரிய மருதுவை விடச் சின்ன மருது திறமைசாலி என்று கேள்விப்பட்டிருக்கிறேன். இதோ எரிந்து கொண்டிருக்கிறதே உங்களுடைய நகரம்; இதைப் போல ஆயிரத்துக்கு மேற்பட்ட உங்களது கிராமங்களும் -அவற்றில் இடம் பெற்றுள்ள எண்பதாயிரத்திற்கு மேற்பட்ட வீடுகளும் எரிந்து கருகிச் சாம்பல் பொடிகளாகக் காற்றில் பறக்க வேண்டுமென்று விரும்புகிறீர்களா? வீரத்தை மறந்து கொஞ்சம் விவேகத்தைத் துணைக்கு அழையுங்கள்! எங்களுக்குப் பணிந்து எங்களை வணங்கிய காரணத்தால் புதுக்கோட்டைத் தொண்டைமான் தொல்லையின்றி வாழ்கிற நிலைமையைப் பாருங்கள்! எட்டையபுரத்துப் பாளையக்காரர் எங்களை ஏற்றுக் கொண்டதால் எத்துணை அந்தஸ்துடன் வாழ்கிறார்! அது மட்டுமல்ல; இப்போது உங்கள் சிறுவயல் நகரை வளைத்திருக்கும் படைகளில் பெரும்பகுதி அந்த நட்பு நிறைந்தவர்களால் அனுப்பி வைக்கப் பட்டதேயாகும்! சிங்கங்கள் எங்கள் காலடியில்! சிவகெங்கைப் புலிகள் மட்டும் வீணாக உறுமுவானேன்?''

கர்னலின் இதோபதேசத்தைக் கேட்டு, தாடிக்காரத் தளபதி எத்தகைய மன மாற்றத்திற்கும் ஆளாகவில்லை. கர்னலின் நெஞ்சுக்கு நேராக நீட்டிய வாளுடன் அந்தத் தளபதி நின்று கொண்டிருந்தானே தவிர பதில் ஏதும் பேசவில்லை.

''என்ன மிஸ்டர் சின்னமருது! பதில் சொல்லாமல் ஒரே மௌனம்?''

இப்படிக்கேட்ட அக்னியூ தனது வாளையும் தாடிக்காரத் தளபதியின் வாளைத் தடுத்திடும் வகையில் ஓங்கிப் பிடித்துக் கொண்டிருந்தான்.

''வாய்ப் பேச்சுத் தேவையில்லை! வாட்கள் பேசட்டும்!''

தாடித் தளபதி இப்படியொரு பதிலை உதிர்த்ததும் கர்னல் மோதினான். இரண்டு வாட்களும் சுழன்றன. எரிந்து கொண்டிருந்த தீயின் நாக்குகளை வென்றிடக் கூடிய நிலையில் அவர்கள் இருவரின் கண்கள் கனலைக் கக்கின! கர்னலுடன் வந்த வீரர்கள் வேறு முனையில் விடுதலைப் படையினருடன் சண்டையிட்டுக் கொண்டிருந்தனர்.

தாடிக் கிழவனுடன் வந்த வீரர்களோ பெரும் பகுதியினர் சிறுவயல் மண்ணில் உருண்டு கொண்டு மரணத்துடன் போராடிக் கொண்டிருந்தனர். கர்னலும் கிழவனும் ஒருவருக்கொருவர் சளைத்திடவில்லை. கிழவனின் கழுத்தை வெட்டிச் சாய்த்திட கர்னலின் வாள் பாய்ந்தது! அதனைத் தடுத்து நிறுத்தி கர்னலின் நெஞ்சில் புகுந்திட முனைந்து நின்றது கிழவனின் வாள்!.

பழுத்த கிழப்பருவம்-ஆயினும் பதினெட்டு வயது இளைஞனுக்குள்ள பலத்துடனும் சுறுசுறுப்புடனும் அவன் வாளைக் காற்றில் மிதக்க விடும் திறமை கண்ட கர்னல், அவன் சின்ன மருதுவேதான் என்று தனது கண்டு பிடிப்பைத் தெளிவு படுத்திக் கொண்டான்; எனவே சற்றுப் பின் வாங்குவது போலச் சண்டையிட்டுக் கொண்டே சென்று அங்குள்ள ஒரு பீடத்தில் ஏறி நின்று ''மை டியர் சின்னமருது! கடைசி நிமிஷம் உனக்கு! வீணாக என் வாளுக்குப் பலியாகாதே!'' என உரக்க ஒலி கிளப்பினான்.

கிழவன் ஒரு பயங்கரச் சிரிப்புடன் பதில் கூறிக் கொண்டே வாளை ஓங்கினான். ''நீ இப்போது ஏறியிருப்பதுதான் பலிபீடம்!'' என்று அவன் சொன்னதும், கர்னல் தன்னைச் சுற்றிப் பார்த்துக் கொண்டான். ஆம், கிராம தேவதைக் கோயில் ஒன்றின் பலிபீடம்தான் அது!

தங்கள் தளபதியான அக்னியூ ஆபத்தான நிலையில் இருப்பதை உணர்ந்த அவனது படை வீரர்கள் சிலர் அந்த இடத்தை நோக்கி விரைந்து வந்தனர். அவர்கள் வருவதற்குள்ளாக அந்த வீரக் கிழவன், கர்னல் அக்னியூவின் வாளைத் தனது வாளினால் உடைத்தெறிந்தான். அடுத்தது அக்னியூவின் முடிவுதான். ஆனால் அதற்குள் அவன் தலை தப்பினால் போதுமென்று ஓட முயன்றான். கிழவன் விடவில்லை. அவனைப் பின்தொடர்ந்தான் வாளை வீசியபடியே!

கர்னலுக்குத் துணை புரிய விரைந்து வந்த வீரர்கள் கிழவனைச் சூழ்ந்து கொண்டு துப்பாக்கிகளை வெடித்தார்கள். ஒவ்வொரு தோட்டாவும் சற்றுத் தொலைவிலிருந்து குறி தவறாமல்தான் கிழவனை நோக்கிப் பறந்து வந்தது. ஆனால் அந்தக் கிழத் தளபதி அப்படியும் இப்படியும் மேலும் கீழும் பக்கவாட்டிலும் தனது உடலை வளைத்தும் நெளித்தும் நிமிர்ந்தும் குனிந்தும் படுத்தும் புரண்டும் அந்தக் குண்டுகளில் இருந்து தப்பித்துக் கொண்டேயிருந்தான்.

எந்தப் பலிபீடம் கர்னலின் உயிரைக் குடிக்க வாயைப் பிளந்து கொண்டு நின்றதோ-அந்தப் பலிபீடம் இப்போது கிழத் தளபதியின் உயிரைக் காத்திட உதவி புரிந்தது! ஆனால் எவ்வளவு நேரம் ஒரு வாளை வைத்துக் கொண்டு துப்பாக்கியேந்திய அத்தனை வீரர்களைத் தாக்குப் பிடிக்க முடியும்!

கம்பெனி வீரர்களின் வளையத்திற்குள் சிக்கிக் கொண்டோம் என்பதைக் கிழவன் புரிந்து கொண்டான். அந்த வளையத்தில் தனது இனத்தைச் சேர்ந்த சில துரோகிகளும் ஆயுதமேந்தியிருப்பதை நகரத்தை எரிக்கும் தீயின் வெளிச்சத்தில் அவனால் காண முடிந்தது! எதிரிகளைவிட அந்தத் துரோகிகள் சிலரையாவது வெட்டிக் குவிக்க வேண்டுமென்று சினங்கொண்டு அவர்கள் மீது வாளை வீசினான்..

தப்பியோடிச் சிறிது தொலைவில் நின்ற கர்னல் அக்னியூ ஒரு துப்பாக்கியைப் பெற்று அங்கிருந்தவாறே கிழவனை நோக்கிச் சுட்டான். அதைத் தடுத்துக் கொள்ளக் கீழே குனிந்த கிழவனின் தலைப்பாகையை அந்தக் குண்டு தூக்கிக் கொண்டு போயிற்று. கிழவன் குனிந்த அதேநொடியில் அக்னியூவின் ஆட்கள் அவனைச் சூழ்ந்து கொண்டார்கள்!

''ஏமாந்து விடாதீர்கள்! இந்தக் கிழவன்தான் சின்ன மருது! வேஷக்காரனுக்கு விலங்கிடுங்கள்!'' என்று கூறிக் கொண்டே அக்னியூ அருகில் ஓடி வந்தான். வேறு வழியில்லை; நரைத்துப் பழுத்தவனாகக் காணப்பட்ட அந்தக் கிழவன், அந்த நரிகளின் கூட்டத்தில் சிக்கிக் கொண்டான். அனலைப் பொழியும் அவனது கண்கள் அந்நியப் பகைவரைச் சுட்டெரிக்கத் துடித்தன. ஆனால் அவனது கரங்களுக்கு விலங்கு மாட்டப்பட்டது.

''மிகவும் சிரமப்பட வேண்டுமென்றிருந்தேன்! ஆனால் சுலபமாக முடிந்து விட்டது வேலை! சின்ன மருது மன்னர் அவர்களே! உம்மை வைத்தே பெரிய மருதுவையும் கைது செய்ய என்னால் முடியும்! உங்களுக்குப் பிறகு ஊமைத்துரையின் ஆட்டபாட்டமோ, அந்தக் கோபால நாயக்கரின் கொட்டமோ எவ்வளவு நாளைக்கு?''

என்று ஆணவமாகச் சிரித்த அக்னியூ, தனது வீரர்களைப் பார்த்துச் சொன்னான். ''பாவம்; வயதான ஒரு கிழவனைக் கைது செய்தோம் என்ற பழி வேண்டாம் நமக்கு! வீராதி வீரர் சின்ன மருதுவுக்கு விலங்கிட்டோம் என்ற பெருமை நமக்கு உரியதாகட்டும்! இந்த வீர தீர பராக்கிரம மன்னரின் வேஷத்தைக் கலையுங்கள்!'' என்று!

அதிலே ஒரு வீரன் குறுக்கிட்டு ''இல்லை பிரபூ! இவன் சின்ன மருது இல்லை! உண்மையிலேயே கிழவன் தான்!'' என்றான் அழுத்தம் திருத்தமாக.

''எந்த முட்டாள் சொன்னது? இதோ பார்-சாட்சாத் சின்ன மருதுவை!'' என்று கத்திக் கொண்டே அக்னியூ கிழவனின் தாடியைப் பிடித்து இழுத்தான். தாடியும் மீசையும் கர்னலின் கையோடு வந்து விட்டது.

''கர்னல் அக்னியூ பிரபுவுக்கு ஜே! சிக்கிவிட்டான் சின்ன மருது! வெற்றி! வெற்றி!''

ஜெயகோஷம் வானைப் பிளந்தது-ஆனால் அக்னியூ தன்னையறியாமல் வாயைப் பிளந்தான் ஆச்சரியத்தால்! கிழவன் வேடத்தில் போரிட்டுக் கைதானது சின்ன மருது இல்லை-வேறு யார்? வாளுக்கு வேலியின் தம்பி கறுத்த ஆதப்பன்! அக்னியூ தனது ஐயப்பாட்டை முழுமையாகப் போக்கிக் கொள்ள அங்குக் கிடந்த ஒரு தீப்பந்தத்தைத் தூக்கி அவன் முகத்துக்கு நேரே பிடித்தான். ஆம், அவனே தான்!





# 31

என்னதான் தனது மன வேதனையை வெளிக் காட்டிக் கொள்ளாமல் கல்யாணி நாச்சியார் மறைக்க முயற்சி செய்தாலும் கூட வீரம்மாளுக்கு எல்லாமே நன்கு விளங்கி விட்டது. முதல் இரவு நாளன்று வைரமுத்தன் எவ்வளவு மோசமாக நடந்து கொண்டான் என்பதும், வடிவாம்பாள் இரவோடு இரவாக வெளியேறியதும், அவள் காதுகளுக்கு வராமல் போய்விடவில்லை. தனது சந்தேகத்தை உறுதிப்படுத்திக் கொள்ள வேண்டும் என்பதற்காகக் கல்யாணியை அணுகி விசாரித்தாள்.

ஆனால் அவள் தன் கணவனைப் பற்றி எந்தக் குறையும் சொல்லவில்லை. அவனோடு ஒவ்வொரு இரவும் மகிழ்ச்சியாகக் கழிப்பதாகவே கல்யாணி வீரம்மாளிடம் கூறினாள். வடிவாம்பாள் விவகாரம் பற்றித் தெரிந்து கொள்ள வீரம்மாள் அக்கறையெடுத்துக் கொண்டாள்.

''அய்யோ! அப்படியெல்லாம் அவர் மீது பழி சொல்லாதீர்கள்! அன்றிரவு முழுதும் அவரும் நானும் எவ்வளவோ மனம் விட்டுப் பேசிக் கொண்டிருந்தோம். அவர் என் அருகிலேயே இருந்தார். வடிவாம்பாள் எங்கிருந்தாள் என்பதுகூட அவருக்குத் தெரியாது. அப்படியொரு எண்ணம் அவருக்கு இருந்ததாகச் சொல்வதே மகாபாதகம்! யார்தான் இப்படியொரு கதையை இட்டுக் கட்டி உங்களிடம் சொல்லியிருக்கிறார்களோ?''

இதுபோலக் கல்யாணியிடமிருந்து பதில் கிடைத்தது!

ஆனால் வீரம்மாள் அதை நம்பிவிடவில்லை. அவளது கணவன் உறங்காப்புலியின் இழிசெயல்களை மூடி மறைக்க அவனது மனைவி என்ற முறையில் வீரம்மாளே பலவற்றைத் தனது நெஞ்சிலிட்டு விழுங்கிக் கொண்டதைப் போலத்தான் கல்யாணியும் நடந்து கொள்கிறாள் என்று ஒரு முடிவுக்கு வர வீரம்மாளுக்கு அதிக நேரம் ஆகவில்லை. அதனால் அவள் கல்யாணியை அனுதாப உணர்வுடன் நோக்கினாள்.

தன்னையுமறியாமல் தன்னுடைய முகம் மாறி அதன் மூலம் உண்மையை வீரம்மாள் புரிந்துகொண்டு விடக்கூடாது என்பதிலே நாச்சியார் மிகுந்த கவனம் செலுத்தினாள்.

என்னதான் பட்டமங்கலத்திற்கும் பாகனேரிக்கும் பரம்பரைப் பகையிருந்தாலும்கூட அந்தப் பகைக்குக் கல்யாணியைப் போன்ற ஒரு பூவமுமறியாத பெண்களின் வாழ்க்கை பலியாகிவிடக் கூடாது என்ற உறுதியான கருத்து, வீரம்மாளின் உள்ளத்தில் சுடர் விட்டுக் கொண்டிருக்கிறது என்பதற்கான அடையாளத்தை அவள் முகம் காட்டிக் கொண்டிருந்தது.

தம்பி வைரமுத்தனிடம் அதைப் பற்றிப் பேசி ஒரு நல்ல முடிவுக்கு அவனை வரச் செய்து, கல்யாணியின் வாழ்க்கை விளக்கைப் பிரகாசிக்கச் செய்ய வேண்டு மென்று வீரம்மாள் தன்னைத் திடப்படுத்திக் கொண்டாள்.

ஒரு பெண்ணுக்குக் கதைகளிலே துன்பம் வரும் கட்டங்களைக் கூடப் பொறுத்துக் கொள்ள முடியாத

பெண்களின் மென்மையான உள்ளம், தனக்கு நேராகவே ஒரு பெண்ணின் வாழ்வு இருளடைகிறது என்பதைப் பார்த்திடச் சகிக்குமா? அப்படியொரு நல்ல பெண்மணியின் இலக்கணத்திற்கு உதாரணமாக வீரம்மாள் விளங்கி, கல்யாணியின் கண்ணீர் துடைத்திடச் சங்கற்பம் செய்து கொண்டாள்.

வைரமுத்தனின் எதிரே சென்று அவள் கல்யாணிக்காக வாதாடிடத் தொடங்கியதும் அவன் முதலில் திகைத்துத்தான் போனான். ஆனால் எதையும் ஒளிக்காமல் தனது செயலுக்கான காரணத்தைத் தனது சகோதரியிடம் விவரிக்க அவன் தயாரானான்.

''அக்கா! கல்யாணியைத் திருமணம் செய்து கொள்ளக் கூடாது! பாகனேரியுடன் எந்த பந்தமும் சொந்தமும் கூடாது! அண்ணனுக்கு அவமானமிழைத்து, பட்டமங்கலத்தின் மானத்திற்கே அறைகூவல் விட்ட பாகனேரியில் பெண் கொள்ளக்கூடாது; என்றெல்லாம் நீயும் உன் கணவர் உறங்காப்புலியும் குறுக்கே நின்றீர்களே; அதை மறுத்துவிட்டுக் கல்யாணியைத் திருமணம் செய்து கொண்டே தீர்வது என நான் பிடிவாதம் காட்டியதற்குக் காரணம் இப்போது புரிகிறதா? கல்யாணியை நான் காதலித்தேன். அவளும் என்னைக் காதலித்தாள். எங்கள் காதல் நிறைவேறுவதின் மூலம் இருநாட்டுப் பகையும் பட்டுப் போய்விடும் என எதிர்பார்த்தேன். ஆனால் எதுவரையில் அந்த இன்பமான நினைவு என் நெஞ்சில் தவழ்ந்தது என்பது எனக்கு மட்டும்தான் தெரியும். என் மைத்துனர்-உன் கணவர் உறங்காப்புலியைச் செக்கு மாடாகச் சுற்ற வைத்து-என் ஆருயிர் அண்ணனின் முடியை வெட்டி மானபங்கம் செய்து-அந்த மான மறவனின் மரணத்திற்கும் காரணமாகப் பாகனேரிக்காரர்கள் என்றைக்குத் தங்கள் கடுமையான உள்ளத்தை வெளிக் காட்டிக் கொண்டார்களோ, அன்றைக்கே எனக்கு நானே செய்து கொண்ட சத்தியம்!

மேற்கொண்ட சூளுரை! அதைத்தான் கல்யாணியைத் திருமணம் செய்து கொண்டதின் மூலம் நிறைவேற்றத் தொடங்கியிருக்கிறேன்.''

தம்பியின் விளக்கம், வீரம்மாளைச் சமாதானப் படுத்தவில்லை.

''என் கணவரை அவமானப் படுத்தியவன் ஆதப்பன்! அவனேதான் நமது அண்ணனையும் பாகனேரித் தெருவில் தலை குனியச் செய்தான்! நீ ஒரு வீரன்! உயிர் நீப்பர் மானம் வரின் என்ற உணர்ச்சியைச் செயலாக்கிக் காட்டிய மகாவீரன் வல்லத்தரையனின் தம்பி! வஞ்சம் தீர்க்கும் வல்லமை உனக்கு இருந்தால் வாள்பிடித்த வாளுக்கு வேலித் தேவரின் தம்பியுடனல்லவா நீ மோதியிருக்க வேண்டும்! அதை விடுத்து வளையல் அணிந்த கரத்தைப் பழி வாங்குகிறேன் பார் என்று உன் மீசையை முறுக்குகிறாயே! உன் செய்கையைக் கண்டு உன் மீசையே கூட வெட்கப்படும்! கல்யாணி உன்னை நெஞ்சாரக் காதலித்தாள். இன்னமும் காதலிக்கிறாள். அவளிடம் நடந்து கொண்டதையும் நடந்து கொள்வதையும் கூட யாரிடமும் சொல்லாமல் தனது காதலின் பெருமையை இன்னமும் நிலை நிறுத்திக் கொண்டிருக் கிறாள். அவளிடம் போய்ப் பாகனேரியைப் பழி வாங்கும் வீரத்தை நீ காட்டுவதால் என்ன பயன்!''

வைரமுத்தன் குழப்பமுற்றுக் காணப்பட்டான். தட்டுத் தடுமாறிச் சொற்கள் நடை பயின்றன.

''அக்கா! நமது குடும்பத்திற்கு ஏற்பட்ட அவமானத்தால் நாம் துடித்தோம்! துவண்டோம்! நமது ஒப்பற்ற குல விளக்காம் நமது அண்ணனையே அந்த அவமானத்தைப் போக்கிடும் விலையாக மரண தேவதையிடம் ஒப்படைத்தோம்! அழுதோம்! புலம்பினோம்! நம்மைப்போல் பாகனேரி அம்பலக்காரர் குடும்பத்தார்

துடித்திட வேண்டாமா? அவர்கள் தங்களின் கண்ணைப் போல் வளர்த்த பெண் கல்யாணி! அவள் சீரழிகிறாள் சித்திரவதைப் படுகிறாள்-என்ற செய்தி கேட்டால்தானே அவர்கள் அழுது புலம்புவார்கள்! தாங்கள் செய்த தவற்றை எண்ணி வருந்துவார்கள்!''

''வைரம்! நமது அண்ணனின் இரத்தத் துளிகளாலேயே போக்க முடியாத களங்கத்தைக் கல்யாணியின் கண்ணீர்த் துளிகளால் போக்கிவிட முடியும் என்று நம்புகிறாயா? ஊர் என்ன பேசும் தெரியுமா? காட்டுக்குப் போனான் வேட்டையாட! கடும்புலியொன்று அவனைக் காயப்படுத்தி விரட்டியது! ஆகா! அந்தக் கடும்புலி வாழும் காட்டையே அழிக்கிறேன் பார், என்று சபதம் செய்தான்! கடைசியில் காட்டையும் அழிக்கவில்லை கடும்புலியையும் எதிர்க்கவில்லை! கையில் சிக்கியது ஒரு புறா! அதைக் கொண்டு வந்து கூண்டிலே போட்டுக் கூரிய ஊசியை எடுத்து அதன் உடம்பிலே குத்திக் குத்தி அதைத் துடிக்க விடுகிறான்! கேட்டால் பழிவாங்கும் படலம் என்கிறான்-சரியான பைத்தியக்காரன்! புலி செய்த காரியத்திற்குப் பாவம் புறா என்ன செய்யும்? இப்படி ஊர் பேசும்! தெரியுமா உனக்கு? தித்திக்கும் என்கிறாயா அந்தப் பேச்சு! நீயே சொல்! நிதானித்துச் சொல்!''

தலை சுற்றுவது போலிருந்தது வைரமுத்தனுக்கு!

''அக்கா! அப்படியானால் நம்மை அவமானப் படுத்தியவர்களின் வீட்டுப்பெண்ணோடு இன்பமாக இல்லறம் நடத்தச் சொல்கிறாயா?''

''நீ அப்படி நடத்த விரும்புகிறாய் என நினைத்துத் தான் ஆரம்பத்தில் தடுத்தேன். நம்மைத் தலை கவிழ வைத்தவர் வீட்டுச் சம்பந்தம் வேண்டாமென்றேன். நீ இப்படியொரு திட்டத்தை மனத்தில் புதைத்துக் கொண்டு

நான் கல்யாணியை மணக்க விரும்புவதாக முதலிலேயே சொல்லியிருந்தால் அந்தப் பாபகரமான காரியத்திற்கு என் உயிர் போனாலும் அனுமதித்திருக்க மாட்டேன். தம்பி! நீயே சிந்தித்துப் பார். உன்னை உளமாரக் காதலித்த கல்யாணியை நீ திருமணம் செய்துகொள்ளச் சம்மதித்து விட்டாய் என்றதும் எவ்வளவு கனவுகளைக் கண்டிருப்பாள்! மலைபோல விரோதம் இரு நாடுகளுக்குமிடையே மண்டிக் கிடந்த போதும் அதனைப் பொருட்படுத்தாது காதலுக்காக எதையும் தியாகம் செய்யும் மன வளத்துடன் தன்னை மணந்து கொண்டிருக்கிறாரேயென்றுதானே, கல்யாணி பூரித்துப் போயிருப்பாள்! அந்தக் கள்ளங் கபடமற்ற கன்னிப் பெண்ணைக் கண்ணீரில் மிதக்கும் தெப்பமாக ஆக்கலாமா? உள்ளபடியே நீ பழிக்குப் பழி வாங்கும் வீரன் என்றால் - காதலும் வேண்டாம் கல்யாணியும் வேண்டாம் என்று அப்போதே அந்த வெள்ளை அய்யரிடம் சொல்லி அவரை விரட்டியிருக்க வேண்டும்! நேரம் பார்த்துப் பட்டமங்கலத்துப் படையுடனே சென்று பாகனேரியை வளைத்திருக்க வேண்டும்! வாளுக்கு வேலியையும் ஆதப்பனையும் சிறை பிடித்து வந்திருக்க வேண்டும்! அண்ணனுக்கு அவர்கள் நடத்தினார்களே, "அவமான மகோற்சவம்" அதையெல்லாம் செய்ய உனக்கு வீரமுமில்லை-விவேகமில்லை-பாவம்! ஒரு பெண்ணிடம் பழி தீர்த்துக் கொள்கிறேன் என்கிறாய்!"

நிதானமிழந்து வைரமுத்தன் உரக்கக் கத்தி விட்டான்.

"அக்கா! நீ சொல்வதெல்லாம் சரிதான்! காயப் படுத்திய கடும்புலி வாழும் காட்டைத்தான் அழிக்க வேண்டும் - அந்தப் புலியைத்தான் வீழ்த்த வேண்டும் -இந்தப் புறாவை அல்ல!"

இதைச் சொல்லி, வைரமுத்தன் வாய் மூடுவதற்குள், ''புலியை வீழ்த்திவிட்டார்கள்!'' என்று கூறிக் கொண்டே வெள்ளை அய்யர் வேகமாக உள்ளே நுழைந்தார்.

அப்போது மேலேயுள்ள தனது அறையிலிருந்து படிக்கட்டுகளின் வழியாகக் கல்யாணி நாச்சியார் இறங்கிக் கொண்டிருந்தாள்.

''புலியை வீழ்த்தி விட்டார்கள்!'' என்று வெள்ளை அய்யர் சொன்னதை அவளும் கேட்டு விட்டுத் திகைத்து நின்றாள் படிகளிலேயே!

''என்ன சாமி?'' என்று வீரம்மாள் வெள்ளை அய்யரிடம் ஆவலுடன் வினவினாள்.

''கர்னல் அக்னியூ கறுத்த ஆதப்பனைக் கைது செய்து விட்டான்.''

அய்யர் சொல்லி முடிப்பதற்குள் ''அண்ணா!'' என்ற அலறல்! கல்யாணி படிகளில் உருண்டு மயக்கமுற்றாள். வீரம்மாள் ''கல்யாணி! கல்யாணி!'' என்று அழைத்தவாறு ஓடி அவளைத் தூக்கி மடியில் சாய்த்துக் கொண்டாள். வைரமுத்தன் பரபரப்புடன் அங்கிருந்த ஜாடியில் உள்ள தண்ணீரைக் கிண்ணத்தில் ஊற்றிக் கொண்டு வந்து கல்யாணியின் முகத்தில் தெளித்தான். சிறிது நேரத்தில் கல்யாணி மெதுவாகக் கண் திறந்து பார்த்தாள். அவளருகே, பதட்டத்துடன் வைரமுத்தன் உட்கார்ந்திருப்பதை அவளால் நம்ப முடியவில்லை. தனது கையை அவன் பக்கம் நீட்டியவாறு கண் கலங்கிட ''அத்தான்!'' என்றாள். அவனும் ''கல்யாணி! என்ன வேண்டும்?'' என்று நாத் தழுதழுத்திட வினவினான்...

''என் சின்ன அண்ணா...சின்ன அண்ணா...''

கல்யாணி விம்மி விம்மி அழுதாள்!

''கவலைப்படாதே! நான் போய்க் கறுத்த ஆதப்பனை விடுவித்துக் கொண்டு வருகிறேன்.''

அவள் கண்ணீரைத் துடைத்து விட்டான். வீரம்மாளின் முகம் மலர்ந்தது. கல்யாணியின் இதழ்களில் புன்னகை அரும்பு கட்டியது.





# 32

சிறுவயலின் வீழ்ச்சியாலும் கறுத்த ஆதப்பன் கைது செய்யப்பட்ட நிகழ்ச்சியாலும் இறுமாந்து போயிருந்த கர்னல் அக்னியூ அடுத்தது காளையார் கோயிலைக் கைப்பற்றுவது-மருது சகோதரர்களைப் பிடிப்பது என்ற தீவிரத் திட்டத்துடன் சோழபுரத்திற்கு அருகேயுள்ள நாலுகோட்டை என்ற இடத்தில் தனது படையுடன் முகாமிட்டுக் கொண்டிருந்தான்.

மருதுவின் விடுதலைப் படையைத் தீர்த்துக்கட்டிய பிறகு சிவகங்கைக்கு அரசராக வெள்ளையர்களால் நியமிக்கப்படப் போகிறோம் என்ற பதவி ஆசையில் திளைத்திருந்த உடையத் தேவர் என்பவர் அந்த ஊர் மக்களின் ஆதரவைத் தனக்கும், ஆங்கிலேயர்க்கும் சார்பாகத் திரட்டி வைத்திருந்தார். அவருடைய உதவியோடும், உபசாரங்களோடும் அக்னியூ நாலு கோட்டையில் தங்கியது மட்டுமல்ல; கறுத்த ஆதப்பனையும் அங்கேயே சிறை வைத்திருந்தான்.

அவனது தடித்துச் சிவந்த உதடுகளில் தொங்கி ஊசலாடிக் கொண்டிருந்த சுருட்டு, புகையைக் கக்கிக் கொண்டிருந்தது. அவனுக்கு முன்னால் மிகுந்த அடக்க ஒடுக்கத்துடன் உறங்காப்புலி நின்று கொண்டிருந்தான். உறங்காப்புலி கூறிய ஏதோ ஒரு கருத்து, கர்னலைக் குழப்பியிருக்கும் போல் தெரிந்தது. அந்த அளவுக்குச் சிந்தனைக் கோடுகள் கர்னலின் முகத்தில் நெளிந்தன.

வெற்றிகள் தொடர்கின்றன என்ற மமதையும் மந்தகாசமும் அவனது விழிகளில் தாண்டவமாடின, என்றாலும் கூட, உறங்காப்புலியை உற்றுப் பார்த்துக் கொண்டே, தன் உதட்டிலிருந்த சுருட்டை விரல்களில் எடுத்துக் கொண்டு ஒரு பெருமூச்சு விட்டான்.

''அப்படியானால் நான் செய்தது தவறு என்கிறாய்! இல்லையா?''

உறங்காப்புலி, நெளிந்து வளைந்து கர்னல் அக்னியூவின் கண்களைக் கனிவோடு பார்த்துக் கொண்டே, ''ஆமாம்! பிரபு! நான் இப்படிச் சொல்வதற்காக என்னை மன்னித்துக் கொள்ளுங்கள்!'' என்றான்.

''நான் வேறென்ன செய்ய முடியும் உறங்காப்புலி! சிறுவயல் நகரத்தை முற்றுகையிட்டபோது மாறு வேடத்தில் வந்து போரிட்டவன் சின்னமருது என்றுதான் எண்ணினேன். கடைசியில் கைது செய்யப்பட்ட பிறகுதான் தெரிந்தது கறுத்த ஆதப்பன் என்று! கையும் களவுமாகச் சிக்கிய பிறகு விட்டுவிட முடியுமா?''

கர்னல், தனது பேச்சை முடித்துவிட்டு, உறங்காப்புலியின் பதிலை எதிர்பார்த்தான்.

''மருது பாண்டியர்களுக்கு உதவி செய்ய வேண்டியது கடமை என்கிற அளவிலேதான், கள்ளர் நாடுகள் பட்டும் படாமலும், தொட்டும் தொடாமலும்-ஏதோ அவர்கள் பக்கம் இருப்பது போலக் காட்டிக் கொண்டிருக்கின்றன. இப்போது கறுத்த ஆதப்பன் சிறைப்பட்டுள்ள செய்தி பரவினால், வாளுக்குவேலித் தேவன் ஆர்த்தெழுவான். பாகனேரி நேரடியாகப் போருக்குக் கிளம்பிவிட்டால், மற்றுமுள்ள கள்ளர் நாடுகள் மேலூர் நாடு வரையிலே அவனோடு இணைந்து கொண்டு மருது பாண்டியர் படையில் சேர நேரிடும்! எல்லாக் கள்ளர் நாடுகளும் இணைந்து எழும்போது,

பட்டமங்கலம் ஒதுங்கியிருக்க முடியுமா? வைரமுத்தனும் சேர்ந்துதான் தீர வேண்டும்!''

''சேரட்டுமே! எல்லோரும் சேரட்டுமே! எங்களை எதிர்த்து என்ன செய்துவிட முடியும்?''

கர்னல் கர்ச்சனை செய்தான். உறங்காப்புலி, சிறிது மௌனமாக இருந்துவிட்டு மீண்டும் பேசினான்.

''பிரபூ! கோபிக்கக் கூடாது! காரியம் பெரிது-வீரியமல்ல! இப்பொழுது காளையார் கோயில் காட்டு வழிப்பாதை அமைத்து நமது படையைக் கொண்டு செல்லப் படாத பாடு பாடுகிறோம். மேலதிகாரிகளுக்கும் சக தளகர்த்தர்களுக்கும் தாங்கள் எழுதியுள்ள கடிதங்களை என்னிடம்தானே கொடுத்தனுப்பினீர்கள். கொடுப்பதற்கு முன்பு அதில் உள்ள விபரங்களைக்கூட என்னிடம் சொன்னீர்களே! விடுதலைப் படையின் முன்னால் வெள்ளைப் படை வாடுகிறது-வதங்குகிறது, மருதுவின் அரண்களையும் அகழ்களையும் அவைகளை விடப் பாதுகாப்பான காட்டுப் பகுதிகளையும் நமது படைகள் அங்குலம் அங்குலமாகக் கடந்து முன்னேறக் கூட முடியாமல் தத்தளித்துக் கொண்டிருக்கின்றன; வெற்றியென்பது இப்போதுள்ள நிலையில் சுலபமான ஒன்றல்ல-இதெல்லாம் நீங்கள் எழுதியுள்ள கடித வாசகங்கள்தானே பிரபூ! இந்தச் சிரமமான நேரத்தில், ஏதோ மறைமுகமாக இருக்கிற கள்ளர் நாடுகளையும் வலுவில் சென்று பகைத்துக் கொண்டால் நமக்கு நல்லதா என்பதை யோசிக்க வேண்டாமா?''

அக்னியூ நின்றான், யோசித்தான், சுருட்டுப் புகையை இழுத்தான்.

''ஆமாம்! விடுதலைப் படையை வீழ்த்துவது முதலில் நினைத்தபடி சுலபமில்லைதான்! கள்ளர் நாடுகள்

மீது நான் வலுச்சண்டைக்குப் போகவில்லையே! கறுத்த ஆதப்பன்தானே தேவையில்லாமல் சிறு வயலுக்கு வந்து என்னை எதிர்த்தான்!''

''கள்ளர் நாடுகள் மீது போர் தொடுப்பதும், அவற்றைத் தங்கள் காலடியில் கொண்டு வருவதும் கூடாது என்பது எனது வாதமல்ல! பட்டமங்கலத்தில் வைரமுத்தனைத் துரத்திவிட்டு, அம்பலக்காரப் பட்டத்தை எனக்கு அளிப்பதாக வாக்குறுதியே கொடுத்திருக்கிறீர்கள். அதை நான் மறந்துவிடுவேனா? ஆனால் எதற்கும் நேரம்-வேளை-சரியாக இருக்கிறதா என்று பார்க்க வேண்டும்! கள்ளர் நாடுகளில் இன்று முக்கியத்துவம் பெற்றிருக்கிற பாகனேரியும் பட்டமங்கலமும் ஒன்றோ டொன்று மோதிக் கொண்டு இரண்டுமே வீழ்ச்சியடைவதில் தானே நமது வெற்றியே இருக்கிறது என்று முன்பே தங்கள் மூளையில் ஒரு ராஜதந்திரம் முளைத்ததே! அது இப்போது கருகிவிட்டதா பிரபூ!''

அவர்கள் உரையாடலின் நடுவே ஒரு சிப்பாய் உள்ளே ஓடி வந்தான். ''பிரபூ! பட்டமங்கலத்து வைரமுத்தனும் அவனுடன் பத்துப் பதினைந்து குதிரை வீரர்களும் கைகளில் ஆயுதம் தாங்கி நமது நாலு கோட்டையை நோக்கி வந்து கொண்டிருக்கிறார்கள்!'' இந்தச் செய்தியை அந்தச் சிப்பாய் சொன்னான்.

''பார்த்தீர்களா? புதிய பகை புறப்பட்டு விட்டது! நான் சொன்னது சரியாகி விட்டது!'' என்றான் உறங்காப்புலி.

''சரி!சரி! எல்லாம் நான் பார்த்துக் கொள்கிறேன். உறங்காப்புலி! நீ இங்கிருப்பது வைரமுத்தனுக்குத் தெரிய வேண்டாம்; வேறிடம் சென்று மறைந்து கொள்! என் படுக்கையறைக்குப் போய் விடு!''

அவசரப்படுத்தினான் அக்னியூ.

''ஆமாம், அதுதான் சரி!'' என்று நடுக்கத்துடன் கூறிக் கொண்டே உறங்காப்புலி கர்னலின் கட்டிலறைக்குள் ஓடிக் கதவைத் தாழிட்டுக் கொண்டான். துரோகம் பதுங்கிக் கொண்டது.

தொலைவில் குதிரைகள் வேகமாக வரும் குளம்படிச் சப்தம் கர்னலின் காதுகளில் விழுந்தது. கர்னல் அக்னியூ அந்த ஊர்ப் பாதுகாப்பை ஏற்றிருந்த காப்டன் ஸ்மித் என்பானை உடனடியாக அழைத்து வரச் சொன்னான். காப்டன் ஸ்மித் வந்தவுடன் கர்னல் வழங்கிய ஆலோசனை அவனது மூளையின் ஆற்றலுக்கு ஒரு முதல் தரமான எடுத்துக் காட்டாக இருந்தது.

''மிஸ்டர் ஸ்மித்! நீங்கள் மாத்திரம் தனியாகக் குதிரையில் செல்லுங்கள்! ஆத்திரமாக வரும் வைரமுத்தனை அன்போடு வரவேற்று என்னிடம் அழைத்து வாருங்கள்! மற்றவற்றை நான் கவனித்துக் கொள்கிறேன்.''

கர்னலின் யோசனைப்படியே கேப்டன் செய்தான். வைரமுத்தனுக்கு அந்த நிகழ்ச்சி ஆச்சரியத்தைத் தந்தது, என்றாலும்-எதற்கும் தயார் நிலையில் தன்னுடன் வந்த வீரர்களுடன்தான் உள்ளே வர இயலும் என்று நிபந்தனை விதித்தான். கேப்டன் ஸ்மித் அதற்கும் மறுப்புத் தெரிவிக்கவில்லை.

அக்னியூ உட்கார்ந்திருந்த நாற்காலிக்கு அருகே வைரமுத்தனுக்கு ஒரு நாற்காலியைக் காட்டி உட்கார வைத்துவிட்டு கேப்டன் ஸ்மித் அங்கிருந்து விடைபெற்றுக் கொண்டான். வைரமுத்தனுடன் வந்த வீரர்கள் சற்றுத் தொலைவிலேயே நின்றுகொண்டு தங்கள் தலைவனுக்கு எந்த ஆபத்தும் நேர்ந்துவிடாமல் வைத்த விழி வாங்காமல் கவனித்துக் கொண்டிருந்தனர்.

''சௌக்யந்தானா?''

கர்னலின் பேச்சில் நிரம்பக் குழைவு இருந்தது.

''என்ன திடீரென்று? முன்கூட்டிச் சொல்லாமலே கூட?''

வைரமுத்தன் வந்திருப்பதன் நோக்கம் தெரிந்திருந்தாலுங்கூடத் தெரியாதவனைப் போலக் கேட்டான் கர்னல்!

''கறுத்த ஆதப்பனை விடுவிப்பதற்காக!''

''அதற்குப் பட்டமங்கலம் அம்பலக்காரர் நேரில் வர வேண்டுமா? ஓலை கொடுத்து அனுப்பி யிருந்தால் போதுமே! உடனே ஆதப்பனை விடுவித்து அனுப்பியிருப்பேனே!''

''மறுப்போ-எதிர்ப்போ இருந்தால் சமாளிக்க வேண்டுமல்லவா? அதற்காகத்தான்...''

''ஓ! அதற்காகத்தான் குதிரைப் படையுடன் வருகையா? மிஸ்டர் வைரமுத்தன்! இந்தக் கர்னல் அக்னியூ களத்திற்குப் பயப்படுகிறவன் அல்ல; ஆனால் தேவையில்லாமல் நமக்குள் ஒரு போராட்டம் அவசியமில்லை என்று கருதுகிறேன். கறுத்த ஆதப்பனை அழைத்து வரச் சொல்கிறேன் இப்போதே!''

கர்னல் கைகளைத் தட்டினான். இரண்டு சிப்பாய்கள் ஓடி வந்தார்கள். ''ஆதப்பனை அழைத்து வாருங்கள்!'' என்று ஆணை பிறந்தது.

அதற்கிடையே மதுக் கிண்ணத்தை வைரமுத்தனிடம் கர்னல் நீட்டினான். வைரமுத்தன், தலையை ஆட்டி மறுத்து விட்டான். மற்றொரு சுருட்டைப் புகைக்கத் தொடங்கினான் கர்னல்!

கைவிலங்கு இடப்பட்ட கோலத்துடன் கறுத்த ஆதப்பன் அங்கே கொண்டு வரப்பட்டான். கர்னல் அதைப் பார்த்துத் திடுக்கிட்டவனைப் போல நடித்தான்.

''ஏ! முட்டாள்! அந்த விலங்கைக் கழற்றுங்கள்!'' கூச்சல் போட்டான். அவன் சொன்னதைச் சிப்பாய்கள் செய்தார்கள். கறுத்த ஆதப்பனை உட்காரச் சொல்லி கர்னல் ஒரு நாற்காலியைக் காட்டினான். வைரமுத்தன் எதுவும் பேச முடியாமல் சிலை போல அமர்ந்திருந்தான்.

''மிஸ்டர் ஆதப்பன்! உம்மை விடுதலை செய்கிறேன்! சிறுவயல் நிகழ்ச்சிக்கு ஒரு மன்னிப்பு மட்டும் கேட்டுக்கொண்டு, இப்போதே போகலாம்!''

மன்னிப்பு! மன்னிப்பு! ஆதப்பனால் அந்த வார்த்தையைப் பொறுத்துக் கொள்ள முடியுமா? நல்ல வேளையாக வைரமுத்தன் முந்திக் கொண்டான்.

''கர்னல் அக்னியூ அவர்களே! நாங்கள் அந்நியர்களிடம் மன்னிப்புக் கேட்டுப் பழக்கமில்லை! வேண்டுமானால் செத்து மடியத் தயார்! இந்த வெட்கங்கெட்ட விடுதலை தேவையில்லை!''

வைரமுத்தனின் வீரம் மணக்கும் பதிலைக் கேட்டு ஆதப்பன் குளிர்ந்தான். அக்னியூ தனது ராஜதந்திரத்தின் உச்சிக்கே போய் விட்டான்.

''தேவையில்லை! மன்னிப்புக்கூடத் தேவையில்லை! வைரமுத்தனின் விருப்பம் போலவே ஆதப்பன் நிபந்தனையின்றி விடுதலை! போதுமா?''

''சரி! வருகிறோம்!'' என்று வைரமுத்தனும் ஆதப்பனும் ஒரே சமயத்தில் கூறிவிட்டு அங்கிருந்து புறப்பட்டார்கள். அவர்கள் போவதையே பார்த்துக் கொண்டு நின்ற கர்னல் துரை, தனது பற்களை நறநற வென்று கடித்தான்.

நாலுகோட்டை எல்லை வரையில் குதிரைகளைப் பிடித்துக் கொண்டு நடந்தே வந்தவர்கள்-பிறகு குதிரைகளில் ஏறிக் கொண்டார்கள்.

''நான் பாகனேரி போகிறேன்'' என்றான் ஆதப்பன்!

''நல்ல காரியம் செய்தாய்! உன் தங்கை கல்யாணி உன்னைக் காணாவிட்டால் உயிரையே விட்டு விடுவாள். பட்டமங்கலமே போகலாம்'' என்றான் வைரமுத்தன்.

பட்டமங்கலம் நோக்கிக் குதிரைகள் பறந்தன.





# 33

**வை**ரமுத்தன், கறுத்த ஆதப்பன் குதிரைகளைத் தொடர்ந்து பட்டமங்கலத்து வீரர்களின் குதிரைகள், பறக்கும் அரண்களைப் போலப் பாதுகாப்பாக வந்து கொண்டிருந்தன.

எதிர்ப்பு - எதுவுமே காட்டாமல் உடனடியாக ஆதப்பனை அக்னியூ துரை விடுதலை செய்தது வைரமுத்தனுக்கும் ஆதப்பனுக்கும் ஏதோ ஒரு சந்தேகத்தை ஏற்படுத்தாமல் இல்லை. அதனால்தான் அவர்கள் எச்சரிக்கையுடன் தங்கள் பயணத்தை நடத்திக் கொண்டிருந்தார்கள்.

ஒருவேளை, தன்மீது குறையில்லை என்பதுபோல அவனை விடுதலை செய்துவிட்டு வழியில் சோழபுரம் உடையத் தேவரின் படை வீரர்களை அனுப்பித் தாக்கிடச் செய்ய அந்தக் கர்னல் இப்படியொரு தந்திரத்தைக் கையாண்டிருக்கக் கூடுமோ என்ற கேள்வியும் அந்த இரு வாலிப வீரர்களின் இதயத்தில் எழுந்தது.

சிவகெங்கை மன்னர் பதவிக்காக உடையத் தேவர் எதையும் செய்வார். அவரைப் போன்ற சிலர் பதவியும் பவிசும் பெரிதென்று கருதித்தானே தங்களின் தமிழ் இனத்தையே அந்நியர்க்குக் காட்டிக் கொடுக்கத் தயாராக இருந்தனர்!

நாலு கோட்டையை விட்டுப் புறப்பட்டவர்கள் ஓரளவு மரங்கள் நிறைந்ததும் குறுகியதுமான ஒரு பாதையில் தங்களது குதிரைகளை விரட்டிக் கொண்டு சென்றபோது அந்தி சாய ஆரம்பித்தது.

இருட்டில், பாதையில் இன்னும் தீவிர எச்சரிக்கையோடு போக வேண்டுமென்பதற்காக எல்லாக் குதிரைகளையும் வைரமுத்தன் கைகாட்டி நிறுத்தினான். முன்னால் செல்வதற்கு ஒரு குதிரை வீரனைத் தயார்ப்படுத்தி, அவன் கையில் ஒரு தீப்பந்தமும் தரப்பட்டது. அவன் வழிகாட்டிக் கொண்டு குதிரையை வேகமாக நடத்தினான்.

அவன் பின்னால் வைரமுத்தன், ஆதப்பன் குதிரைகள் சென்றன. அவர்களையொட்டிப் பக்க வாட்டிலும் பின்னாலும் மற்ற வீரர்களின் குதிரைகள் தொடர்ந்தன.

அந்திப் பொழுது முற்றிலும் மாறி இருள் சூழ்ந்து கொண்டது. அந்த இரு பட்டமங்கலத்துக் குதிரைகளின் குளம்படியோசை அமைதியைக் குலைத்துக் கொண்டிருந்தது. அந்தக் குதிரைகளின் எண்ணிக்கை பதினைந்துக்கு மேல் போகாது. அவற்றின் குளம்படிச் சப்தம் கேட்டுக் கொண்டிருந்த அந்த இருட்டில், அவைகளுக்கு எதிராக நூறு குதிரைகள் வருவது போன்ற குளம்படிச் சப்தம் பயங்கரமாகக் கேட்பதை வைரமுத்தனும் ஆதப்பனும் பட்டமங்கலம் வீரர்களும் உணர்ந்தனர்.

எண்ணியபடியே கர்னல் அக்னியூ, தனது கை வரிசையைக் காட்டி விட்டான் என்று முடிவுகட்டிய வைரமுத்தன் தனது வாளை உருவிக்கொண்டு தயாரானான். கறுத்த ஆதப்பனும் ஆயத்தமானான். அவ்வாறே பட்டமங்கலத்து வீரர்களும்!

தங்களுடன் பாதுகாப்பாக வரும் வீரர்களைவிடப் பல மடங்கு அதிகமாக வீரர்கள் வருகிறார்கள் தங்களை எதிர்நோக்கி என்பதை அவர்கள் புரிந்து கொண்டார்கள்.

முன்னால் சென்று கொண்டிருந்த வீரனிடம் தனது குதிரையைச் செலுத்தி அவன் கையிலிருந்த தீப்பந்தத்தை வைரமுத்தன் வாங்கிக் கொண்டான். ''எல்லோரும் என்னைப் பின்பற்றுங்கள்!'' என்று உரக்க ஒலியெழுப்பிக் கொண்டே, சென்று கொண்டிருந்த நேரான பாதையிலிருந்து, குறுக்கே ஒரு வறண்ட கண்மாயின் வழியாகத் தனது குதிரையைத் திருப்பினான்.

ஆதப்பன் உட்பட அனைவரும் அவனைத் தொடர்ந்து கண்மாய் வழியில் பாய்ந்தனர். எதிரே ஒலியெழுப்பிக் கொண்டு வந்த அந்தக் குதிரைப் படையும் கண்மாய் வழியில் நுழைந்து பட்டமங்கலத்து வீரர்களைச் சூழ்ந்து கொண்டது. இவர்கள் பதினைந்து பேர்! வீரத்தோடு எதிர்த்து விழுப்புண் பெற்று மாள்வதேயொழிய வேறு மார்க்கமில்லையென்ற திட உள்ளத்தோடு வைரமுத்தன் தனது குதிரையை இழுத்துப் பிடித்து நிறுத்தினான்! தீப்பந்தத்தை உயரப் பிடித்தவாறு அவன் அனல் தெறிக்கப் பேசினான்.

''யார் நீங்கள்? ஆங்கிலப் படையினரா? அல்லது அவர்களின் அடி வருடும் சேவகர்களா? அல்லது வழிப்பறிக் கூட்டமா?''

வைரமுத்தனின் குரலைத் தொடர்ந்து ஒருகணம் மௌனம் நிலவியது! ஆனால் அது நீடிக்கவில்லை!

''அதே கேள்வியைத்தான் நானும் கேட்கிறேன்! நீங்கள் யார்? ஆங்கிலேயர்களா? அடி வருடிகளா? உம்! சொல்லுங்கள்! வெள்ளையர்களா? அல்லது உள்ளூர்க் கொள்ளையர்களா?''

எதிர்க்குரல் எழுந்ததும் வைரமுத்தன் திடுக்கிட்டான்! எங்கேயோ கேட்ட குரல்! அவன் திகைப்பு

அடங்குவதற்குள், கறுத்த ஆதப்பன் அவன் கையிலிருந்த தீப்பந்தத்தை வேகமாக வாங்கிக்கொண்டு ''அண்ணா! அண்ணா! நான்தான் கறுத்த ஆதப்பன், இதோ நமது மைத்துனர் வைரமுத்து'' எனக் கத்தியவாறு எதிரில் நின்ற குதிரைகளின் கூட்டத்திற்குள் நுழைந்தான்.

சிறுவயலில் ஆதப்பன், அக்னியூ துரையுடன் போரிட்டு இறுதியில் கைது செய்யப்பட்டு விட்டான் என்ற செய்தி பட்டமங்கலத்திற்கு எட்டியது போலவே வெள்ளை அய்யர் அனுப்பிய தகவலின் மூலம் பாகனேரிக்கும் ஏறத்தாழ அதே நேரத்தில் எட்டியிருந்தது. தம்பி ஆதப்பன், இன்னும் கொஞ்சம் இலைமறைகாயாக இருந்து கொண்டு விடுதலைப் படைக்கு உதவிகளைச் செய்திருக்க வேண்டுமே தவிர, இப்படி வெள்ளைக்காரக் கர்னலிடம் நேருக்கு நேர் சிக்கிக் கொண்டு ராஜதந்திர மில்லாமல் நடந்து கொண்டிருக்க வேண்டியதில்லையென வாளுக்குவேலி நினைத்தான் என்றாலும், ஆதப்பன் கைது செய்யப்பட்டதை அவனால் பொறுத்துக் கொள்ள முடியவில்லை.

அவன் கைது செய்யப்படக்கூடும் என்பதையும், சிறுவயல் வெள்ளையரின் ஆக்கிரமிப்புக்கு ஆளாகி யிருக்கிறது என்பதையும் கேள்விப்பட்ட மாத்திரத்தில் சுந்தராம்பாளின் வீட்டிலிருந்து பாகனேரி அரண்மனை நோக்கிப் பரபரப்புடன் வந்தவன், சிறுவயல் அழிந்த செய்தியையும்-ஆதப்பன் ஆங்கிலேயரிடம் அகப்பட்ட செய்தியையும் எப்படிச் சகித்துக் கொள்வான்?

''மேகநாதா! நம் வீரர்கள் நூறு பேர் புறப்படட்டும்! நீயும் என்னுடன் கிளம்பு! நாலுகோட்டையில் முகாமிட்டி ருக்கிறானாம் அந்த நாடோடி! அவனையும் கொன்று, நாலு கோட்டையையும் நாலாயிரம் துக்கள்களாகச் சிதற அடிக்கிறேன்! தம்பி ஆதப்பனை மீட்டுக் கொண்டு திரும்புவது - இல்லையேல் நாலு கோட்டையிலேயே எனக்குக் கல்லறை!''

வாளுக்குவேலியின் போர்வாள் மீசை துடித்தது. எரிமலை நடக்குமா? நடக்காதல்லவா? ஆனால் வாளுக்குவேலி எரிமலையாகிப் பாகனேரி அரண்மனை முகப்பில் அங்குமிங்கும் நடந்தான்! காடை அவனது கத்தி, கட்டாரி, உடைவாள், கவசம் அனைத்தையும் கொண்டு வந்து தந்தான்!...கவசம் பூண்டு, போர்க் கருவிகளைப் பொருத்திக் கொண்டு, சிம்மம்போல் நிமிர்ந்தபோது மேகநாதன், அவனைப் பார்த்து அமைதியாகச் சொன்னான். ''நாலுகோட்டையில் இருக்கும் கம்பெனிப் படையை வெல்லுகிற அளவுக்கு நம்மிடம் படைபலம் இருப்பதாக எண்ணுவது சரியல்ல!'' என்று! வாளுக்கு வேலி, மேகநாதனின் தோளைக் குலுக்கி, ஒரு அலட்சியச் சிரிப்பையும் கொட்டினான்.

''மேகநாதா! மானம் காக்கும் போராட்டத்தில் அந்தப் பக்கம் இந்தப் பக்கமுள்ள வீரர்களின் தலைகளை எண்ணிக் கொண்டிருப்பது வீண் வேலை! என் தம்பி சிறைப்பட்டிருக்கிறான்; அவனை விடுவிக்க வேண்டும் உடனே ஆயிரம் வீரர்களை அனுப்புக என்று மருதுபாண்டியர்க்கு மடலா எழுதிக் கொண்டிருக்க முடியும்? அவர்களுக்கிருக்கும் நெருக்கடியில் நாம்தான் அவர்களுக்குத் துணையாக இருக்க வேண்டுமே தவிர நாமே அவர்களுக்குத் தொல்லையாக இருக்கலாமா? அதனால்தான் சொல்லுகிறேன். நமது படை வீரர்களின் எண்ணிக்கையைப் பற்றிக் கவலைப்பட்டுக் கொண்டிருக்காமல் பாகனேரியின் மான உணர்வுக்கு விடப்பட்ட சவாலைச் சந்திக்க இப்போதே புறப்பட்டாக வேண்டும். கர்னல் அக்னியூவுடன் நாம் நடத்தப் போகும் போராட்டம் ஒரு வகையில் மருது சகோதரர்கள் நடத்தும் விடுதலைப் போராட்டத்தின் அங்கம்தான்! அக்னியூ ஆங்கிலேயே இராணுவத்தின் பலமிக்கத் தூண்! அந்தத் தூணை உடைத்தெறிந்தால் பதவியாசை கொண்டு திரியும் சோழபுரத்து உடையத்தேவர்கூட பரங்கியரின் பயம் தெளிந்து நம்மோடு சேரக்கூடும்! ஆதப்பன்

சிறைப்பட்டதை ஒரு வாய்ப்பாக எடுத்துக் கொண்டு ஆங்கில ஆதிபத்தியம் பரவ ஒட்டாமல் தடுத்திடுவோம்! தட்டுங்கள் போர் முரசம்! தயார்தானா குதிரைப்படை?''

அதற்கு மேல் வாளுக்குவேலியின் பேச்சில் மேகநாதன் குறுக்கிடவில்லை!

மேகநாதன், தனது இடையில் இருந்த கட்டாரியை எடுத்துத் தன் முகத்துக்கு நேராகப் பிடித்து, ''தயார்! தயார்!'' என்று உரத்த குரலில்-உறுதி வாய்ந்த குரலில் முழக்கமிட்டான்.

பாகனேரிப் படை வீரர்கள் குதிரைகளில் ஏறி, கொம்பு வாத்தியங்களை ஊதினர். வாளுக்குவேலியும் மேகநாதனும் முன் சென்றிடக் கிளம்பிய அந்தப் படை தான்-வைரமுத்தனையும் ஆதப்பனையும் அவர்களுடன் வந்த வீரர்களையும் வழியிலேயே வளைத்துக் கொண்டது.

அண்ணனும் தம்பியும் தழுவிக் கொண்டார்கள்-வாளுக்கு வேலி, வைரமுத்தனின் தோள் மீது கையைப் போட்டவாறு, தனது நன்றியையும் மகிழ்ச்சியையும் தெரிவித்துக் கொண்டான்.

வைரமுத்தனைக் கண்ட்வுடன், கர்னல் அக்னியூ அவ்வளவு அவசரமாக ஆதப்பனை விடுதலை செய்தமைக்குக் காரணம் எதுவாக இருக்குமென்பதை அவர்கள் ஆழமாக விவாதித்தார்கள்! எந்தவொரு முடிவுக்கும் அவர்களால் வர முடியவில்லை. வாளுக்குவேல்லி வைரமுத்தனிடம் தங்கை கல்யாணி நாச்சியாரின் நலம் குறித்து விசாரித்தான். ஆதப்பன் கைதானது கேட்டதும் கல்யாணி அதிர்ச்சியடைந்து விட்டாள் என்றும் அதனால்தான் அவளைப் பார்த்து ஆறுதல் பெறச் செய்வதற்கு ஆதப்பனை அழைத்துச் செல்வதாகவும்-வாளுக்கு வேலியும் பட்ட மங்கலத்திற்கு வந்து விட்டுப் போனால் கல்யாணி மிகவும் பூரித்துப் போவாள் என்றும் வைரமுத்தன் கூறினான்.

''இப்போது ஆதப்பன் மட்டும் வரட்டும்! நான் வேறு சில அவசரப் பணிகளின் நிமித்தம் பாகனேரிக்குச் செல்ல வேண்டியவனாக இருக்கிறேன்! ஆதப்பா! கல்யாணியிடம் சொல்; நான் விரைவில் வந்து பார்ப்பதாக!''

வாளுக்கு வேலி குதிரையிலேறித் தட்டிவிட்டான். மேகநாதனும் மற்ற வீரர்களும் தங்கள் படைக்கலன் களுக்கு வேலையில்லாமற் போய்விட்டதே யென்ற சோர்வுடன், தங்கள் தலைவனைப் பின் தொடர்ந்தார்கள். அந்தக் குதிரைகள் விரைந்தோடிய ஓசை சிறிது சிறிதாகக் குறைந்து போகும் வரையில் அந்த இடத்திலேயே நின்று கொண்டிருந்த பட்டமங்கலத்துப் படை வீரர்கள், தங்களூர்ப் பாதையில் பயணத்தை மீண்டும் தொடங்கி னார்கள்.

குதிரைகள் வரும் ஒலி கேட்டு, கல்யாணி நாச்சியாரும் வீரம்மாளும் அடக்க முடியாத ஆவலுடன் மாளிகை முகப்பில் தலையை நீட்டிக் கொண்டு நின்றனர். என்ன நடக்குமோ என்ற துடிப்புடன் நாள் முழுவதும் ஏங்கிக் கொண்டிருந்த அவர்களின் முன்னால் வைரமுத்தனும், கறுத்த ஆதப்பனும் வந்து இறங்கினார்கள். ''சின்ன அண்ணா! வந்து விட்டாயா?'' என்று கண்கள் கலங்கிட ஓடிவந்து ஆதப்பனின் கால்களில் விழுந்தாள் கல்யாணி!

''வந்ததற்கு யாராவது அழுவார்களா?'' என்று கேலி பேசியபடி, அவளைத் தூக்கி நிறுத்தினான் ஆதப்பன். அதற்குள் வீரம்மாள் ஆரத்தித் தட்டுடன் வந்து வைரமுத்தனுக்குச் சுற்றினாள். பிறகு ஆதப்பனுக்குச் சுற்றி முடித்துவிட்டு இருவர் நெற்றியிலும் திலகமிட்டாள்.

இரவு உணவருந்த மைத்துனர்கள் இருவரும் மாளிகையின் நடுக்கூடத்துத் தந்த மேசையருகே அமர்ந்தனர். வீரம்மாளும் கல்யாணியும் அவர்களுக்குப் பரிமாறினர்.

''உறங்காப்புலியார் இல்லையா?'' என்று கறுத்த ஆதப்பன் கேட்டான்.

''அவர் காளையார் கோயிலைக் காப்பாற்ற மருதுப் படைகளுக்குத் துணையாகச் சென்றிருக்கிறார்...ஒரு வேளை இன்றிரவு வரக்கூடும்'' என்றான் வைரமுத்தன்.

''ஆமாம்! உறங்காப்புலியாருக்கு உடன்பிறந்தது நாட்டுப்பற்று! தமிழ் இனப்பற்று!'' என்று கூறியவாறு ஆதப்பன் வீரம்மாளின் முகத்தை ஜாடையாகக் கவனித்தான். வீரம்மாளின் விழிகள் ஆதப்பனைப் பார்த்துக் கெஞ்சுவது போலச் சுழன்றன! சுரண்டைக் காட்டுச் சம்பவமும்-தன் கணவனின் துரோகத்தைக் காட்டிக் கொடுக்க வேண்டாமென்று வீரம்மாள் ஆதப்பனிடம் கெஞ்சியழுத காட்சியும்-அப்படியே ஆகட்டுமென்று ஆதப்பன் உறுதியளித்ததும்-வீரம்மாளின் நினைவிலும் நிழலாடிக் கொண்டிருந்தன.

அதனால் ஆதப்பன் பேச்சை மாற்ற விரும்பிக் கல்யாணி நாச்சியாரைப் பார்த்து, ''என்ன தங்கச்சி! நல்லாயிருக்கியா? அத்தான் உன்னை சந்தோஷமா வச்சிருக்கிறாரா?'' என்று சிரித்துக் கொண்டே கேட்டான். அந்தக் கேள்விக்கு என்ன பதில் அளிக்கப் போகிறாள் என்ற ஆவலுடன் கல்யாணியையே பார்த்தார்கள் வைரமுத்தனும் வீரம்மாளும்!





# 34

சின்ன அண்ணன் கறுத்த ஆதப்பனின் பாசமும் பரிவும் நிறைந்த விசாரிப்புக்குப் பதில் கூறுவதற்குள் கல்யாணியின் தலைக்குள் கொத்துக் கொத்தாகத் தேள்கள் கூடித் தங்கள் கொடுக்குகளின் கூர்மையைப் பதம் பார்க்கத் தொடங்கி விட்டன! வல்லத்தரையனின் அறுக்கப்பட்ட தலைமுடி, இரத்தம் தோய்ந்த ஆடை, அவற்றை மூடி வைத்திருந்த திரையை மின்னல் வேகத்தில் வைரமுத்தன் விலக்கிக் காட்டிய காட்சி- அன்றிரவு நடந்த வடிவாம்பாள் வஸ்திராபரண நிகழச்சி; எல்லாமே அவளைச் சுற்றிச் சுழன்று எரியீட்டிகளை அவள் இதயத்தில் பாய்ச்சின!

அந்தக் கருமேகத் திரள்களை ஒரு பெருங்காற்று விரட்டியடித்துவிடவே, ''கவலைப்படாதே! நான் போய் உன் அண்ணனை விடுவித்துக் கொண்டு வருகிறேன்'' என்று உறுதி கூறிவிட்டுப் புறப்பட்ட வைரமுத்தனின் அந்தச் செயல் ஆகாயத்திற்கும் பூமிக்குமாக வடிவ மெடுத்து அவள் முன்னே நின்றது. கல்யாணி கடைக் கண்ணால் கணவனை நோக்கினாள். அந்தப் பார்வையில் காதல், அன்பு அனைத்தையும் விட பதிபக்தியின் ஒளிதான் மிகையாகச் சுடர்விட்டுப் பிரகாசித்தது. அதற்குள் வைரமுத்தன்,

''சொல்லேன் கல்யாணி! அத்தான் என்னை மிகவும் கொடுமைப் படுத்துகிறார்-பழைய விரோதம் இன்னும் போகவில்லை! பட்டமங்கலம் அம்பலக்காரருக்கு ஏற்பட்ட அவமானத்திற்குப் பழி வாங்குவதற்காகவே என்னைத் திருமணம் செய்து கொண்டிருக்கிறார் என்று புரிகிறது! நான் இங்கே வேடன் கையில் சிக்கிய மான் போல்-கரையில் எறியப்பட்ட மீன்போல் துடித்துக் கொண்டிருக்கிறேன் என்றெல்லாம் உன் அண்ணனிடம் உண்மைகளைச் சொல்லேன் கல்யாணி!'' என்று சிரித்துக் கொண்டே கூறினான்.

''என்ன-அப்படியா நடக்கிறது? ஏன் கல்யாணி, அத்தான் சொல்வதெல்லாம் உண்மைதானா?'' என்று ஆதப்பனும் கலகலவெனச் சிரித்துக் கொண்டே வேடிக்கையாகக் கேட்டான்.

''அதெல்லாம் ஒன்றுமில்லையண்ணா! அவர் கேலி செய்கிறார். என்னை இங்கே ஒரு தெய்வத்தைப் போல மதித்து நடக்கிறா.'கள்!''

இதழோரப் புன்னகையை மிகுந்த சிரமப்பட்டு வெளிக் கொணர்ந்து, இந்தப் பதிலைக் கூறிவிட்டுக் கல்யாணி ..'ந்த இடத்தை விட்டு நாணத்துடன் செல்வதுபோ.ல நடித்துக் கொண்டே நகர்ந்தாள்...

அங்கே அவளுக்கென ஒதுக்கப்பட்டிருந்த அறைக்குள் நுழைந்தவுடன்... அவளையுமறியாமல் பீறிட்டுக் கிளம்பிய கண்ணீர் ஊற்றினைத் தடுத்திட இயலாமல் படுக்கையில் சாய்ந்தாள். இன்னும் கொஞ்சம் அழுதால்தான் இதயச்சுமை இறங்கிடும் போலிருந்தது. நன்றாக அழுதாள்.

''தெய்வத்தைப் போலத்தான் என்னை நடத்துகிறார்கள். அண்ணனிடம் உண்மையைத்தான் உரைத்திருக்கிறேன். தெய்வத்துக்குப் பொங்கல், புளியோதரை, அதிரசம், அக்காரவடிசல் எல்லாவற்றையும்

காட்டித் தூப தீப நைவேத்யம் செய்து-தெய்வம் அவற்றைச் சுவைத்தறிய முடியாமல் ஏமாற்றுகிறார்கள் அல்லவா! அந்தத் தெய்வத்தின் நிலைதானே எனக்கு இங்கே! காதல் இன்பம்-கணவன் மனைவி உறவு-கவலையற்ற வாழ்வு-எல்லாமே என்னைப் பொறுத்த வரையில் தெய்வத்தின் முன்னே இலையில் இட்ட படையல்தானே! எந்தத் தெய்வமாவது தனக்குற்ற குறைகளை வாய்திறந்து மற்றவர்களிடம் சொன்னதாகக் கதைகளில் எழுதலாமே தவிர நேரிலே அறிந்தவர்கள் உண்டா? அந்தத் தெய்வங்களில் ஒரு தெய்வமாகத்தான் நானிருக்க வேண்டியிருக்கிறது. நானாகத்தான் அவரை மனத்தில் வரித்துக் கொண்டேன்! பாகனேரிக்கும் பட்டமங்கலத்திற்குமுள்ள நெடுநாள் பகை மட்டுமல்ல; இரு நாடுகளுக்கிடையே அண்மையில் நடந்த அசம்பாவித நிகழ்ச்சிக்குப் பிறகும் அவர் என்னை மணப்பதற்குச் சம்மதிக்க மாட்டாரா என்றுதான் ஏங்கிக் கிடந்தேன். அண்ணன்மார்களின் வார்த்தையை மீறியறியாத நான் அவருக்காக மீறினேன். இப்போது எந்த முகத்தை வைத்துக் கொண்டு, நான் ஏமாந்துவிட்ட கதையை என் அண்ணனிடம் சொல்வது? ஒரு பெண்ணுக்கு ஒரு வாழ்க்கைதான்! இதுதான்; ஆம்-இதுவேதான் எனக்கு அமைந்த வாழ்க்கை!''

வார்த்தைகளாக வரவில்லை; வடித்தெடுத்த வேல்களாக அவள் நெஞ்சைக் குத்திக் குருதிப் புனல் வழிந்திடச் செய்தன. யாரோ உள்ளே வந்தார்கள். கல்யாணி கவனிக்காமலே அழுது கொண்டிருந்தாள். தன் முதுகைத் தொட்டு மெதுவாக உசுப்பியதை உணர்ந்து கல்யாணி திடுக்கிட்டு எழுந்து உட்கார்ந்தாள். வீரம்மாள் தான்! கல்யாணியின் அருகே கட்டிலில் அமர்ந்து ஆழ்ந்த அனுதாபத்துடன் பேச்சை ஆரம்பித்தாள்.

''கல்யாணி! நீ ஏன் அழுகிறாய் என்று நான் கேட்கப் போவதில்லை! காரணம், நீயேன் அழுகிறாய் என்பது எனக்குத் தெரியும்?''

''தெரியுமா? யாருக்கும் தெரியாதென்று நினைத்துக் கொண்டிருக்கிற எனது வேதனை உங்களுக்குத் தெரியுமா?''

கல்யாணி வீரம்மாளிடம் இது போலக் கேட்கவில்லை; ஆனால் அதிச்சியடைந்தாள்.

''கல்யாணி! நீ இந்த அரண்மனையில் வந்து அடியெடுத்து வைத்தது முதல் சந்தோஷமாகவே இல்லை! தாமரைக்கொடி தரை மீது வாடிக் கிடக்கும் போது கூட அதன் மலர் செழிப்பாகச் சிரித்துக் கொண்டிருக்கும்! அப்படித்தான் உன்மனம் நொந்துபோய்க் கிடக்கிறது- ஆனால் முகம் மட்டும் அதனை வெளிக் காட்டாமல் மலர்ந்து காணப்படுகிறது-இதெல்லாம் எனக்கு எப்படித் தெரியும் என்று விழிக்காதே! நானும் உன்னைப் போல ஒரு பெண்; உன்னைவிட வயதிலே கூட மூத்தவள்! இந்த அரண்மனையிலேயே பிறந்து வளர்ந்தவள்-இங்கே நடப்பவை எனக்குத் தெரியாமல் போய்விடுமா?''

வீரம்மாளின் வார்த்தைகளை எழுத்துக்கு எழுத்து மறுத்துவிட வேண்டுமென்று கல்யாணி கருதினாள். ஆனால் இப்போது கண்ணீர் விட்டுக் கலங்கியதற்கு என்ன காரணத்தைச் சொல்ல முடியும்? இருந்த போதிலும் துணிவை வரவழைத்துக் கொண்டு வீரம்மாளைப் பார்த்து, ''நீங்கள் ஏதோ கற்பனை உலகில் சஞ்சரிக்கிறீர்கள்! எனக்கு இங்கே எந்தக் கவலையுமில்லை-கஷ்டமும் இல்லை!'' என்றாள்.

''ஆலம் விதையை நகத்துக்குள்ளேகூட மறைத்து விடலாம்-ஆனால் அந்த விருட்சத்தை ஆயிரம் பேர் சூழ்ந்து கொண்டால் கூட மறைக்க முடியாது கல்யாணி! அதனால்தான் சொல்லுகிறேன்; என்னிடம் எதையும் மறைக்காதே!''

வீரம்மாளின் கைகளைப் பிடித்துக் கொண்டு கல்யாணி கதறி விட்டாள். ''அண்ணீ!'' என்ற அந்தச் சொல் வீரம்மாளின் நெஞ்சத்தை உருக்கியிருக்க வேண்டும்!

''அழாதே கல்யாணி! பள்ளியறையில் முதல் இரவுக்காக நீ நுழைந்தபோது, என் தம்பி-உன் கணவன் வைரமுத்தன், பாகனேரிக்காரர்களைப் பழி வாங்குவதற் காகவே உன்னைத் திருமணம் செய்து கொண்டிருப்பதாக உனக்கு உணர்த்தி விட்டான்...''

வீரம்மாள் பேசப் பேசக் கல்யாணி விக்கி விக்கி அழுதாள். அவளை அரவணைத்துக் கொண்டு வீரம்மாள் தொடர்ந்தாள். ''மகிழ்ச்சியின் எல்லையைக் காண வேண்டிய மஞ்சம்! அங்கே மயக்க மருந்து கொடுத்து உன்னைத் தள்ளாட வைத்தான்! நீ காண வேண்டும். கண்டு துடிக்க வேண்டும்-நீ மட்டுமல்ல; செய்தி அறிந்து பாகனேரியில் உன் அண்ணன்களும் பதறிட வேண்டும் என்பதற்காகவே நடனக்காரி வடிவாம்பாளிடம் நாகரீகமற்ற முறையில் நடந்து கொண்டான்...''

கல்யாணி திடுக்கிட்டுக் குறுக்கிட்டாள்! ''அப்படி யானால் வடிவாம்பாளிடம் அவர் நடந்து கொண்டது என்னைத் துன்பப்படுத்த நடத்திய நாடகம்தானா?''

வீரம்மாள் சிரித்துக் கொண்டே ''ஓ! உனக்கு அதிலே ஒரு ஆறுதலா?' என்று கேட்டுவிட்டு அந்த அறையைச் சுற்றுமுற்றும் பார்த்தாள். முன்புறத்துக் கதவின் ஓரத்திலிருந்து ஏதோ ஒரு உருவம் அசைந்தது! அதைக் கவனித்தும் கவனிக்காததுபோல வீரம்மாள் கல்யாணியின் தலையைத் தன் தோள்மீது சாத்திக் கொண்டு ''உன் அண்ணனிடம் மறைத்தது சரி! என்னிடம் இதை யெல்லாம் மறைக்கலாமா?'' என்று அன்பு ததும்பக் குழைந்தாள்.

''அண்ணி! தயவு செய்து இந்த இரகசியங்களை வேறு யாரிடமும் சொல்லி விடாதீர்கள்! உங்கள் காலைப் பிடிக்கிறேன். என் அண்ணன் ஆதப்பனுக்குத் தெரிந்தால், உடனே பெரிய அண்ணனுக்குத் தெரிந்துவிடும்! பிறகு தீராத ஆபத்து வந்துவிடும் அண்ணி!''

கல்யாணி கெஞ்சினாள். அப்போது, கதவு ஓரத்தில் அசைந்த உருவம் மெல்ல ஓசையின்றி நடந்து அந்த அறையை விட்டு வெளியேறிற்று. அதைக் கல்யாணி பார்க்கவில்லை. வீரம்மாள் மட்டும் பார்த்துப் பெருமூச்சு விட்டுக் கொண்டாள்.

''கல்யாணி! நான் என் தம்பியிடம் நல்லவிதமாகச் சொல்லி அவன் மனத்தை மாற்றியிருக்கிறேன். பாகனேரியில் உள்ள அண்ணன் தம்பிகள் விளைவித்த அவமானத்திற்காகத் தங்கையைப் பழி வாங்குவது தர்மமல்ல என்று எடுத்துரைத்திருக்கிறேன். என்னுடைய வேண்டுகோள், வைரமுத்தனைச் சிந்திக்க வைத்திருக்கிறது என்பதற்கு அடையாளம்தான், ஆதப்பன் கைது என்ற செய்தி கேட்டு நீ படிகளில் மயங்கி விழுந்தபோது அவன் காட்டிய பரபரப்பு! உனக்கு ஏதும் நேர்ந்து விடக் கூடாது என்ற அக்கறையில்தான் உடனடியாக அவன் படை வீரர்களுடன் நாலுகோட்டைக்குச் சென்றது... ஆதப்பனை விடுவித்து வந்தது எல்லாமே! அநேகமாக இப்போது வந்தாலும் வருவான் பாரேன்! நானிருப்பது உங்களுக்கு இடைஞ்சலாக இருக்கப் போகிறது!''

அத்துணை சோகத்துக்கிடையிலேயும் கல்யாணியின் செந்தூரக் கன்னமும் செவ்விதழ்களும் மேலும் சிவப்பேறிட இனம் தெரியாத ஒரு நாணம் அவளை ஆக்ரமித்துக் கொண்டது.

''அவசரத்தில் மறந்துவிடப் போகிறேன்!... கல்யாணி! வைரமுத்தன் வந்து உன்னை மாடியறைக்குக் கூப்பிட்டால் போகாதே! அது இராசியான அறையல்ல! அங்குப்போனாலே என் தம்பி உன்னை மறந்து விடுவான்; அண்ணனின் வெட்டுண்ட தலை முடியும் இரத்தக் கறை ஆடையும்தான் அவனை ஆட்டிப் படைக்கும்! என்ன, நான் சொல்வது புரிகிறதா?''

குனிந்த தலை நிமிராமல் கல்யாணி ''உம்!'' என்றாள்.

''தம்பி வைரமுத்தன் வந்தால் இந்த அறையிலேயே பேசிக்கொண்டிருங்கள்! அதாவது இந்த அண்ணி அவ்வளவுதானே சொல்ல முடியும்... பேசிக் கொண்டிருங்கள் என்றால்...?''

வீரம்மாள் முடிப்பதற்குள், அவள் வாயைத் தனது பூங்கரம் கொண்டு பொத்தினாள் கல்யாணி...

சிரித்த முகத்துடன் கல்யாணியின் உச்சியில் முத்தமீந்துவிட்டு வீரம்மாள் அந்த அறையை விட்டு வெளியே சென்றாள்.

அவள் கல்யாணியுடன் பேசிக் கொண்டிருந்த போது அங்கு நின்று விட்டுச் சென்ற அந்த உருவத்தின் மீதே அவளுக்கு ஞாபகம்! அதனால் வீரம்மாள் அந்த உருவம் வெளிப்புறத் தாழ்வாரத்தில் தென்படுகிறதா என்று உற்றுப் பார்த்தாள். அவள் வருகைக்காகக் காத்திருந்தது போல அந்த உருவம், சுவரின் ஓரமாகச் சிறிது வேகமாக நடந்தது.

வீரம்மாள் அந்த உருவத்தைப் பின்தொடர்ந்தாள்! இருட்டில் மறைந்து மறைந்து பெரிய தூண்களில் ஒளிந்து ஒளிந்து சென்றுகொண்டிருந்த அந்த உருவம், கூடத்தையொட்டினாற் போல் இருந்த ஒரு அறையில் நுழைந்தது. அந்த அறையில்தான் கறுத்த ஆதப்பன் தங்கியிருக்கிறான்.







# 35

அதே அறைக்குள் அந்த உருவத்தைத் தொடர்ந்து வீரம்மாளும் சென்றாள். அவள் உள்ளத்தில் எத்தகைய திகிலும் இல்லை என்பதை அவளது பரபரப்பில்லாத நடை உணர்த்தியது. அவளுக்கு முன்னால் அந்த அறைக்குள் நுழைந்த உருவம், ஒரு சிறு கைவிளக்கைத் தூக்கிப் பிடித்தபோது, அந்த உருவம் வேறு யாருமல்ல- ஆதப்பன்தான் என்பது தெளிவாகியது.

''என்ன தம்பீ, நான் சொன்னது சரிதானா? நானும் கல்யாணியும் பேசிக்கொண்டதை முழுவதும் கேட்டாயா?''

வீரம்மாள் ஆதப்பனைப் பரிவுடன் நோக்கினாள். அந்த விளக்கு உமிழ்ந்து கொண்டிருந்த ஒளியில் ஆதப்பனின் கண்ணீர் முத்துக்கள் மின்னிக் கொண்டிருந்தன. உடனடியாகப் பதில் சொல்ல முடியாமல் வாயடைத்துப் போய் நின்றான்.

''தம்பீ-நான் முதலில் உன்னிடம் சொன்னதை உன்னால் நம்பத்தான் முடியவில்லை. எந்தக் குறையுமில்லாமல் இருக்கிறேன் என்று கல்யாணி உன்னிடம் கூறியது, ஒரு தமிழ்ப் பெண்ணின் பண்பாட்டைக் காட்டுமே தவிர, அவள் இங்குப் படும் பாட்டை விளக்கிடாது! அதனால்தான் கல்யாணியின் சோக கீதத்தை உன் காதாலேயே கேட்பதற்குரிய ஏற்பாட்டைச்

செய்தேன். ஆனால் தம்பி! நான் கல்யாணியின் அறையில் மிகவும் பயந்து நடுங்கிக் கொண்டு தானிருந்தேன். அவளது வேதனையைக் கேட்டு, நீ வெகுண்டெழுந்து அலறிவிடுவாயோ என்ற அச்சம் என்னை ஆட்டிப் படைத்தது. நல்லவேளை! அமைதியாக இருந்து உண்மையைத் தெரிந்து கொண்டாய்!''

கறுத்த ஆதப்பன், விரல் கொண்டு, தனது விழி நீரைத் துடைத்துக் கொண்டான். துன்ப உணர்வு அவன் தொண்டைக் குழியை அழுத்திக் கொண்டிருந்தது.

''கல்யாணியிடம் நீங்கள் கொண்டுள்ள அன்புக்கு எப்படி நன்றி கூறுவதென்றே தெரியவில்லை. ஆமாம்; இன்னமும் வஞ்சம் தீர்த்துக் கொள்ள வேண்டுமென்ற வஞ்சினத்தோடுதான் வைரமுத்தன் இருப்பதாக நான் கருதினால் அதில் தவறில்லை அல்லவா?''

''அது எப்படித் தவறாக முடியும்? பட்டமங்கலத்திற்கு இழைக்கப்பட்டுள்ள அவமானம் சாதாரணமானதா? அதற்குப் பழிவாங்கத் துடிக்கும் வைரமுத்தனின் உணர்வுக்கு அணை போட்டுத் தடுக்க யாராலும் முடியாது. ஆனால் ஒன்று-நான் வைரமுத்தனிடம் வேண்டிக் கொண்டிருப்பதெல்லாம் ஆடவர்களாகிய நீங்கள் தேடிக் கொண்ட பகைக்குப் பாவம் ஒரு பெண்ணின் வாழ்க்கையைப் பலியாக்காதீர்கள் என்பதுதான்!''

''உங்களின் வேண்டுகோளை வைரமுத்தன் ஏற்றுக் கொண்டதாக நான் நம்பலாமா?''

''நானே அப்படித்தான் நம்புகிறேன். அவனுக்கு மனமாற்றம் ஏற்பட்ட காரணத்தினால்தான் கல்யாணி மயங்கி விழுந்தவுடன் பதறிப் போனான்-அதன் விளைவாகத்தான் உன்னை விடுவிக்கவும் உடனே புறப்பட்டான்.''

''நான் சந்தேகப்படுகிறேன்!''

''என்ன தம்பி?''

''என்னை விடுவித்து இங்கு அழைத்து வந்திருப்பதின் நோக்கம், பாகனேரியில் நடந்த நிகழ்ச்சிக்கு இங்கே பட்டமங்கலத்தில் பழிவாங்குவதற்காகக் கூட இருக்கலாம்!''

வீரம்மாள் அதிர்ந்தாள்.

''அப்படியா? நீ அப்படியா நினைக்கிறாய்! ஒரு வேளை நீ நினைப்பது போல நடந்தாலும் நடக்கலாம். தம்பி! நான் சொல்வதைக் கேள்-நீ இப்போதே இங்கிருந்து புறப்பட்டுவிடு!''

''அவ்வளவு கோழையாகவா என்னை எண்ணி விட்டீர்கள்? என் தங்கை கல்யாணியின் வாழ்வு பட்டுப் போகாமல் இருப்பதற்காக, நான் என் உயிரைக் கொடுக்கவும் தயாராகி இருக்கிறேன். தம்பி தனது உயிரைத் தத்தம் செய்து தங்கையின் வாழ்வு அணையாமல் பாதுகாத்தான் என்ற செய்தி அறிந்தால் என் அண்ணனைப் போல் ஆனந்தக் கண்ணீர் வடிப்பவர்கள் யாருமே இருக்க மாட்டார்கள்!''

''உயிரைவிடப் பெரிதான மானத்திற்கு ஊனம் வந்து விட்டதேயென்று குமுறிக் கொண்டிருக்கும் பட்ட மங்கலத்தின் இந்த அரண்மனையில், உன் உயிரைப் பறிப்பதுதான் இழந்துவிட்ட மானத்திற்குச் சரியான ஈடு என்று என் தம்பியும் கருதமாட்டான். நானும் கருதவில்லை.''

''ஓகோ! அப்படியானால் இந்த அவமான நிகழ்ச்சி அதாவது பாகனேரியில் நடந்த அந்த நிகழ்ச்சி-அப்படியே பட்டமங்கலத்தில் திருப்பி நடத்தப்பட வேண்டும்-உறங்காப்புலிக்குப் பதிலாக இந்த ஆதப்பனைச் செக்கிலே

கட்டி ஓட்ட வேண்டும்! வல்லத்தரையரைப் போல வாளுக்குவேலியின் தலைமுடியை வெட்டியெறிந்து அவமானப்படுத்த வேண்டும்-அதுதானே உங்கள் திட்டம்?''

''ஏன், அதுபோலத் திட்டம் தீட்டக் கூடாதா! மானபங்கப்படுத்தப்பட்டவர் என்னை மணந்த மணவாளர். அது மட்டுமா? அடலேறாம் எனது ஆருயிர் அண்ணனைச் சாக்காட்டில் வீழ்த்துகிற அளவுக்கு, அவமானச் சகதியில் வீழ்த்தினீர்களே! அதையெல்லாம் மறக்குமா இந்த நெஞ்சம்?''

கறுத்த ஆதப்பனின் நரம்புகள் புடைத்தன... கண்கள் தீப்பிழம்புகளாயின. சிறுத்தையைப் போல உறுமினான். வேகமாகப் பேசிக் கொண்டிருந்த வீரம்மாள், குரலைச் சிறிது தாழ்த்தினாள்.

''இருந்தாலும் ஆதப்பா-கால ஓட்டத்தில் அந்த நிகழ்ச்சிகளை மறந்து பட்டமங்கலமும் பாகனேரியும் பகையற்று வாழ வேண்டுமென்றுதான், நான் மனதார விரும்புகிறேன்! அன்று சுரண்டைக் காட்டில் உன் உள்ளத்தில் சுடர்விட்ட சுதந்திரக் கனல் கண்டு நான் பூரித்துப் போனவள். என் கண்ணீருக்கு மதிப்பளித்து என் மானத்தையும், மாங்கல்யத்தையும் காப்பாற்றிய உன் செயலுக்கு நான் என்றென்றும் நன்றி காட்ட வேண்டியவள்! அதனால்தான் உன்னைக் கேட்டுக் கொள்கிறேன்; நீ இன்றிரவே-இப்போதே-இங்கிருந்து புறப்பட்டுப் போய்விடு!''

''இல்லை! முடியாது! தன்னைச் சுற்றிலும் புலிகள் இருப்பதாகப் பயந்து கொண்டு வளை தேடி ஓடுகின்ற எலியல்ல ஆதப்பன்! எதுவரினும் சந்திக்கத் துடிக்கின்றன என் தோள்கள்!''

''ஆதப்பா! உன்னுடைய வீரத்தை நான் குறைத்து எடை போடவில்லை. ஆனால் கல்யாணியின் வாழ்க்கையை மறந்துவிடாதே! நீ இன்றிரவு இங்குத் தங்கி-நாளைக் காலையில் உனக்கு ஏதாவது ஒரு அவமானம் இழைக்கப்பட்டு விடுமானால்-அதைக் கல்யாணியினால் தாங்கிக் கொள்ள முடியுமா? வேதனையை வெற்றிலை பாக்கு வைத்து அழைப்பதை விட இப்போதைக்குத் தற்காலிகமாகத் தவிர்த்துக் கொண்டால்... கால மாறுதலில் எவ்வளவோ நிலைமைகள் மாறுமல்லவா? உனக்காகச் சொல்லவில்லை! உன் தங்கை கல்யாணிக்காகச் சொல்லுகிறேன்! பாம்பு இருக்கிறது எனத் தெரிந்த பிறகும் புற்றின் மேல் தலை வைத்துப் படுப்பது வீரமுமல்ல - விவேகமும் ஆகாது!''

கறுத்த ஆதப்பனின் நினைவு அருவியில் கல்யாணி மிதந்தாள்! வீரம்மாளின் அறிவுரையை அவனால் தட்டிவிட முடியவில்லை! கல்யாணியின் அறையில் அவன் காதில் புகுந்த செய்திகளில், அன்றைக்குத்தான் வைரமுத்தன் அவளைச் சந்தித்து சந்தோஷமாக இருக்கப் போகிறான் என்பதும் ஒன்றல்லவா! அந்த மகிழ்ச்சியைக் கல்யாணியிடமிருந்து மறுநாளே விரட்டிவிடத் தன்னையே காரணமாக ஆக்கி விடுவதா? கூடாது! கூடாது! தங்கையின் மகிழ்ச்சியைப் பறித்துவிடக் கூடாது. இடைவெளியில்லாமல் அவன் இதயத் தடாகத்தில் பாறைகள் உருண்டன... தத்தளித்தான்.. தடுமாறினான்... வீரம்மாளைக் குழப்பத்துடன் பார்த்துச் சொன்னான்.

''உங்கள் இஷ்டப்படியே போகிறேன்! நல்லெண்ணம் பூத்துக் குலுங்கும் உங்கள் மனத்திற்கேற்ப எல்லாமே நடந்தால் பாகனேரி-பட்டமங்கலத்தின் நட்புத் தழைத்தோங்கும்! என் தங்கையின் வாழ்வும் மலர்ந்து மணம் வீசும்!''

''ஆண்டவன் அருளால் எல்லாம் நன்றாக நடக்கும் தம்பி!''

''இப்போதே போவதென்றால், கல்யாணியிடம் சொல்லிக் கொண்டு போக வேண்டாமா?''

''வேண்டாம்! அவள் தடுப்பாள்! நாளைக்குப் போகலாமே, என்ன அவசரம் என்பாள்! பிறகு விபரீதமாகி விடும்! தயவு செய்து இப்போதே புறப்படு.''

வீரம்மாள் யோசனையை அங்கீகரித்தவனைப் போலத் தலையசைத்து மௌனமாய் நின்றான் ஆதப்பன்.

''நீ புறப்படுவதற்கான ஏற்பாடுகளைச் செய்து விட்டு ஆள் மூலம் சொல்லியனுப்புகிறேன்-நீ ஆயத்தமாக இரு!''

விடை பெற்றுக் கொண்டு வீரம்மாள் புறப்பட்டாள் - ஆதப்பனின் பயணத்திற்கான காரியங்களைக் கவனிப்பதற்காக!...

கதவு மூடப்படாமல் இருந்தாலும்கூட, மெதுவாகத் தட்டப்படும் ஒலிகேட்டு, கல்யாணி-கால்கள் ஒன்றோடொன்று பின்னிட நடந்து சென்று கதவுகளை முழுமையாகத் திறந்தாள். அவள் யாரை எதிர்பார்த்துக் காத்திருந்தாளோ அவன்தான் வந்து நின்றான். கல்யாணி, அவன் காலில் விழுந்து வணங்கி எழுவதற்குள், வைரமுத்தன்-அவளது அழகிய தோள்களைப் பற்றித் தூக்கினான். கதவு திறந்திருப்பதைப் பற்றிக்கூடக் கவலைப்படாமல் இருவரும் அந்த இடத்திலேயே தழுவிக்கொண்டு நின்றனர்.

சிறிது நேரம் உலகத்தை மறந்திருந்த வைரமுத்தன், ஒரு கையால் கல்யாணியை அணைத்தவாறு, மற்றொரு கையால் கதவுகளை மூடித் தாழ் போட்டான். அவளை

மெதுவாக நகர்த்திக் கொண்டே கட்டிலருகே வந்து, அவளை உட்கார வைத்தான். அவனும் அருகே உட்கார்ந்து கொண்டான். யார் முதலில் பேசுவது, என்ன பேசுவது, எப்படிப் பேசுவது, என்று தெரியாமல் இருவருமே தவித்தனர். தனது வலது கை விரல்களால் அவளது வலது கை விரல்களைப் பின்னிக் கோத்துக் கொண்டு இரு கரங்களையும் உதடுகளில் பதித்துக் கொண்டு 'இச்' என்று ஈந்தான் முத்தம். அவள் தலை நிமிர முடியாமல் அவனது வலிமை செறிந்த தோளில் சாய்ந்து கொண்டது. கல்யாணியின் விரல்களைத் தடவிக் கொண்டிருந்த அவன் கரம் மெல்ல ஊர்ந்து அவளது மணிக்கட்டு, முன்கை, மூங்கில் நிகர்த்த தோள் என்று நகர்ந்து கொண்டேயிருந்தது. இருவரது நரம்பு மண்டலமும் உலையிற் காய்ச்சிய செப்புக் கம்பிகளைப் போல் சூடேறித் தகிப்பதை அந்தத் தழுவலின் மூலம் தான் பொறுத்துக் கொள்ள முடிந்தது அவர்களால்! அதனால் தழுவியவாறு கட்டிலில் படுத்தனர். இருவர் கன்னங்களும் ஒட்டிக் கொண்டன. ஈரிரண்டு இதழ்களும் ஒன்றையொன்று பற்றிக் கொண்டு, தேனமுதத்தைத் தெவிட்டாது பருகின. அப்போது வைரமுத்தனின் கன்னத்தில் இரண்டொரு நீர்த்துளிகள் குதித்து உருண்டன.

''கல்யாணி! அழுகிறாயா?''

அவளது கண்களைத் தன் உதடுகளால் அழுத்தி முத்தத்தால் ஒத்தடம் கொடுத்தான்.

''அத்தான்!''

தாங்க முடியாத வலியால் துடித்துத் துவண்ட ஒருத்தி, ஆண் குழந்தையைப் பிரசவித்தது போல அந்த ''அத்தான்'' என்ற வார்த்தையை உச்சரித்து விட்டு-அப்படி உச்சரித்த மகிழ்ச்சியில் கல்யாணி திளைத்தாள்.

''என்னை மன்னித்துவிடு கல்யாணி! உன்னைக் கொடுமைப் படுத்திவிட்டேன்...''

அவன் முகத்தை அவளது நெஞ்சில் புதைத்துக் கொண்டான்.

''அப்படியெல்லாம் சொல்லாதீர்கள்!''

அவள் அவனையொரு குழந்தைபோல நெஞ்சோடு அணைத்துக் கொண்டாள்...

''எவ்வளவு செல்லமாக வளர்ந்தவள் நீ-உன் மனதில் அணுவளவு சஞ்சலம் ஏற்பட்டாலும் உன் அண்ணன்களால் தாங்கிக் கொள்ள முடியாதே! அப்படிப்பட்ட உன்னை...இங்கே... இந்தப் பாவி...''

வைரமுத்தனை அதற்கு மேல் எதுவும் பேச விடாமல் தடுத்திட்ட கல்யாணி, ''அத்தான்! எனக்கு ஒன்றுமில்லை. நான் சந்தோஷமாகத்தானிருக்கிறேன். இதோ இப்போது நான் அனுபவிக்கும் இன்பத்திற்காக எவ்வளவு துன்பங்களை வேண்டுமானாலும் பொறுமை யோடு ஏற்றுக் கொள்வேன் அத்தான்'' என்று கூறிக் கொண்டே படுக்கையிலிருந்து நிமிர்ந்து எழுந்து அவன் கால்களைக் கட்டிப் பிடித்துக் கொண்டு கன்னங்களில் ஒத்திக் கொண்டாள். வைரமுத்தன் அப்படியே அள்ளித் தூக்கி, பாரி மன்னன் தனது தேர் மீது படரவிட்ட முல்லைக் கொடி போல அவளைத் தன் மீதே படர விட்டுக் கொண்டான். குளிரால் வாடிய மயில் மீது பேகன் என்பான் போர்த்திய பொன்னாடையானான் அவன், அவளுக்கு! எத்தனை நாள் கனவு! பௌர்ணமி தினத்துக் கடல் அலைபோல் எத்தனை தடவை ஒவ்வொரு நாளும் ஓங்கியெழுந்து அடங்கிக் கிடந்த ஆசை!...

''கல்யாணி!''

''அத்தான்!''

''கல்யாணி!''

''அத்தான்!''

மெதுவாக ஒலித்துக் கொண்டிருந்த அந்த உயிர் மூச்சோடு இழைந்த சுவைமலிந்த சுளைச் சொற்கள், யாழின் கம்பிகளாய் அதிர்ந்தன. பிறகு மௌனம், யார் அணைத்தார்கள் என்று தெரியாது; அறையில் கட்டிலோரமாக இருந்த விளக்கு இருட்டுக்கு வழிவிடுத்து விடை பெற்றுக் கொண்டது! இருவரிடை சிக்கிக் கொண்ட கட்டில் மட்டும் வாய் திறந்து எதுவும் பேச முடியாமல் அவர்களை 'மனத்தால்' வாழ்த்தியவாறு-தனது வலியை மட்டும் ''முனகல்'' வாயிலாக் காட்டிக் கொண்டது!





## 36

செவ்வரளியின் நரம்புகள் இருவர் கண்களிலும் பரவிப் பரந்திட வாழ்விலோர் திருநாள் இந்த வசந்தப் பெருநாள் என வைரமுத்தனும் கல்யாணியும் வைகறைப் பொழுது வரையில் உறக்கத்தை விரட்டியடித்துக் கொண்டே, உலகமென ஒன்றுண்டு என்பதை மறந்தே இருந்தனர். நாளைக்கு உலகம் இருக்குமோ இருக்காதோ என்ற சந்தேகத்தின் காரணமாக இன்றைக்கே எல்லையற்ற - எண்ணற்ற இன்பங்களை அனுபவித்தனர். கண்ணகியும் கோவலனுமென்ற சிலப்பதிகாரக் கற்பனைக்கு எடுத்துக் காட்டாக அவர்கள் இன்பம் துய்த்தனர். கண்களும் உடலும் கெஞ்சிய பிறகே அவற்றின் முறையீட்டை மதித்து விடியலின்போது ஓய்வு வழங்கினர்.

இதற்கிடையே வீரம்மாள், கறுத்த ஆதப்பனைப் பாகனேரிக்கு அனுப்பி வைப்பதற்கான ஏற்பாடுகளை மிகத் தந்திரமாகவும், விறுவிறுப்பாகவும் கவனித்தாள். முரண்டு பிடிக்காத ஒரு குதிரையைக் கொண்டு வரச் சொல்லி, அதில் அவனை ஏற்றிவிட்டு, அவன் அரண்மனைப் பகுதியைக் கடந்து செல்லும் வரையில் அங்கேயே நின்று கொண்டிருந்துவிட்டு, ஒரு நல்ல காரியத்தைச் செய்து முடித்த ஆறுதல் நிரம்பிய பெருமூச்சுடன் தனது அறைக்கு வந்தாள்.

அவளுக்கும் தூக்கம் வரவில்லை. காலையில், கல்யாணி கேட்டாலோ அல்லது வைரமுத்தன் கேட்டாலோ ஆதப்பன் அவசரமாகப் புறப்பட்டுப் போனதற்கு என்ன காரணம் சொல்வது என்ற சிந்தனை சிறகடித்துக் கொண்டிருந்தது.

விடியப்போகும் நேரம்! உலகம் மெல்ல மெல்லத் தனது கருநிற ஆடையைக் களைந்து கொண்டிருந்தது. வீரம்மாளின் அறைக்கதவு திறக்கப்படும் சப்தம் கேட்டது. பதட்டமடையாமல் திரும்பிப் பார்த்தாள். உறங்காப்புலி, கொட்டாவி விட்டுக் கொண்டே உள்ளே நுழைந்து, தனது உடைவாள் முதலியவற்றைக் களைந்துவிட்டு வீரம்மாளுடன் படுக்கையில் பொத்தென்று விழுந்தான்.

''மெதுவா! மெதுவா! என்ன அவ்வளவு அசதி? உங்கள் வெள்ளைக்காரக் கூட்டம்தான் வெற்றிமேல் வெற்றி குவிக்கிறதே! பிறகேன் சோர்வு?''

எனக் கேலியாகவும் மனக் குமுறலோடும் கேட்ட வீரம்மாளை முரட்டுத் தனமாகச் சேர்த்துக் கட்டிப் பிடித்துக் கொண்டு உறங்காப்புலி, ''பைத்தியம்! பைத்தியம்! இன்னும் உனக்கு அந்தப் பழைய கதைதான் ஞாபகமா? அதற்குப் பிறகு நான் எவ்வளவு திருந்தி விட்டேன் தெரியுமா? கோபால நாயக்கர், மருது பாண்டியர் கூட்டத்துக்கு எனது முழுச் சக்தியையும் பயன்படுத்தி, எவ்வளவு உதவிகள் செய்து வருகிறேன் என்பது உனக்குத் தெரியாது. காலம் வரும்! என் மீதுள்ள களங்கம் தீரும்! அந்தக் கம்பெனிக்கார வெள்ளைக்கார வெறியர்களை விரட்டியடிப்பதுதான் வீரம்மா- உனது கணவனின் குறிக்கோள்! புரிகிறதா?'' என்று விவரித்துக் கொண்டே அவள் இதழ்களில் அவனது தடித்த உதடுகளை அழுத்தினான்.

விடியற்காலை நேரம்! குளிர்ந்த காற்று வேறு வீசிக் கொண்டிருந்தது! இருவரும் சிறிது நேரம் ஒருவர் முதுகை ஒருவர் தடவியவாறு மௌனமாக இருந்தனர். அவனிடம் எதையோ கேட்பதற்கு அவன் தவிக்கிறான் என்பதை மட்டும் அவள் உணர்ந்து கொள்ளாமல் இல்லை. கடைசியில் கேட்டே விட்டான்.

''ஆமாம்! அந்தக் கறுத்த ஆதப்பனை வைரமுத்தன் விடுவித்துக் கொண்டு வந்தது என்ன ஆயிற்று? இப்போது ஆதப்பன் எங்கே?''

''ஆதப்பனுக்குப் பாகனேரியில் ஏதோ அவசர வேலையாம்-அதனால் இரவே புறப்பட்டுப் போயாகிவிட்டது!''

''யார் சொன்னது, ஆதப்பன் பாகனேரிக்குப் போய்விட்டதாக? இல்லவே இல்லை! இங்கே தானிருக்கிறான்!''

''இதில் எதற்காகப் பொய் சொல்ல வேண்டும்? அவசர காரியம் என்று சொன்னதும் நான்தான் ஆதப்பனை அனுப்பி வைத்தேன், என்னிடமே வந்து, ஆதப்பன் போகவில்லையென்று சொல்கிறீர்களே!''

''நீ அனுப்பி வைத்ததெல்லாம் உண்மை! அவன் புரவியேறிப் புறப்பட்டதும் உண்மை! அவன் அரண்மனை எல்லை தாண்டுகிற வரையில் நீ பார்த்துக் கொண்டிருந்ததும் உண்மை! அதற்குப் பிறகு நடந்தது உனக்குத் தெரியாதல்லவா?''

''என்ன நடந்தது? இப்போது ஆதப்பன் எங்கே?''

''பட்டமங்கலத்து எல்லை தாண்டுவதற்குள் அவன் நமது வீரர்களால் வளைக்கப்பட்டுப் பிடிபட்டு விட்டான். இப்போது, என் வசம் மிக இரகசியமான இடத்தில் வைக்கப்பட்டிருக்கிறான்.''

வீரம்மாள் படுக்கையை விட்டுத் திடுக்கிட்டு எழுந்தாள்.

''இதெல்லாம் என்ன அக்கிரமம்? உங்களுக்கு உயிர்ப் பிச்சையளித்தது மட்டுமல்ல, உங்கள் துரோகச் செயலையும் யாரிடமும் சொல்லாமல் இருக்கிற ஒரு உத்தமனை ஏன் இப்படி நடத்த வேண்டும்? அப்படியானல் ஆதப்பனை மீண்டும் ஆங்கிலேயத் துரையிடமே ஒப்படைத்து விட்டீர்களா?''

''எதற்காக அவர்களிடம் ஒப்படைப்பது? நான் அவனுக்குச் செய்ய வேண்டிய மரியாதையைச் செய்ய வேண்டாமா? இந்த வீட்டுக்கு மாப்பிள்ளையாக வந்த எனக்கு இருக்கிற மான உணர்வில் ஒரு கடுகளவாவது உனக்கோ, உன் தம்பி வைரமுத்தனுக்கோ இருக்கிறதா? என்னைச் செக்கு மாடு போலச் சுற்ற வைத்தவன்-உன் அண்ணன் வீரவல்லத்தரையரின் தலைமுடியை அறுத்து அவமானப்படுத்தியவன் அந்த அற்பப் பதர் ஆதப்பன்! அவன் வகையாக வந்து சிக்கியிருக்கிறான்! இப்போது பதிலுக்குப் பதில் செய்யாத மரியாதையைப் பிறகு எப்போது செய்வது?''

''அப்படியானால்?''

வீரம்மாளுக்கு உடல் நடுங்கியது. திகில் அவள் நெஞ்சை அடைத்தது. பட்டமங்கலம் பட்ட அவமானத்திற்குப் பதிலாகப் பாகனேரியைப் பழிவாங்க வேண்டுமென்றாலுங்கூட, கல்யாணியின் களங்கமற்ற முகம்-அந்தக் கவர்ச்சிப் பாவை உருக்குலைந்து விடக்கூடாதே என்று வீரம்மாளுக்கு ஏற்பட்ட கவலை-அதனால்தானே, அவள் தன் மனதைக்கூட மாற்றிக் கொண்டு பெண்மையின் இரக்கக் குணத்திற்கு எடுத்துக்காட்டாக நின்றாள்! அந்த நல்ல எண்ணம் இடி விழுந்து சிதறிவிடுமோ என்ற அச்சம் அவளை உலுக்கியது!

அவளை அலட்சியமாகப் பார்த்துக் கொண்டே உறங்காப்புலி தனது மீசையை முறுக்கினான்.

''வீரம்மா! ஆதப்பன் இங்கிருந்து தப்பியோடுவதற்கு நீ செய்த அனைத்து ஏற்பாடுகளையும் நானறிவேன். பரவாயில்லை; உன்னை மன்னித்து விட்டேன். ஆனால், இந்தச் செய்தி வெளியே தெரிந்தால் பட்டமங்கலம் உன்னை மன்னிக்காது!''

''பகைவனையும் மன்னித்தோம் என்ற செய்தி கேட்டால் ஊரும் உலகமும் மன்னிக்கும்! ஆனால், பகைவனின் கைப்பாவையாகி நமது மண்ணைக் காட்டிக் கொடுக்கத் துணிந்தோம் என்ற செய்தி கேட்டால்தான் உலகம் மன்னிக்கவே மன்னிக்காது!''

''ஒகோ! நீ மறுபடியும் மறுபடியும் அந்த மறந்து போன பழைய கதையிலேயே இருக்கிறாயா? சர்வ வல்லமையுள்ள பட்டமங்கலத்துப் பிள்ளையார் மீது சத்தியமாகச் சொல்லுகிறேன். அந்த வெள்ளைக்கார அதிகாரிகளுக்கும் எனக்கும் எள்முனைத் தொடர்பு கூட இப்போது கிடையாது! விடுதலைப் போர் அணியிலே நான் ஒரு அங்கம்! ஆனால் ஒன்று-அதற்கும், பாகனேரி அம்பலக்காரக் குடும்பத்தைப் பழிவாங்குவதற்கும் எந்த விதச் சம்பந்தமும் கிடையாது!''

''சரி! ஆதப்பனை என்னதான் செய்யப் போகிறீர்கள்?''

''இன்னும் கொஞ்ச நேரம்தானே இருக்கிறது பொழுது விடிவதற்கு! விடிந்த பிறகு செய்தி வரத்தானே போகிறது-நீயும் இந்த ஊரும் வேடிக்கை பார்க்கத்தானே போகிறீர்கள்!''

''தயவு செய்து கேளுங்கள்-பாகனேரிப் பெண் பட்டமங்கலத்தில் வாழ்வதை மறந்து விடாதீர்கள்.

உங்கள் காலில் விழுகிறேன். கல்யாணிக்காகவாவது என் பேச்சுக்குக் கொஞ்சம் காது கொடுங்கள்.''

''வீரம்மா! அந்தப் பாகனேரிப் பெண் இந்த வீட்டுக்கு வரக்கூடாது என்று நீயும் நானும் உன் தம்பி வைரமுத்தனிடம் வாதாடியதை மறந்து விட்டாயா?''

''வாதாடினோம்-உண்மைதான்! ஆனால் வந்து விட்ட பிறகு என்ன செய்ய முடியும்?''

''பாம்பு வீட்டுக்குள் வந்துவிட்ட பிறகு அடித்துக் கொல்லுகிறோம்-கொல்லைப்புறத்தில் அது குடியிருந்த புற்றையும் இடித்துத் தள்ளுகிறோம்! அப்படித்தான் கல்யாணியையும், அவள் பிறந்து வளர்ந்த பாகனேரிக் குடும்பத்தையும் ஒழித்துக் கட்ட வேண்டும்!''

''வந்தது பாம்பா; பச்சைக்கிளியா என்பதிலே நமக்குள்ளே வேறுபாடு இருக்கும்போது, உங்கள் உவமைகள் எதுவுமே பொருந்தாது! கொஞ்சம் கேளுங்கள். இன்று இரவுதான் வைரமும் கல்யாணியும் மகிழ்ச்சியாக இருந்திருக்கிறார்கள். அதற்குள் ஒரு படுகுழி வெட்ட வேண்டுமா அவர்களின் பரவசத்திற்கு? தீய காரியங்களைச் செய்தவர்களைக் கூட அவர்களுக்கு நன்மை செய்வதின் மூலம் நாணித் தலை குனியச் செய்து விடலாம் என்று வள்ளுவர் கூறியிருக்கிறார். அதனால் நடந்தவைகளை மறந்து நமது பொது எதிரியான வெள்ளைக்காரர்களை வென்றிட ஒன்று கூடும் முயற்சியில் ஈடுபடுங்கள்!''

''வீரம்மா! வெள்ளையரை எதிர்ப்பது நமது மண்ணை மீட்கும் பிரச்சினை! பாகனேரி அம்பலக் காரரைப் பழி தீர்ப்பது நமது மானம் காக்கும் பிரச்சினை! இரண்டையும் இணைத்துக் குழப்பாதே! பாஞ்சாலியைப் பல பேர் முன்னிலையில் மானபங்கப் படுத்தியதற்காகத்

தான் ஒரு பாரதப் போரே நடந்தது என்பதை மறந்து விடாதே; அதுவும் அண்ணன் தம்பிகளுக்குள்-குரு சிஷ்யர்களுக்குள்!''

''பாரதப் போர் பாஞ்சாலியை முன்னிட்டு நடந்ததல்ல! இழந்த நாட்டை மீட்பதற்காக நடைபெற்ற போராட்டம்! பாஞ்சாலியை அவமானப் படுத்தியதற்காக நடந்த யுத்தம் என்றால் அந்தக் கணமே அல்லவா ஆரம்பமாகியிருக்க வேண்டும்? பன்னிரண்டு வருடம் வனவாசம் புரிந்துவிட்டு, அதற்குப் பிறகும் பாண்டவர் கேட்டது என்ன? ஐந்து நாடு அல்லது ஐந்து ஊர் அல்லது ஐந்து தெரு அல்லது ஐந்து வீடு என்றல்லவா கோரிக்கை வைத்துத் தூது அனுப்பினார்கள்! தருமன் மனைவியை மானபங்கப்படுத்தியதற்காகப் பழி வாங்குவதற்குத் துரியோதனனின் மனைவியையா மானபங்கப்படுத்த நினைத்தார்கள்?-இல்லையே!''

''ஓ! ஓ! உன்னுடைய புராணக் காலட்சேபத்தைக் கவனித்தால்-உன் கணவன் இந்த உறங்காப்புலிக்கு நேர்ந்த அவமானத்தையும் உன் அண்ணன் வல்லத் தரையனுக்கு நேர்ந்த அவமானத்தையும் பெரிதுபடுத்த வேண்டாமென்கிறாய் என்று புரிகிறது!''

''அதைப் பெரிது படுத்தாமல்தானே இரண்டு பலம் பொருந்திய கள்ளர் நாடுகளும் சம்பந்திகளாகி விட்டிருக்கின்றன என்று மற்றக் கள்ளர் நாடுகள் எல்லாம் மகிழ்ந்து கொண்டிருக்கின்றன! அந்த மகிழ்ச்சியில் மண்ணை அள்ளிப் போடலாமா?''

''நீ மிக விசாலமான மனதுக்குச் சொந்தக்காரியாகி விட்டாய்-ஏன் என்றால் பாகனேரியில் செக்குமாடாக ஆக்கப்பட்டது நீயல்லவே! நானல்லவா? அமைதியின் வடிவமாகி அறநெறி போதிக்கும் உன்னை உனது அண்ணனின் ஆத்மா சபிக்கும் என்பதை மட்டும்

நினைவிலே வைத்துக் கொள்! வீரம்மா! விடிய விடிய விரோதிக்குத் துணை புரிந்து அவனை இங்கிருந்து தப்பியோடுவதற்கு வழி வகுத்து நீயும், உன் உதவியால் இரவு முழுதும் உன் தம்பியோடு உல்லாசத்தில் திளைத்திருக்கும் கல்யாணியும்-காலையில் அருமையான காட்சியைக் காணத் தயாராகிக் கொள்ளுங்கள்! புரவியெடுப்பு விழாவுக்கு உடுத்துவது போலப் புதுப் புடவைகளை உடுத்திக்கொண்டு, பொட்டிட்டுப் பூ முடித்துப் புன்னகை ததும்பிட வாருங்கள்! பரமானந்தக் காட்சியைப் பாருங்கள்!''

வீரம்மாளின் பொறுமை சோதனைக்கு உள்ளாகியது! அவளது ஆத்திரத்தைத் தனக்குத் தானே சிரித்துக் கொண்டு அடக்கிக் கொண்டாள். ஆயினும் சொல்ல வேண்டுமென்று நினைத்ததைச் சொல்லாமல் இருக்க முடியவில்லை.

''பழிக்குப் பழியல்ல உங்கள் குறிக்கோள்! பாகனேரி-பட்டமங்கலம் இரண்டையும் மோதவிட்டு அந்தப் பரங்கியருக்கு வேலையைச் சுலபமாக்குவதே உங்கள் இலட்சியம்! பாவம், பட்டமங்கலத்து அம்பலக்காரர் பட்டம் உங்களுக்காகக் காத்துக் கொண்டிருக்கிறது அல்லவா?''

ஒரு பசுவின்மீது வேங்கை பாய்வதுபோல அவன் பயங்கரமாகக் கத்தினான். உடைவாளை எடுத்துக் கொண்டான். வீரம்மாளை எரித்து விடுவது போலப் பார்த்தான். மளமளவென அங்கிருந்து நடந்தான். வீரம்மாள் நின்று கொண்டே அழுதாள். பிறகு படுக்கையில் வீழ்ந்தாள்.

நன்றாக விடிந்து விட்டதைக் கண்டு திடுக்கிட்ட கல்யாணி, ஆடைகளை அள்ளி மேலே போட்டுக் கொண்டு, அவசர அவசரமாக எழுந்து, அனுபவித்த

இன்பத்தின் பூரிப்பு அங்கமெலாம் பொங்கிட ஒரு மூலையில் போய் நின்று உடைகளை ஒழுங்காகக் கட்டிக் கொண்டு, கட்டிலருகே வந்து நின்று வைரமுத்தனின் பாதங்களைத் தனது பட்டு விரல்களால் மெல்லத் தொட்டு அந்த விரல்களைக் கண்களில் ஒத்திக் கொண்டாள்.

தாலியையும் அவ்வாறே கண்களில் ஒத்திக் கொண்ட பிறகு, அவன் முகத்தையே சற்று நேரம் பார்த்துக் கொண்டு நின்றாள். அயர்ந்து தூங்குகிறவன் விழித்துக்கொள்ளக் கூடாதேயென்ற பயத்துடன் மெதுவாக அவன் தலைப்பக்கம் போய், அவனது அகன்ற நெற்றியில் மலரால் தொடுவது போல இதழால் ஓர் முத்தம் இசைத்தாள்.

அத்துடன் அங்கிருந்து வெளியிற் செல்ல் நகர்ந்தவளைத் திடீரென வைரமுத்தனின் கைகள் வாரிக் கொண்டன. முகத்தை மூடிக் கொண்டே ''உம், விடுங்கள். அண்ணி தேடுவார்கள்!'' என்று அவனிடமிருந்து விடுபடுவதுபோல் நடித்தாளே தவிர ''ஏன் பொழுது விடிந்தது?'' என்று மனதுக்குள் சபித்தாள்.

அவன் எழுந்து உட்கார்ந்து அவளைத் தழுவிக் கொண்டே படுக்கையில் இருவருமாகச் சாய்ந்தனர். ''நாழிகையாகிறது. என்ன இது விளையாட்டு?'' என்று கூறிக் கொண்டே கல்யாணி படுக்கையிலிருந்து எழுந்திடவில்லை.

''இரவு முழுதும்... தெவிட்டவில்லையா?'' என்று சிணுங்கிக்கொண்டே அவனது மார்பில் முகத்தைப் புதைத்துக் கொண்டாள்!

''அப்படியென்றால் உனக்குத் தெவிட்டி விட்டதா?'' என்ற வைரமுத்தன் அவள் உச்சந்தலையில் முத்தமாரி பொழிந்தான்.

அறைக்கு வெளியே தாழ்வாரத்திலும், அந்த மாளிகையின் பல பகுதிகளிலும் ஏதோ பரபரப்பான செய்தியொன்று! அதன் தொடர்பாக ஒருவருக்கொருவர் உரையாடும் உரத்த குரல்! தெவிட்டியதா தெவிட்ட வில்லையா என்று தெரியாமலே தித்திக்கும் இன்பத்தைச் சுவைத்துச் சுவைத்து மகிழ்ந்தவர்களாம் கல்யாணியும் வைரமுத்தனும் வெளியில் கேட்ட ஒலி கேட்டுத் தங்களை உணர்ந்து எழுந்தனர்.

வைரமுத்தன் உடை திருத்தி வருவதற்குள், கல்யாணி சென்று அறைக்கதவைத் திறந்து பார்த்தாள். அதற்குள் அங்கே வைரமுத்தனும் வந்துவிட்டான். அவனை நோக்கிப் பணிவுடனும் மலர்ந்த முகத்துடனும் வந்த வீரனைப் பார்த்து, ''என்ன?'' என்று வினவினான்.

''பாகனேரி கறுத்த ஆதப்பனைப் பழிக்குப் பழி வாங்குவதற்காக நமது ஊர் எண்ணெய்ச் செக்கில் மாட்டுக்குப் பதிலாகப் பூட்டியிருக்கும் மகிழ்ச்சியான செய்தியை உறங்காப்புலியார் தங்களிடம் தெரிவிக்குமாறு உத்தரவிட்டார்; அதனால் ஓடி வந்தேன்!''

வைரமுத்தனுக்கு அந்தக் குளிர்ந்த நேரத்திலும் முகம் 'குப்' பென்று வியர்த்து விட்டது.

''அப்படியா?'' என்றவன் கல்யாணியைத் திரும்பிக் கூடப் பார்க்காமல் அந்த இடத்தை விட்டு வேகமாக வெளியேறினான். கல்யாணிக்கு நெருப்பில் நிறுத்தப் பட்ட நிலை! இல்லை; இல்லை-அவள் இப்போது நெருப்பில் நிறுத்தப்பட்ட சிலை!





# 37

நாலு கோட்டையில் கர்னல் அக்னியூவின் கைதியாக இருந்த கறுத்த ஆதப்பனை விடுவிப்பதற்காக வைரமுத்தன் அவ்வளவு விரைந்து வந்ததே உறங்காப் புலிக்கு ஒரு புதிராக இருந்தது. அக்னியூவிடம் அவன் ஆதப்பனைக் கைது செய்தது அந்த நேரத்துக்குச் சரியல்ல என்று ஆயிரம் காரணங்களைக் கூறினாலும்-வைரமுத்தன் மேற்கொண்ட தயக்கமில்லாத முயற்சி அவனைக் குழப்பத்தில் ஆழ்த்தியிருந்தது.

ஆதப்பன் பட்டமங்கலத்திற்கு அழைத்துச் செல்லப்படுகிறான் என்பதும், கல்யாணியின் கவலையைப் போக்குவதற்காகவே அந்த ஏற்பாடு என்பதும் உறங்காப்புலியின் உள்ளத்தில் பல கேள்விக் குறிகளைத் தீட்டின. பட்டமங்கலம், பாகனேரி விஷயத்தில் விட்டுக் கொடுத்துப் போய், உறவைப் பலப்படுத்திக் கொள்ளத் தீர்மானித்து விட்டதோ என்றும் சந்தேகப்பட்டான்.

எப்படியிருந்தாலும் எதிர்ப்படக் கூடிய பாதகங் களையும் தனக்குச் சாதகமாக்கிக் கொண்டு பட்டமங்கலம் அம்பலக்காரராகப் பதவியேற்கும் அந்த நல்ல நாளுக்காக அவன் தீவிரத் திட்டங்களில் ஈடுபட்டிருந்தான். அதனால்தான் ஆதப்பனைத் தொடர்ந்து யாருக்கும் தெரியாமல் சென்று பட்டமங்கலம் பகுதியில் மிகுந்த

எச்சரிக்கையோடு தனது ஆட்களை நடமாட-விட்டிருந்தான்.

பட்டமங்கலத்திலிருந்து பாகனேரி செல்லும் பாதையில் இருண்ட பாழ் மண்டபம் ஒன்று உண்டு! பாதையிலிருந்து சற்றுத் தள்ளி ஒதுக்குப் புறமாகவும் மரங்கள் அடர்ந்த பகுதியின் மத்தியிலும் அந்த மண்டபம் இருந்தது. தனது துரோகப் பணிக்கெனத் துணை நிற்கும் சில வீரர்களுடன் உறங்காப்புலி அந்த மண்டபத்தில்தான் அடிக்கடிக் கூடிப் பேசுவது வழக்கம். பாழடைந்த அந்த மண்டபத்திற்குள்ளே சிறுசிறு அறைகள் உண்டு. அந்த அறைகளில் வேல் கம்புகளும், ஈட்டிகளும், வாட்களும், கட்டாரிகளும் மறைத்து வைக்கப்பட்டு அவற்றை ஓரிரு வீரர்கள் காவல் காத்து வந்தனர்.

நாலு கோட்டையிலிருந்து வேகமாகத் திரும்பி வந்த உறங்காப்புலி, அந்த மண்டபத்தில் தங்கிக் கொண்டான். என்ன நடக்கிறது என்று தெரிந்து வரத் தனது ஆட்களைப் பட்டமங்கலம் அரண்மனைப் பக்கம் அனுப்பியிருந்தான். பட்டமங்கலம் படை வீரர்களு டனேயே அவர்களும் இணைந்து பணி புரிவதால் அவர்களை யாரும் ஐயப்படுவதற்குச் சிறிதும் இட மில்லாமலே போய்விட்டது.

மண்டபத்திலேயே காய்ச்சி இறக்கப்பட்டிருந்த கலக்கல் மதுவை மேலும் வெறியேற்றுவதற்கான பொருள்களைக் கலந்து அவனது வீரர்கள் கொடுக்க, அதனை அருந்தி நரம்புகளை முறுக்கேற்றிக் கொண்டி ருந்த உறங்காப்புலிக்கு அவன் எதிர்பாராத செய்தி யொன்று அவனது ஆட்கள் மூலம் கிடைத்தது. அந்தச் செய்திதான் வீரம்மாளின் முயற்சியால் ஆதப்பன் அன்றிரவே பாகனேரி புறப்படப் போகிறான் என்பது!

அதற்கான ஆயத்தங்கள் நடைபெற்றுக் கொண்டிருக்கின்றன என்ற தகவலும், கல்யாணியும் வைரமுத்தனும் நல்லுறவு கொண்டு விட்டனர் என்ற தகவலும் அவன் இருதயத்தைப் பழுக்கக் காய்ச்சிய சூட்டுக் கோலால் தாக்கின!

''ஆதப்பன்! என்னை அவமானப்படுத்திய பொட்டுப் பூச்சி!''

பற்களை நறநறவென்று கடித்துக் கொண்டான். மற்றொரு கிண்ணம் மது அவன் வயிற்றுக்குள் புகுந்தது.

''கல்யாணி! அவள் மரகதமாம்-மாணிக்கமாம்-வைரமாம் - வைடூரியமாம் - இரத்தினமாம் - கோமேதகமாம் - முத்தாம்-பவளமாம்-நான் அவளுக்குப் பொருத்தமில்லாத கூழாங்கல்லாம்! கூறியவர்கள் யார்? ஆணவம் பிடித்த வாளுக்குவேலி- கர்வம் தலைக்கேறிய கறுத்த ஆதப்பன்! அந்தக் கல்யாணி வாழ்வதைப் பார்க்கிறேன்...''

உரக்கச் சிரித்தான்! உலவிக் கொண்டே கலக்கல் மதுவைத் தொண்டைக்குள் ஓடவிட்டான்!...

''ஆதப்பன் இந்த வழியாகத் தான் செல்ல வேண்டும்; வளைத்துக் கொள்ளுங்கள்'' என ஆணையிட்டான்.

அந்த மண்டபத்திலும் அதற்கேற்ப அவனுக்கென ஒரு மஞ்சம் உண்டு! அவன் குடி வெறியில் ஆணைகள் பிறப்பித்துக் கொண்டிருக்கும்போதே அவன் அழைத்து வரச் சொல்லியிருந்த உடல் விற்பனை உல்லாசி ஒருத்தி அங்கே வந்து சேர்ந்தாள். ''வாடி மயிலே! நல்ல நேரத்தில்தான் வந்தாய்!'' என்று அவன் வாயில் நிரப்பியிருந்த மதுவை அவள் வாயில் தந்தான். அவளும் அதை உறிஞ்சிவிட்டு, மேற்கொண்ட தேவைக்கு ஒரு பெரிய கிண்ணத்தைத் தூக்கிக் கொண்டாள். மயில்தான் அவள் பெயர்.

அவன் விரும்பிய போதெல்லாம் மயில், குயில், மாடப்புறா, தேன்சிட்டு என்று ஏதாவது ஒன்று வரும்! இரவு இன்பம் தரும்! அதற்குரிய கட்டணமும் பெறும்! அன்று என்னவோ மயிலுக்கு அடித்தது யோகம்! அவள் முகத்தருகே தன் வாயைக் கொண்டு போனான் உறங்காப்புலி! முத்தமெனக் கருதி மற்றவர் விலகினர்! ''மடையர்களே! நில்லுங்கள்! இவள் காதைத் தான் கடிக்கப் போகிறேன்'' என்றான் அவன். அதாவது இரகசியம் சொல்லப் போகிறானாம்!

ஆதப்பன் பாகனேரிக்கான பாதையில் அந்தப் பாழ் மண்டபத்தைக் கடக்கும் வேளை! பட்டமங்கலத்திலிருந்து மண்டபம் இருக்குமிடம் சிறிதுதூரம்தான்! ஒரு மூலை, திரும்ப வேண்டி, குதிரையின் வேகத்தைக் கொஞ்சம் குறைத்தான். அந்த இடத்திலேதான் பாழ் மண்டபம் இருக்கிறது. அது ஆதப்பனுக்குத் தெரியாது. இருட்டிலும் அந்தச் சாலையின் நடுவில் ஒரு பெண் அலங்கோலமாகக் கிடந்ததை ஆதப்பன் பார்த்து விட்டான்.

குதிரையை இழுத்து நிறுத்திக் கீழே குதித்தான். அந்தப் பெண்ணின் அருகே சென்று, ''அம்மா, யாரம்மா நீ?'' என்று கேட்டான்.

அவள் பதில் கூறவில்லை. முனகிக் கொண்டிருந்தாள். அவளருகே அமர்ந்து அவளது தலையை அசைத்துப் பார்த்து, நாடி சரியாக இருக்கிறதா என்று கையைப் பிடித்துக் கவனித்தான். அவள் வாயிலிருந்து கிளம்பிய மது நாற்றம், மூக்கைத் துளைத்தது.

ஏதோ நினைத்தவனாய் எழுவதற்குள் அவன் தலையில் ஓங்கி ஒரு அடி விழுந்தது. அதைச் சமாளித்துத் தனது உடைவாளை எடுப்பதற்குள் பத்துப் பதினைந்து பேர் அவனைச் சூழ்ந்து கொண்டு கட்டிப் பிடித்து விட்டனர்.

மயங்கிக் கிடந்த மயில், துள்ளிக் குதித்து எழுந்து போதை பொங்கிடச் சிரித்தாள். ஆதப்பன் கைகளிலும் கால்களிலும் விலங்குகள் பூட்டப்பட்டன.

உறங்காப்புலியிடம் இழுத்துச் செல்லப்பட்டான். அவனுக்கு முன்னால் அந்த மயில் சென்று உறங்காப் புலியின் தொடையில் தலை வைத்துச் சாய்ந்து கொண்டாள். ஆதப்பனைக் கண்ட உறங்காப்புலி வெறித்தனமாகச் சிரித்தான். மது மயக்கம் கொண்ட மயிலின் தலையைத் தடவிக் கொடுத்தபடி, உறங்காப்புலி வீரர்களைப் பார்த்து "உம்! இவனை இரவு முழுதும் ஒரு அறையில் போட்டுப் பூட்டுங்கள்! காலையில் இவன் காணப்போகும் பழிவாங்கும் படலத்தை நினைத்து நினைத்து மயிலோடு இணைந்து இந்த மஞ்சத்தை இன்பத்தால் நனைக்கிறேன்" என்று தடுக்கி விழும் சொற்களால் உத்தரவு பிறப்பித்தான்.

அவன் சொன்னபடி மதுவோடு ஆடினான்! மயிலோடு கூடினான்! விடிவதற்கு முன்னர், வீரம்மாளைச் சந்தித்து, விடிந்தவுடன் நடக்கப்போகும் வேடிக்கையைப் பார் என்று அழைப்பு விடுத்துத் திரும்பினான்.

பட்டமங்கலம் அம்பலத்திற்குச் சொந்தமான எண்ணெய்ச் செக்கினைச் சுற்றி அந்த ஊர் மக்கள் பெரும் பகுதியினர் கூடியிருந்தனர். பாகனேரியில் நடந்ததற்குப் பழி வாங்கப் பட்டமங்கலம் வகுத்துள்ள திட்டத்தின் வெற்றியினைக் கண்டிட ஊரார் ஆவலுடன் இருந்தனர்.

"முடிந்து போன விவகாரம்-இருநாட்டுக்கும் சம்பந்தம்கூட ஆகிவிட்டது! இனிமேல் எதற்காகப் புது வம்பை விலைக்கு வாங்குகிறார்கள்?" என்று ஊராரில் ஒரு பகுதியினர் பேசினார்கள்.

"ஆதப்பனை நேற்றிரவே கைது செய்து பட்ட மங்கலம் அரண்மனையில், கல்யாணி நாச்சியாருக்குத்

தெரியாமல் பூட்டி வைத்திருக்கிறார்களாமே! அந்த நாச்சியாருக்குத் தெரிந்தால் என்ன ஆகுமோ?'' பெண்கள் சிலர், தங்களுக்குக் கிடைத்த வதந்தியை வைத்துக் கவலையை வெளியிட்டுக் கொண்டிருந்தனர்.

''என்னதான் இரு நாட்டுக்கும் உறவு ஏற்பட்டாலும், பெரிய அம்பலக்காரர் வல்லத்தரையருக்கும், அவரது மைத்துனர் உறங்காப்புலிக்கும் ஏற்பட்ட அவமானத்தை வேறு எப்படித்தான் கழுவிக் கொள்ள முடியும்? இதுதான் சரியான பதிலடி!'' என்று அந்தக் கூட்டத்தில் ஒரு பிரிவினர் கருத்து அறிவித்துக் கொண்டிருந்தனர்.

''இரவோடு இரவாக யாருக்கும் தெரியாமல் தப்பியோடிய ஆதப்பனைப் பின்தொடர்ந்து சென்று அவனுடன் வாட்போர் புரிந்து கைது செய்து வந்தது உறங்காப்புலிதானாம்! உறங்காப்புலியைப் போன்ற சுத்தவீரனைச் சுலபமாகப் பார்க்க முடியாது! அவர் இல்லாவிட்டால் பட்டமங்கலத்திற்குப் பெருமையே இல்லை! பெயருக்குத்தான் வைரமுத்தன் அம்பலக்காரரே தவிர உறங்காப்புலிதான் பட்டமங்கல நாட்டுக்கே உயிர்! அசைக்க முடியாத இரும்புத் தூண்!''

உறங்காப்புலியின் பாழ் மண்டபத்து ஆட்கள், ஊர்ப் பொது மக்களைப் போலத் தங்களைப் பாவித்துக் கொண்டு இப்படிப் பிரச்சாரம் செய்தார்கள் அந்தக் கூட்டத்தில்!

அந்தச் சமயத்தில் உறங்காப்புலியும் அவனுடன் சில ஆயுதம் தாங்கிய வீரர்களும் குதிரைகளில் அங்கு வந்து இறங்கவே-அவனது ஆட்கள் ''உறங்காப்புலியார் வாழ்க!'' என முழக்கமிட்டனர்.

''எங்கே, இன்னும் வரவில்லையா? சீக்கிரம் அழைத்து வாருங்கள் அந்தச் சிறு நரிக்குட்டியை!''

என்று உறங்காப்புலி உறுமிக் கொண்டே ஆணையிட்டான்.

இருகரங்களிலும் விலங்கு! கால்களிலும் விலங்கு! இடுப்பிலே விலங்குகள் மாட்டப்பட்டு அவற்றைப் பத்து வீரர்கள் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு தொடர்ந்து நடந்து வந்தனர்! பீடுநடை! பெருமிதநோக்கு! சிறிதும் தலை தாழாத சிங்கமாக அந்த இடத்திற்குக் கறுத்த ஆதப்பன் வந்து சேர்ந்தான்.

உறங்காப்புலி அவனைப் பார்த்துக் கெக்கலி கொட்டினான். கறுத்த ஆதப்பன் நிலைகண்டு களித்தவர்களும், முகம் சுளித்தவர்களும், உறங்காப்புலிக்குப் பயந்து ''ஒகோ'' என்று குதித்தவர்களும் அந்தக் கூட்டத்தில் உண்டு.

''உம்! நடக்கட்டும் காரியம்! ஈடேறட்டும் நமது இலட்சியம்!''

என்று உரக்கக் கூறிய உறங்காப்புலி, ஆதப்பனை நெருங்கி நின்று கொண்டு, உடைவாளை உருவியவாறு கர்ச்சித்தான்.

''ஆதப்பா! பட்டமங்கலம் பட்டுப்போன மங்கலமல்ல! வீரத்திற்குரிய பட்டம் பெற்ற மங்கலம்! அதனால்தான் அன்று பாகனேரியில் நீ நடத்திக் காட்டிய பகை மண்டிய நிகழ்ச்சிக்கு இன்று பதில் அளிக்கப் படுகிறது! என்னைச் செக்கு மாடாக ஆக்கிச் சிரித்தாய் அல்லவா? அதைப்போல் நீ இப்போது!''

என்று கூறிய உறங்காப்புலி, ஆதப்பனின் விலங்குகளை அகற்றச் சொல்லி, அவனைச் செக்கு மரத்தின் நுகத்தடியில் இன்னொரு மாட்டின் பக்கத்தில் பூட்டுமாறு பணித்தான்.

ஆதப்பனின் விலங்குகள் அகற்றப்பட்டன. செக்குமரத்தின் நுகத்தடியில் ஒரு மாடு பூட்டப்பட்டது. அடுத்த பக்கத்தில் பூட்டுவதற்காகக் கூரிய வாள், வேல் தாங்கிய வீரர்கள் ஆதப்பனை இழுத்து வந்தார்கள். ஆதப்பன் ஆகாயத்தை வெறித்துப் பார்த்தான். முதல் நாளிரவு வீரம்மாளுடன் நடந்த உரையாடலின் சில பகுதிகள் அவன் கண்முன்னே மேகத்திரையில் எழுதப் பட்டிருந்தன. அதை அவன் நெஞ்சம் உரக்கப் படித்தது.

''ஆதப்பா! உன்னுடைய வீரத்தை நான் குறைத்து எடை போடவில்லை. ஆனால் கல்யாணியின் வாழ்க்கையை மறந்து விடாதே! இங்கே உனக்கு ஏதாவது ஒரு அவமானம் இழைக்கப்பட்டு விடுமேயானால், அதைக் கல்யாணியினால் தாங்கிக் கொள்ள முடியுமா?''

வீரம்மாள் அவனிடம் கூறிய வாசகம் இது!...அது மட்டுமா? இப்போது அவனைச் செக்கு மாட்டுடன் இணைத்துக் கட்டிட ஆணை பிறப்பிக்கிறவன் உறங்காப்புலி! அவனை ஊதிவிடுவது ஆதப்பனுக்குச் சாதாரண காரியம்! ஆனால் நேற்றிரவுகூட வீரம்மாள் உருக்கமாகச் சொன்னாளே; அந்த வார்த்தைகள் அவன் மனத்தை விட்டு மறையவில்லையே!

''இருந்தாலும் ஆதப்பா-கால ஓட்டத்தில் அந்த நிகழ்ச்சிகளை மறந்து பட்டமங்கலமும் பாகனேரியும் பகையற்று வாழ வேண்டுமென்றுதான், நான் மனதார விரும்புகிறேன். அன்று சுரண்டைக் காட்டில் உன் உள்ளத்தில் சுடர்விட்ட சுதந்திரக் கனல் கண்டு நான் பூரித்துப் போனவள். என் கண்ணீருக்கு மதிப்பளித்து என் கணவரது துரோகத்தை வெளிப்படுத்தாமல் என் மானத்தையும் மாங்கல்யத்தையும் காப்பாற்றிய உன் செயலுக்கு, நான் என்றென்றும் நன்றி காட்ட வேண்டியவள்.''

வீரம்மாளின் உணர்ச்சி மிக்க அந்த மொழிகள்; விலங்குகள் அகற்றப்பட்ட பிறகும்கூட, அசைய முடியாமல் பிணைக்கப்பட்ட விலங்குகளாக ஆதப்பனுக்குத் தோன்றின.

வானத்தையே வெறிக்கப் பார்த்துக் கொண்டு வந்த ஆதப்பன், செக்கு மரத்தின் நுகத்தடியண்டை நிறுத்தப்பட்டான். அவன் கழுத்தில் நுகத்தடி வைக்கப்பட்டது. உறங்காப்புலி, ஒரு சாட்டையை எடுத்துக் கொண்டு, செக்கு மரத்தில் உட்கார்ந்து கொண்டு மீசையை முறுக்கினான்.

''பட்டமங்கலத்துச் செக்குமாடும், பாகனேரியிலிருந்து வந்து என்னிடம் சிக்கிய மாடும் இப்போது செக்கிழுக்கப் போகிறது பாருங்கள்!''

என்று உரக்கக் கத்திய உறங்காப்புலி, ''ஹை!'' என்று கூறியபடி சாட்டையால் ஆதப்பனின் முதுகில் ஒரு அடி கொடுத்தான்.

வானத்து முகில்களில் தோன்றிய எழுத்துக்கள் மத்தாப்புச் சுருள்களைப் போலக் கீழே உதிர்ந்தன! வானத்தையே நோக்கிக் கொண்டிருந்த ஆதப்பன் பூமியை நோக்கி ஒரு உதை உதைத்தான்! அவன் உதைத்த இடம் ஒரு அடி கீழே குழியாகப் போனது! குருதியோட்டத்தில் கொப்பளித்த மான உணர்வுக்கு முன்னால், கல்யாணியின் நினைவோ-வீரம்மாளின் அறிவுரையோ எதுவுமே நிற்க முடியாமல் வெடித்துச் சிதறின; முழுப் பலத்தையும் கைகளில் தேக்கி அந்தச் செக்குமரத்தை உயரத் தூக்கிக் கரகரவென்று சுற்றினான். அந்த மரத்தின் முனை பட்டு உறங்காப்புலி கீழே விழுந்தான். விழுந்தவன், தனது வீரர்களிடம் ''விடாதீர்கள் அவனை! கைது செய்யுங்கள்!'' என்று சப்தம் போட்டான். செக்கு மரத்திலிருந்து நுகத்தடியைப் பிய்த்து எடுத்துக் கொண்டு,

அதையே ஆயுதமாகப் பயன்படுத்தித் தன்னைச் சூழ்ந்து விட்ட வாள்வீரர்களை ஆதப்பன் எதிர்த்திட்டான்.

''நிறுத்துங்கள்! நிறுத்துங்கள்! யாரும் ஆதப்பனை நெருங்காதீர்கள்!''

என்று அதிகாரக் குரலுடன் குதிரையிலிருந்து வைரமுத்தன் இறங்கியதைக் கண்ட வாள் வீரர்கள் ஒதுங்கி நின்று அவனுக்கு வணக்கம் தெரிவித்தனர்.

''உறங்காப்புலியாரே! என்ன காரியம் செய்தீர்கள்? யாரைக் கேட்டுச் செய்தீர்கள்?''

வைரமுத்தன் பதைத்தான்.

''யாரைக் கேட்க வேண்டும்? கல்யாணியின் காலடியில் சொர்க்கத்தைக் காணும் வைரமுத்த அம்பலக்காரரைக் கேட்க வேண்டுமா? கணவனுக்கு என்ன அவமானம் வந்தால் என்ன என்று கவலையற்றிருக்கும் கற்புக்கரசி வீரம்மாள் தேவியாரைக் கேட்க வேண்டுமா? இவர்கள் யாரையும் கேட்கத் தேவையில்லையென்றுதான் மானமுள்ள என் மனச்சாட்சியைக் கேட்டேன். அதன் ஆணையை அமல்படுத்துகிறேன்.''

இப்படி ஆணவமாகப் பதில் அளித்தான் உறங்காப்புலி!

சிறிது நேரம் மௌனமாக நின்ற வைரமுத்தன், ஆதப்பனின் அருகே சென்று ''எனக்குத் தெரியாமல் நடந்து விட்டது!'' என்று சமாதானம் கூற முயன்றான்.

''போதும் உங்கள் நாடகம்! பிரமாதமாக நடித்து என்னை ஏமாற்றாதீர்கள்! எல்லோரும் சேர்ந்து செய்கிற சதிதான் இது என்பது எனக்குத் தெரியும்! பட்டமங்கலத்துக் காளையை விட்டுப் பாகனேரி மக்களைக் கொன்று குவித்தீர்கள். அந்தக் காளையை அடக்கி, அந்தக் காளையை ஏவிவிட்ட உறங்காப்புலிக்கும் பாடம்

கற்பித்தேன்!...அதன் தொடர் விளைவுகள், துன்பம் நிறைந்தவை; எனக்குத் தெரியும்! நீங்கள் தூய்மையான வீரர்களாக இருந்தால் என் வாளோடு மோதுங்கள்- அல்லது என் தோளோடு மோதுங்கள்! அல்லது முன் போல வேறொரு காளையைக் கொண்டு வாருங்கள்- அடக்கிக் காட்டுகிறேன்; அல்லது உங்களுக்கு அடிமை யாகிறேன்!இருக்கிறதா அப்படி ஒரு வீரம்?''

ஆதப்பனின் ஆவேசப் பேச்சை நிதானமாகக் கேட்டுக் கொண்டிருந்த வைரமுத்தன், புன்னகை புரிந்தவாறு ஆதப்பனின் தோளில் கைவைத்து-''ஆத்திரம் உண்மைகளை மறைத்துவிடும்'' என்றான். தன் தோள்மீது பட்ட வைரமுத்தனின் கையைத் தள்ளிவிட்டு,

''எங்காவது கிடைக்கிற இடத்தில் வீரத்தை விலை கொடுத்து வாங்கிக் கொள்ளுங்கள்! அந்தக் கொள்முதல் முடிந்த பிறகு சொல்லியனுப்புங்கள்! உங்களைச் சந்திக்கிறேன், சந்திக்க வேண்டிய இடத்தில்!''

எனக் கூறியபடி, அங்கே நின்று கொண்டிருந்த குதிரைகளில் ஒன்றில் ஏறி, அதனை ஓங்கி உதைத்து அந்த இடத்தை விட்டுக் காற்றைக் கிழித்துக் கொண்டு சென்று விட்டான் ஆதப்பன். வைரமுத்தனின் முகம் வெளுத்துப் போய் விட்டது.

''உன்னால் எல்லாம் கெட்டது!'' என்று அலுத்துக் கொண்டே உறங்காப்புலி அந்த இடத்தைவிட்டு நகர்ந்தான். ஆதப்பன் நம்பாவிட்டாலும், கல்யாணி யாவது தனது பேச்சை நிச்சயம் நம்புவாள் என்ற எதிர்பார்ப்புடன் வைரமுத்தன் அரண்மனைக்குத் திரும்பினான்.





# 38

''கல்யாணிக்கு ஆறுதலாக இருக்குமென்பதற்காக ஆதப்பனை அழைத்துச் செல்கிறேன் என்று கூறி இப்படியொரு கபட நாடகமாடி விட்டானே வைரமுத்தன்'' என்ற வாளுக்குவேலி பாகனேரி மாளிகையின் நெடிதுயர்ந்த பெரிய தூணில் கையால் அறைந்தான். அந்த வலுவான அடியைத் தூணுக்குப் பதிலாக ஒரு மனிதன் வாங்கியிருந்தால் அப்போதே மூச்சற்று விழுந்து விட்டிருப்பான். மூங்கில் காடு பற்றி எரிவது போல மூண்டெழுந்த கோபத்தால் உறுமிக் கொண்டிருக்கும் அவனைச் சற்று நேரம் ஆத்திரம் தீரப் பேச விடுவதுதான் நல்லது என்று கருதியோ என்னவோ வெள்ளை அய்யரும் மேகநாதனும் குறுக்கே எதுவும் பேசாமல் மௌனமாக இருந்தனர்.

''அக்னியூவினால் கைது செய்யப்பட்ட தம்பி ஆதப்பனை வைரமுத்தன் விடுவித்ததே இப்படி வஞ்சம் தீர்க்கத்தான் என்பது இப்போதுதான் புரிகிறது! பரம்பரைப் பகை கல்யாணியின் திருமணத்திற்குப் பிறகு தலைகாட்டாது என நம்பியிருந்தேன். ஆனால் என்னையும் பாகனேரியையும் தலை குனிய வைக்கும் காரியத்தை நடத்தி விட்டார்கள் பட்டமங்கலத்தில்! இதுவரையில் நான் கடைப்பிடித்த நிதானம்-பொறுமை அனைத்துக்கும் விடை கொடுத்தனுப்பும் நேரம்

வந்துவிட்டது. மலை குலைந்தாலும் நிலை குலையா மாவீரன் ஆதப்பனைச் செக்குமாடாகப் பூட்டி ஓட்டிய அந்த மதோன்மத்தர்களுக்குப் பாடம் கற்பிப்பதே எனக்கு இப்போதிருக்கிற முதல் வேலை! முக்கியமான வேலை! மேகநாதா! நான் உடனடியாகப் பட்டமங்கலம் செல்ல வேண்டும். என்னுடன் வருவதற்கு நமது படைவீரர்களின் அணியொன்று விரைவில் தயாராகட்டும்!''

ஆணையை நிறைவேற்ற மேகநாதன் அங்கிருந்து சென்றான். அதற்குள் வெள்ளை அய்யர் குறுக்கிட வேண்டிய நேரம் வந்துவிட்டது. சிறு கனைப்புக் கனைத்துக் கொண்டே வாளுக்குவேலியிடம் பேசினார்.

''எல்லாம் சரிதான்! ஏதோ அன்று பாகனேரியில் உறங்காப்புலிக்கு நடந்தது! இப்போது பதிலுக்குப் பதில் ஆதப்பனுக்குப் பட்டமங்கலத்தில் செய்து விட்டார்கள்! இதை மேலும் வளர்த்துக் கொண்டே போவதால்... நிலைமை விபரீதமாகுமே தவிர...''

அய்யர் முடிப்பதற்குள் வாளுக்கு வேலி, ''என்ன நடக்கும் விபரீதம்? வல்லத்தரையனின் தலை முடியை அறுத்ததுபோல என் தலைமுடியை அறுக்க முனைவார்கள்! வெள்ளை அய்யர் அவர்களே! நான் பிணமாக விழுந்தபிறகு கூட அந்த அவமானத்தை அவர்களால் எனக்கு ஏற்படுத்த முடியாது! அப்படி நடக்குமே, இப்படி நடக்குமே என்றெல்லாம் யோசித்துக் கொண்டு ஓங்கிய வாளை உறையில் போடுவது வீரனுக்கு அழகல்ல, ஆனது ஆகட்டும். பட்டமங்கலத்திற்குச் செல்கிறேன். தம்பி ஆதப்பனுக்கு இழைக்கப்பட்டுள்ள அநீதிக்கு முடிவு கண்டு திரும்புகிறேன்'' என்று முரசறைந்தான்.

''ஆனது ஆகட்டுமென்கிற வீர உணர்வை நான் பாராட்டுகிறேன்! ஆனால் பட்டமங்கலத்தோடு பாகனேரி

மோதுவதால் பட்டுப் போகப் போவது கல்யாணி நாச்சியாரின் வாழ்க்கைதான்! கல்யாணி வாழ்வு மட்டுமல்ல; கள்ளர்நாடுகளின் ஒற்றுமையே குலைந்து விடும். வலிவே அழிந்து விடும். பிறகு கம்பெனிக்கார னுக்கு வேலியில்லாத தோட்டமாகி விடும். கர்னல் அக்னியூ உங்களைப் பிரித்தாளும் சூழ்ச்சியில் வெற்றி பெற்று விடுவான். உயிரைப் பணயம் வைத்துப் போராடிக் கொண்டிருக்கும் மருது சகோதரர்களுக்கு நம்மை அறியாமல் நாம் ஏற்படுத்தும் மறைமுகமான பலவீனமாகி விடும் நமது செயல்! அதனால் நிதானமாகச் சிந்திப்பது நல்லது!''

''வெள்ளை அய்யர் அவர்களே! என் தம்பியைச் செக்கு மாடாக்கிப் பாகனேரி வீரத்தைப் பரிக சித்திருக்கிறார்கள்; இதற்குப் பிறகும் என்ன சிந்தனை? எதற்காகச் சிந்தனை?'' வாளுக்கு வேலி வீராவேசத்துடன் குமுறிக் கொண்டிருக்கும்போது, ''எந்தச் சிந்தனையும் தேவையில்லை! எல்லாம் நன்மையாகவே முடிந்து விட்டது!'' என்று கூறிக்கொண்டே திரும்பி வந்தான் மேகநாதன்!

''மேகநாதா! வீரர்களை அணிவகுத்திட உன்னை அனுப்பினால், நீ என்ன திசை திருப்புகிறாய்?''

''உண்மையைத்தான் சொல்கிறேன். நமது ஆதப்பனின் ஆற்றலின் முன்னால் பட்டமங்கலத்தாரின் பழி வாங்கும் படலம் தூள் தூளாகிவிட்டிருக்கிறது! எந்தச் செக்கு மரத்தில் ஆதப்பனைப் பூட்டி ஓட்ட நினைத்தார்களோ அந்த மரத்தைத் தனது தோள் பலத்தால் உடைத்தெறிந்துவிட்டு, அவமானப்படுத்த முனைந்தவர் களையே அவமானச் சகதியில் ஆழமாகப் புதைத்து விட்டு...பாகனேரியின் பெருமையைப் பறைசாற்றிக் கொண்டு...அதோ வந்து கொண்டிருப்பது உங்கள் தம்பி ஆதப்பனேதான்!''

வாளுக்கு வேலி மேகநாதன் காட்டிய திசையில் திரும்பிப் பார்த்தான். ஆதப்பன், குதிரையிலிருந்து வேகமாக இறங்கி, அண்ணனை நோக்கி விரைந்து வரும் காட்சி கண்டு வெள்ளை அய்யரும் மேகநாதனும் அந்தச் சகோதரப் பாசத்தின் சிறப்பினை வியந்தனர். ''தம்பி!'' என்றான்! ''அண்ணா'' என்றான்! தழுவிக்கொண்டனர்!

''தம்பி! பாகனேரியின் மானம்...?''

''பட்டமங்கலத்தில் பறி போயிருந்தால் இங்கே உங்கள் தம்பியின் சவம்தான் வந்திருக்கும் அண்ணா!''

''மானத்தை உறிஞ்சிட உன்னோடு பிணைக்கப்பட்ட மரத்தையே நொறுக்கி எறிந்துவிட்டாயாமே! எங்கே அந்த வீரமிக்க கரங்கள்! இப்படிக் கொண்டா தம்பி; கட்டி முத்தமொன்றும் அளிக்கிறேன்-கணையாழி யொன்றும் அணிவிக்கிறேன்!''

ஆதப்பனின் கரங்களை எடுத்து வாளுக்கு வேலி முத்தம் கொடுத்தான். தனது விரலில் இருந்த கணையாழியொன்றையும் கழற்றி ஆதப்பனின் விரல்களில் அணிவித்தான். ஆதப்பன் வாளுக்கு வேலியின் கால்களில் விழுந்து வணங்கினான். அவனது திரண்ட புஜங்களை அழுத்திப் பிடிப்பதிலேயே தனது பாசம் முழுவதையும் வெளிப்படுத்திய வாளுக்குவேலி, அவனைத் தூக்கி நிறுத்தி அன்புடன் பார்த்துக் கொண்டே, ''தம்பியுடையான் படைக்கஞ்சான்!'' என்று கம்பீரமான தொனியில் சொன்னான்.

''நீயிருக்கும்போது, உன் நெஞ்சில் நானிருக்கும் போது, நமது மான உணர்வுக்கு மாசு கற்பிக்க எந்த மமதையாளனாலும் முடியாதடா தம்பி!'' என்று உணர்ச்சி பீறிட்டெழ உரைத்தான்.

''எனக்குக் கல்யாணியைப் பற்றித்தான் கவலையாக இருக்கிறதண்ணா.''

கறுத்த ஆதப்பனின் கண்களில் துளிர்த்திட்ட நீர்த் துளிகளைத் தன் விரல் கொண்டு துடைத்தவாறே வாளுக்கு வேலி, ''கவலைப்படத் தேவையில்லை! நமது இருநாடுகளுக்குமிடையே உள்ள பகை உணர்ச்சிக்கும் அப்பாற்பட்டு மலர்ந்தது கல்யாணி வைரமுத்தன் காதல்! அதனால்தான் விரோதத்தைக் கூடப் பாராட்டாமல் வைரமுத்தன் விவாகத்திற்கு ஒப்புக் கொண்டான்!'' என்று நம்பிக்கையோடு கூறினான்.

வீரம்மாள் வாயிலாகக் கல்யாணியின் நிலைமைகளை அறிந்திருந்தாலுங்கூட, அவற்றை அண்ணனிடம் சொல்லி அவனது நம்பிக்கையை நாசமாக்க வேண்டாமென்று ஆதப்பன் தீர்மானித்துக் கொண்டான்.

கல்யாணியின் காதில் விழும்படியாக உறங்காப்புலி ஏற்பாடு செய்திருந்த பிரச்சாரம், பட்டமங்கலம் அரண் மனைக்குள் பரவலாக நடைபெற்றது.

''வைரமுத்தனின் திட்டப்படிதான் எல்லாம் நடந்தது. வீரம்மாளும் அதற்குத் துணையாக இருந்து ஆதப்பனை ஊருக்கு அனுப்புவது போலப் பாவனை செய்திருக்கிறாள். முன்கூட்டியே பேசி முடித்தவாறு ஆதப்பன் உறங்காப்புலியினால் வழியில் மடக்கப்பட்டு விட்டான். வைரமுத்தன், வீரம்மாள், உறங்காப்புலி மூவரும் இணைந்து செய்த சதிக்கு மாபெரும் வெற்றி கிடைத்து விட்டது. செக்கு மாட்டுடன் சேர்ந்து செக்கு இழுத்தது மட்டுமல்ல; உறங்காப்புலியின் கையில் சாட்டையடியும் வாங்கிய ஆதப்பன் - வைரமுத்தன் காலில் விழுந்து மன்னிப்புக் கேட்டதால்தான் உயிர் தப்பி ஓட முடிந்தது! பழி வாங்கும் படலம் ஒரு பாகம்

முற்றிற்று! அடுத்த பாகம், வாளுக்கு வேலியின் தலைமுடியை அறுத்தெறிவதுதான்! அதுவும் விரைவில் நடக்க வைரமுத்தனும், வீரம்மாளும் உறங்காப்புலியுடன் கலந்துரையாடி, திட்டம் தீட்டிக் கொண்டிருக்கிறார்கள்.''

இப்படி அரண்மனைக்குள்ளிருந்த பலரும் பேசினர்! வேலைக்காரர்கள், சமையல்காரர்கள், காவல் காத்திடும் வீரர்கள்-எல்லோருமே உறங்காப்புலியினால் கட்டி விடப்பட்ட கதையைப் பரப்பிக் கொண்டிருந்தார்கள்.

வீரம்மாள், கல்யாணி முகத்தில் எப்படி விழிப்பது என்று தெரியாமல், வெட்கத்தாலும் வேதனையாலும் தாக்குண்டு தனது அறைக்குள்ளேயே சுருண்டு கிடந்தாள்.

வைரமுத்தன், தன்னையொரு காமக் கருவியாக்கிக் கொண்டு, தனக்குத் தெரியாமலேயே, வீரம்மாளுடனும் உறங்காப்புலியுடனும் சூழ்ச்சி செய்து அண்ணன் ஆதப்பனை அவமானப்படுத்தி அனுப்பி விட்டானே யென்று நினைத்து நினைத்து ஏங்கி நெஞ்சத்தை வெந்த புண்ணாக்கிக் கொண்டிருந்தாள் கல்யாணி! அவளுக்கு ஏற்பட்ட அந்த நிலை, உறங்காப்புலிக்குக் கிடைத்த வெற்றிதானே? அந்தக் குறிக்கோளுடன்தானே அரண்மனைக்குள் அந்த விஷமப் பிரச்சாரத்தை அவன் முடுக்கி விட்டிருந்தான்.

ஆவி குடிபோன வடிவு கொண்டவளாய்க் கல்யாணி, அவளது கட்டிலறையில் தரையில் வீழ்ந்து கிடந்தாள். அவளது சஞ்சலத்தைப் போக்க வேண்டும் என்ற எண்ணத்துடன் அறைக்குள் நுழைந்த வைரமுத்தன், அவள் கீழே படுத்திருப்பது கண்டு திகைத்தான். அவள் பக்கத்தில் தரையில் உட்கார்ந்து, அவளது தலையைக் கோதிவிட்டுக் கொண்டே ''கல்யாணி!'' என்று அன்பு ததும்பிட அழைத்தான்!

''தொடாதீர்கள் என்னை!''

வீணைபோல் அதிர்ந்திடும் கல்யாணியின் குரல், வில் ஒன்று ஒடிக்கப்பட்டதாகச் சொல்வார்களே இராமாயணத்தில்; அப்போது கிளம்பியதாகக் கூறப்படும் ஒலிபோல இடித்தது!

''தந்தம் இழைத்த கட்டில் இருக்கும்போது என் தங்கம் தரையில் படுப்பானேன்?''

வைரமுத்தன், அவளது உணர்ச்சியைப் புரிந்து கொண்டு, மேலும் மென்மையாகப் பேசினான்.

''தரையை விட்டுத் தந்தக் கட்டிலுக்குப் போனால் போன மானம் மீண்டும் வந்துவிடுமா?''

கல்யாணியின் கேள்வி, தீப்பொறியாய்க் கிளம்பியது.

''இதில் மானப் பிரச்சினை எதுவுமே இல்லை கல்யாணி! அவமானத்தின் நிழல்கூடத் தன்மீது படாமல் உனது அண்ணன் பாகனேரிக்குச் சென்று விட்டது உனக்குத் தெரியாதா?''

''எல்லாம் தெரியும்! என் அண்ணனை இப்படி அலங்கோலப்படுத்தவே ஆங்கிலேயர் முகாமிலிருந்து விடுவித்து வந்தீர்கள் என்பதும் தெரியும்!''

''நீ என்ன சொல்கிறாய் கல்யாணி?''

''என் அண்ணனைச் சதி செய்து நீங்கள் கொலை கூடச் செய்திருக்கலாம்! அதை விடுத்து இந்தக் கேவலமான செயலில் ஈடுபட்டிருக்க வேண்டாம்!''

''என் மைத்துனரை மாடாக்கி ஓட்டினீர்கள்! என் அண்ணனை அவமான உருவமாக்கி அவர் சாவுக்குக் காரணமானீர்கள்! அத்தனையும் மறந்துவிட்டுத்தான் உன்னைக் கல்யாணம் செய்து கொண்டேன்!''

''இல்லை! பொய்! அத்தனையும் மறந்துவிட்டல்ல! மனதிலேயே வன்மம் வைத்துக் கொண்டு! காதலின் உயிர்ப் பொருளை உணர்ந்து என்னை மணந்து கொண்டீர்கள் என்ற நம்புவதற்கு நான் ஒன்றும் பேதை அல்ல! என்னையும் என் குடும்பத்தையும் பழிவாங்கு வதற்காகவே மணமகன் வேடம் தாங்கினீர்கள்!''

''ஆமாம்! நீ சொல்வதில் முதற் பகுதி உண்மை! ஆனால், என் அக்காள் வீரம்மாள் தேவி என்னைத் திருத்தி விட்டதை நீ அறிய மாட்டாய்!''

''உங்கள் அக்காள் மூலம் நடிக்கப்பட்ட நாடகத்தில் தான் நான் ஏமாந்தேன்! என் அண்ணனை இங்கு அழைத்து வருவதற்கு நீங்கள் எல்லாம் சேர்ந்து பின்னிய சூது வலையை நான் புரிந்து கொண்டு விட்டேன்; தயவுசெய்து இங்கிருந்து போய் விடுங்கள்.''

''கல்யாணி! நீ என் மனைவி!''

''அந்த ஒரு பெயருடன் இந்த வீட்டில் வாழ்கிறேன்! அதுவும் நீங்கள் அனுமதித்தால்! அதைத் தவிர உங்களுக்கும் எனக்கும் எந்த உறவும் இல்லை!''

''புனிதம் நிறைந்த தாலியைக் கட்டிக் கொண்டு ஒரு புருஷனிடம் ஒரு மனைவி பேசுகிற பேச்சா இது?''

''கட்டும் பொழுதே உங்கள் மனதில் களங்கத்தோடு தானே கட்டினீர்கள்! உங்கள் நெஞ்சில் கத்தி! என் கழுத்தில் தாலி!''

''நான் மாறி விட்டேன் என்பதை நீ ஏற்றுக் கொள்ளவே மாட்டாயா?''

''எப்படி மாற முடியும்? பலிபீடத்தில் நிறுத்தப் பட்ட ஆட்டின் கழுத்தைப் பார்த்துக் கொடுவாளை ஓங்கியவன், அந்த ஆட்டைக் கொன்று குருதியைக்

குடித்து விட்டுத்தானே மறுவேலை பார்ப்பான்! மாறுவதாவது-மண்ணாங்கட்டியாவது! உங்களுக்கும் எங்களுக்குமிடையே ஏற்பட்டுள்ள உறவையும் மீறி நிற்பது மானப்பிரச்சனை-அதில் பழிவாங்கும் செயல் முழுவதும் பூர்த்தி அடையாமல் உங்களால் மாறவே முடியாது!''

''கல்யாணி, பிறந்த வீட்டைவிடப் புகுந்த வீட்டை மதிப்பதும் அன்பு செலுத்துவதும்தான் கற்புடைய பெண்களுக்கு அழகு!''

''பிறந்த வீட்டிலிருந்து சீர்வரிசைகளைக் கொண்டு வரலாம்! கட்டிய கணவன் கேட்கிறானே என்பதற்காகப் பெட்டிப் பணத்தையும் வாங்கி வரலாம்! அதற்காக, பிறந்த வீட்டாரின் மானத்தையும் பறித்துக் கொண்டு வந்து புகுந்த வீட்டில் போட்டு மிதித்துத் துவைத்திடு என்றால்-அது நடக்கிற காரியமா? அனுமதிக்கிற காரியமா?''

''கல்யாணி! நீ மிகவும் கோபமாக இருக்கிறாய்! கொஞ்சம் என்னுடன் உட்கார்ந்து நான் சொல்வதை அமைதியாகக் கேள்!'' என்று கூறிக்கொண்டே அவளைத் தொட்டுத் தூக்கினான் வைரமுத்தன்!

''தொடாதீர்கள் என்னை! இனியொரு முறை தொட்டால் நான் உயிரோடு இருக்க மாட்டேன்! இதோ தயாராக வைத்துக் கொண்டிருக்கிறேன்.''

கல்யாணி, மறைத்து வைத்திருந்த கட்டாரியைத் தூக்கி, அவனிடம் காட்டிக்கொண்டே, தன் நெஞ்சுக்கு நேராக வைத்துக் கொண்டாள். வைரமுத்தன் நிதான மிழந்தான்.

''சத்தியமா உன்னைத் தொடக் கூடாதா?''

''ஆமாம்! தொடக் கூடாது!''

''கல்யாணீ!...கடவுள் மீது ஆணையாகச் சொல், உன்னைத் தொடவே கூடாதா!''

''ஆமாம்! சக்தியுள்ள தெய்வங்கள் அத்தனையின் மீதும் சத்தியமாக...நீங்கள் என்னைத் தொடவே கூடாது!''

வைரமுத்தன் எதுவும் பேசவில்லை! சிவந்த முகத்துடன் அறையை விட்டு வெளியேறி மாளிகையின் நடுக்கூடத்திற்கு வந்தான். அங்கே, வளைந்து குழைந்து நட்டுவாங்கம் நாதமுனி நின்று கொண்டிருந்தான். வைரமுத்தனைக் கண்டதும் வணங்கித் தொழுதான்.

''என்ன விசேஷம்?''

''வடிவாம்பாள் அனுப்புச்சுங்க... நீங்க வர்றதா சொல்லியிருந்தீங்களாம்...''

''ஓகோ! அவள்தான் அன்றைக்கு மிகவும் கிராக்கி செய்துகொண்டு ஓடிவிட்டாளே!''

''அப்படியில்லிங்க! உங்களைப் போலப் பெரியவுங்க வர்றதுன்னா-முதல்ல சீர்வரிசை அனுப்புறது சம்பிரதாயம்! வடிவுக்கு உங்களோட வாழணும்னு கொள்ளை ஆசைங்க! உங்களையே நினைச்சு உருகுதுங்க!''

''சரி! முதலில் சீர்வரிசை வரும்!....பின்னாலேயே நானும் வருவேன்!...இந்தா, இதை வடிவிடம் கொடு!''

தன் கழுத்தில் இருந்த ஒரு தங்கச் சங்கிலியைக் கழற்றி நாதமுனியிடம் வைரமுத்தன் கொடுத்தான்.





# 39

''தம்பி, வைரம்! கல்யாணியுடன் நானும் பேசிப் பார்த்து விட்டேன். அவள் என்னுடன் பேசுவதையே விரும்பவில்லை: என்னை ஒரு சூன்யக்காரி போலவே நினைக்கிறாள். அவள் மனத்தைக் குமுற வைப்பதற்காகவே நீ வேண்டுமென்றே அந்த வடிவாம்பாளிடம் தவறுதலாக நடந்து கொள்வதுபோல் நடித்தாய் என்று நான் சொன்னதை நம்பியிருந்தாள்! ஆனால் நீ இப்போது வடிவாம்பாள் வீட்டுக்குச் சீர்வரிசை அனுப்பியிருப்பதும், அங்கே நீ போகப் போவதும்- நான் கல்யாணியிடம் பொய்தான் பேசினேன் என்று அவள் நினைப்பதற்குச் சந்தேகமில்லாத ஆதாரங்களாகி விட்டன!''

''ஆமாம் அக்கா! நீ கல்யாணியிடம் முதலில் சொன்னது உண்மைதான்! அந்த உண்மை அப்படியே மாறாமலே இருந்திருக்கும். அதை மாறும்படி செய்த குற்றம் கல்யாணி உடையதுதான்!'' ''கட்டிய என்ற பெயர் மட்டும் இருக்கட்டும். கடவுள் மீது ஆணையாக என்னைத் தொடாதே!'' என்று கல்யாணி கூறிவிட்ட பிறகு இனிமேல் என் இஷ்டத்திற்கு நடப்பதை யார்தான் தடுக்க முடியும்? பழி வாங்கத்தான் பாகனேரி சம்பந்தத்திற்குச் சரி சொன்னேன். ஆனால் உன் அறிவுரையும், நான் கல்யாணி மீது ஆரம்பத்தில் கொண்டிருந்த காதலும் என் மனத்தை மாற்றின! அதற்குப் பிறகுகூட அவள் நம்மைச்

சூழ்ச்சிக்காரர்களாகவே கருதினால் எவ்வளவுதான் சமாதானம் செய்ய முடியும்! கல் மனம் கொண்டு அவளைக் கடுமையாக நடத்தினேன். அவள் படும் தொல்லைகளைக் கேள்வியுற்றுப் பாகனேரியில் அவளது அண்ணன்கள் கண்ணீர் விடவேண்டுமென்று எதிர் பார்த்தேன். அவ்வளவு பழிவாங்கும் உணர்வு குவிந்து கிடந்த நெஞ்சம்தான் இது! அந்த நெஞ்சைத் தான் பஞ்சு போல் ஆக்கிக் கொண்ட பிறகும் என்னையொரு சதிகாரன் என்று திட்டவட்டமாகக் கணிக்கிற அவளோடு எப்படி வாழ முடியும்? நானே வாழ விரும்பினாலும் அவள் அதற்குத் தயாரில்லை என்கிறபோது பிறகு எனக்கு வேறுவழி என்ன இருக்கிறது?''

''தம்பி! வடிவாம்பாள் யார்? சுந்தராம்பாளின் தங்கை! அந்தச் சுந்தராம்பாளுடன் தொடர்பு கொண்டிருப்பவர் வாளுக்குவேலி! அவர் உனக்கு மைத்துனர்! உறவு முறைகளைக் கவனிக்க வேண்டாமா? நீ வடிவாம்பாள் வீட்டுக்குப் போனால் ஏதோ வரைமுறையே இல்லாத தொடர்பு என்று ஊரார் பேசமாட்டார்களா?''

''அக்கா! சுந்தராம்பாள் ஒன்றும் வாளுக்கு வேலி யின் மனைவி அல்ல! வடிவையும் நான் முறைப்படி கல்யாணம் செய்து கொள்ளப் போவதில்லை! இருவரும் நடனக்காரிகள்-இதில் வரையாவது முறையாவது! என்னுடைய நோக்கம், கல்யாணி வாழாவெட்டியாக இருக்கிறாள் என்பதைக் கேள்விப்பட்டு வாளுக்குவேலி பதற வேண்டும்! என்னைத் துச்சமாக மதித்துத் 'தொடாதே' என்று சத்தியம் செய்த கல்யாணி, வாழ் நாள் வரையில் கண்ணீரில் மிதக்க வேண்டும். அவ்வளவுதான்!''

வீரம்மாள் தனது உள்ளத்தில் வீசிய புயலை அடக்க முடியாமல் தவித்தாள். சோகம் கப்பிய குரலில் அவளிடம்

தன்னைப் பற்றிய நிலை விளக்கம் அளித்துவிட்டு அங்கிருந்து சென்றுவிட்ட வைரமுத்தனை நினைத்து அவள் கண் கலங்கினாள். எல்லாம் தனது கணவன் உறங்காப்புலியால் ஏற்பட்ட வேதனை என்பது அவளுக்குத் தெரியும். அதைப் பொறுமையாகக் கேட்டுக் கொள்ளக்கூடக் கல்யாணி தயாராக இல்லையே என்பதுதான் வீரம்மாளுக்குத் தாள முடியாத துன்பம்! இனி வைரமுத்தனை எப்படித் தடுக்க முடியும்? வடிவாம்பாள் வீட்டுக்குப் போக வேண்டிய சீர்வரிசைகள் எல்லாம் ஐந்தாறு வண்டிகளில் அனுப்பப்பட்டாகி விட்டது.

''அக்கா!'' என்று துள்ளிக் குதித்து மான் குட்டியென ஓடிவந்த வடிவைப் பார்த்து, ''என்னம்மா அவ்வளவு சந்தோஷம்?'' என்று முகம் மலரக் கேட்டாள்.

''நீ கேட்டால் ரொம்ப சந்தோஷப்படுவாய்'' என்றாள் வடிவு.

''செய்தியைச் சொல்! பீடிகையைப் பலமாகப் போடாதே!''

''அவர் என் வீட்டுக்கு வருகிறாராம்! சீர்வரிசையெல்லாம் அனுப்பி வைத்திருக்கிறார்! முதலில் நமஸ்காரம் செய்து கொள்கிறேன். எனக்கு ஆசீர்வாதம் செய்யக்கா!'' சுந்தரியின் காலில் வடிவு விழுந்து எழுந்தாள். சுந்தரிக்கு ஒன்றுமே புரியவில்லை. வடிவை வாழ்த்த வேண்டும் என்ற நினைப்புக்கூட இல்லாமல் ''ஓகோ! வீட்டில் மூத்தவள் ஒருத்தி இருக்கிறேன் என்பதையே மறந்துவிட்டு, நீயே ஒரு ஏற்பாட்டைச் செய்து கொண்டு, ஆசீர்வாதம் வாங்க வந்து விட்டாயா?'' எனக் கடிந்து கொண்டாள் சுந்தரி.

''உனக்கு இளையவளாக இருந்தாலும் நானும் உன் தங்கைதானே! நீ செய்து கொண்டாயே காந்தர்வ மணம்;

ஒரு வார்த்தை என்னிடம் தங்கச்சி ஆயிற்றே என்று கேட்டாயா?'' வடிவு வெடுக்கென்று பதில் கூறிவிட்டு ''அதிருக்கட்டும், ஆசீர்வாதம் செய்! இந்தா குங்குமம்; பொட்டு வை!'' என்று அங்கே மாடத்திலிருந்த குங்குமச் சிமிழை எடுத்து வந்து சுந்தரியின் கையில் கொடுத்தாள். சுந்தரியும், குங்குமத்தைத் தங்கையின் நெற்றியில் வைத்துக் கொண்டே, ''உம், இப்போதாவது சொல்! யார் அது?'' என்று ஆவல் ததும்பக் கேட்டாள்!

''பட்டமங்கலத்து அம்பலக்காரர் வைரமுத்தன்!'' என்று வடிவு பூரிப்போடு கூறிவிட்டுச் சுந்தரியின் முகத்தை நோக்கியபோது, சுந்தரியின் முகம் திடீரெனக் கறுத்துப் போய் விட்டதை உணர்ந்தாள். சுந்தரி, பெருமூச்சு விட்டவாறு, ஊஞ்சலில் போய் உட்கார்ந்தாள்.

''ஏனக்கா உன் முகம் இப்படி ஆகிவிட்டது? அவருக்கென்ன அழகில்லையா? அந்தஸ்து இல்லையா? பாகனேரி நாடு போல அவரும் பட்டமங்கலம் நாட்டுக்குத் தலைவரக்கா!''

''எல்லாம் சரி வடிவு! அவர் கல்யாணியின் கணவர்! கல்யாணியின் வாழ்க்கையைப் பற்றிக் கடுகளவாவது நினைத்துப் பார்த்திருந்தால் நீ இந்த முடிவுக்கு வருவாயா?''

''அதை நினைத்துப் பார்க்க வேண்டியது, அவர் தானக்கா! எனக்கென்ன கல்யாணியைப் பற்றிக் கவலை?''

''கவலையிருக்க வேண்டுமடி உனக்கு! ஒரு வகையில் உனக்கு மாணவிகூட கல்யாணி! அதுதான் போகட்டும்; கல்யாணியின் அண்ணன் வாளுக்குவேலித் தேவர் எனக்குக் கணவர்! நீ கல்யாணியின் கணவருக்கு மனைவி என்றால், ஏதாவது ஒழுங்கான உறவு முறை

யாவது இருக்கிறதா? கல்யாணி எவ்வளவு நல்ல பெண்! எவ்வளவு மென்மையான உள்ளம்! எத்தகைய மேன்மையான இடம்! அந்தப் பெண்ணின் வாழ்வு கெட நீ காரணமாக இருக்கலாமா வடிவு?''

''கல்யாணியொன்றும் இப்பொழுது கணவனுடன் சுகமாக வாழவில்லை! திருமணம் முடிந்து, முதல் இரவு அன்றைக்கே அவளைப் பிடிக்காமல் வெறுத்து ஒதுக்கி விட்டு, வைரமுத்தன் நான் தங்கியிருந்த அறைக்கு ஓடி வந்தவர்தான்! அப்பொழுதே நான் அவரிடம் சொன்னேன்; உரிய முறைப்படி சீர் வரிசைகளை அனுப்பிவிட்டு வாருங்கள் என்று! அதன்படி சீர்வரிசைகள் வந்துவிட்டன!...''

''வடிவு! ஒரு தங்கையிடம் அக்காள் கெஞ்சுகிறேன்! வாளுக்குவேலித் தேவர் கல்யாணியிடம் உயிரையே வைத்திருக்கிறார். இப்படியொரு செய்தி கேள்விப் பட்டால் அவர் இடிந்து போய் விடுவார்!''

''என்னை என்ன செய்யச் சொல்லுகிறாய்?''

''அந்தச் சீர்வரிசைகளைத் திருப்பி அனுப்பிவிடு. நான் உனக்குப் பொருத்தமான கணவனாகப் பார்த்துத் திருமணம் செய்து வைக்கிறேன். கல்யாணியின் வாழ்க்கை யும், அவளது அண்ணன் வாளுக்குவேலித் தேவரின் எதிர்காலமும் நீ எடுக்கப் போகும் முடிவில் தானம்மா ஊசலாடிக் கொண்டிருக்கிறது! என் கண்ணல்ல! தயவு செய்து ''சரி அக்கா'' என்று சொல்லடி என் தங்கம்!''

''நான் சரி என்று சொல்வதற்கு முன்பு ஒரு நிபந்தனை! அதற்கு நீ ஒத்துக் கொள்ள வேண்டும்! நீ ஒத்துக் கொள்வதைப் பொறுத்திருக்கிறது என் முடிவு!''

''என்ன நிபந்தனை? எதுவானாலும் சொல்! என் கல்யாணியின் வாழ்வு பட்டுப் போகாமலிருக்க நீ

விதிக்கும் எந்த நிபந்தனைக்கும் கட்டுப்படுகிறேன்! நீ மாத்திரம் அந்த வைரமுத்த அம்பலக்காரரை மறந்து விட வேண்டும்!''

''அக்கா! என் நெஞ்சில் ஒளித்து வைத்திருக்கும் ஒரு இரகசியத்தை இன்று உன்னிடம் சொல்லித்தான் தீர வேண்டும்!''

''எதுவானாலும் சொல் வடிவு!''

என்ன சொல்லப் போகிறாளோ என்ற திகில் மட்டும் சுந்தரியின் இதயத்தைப் பிழிந்து கொண்டிருந்தது.

''அக்கா! என் இதயக் கோயிலில் தெய்வமாக வைத்துப் பூஜித்துக் கொண்டிருந்த ஒரு தங்க விக்ரகம், ''சிலை திருட்டு''க்கு உள்ளாகிவிட்டது! வெறுங் கோயிலாகி விட்ட என் இதயத்தில் இந்த வெண்கல விக்ரகமாவது இடம் பெறட்டுமே என்றுதான் வைரமுத்தனை...''

''வடிவூ! புதிரெல்லாம் போடாமல் விஷயத்துக்கு வா! சிலையாவது திருட்டாவது...''

''ஆமாம்-அந்த அற்புதச் சிலையைத் திருடிக் கொண்டவளே நீ தானே!...''

''வடிவு! என்னடி சொல்கிறாய்?''

''சுற்றி வளைப்பானேன்! வாழ்ந்தால் வாளுக்கு வேலித் தேவருடன் வாழ வேண்டுமென்று தெய்வங்களிடமெல்லாம் வரம் கேட்டேன்! ஆனால் வரம் உனக்குக் கிடைத்து விட்டது... அக்கா! அவரை நீ என்னிடமிருந்து பறித்துக் கொண்டது போன்ற ஆத்திரம்தான் எனக்கு! ஒரு அக்காளிடம் தங்கை பேசுகிற பேச்சா இது என்று கோபிக்காதே! எத்தனையோ இரவுகள் அவரும் நானும் கனவுலகில் சந்தித்திருக்கிறோம்! அவரது உருண்டு

திரண்ட உடலில் நான் புரண்டு விழுந்து இன்பம் காண்பது போன்ற அந்த இனிய கனவுகள் கூடப் பலிக்காமல் போய்விட்டதக்கா! என் செய்வது! அக்காளே எனக்குப் போட்டியாக வந்துவிட்ட பிறகு நான் 'என்ன செய்ய முடியும்?''

''வடிவு! நீ இவ்வளவு ஆசையை வைத்திருக்கிறாய் என்பதை என்னிடம் முன்பே சொல்லியிருந்தால் நான் அவரது அன்புக்கு அடிமையாகி விட்டிருக்க மாட்டேனே!''

''உன்னிடம் சொல்லாதது என் தவறுதான்! நீயாகப் புரிந்து கொண்டிருப்பாய் என்று நினைத்தேன். இப்பொழுதும் ஒன்றும் ஆகிவிடவில்லை, அக்கா! நான் அந்த வைரமுத்தனை மறந்து, கல்யாணிக்கு வாழ்வு கொடுக்க வேண்டுமல்லவா?''

''ஆமாம்! அதற்குத்தான் உன்னிடம் கெஞ்சுகிறேன்!''

''சரியக்கா! நான் நெஞ்சில் வைத்து வழிபடும் வாளுக்குவேலித் தேவரை எனக்குத் தந்துவிடு! நான் வைரமுத்து அம்பலக்காரரை வந்த வழியே திருப்பி அனுப்பி விடுகிறேன்.''

சுந்தரியின் காதுகள் கேட்கும் சக்தியை இழந்து விட்டன; அவளது கண்கள் பார்க்கும் சக்தியை இழந்துவிட்டன. ஏன், அவளது உடலே அசையும் சக்தியை இழந்துவிட்டது.

''அக்கா! அக்கா! நான் ஏதாவது உன் மனதைப் புண்படுத்தி விட்டேனா?''

''இல்லையடி வடிவு!'' என்று சொல்லிக் கொண்டே, சுந்தரி அவளைக் கட்டிப் பிடித்துக் கொண்டு அழுது விட்டாள்.

''அக்கா! என் உள்ளத்தில் உள்ளதை ஒளிக்காமல் சொல்லி விட்டேன். எந்த நிபந்தனையானாலும் கல்யாணி நாச்சியருக்காக நிறைவேற்றுகிறேன் என்று நீதான் சொன்னாய்! இப்போது அந்தப் பொறுப்பு உன்னிடம் விடப்பட்டிருக்கிறது. நீ என்ன சொன்னாலும் சரி! ஆனால் ஒன்று: என் நிபந்தனையை ஏற்றுக் கொள்ளாமல், ''பட்டமங்கலத்து வைரமுத்தனை மட்டும் மறந்து விடடி வடிவு!'' என்று என்னை வற்புறுத்தாதே! என் வாழ்க்கையைப் பற்றியும் கொஞ்சம் யோசித்துப் பார். நான் உன்னைப் போல வாழ்க்கை யென்பது ஒரு புனித யாத்திரையென்று அதற்கு அதிக மதிப்புக் கொடுப்பவள் அல்ல. வாழ்க்கையை ஒரு உல்லாசப் பயணம் என்றுதான் கருதுகிறவள்! அந்தப் பயணத்தில் நான் விரும்பிய கப்பல் கிடைத்தால் சந்தோஷம்! அதில் ஏற்றிவிட வேண்டியவள் நீதான்! இல்லாவிட்டால் தற்போதைக்கு இந்த ஓடமே போதும் என்று திருப்தி அடைவேன். அதற்கும் நீ குறுக்கே நின்றால் என் சந்தோஷத்தைச் சாகடிக்கிறாய் என்றுதான் அதற்கு அர்த்தம்!''

''வடிவூ! வைரக் கம்மலைக் கழற்றிக் கொடு, முத்துச் சரத்தை எடுத்து என் கழுத்திலே போடு- இப்படியொரு பொருளையா கேட்கிறாய்-நான் கொடுத்து விட! கம்மலையோ முத்தாரத்தையோ நீ கேட்டால் அவற்றின் அனுமதியின்றியே உன் கையில் தந்து விடுவேன்! நீ கேட்கும் பொருள் அதுவல்லவே! என் உயிரையே அல்லவா கேட்கிறாய்! ஆமாம் வடிவு! என் உயிர் வேறு, அவர் உயிர் வேறு-என்றல்ல-அந்த உயிர் என்னை விட்டுப் பிரிந்தாலும் கூடு விட்டுக் கூடு பாய்ந்திட இணங்குமா என்பதை நான் எப்படியடி சொல்ல முடியும்?''

''அக்கா! இணங்க வைப்பது என் பொறுப்பு. வாளுக்குவேலித் தேவருக்காக என் வீட்டுப் படிக்கட்டுகள் மாத்திரமல்ல; என் இதய பீடமே காத்துக் கொண்டிருக்கிறது! அவர் வராவிட்டால், நீ அனுப்பி வைக்கா விட்டால், படிக்கட்டுகளில் வைரமுத்த அம்பலக்காரரின் பாதமே படும்! என் படுக்கையறையிலும் அவருக்கே இடம்! பிறகு உன் இஷ்டம். நான் வருகிறேன்!''

முடிவெடுக்கும் பொறுப்பைச் சுந்தராம்பாளிடம் விடுத்து, வடிவாம்பாள் தன் வீட்டுக்குப் புறப்பட்டுச் சென்றாள். உட்கார்ந்திருந்த ஊஞ்சலின் சங்கிலியிலேயே தலையைச் சாய்த்துக் கொண்டு கண்ணீர் கொட்டினாள் சுந்தரி.

அக்காளும் தங்கையும் பேசிக் கொண்டிருந்ததை ஆரம்பம் முதல் கடைசி வரையில் அந்த வீட்டின் மாடிப்படி மறைவில் நின்று கேட்டுக் கொண்டிருந்த வாளுக்குவேலி, வடிவு அங்கிருந்து சென்ற பிறகு சோக பிம்பமாக அசைந்து வந்து, சுந்தரிக்குப் பக்கத்தில் ஊஞ்சலில் உட்கார்ந்தான்.







# 40

தன் பக்கத்தில் திடீரென வாளுக்குவேலி வந்து அமர்ந்தது கண்ட சுந்தராம்பாள் திடுக்கிட்டு எழுந்து நின்றாள். ''சும்மா உட்கார் சுந்தரி!'' என்று அவள் கரம் பற்றி ஊஞ்சலில் உட்கார வைத்தான்.

வடிவாம்பாள் சுந்தரியிடம் வெளிப்படுத்திய செய்தியின்படி, வைரமுத்தன் கல்யாணி நாச்சியாருக்குத் துரோகமிழைக்கத் துணிந்து விட்டான் அல்லது பாகனேரிக் குடும்பத்தைப் பழி வாங்கப் போட்டுள்ள திட்டத்தின் அடுத்த கட்டத்திற்குப் பயணப்பட்டு விட்டான்.

இதையெண்ணியபோது வாளுக்குவேலியின் பாசமுள்ள இதயம் என்ன பாடுபட்டிருக்கும்? ஆற்றுக்குள் முதலை வாய் பிளந்து கிடப்பது தெரிந்திருந்தும் நீ போய் ஆனந்தமாக நீராடி விட்டு வா என்று தன் தங்கையை அனுமதித்தது தனது குற்றம்தானே எனப் புழுங்கினான்.

எத்தனைப் பிரச்சினைகள் அவனுக்கு! ஒன்றா? இரண்டா?

பாகனேரி அம்பலக்காரர் பதவிக்குத் தனி மரியாதை செல்வாக்கு எல்லாமே உண்டு. அத்தகைய பதவியில் ஆற்றலும் வீரமும் நிறைந்த வாளுக்கு வேலி போன்ற ஒருவன் வீற்றிருப்பது நிலவுக்குச் சூரியஒளி கிடைத்தது

போலத்தான்! அந்த ஒளியைப் பெற்றிராவிட்டால் நிலவுக்கு இவ்வளவு பாராட்டு ஏது? பாகனேரி அம்பலக்காரர் பதவியும் அவ்வாறே வாளுக்குவேலியால் உயர்ந்திருந்தது.

ஆனால் தெளிந்த நீரோடை, காண்பதற்கு இன்பம்தான்! காண்போர் கவிஞராயின் கவிதைகள் படைப்பர்! ஓவியராயின் அழகிய சித்திரம் வரைவர்! எனினும் எத்தனைப் பாறைகளைக் கடந்து, சுற்குவியல்களையும் முட்புதர்களையும் தாண்டி அந்த நீரோடை நிலத்திற்கு எழிலூட்டுகிறது! அப்படித்தான் வாளுக்கு வேலியின் வாழ்க்கை! அது நீரோடை போலத் தெரிந்தாலும், போராடும் களமாகவே அமைந்து விட்டது!

கம்பெனிக்கார வெள்ளையர்களிடமிருந்து கள்ளர் நாடுகளையும் காப்பாற்ற வேண்டும். அதே சமயத்தில் மருது பாண்டியர்களின் விடுதலை வீரர்களையும் கை விட்டு விடக் கூடாது. அந்த இலட்சியத்திற்காகக் கள்ளர் நாடுகளுக்கிடையே ஒற்றுமையைக் கட்டி வளர்க்க வேண்டும். பழம்பகை தீர்ப்பதில் நாட்டமும் புதுப் பகைக்குப் பழிவாங்குவதில் துடிப்பும் கொண்டலையும் பட்டமங்கலத்தையும் சமாளிக்க வேண்டும். தாய் தந்தையராகத் தன்னையே எண்ணியிருக்கிற தங்கை கல்யாணியின் மகிழ்ச்சிக்குத் தடையேதும் வராமலும் பார்த்துக் கொள்ள வேண்டும். இதற்கெல்லாம் மேலாகத் தன்னை நம்பியிருக்கும் சுந்தரியின் மனத்தையும் கலங்கவிடக் கூடாது.

இவ்வளவு பிரச்சினைகளும் நீருக்கு அடியிலேயுள்ள பாறை! அவன் வாழ்வோ பார்ப்பதற்கு மட்டும் நீரோடை! கல்யாணி நாச்சியார், பட்டமங்கலத்தில் அவளைப் பொறுத்தமட்டில் எந்தக் குறையுமில்லாமல் வாழ்கிறாள் என்றுதான் அன்று வரையில் எண்ணி

யிருந்தான். வடிவாம்பாள்-சுந்தரி உரையாடலைக் கேட்டபிறகு உருகக் காய்ச்சப்பட்ட ஈயம் அவன் நெஞ்சுக்குள் ஊடுருவுவது போல் இருந்தது.

'வடிவு எவ்வளவு விநோதமான நிபந்தனையை விதித்து விட்டுப் போயிருக்கிறாள்! கல்யாணியின் வாழ்வு பாலையாகி விடாமலிருக்க நான் வடிவாம்பாளை நேசிக்க வேண்டுமாம்! அதற்குச் சுந்தராம்பாள் விட்டுக்கொடுக்க வேண்டுமாம்! கல்யாணியின் மீது நான் வைத்துள்ள பாசம் எல்லையற்றது-அதற்காகச் சுந்தரியை மறக்க வேண்டும்-வடிவை ஏற்க வேண்டும்!'

'சரி, நானே அதற்கு முன்வருவதாக வைத்துக் கொண்டாலும்கூடச் சுந்தரி என்னைத் தனது தங்கையிடம் ஒப்படைத்துவிட்டு, என் தங்கை கல்யாணியைக் காப்பாற்றுகிற அவ்வளவு பெரிய தியாகத்திற்குத் தயாராக இருப்பாளா? நான்தான் அப்படி அவளிடம் எதிர்பார்க்க முடியுமா? ஒருவேளை சுந்தரியே கல்யாணிக்காக வடிவின் நிபந்தனைக்குக் கட்டுப்பட்டால்கூடச் சுந்தரி குடியேறியுள்ள எனது மன மாளிகையில் வடிவுக்கு எப்படி இடம் தர முடியும்?'

'சுந்தரி ஒரு கலைமகள் மட்டுமல்ல; குலமகள் என்பதற்கும் மறுக்க முடியாத எடுத்துக்காட்டாக விளங்குகிறாள் என்பதற்கு அவள் வடிவாம்பாளிடம் பேசினாளே, அந்த ஒரு ஆதாரமே போதாதா? சுந்தரி என்னைப் பிரிய முடியாது! நானும் சுந்தரியைப் பிரிய முடியாது!

'அப்படியானால் வைரமுத்தன் வடிவாம்பாள் வீட்டில்! அது தவிர்க்க முடியாதது! கல்யாணியின் மீது சுந்தரிக்குத்தான் எத்தனை அன்பு! என் தங்கையென்ற ஒரே காரணத்தினால் அல்லவா, சுந்தரி கல்யாணியிடம் அவ்வளவு பாசத்தைப் பொழிகிறாள்!'

வாளுக்கு வேலியின் இதயக் கழனியைக் குழப்ப நினைவுகள் உழுதன! சுந்தரியின் முகத்தை அவன் தன் முகத்துக்கு நேராகத் திருப்பி, ''ஏன் கலக்கம்? எதற்காகக் கண்ணீர்? என்ன நடந்தது? என்றெல்லாம் உன்னிடம் கேட்கப் போவதில்லை. காரணம் என்ன என் கண்மணியின் கமல முகம் வாடியிருப்பதற்கு என்பது எனக்குத் தெரியும். சுந்தரி! வடிவாம்பாள் உன்னிடம் பேசியது முழுவதையும் கேட்டுக் கொண்டு தானிருந்தேன்!'' என்றான் அவளது கன்னத்தைத் தடவியவாறு!

அதைக் கேட்கச் சுந்தரிக்கு உடம்பில் வலு வில்லை-உள்ளத்திற்கும் தெம்பில்லை! அவனது தோளில் முகத்தை அழுத்திக்கொண்டு அழுவது ஒன்றுதான் அவளுக்கு அப்போது ஆறுதலாக இருந்தது.

''அழாதே சுந்தரி! எந்தக் கவலையும் எட்டிப் பார்த்திடவும் முனையாத உள்ளத்தோடு ஆடிப்பாடிக் குதூகலித்திருந்த உனக்கு ஆயிரம் கவலைகளை அள்ளித் தந்த கொடுமையான கொடையாளி நானேதான்!''

''அப்படியெல்லாம் சொல்லாதீர்கள்! வாழ்க்கை என்பது பழமுதிர் சோலையல்ல-பாலைநிலங்களையும், பயமுறுத்தும் வனாந்தரங்களையும் கடந்து செல்வதில் தான் ஒரு வைராக்கியமும் வற்றாத இன்பமும் இருக்கிறது! அப்படியொரு கட்டம் இப்போது நமக்கு! இதை எப்படிக் கடப்பது என்று நாம் யோசித்து நல்லதொரு முடிவை இப்போதே எடுக்க வேண்டும்.''

''எனக்கு எந்த முடிவும் தோன்றவில்லை! வடிவின் நிபந்தனை, வானவில்லில் நாணேற்றுவதைவிட அசாத்தியமானது என்பது என் கருத்து. நீ ஏதாவது யோசித்திருக்கிறாயா சுந்தரி?''

''எப்படியாவது கல்யாணி நாச்சியாரைக் கவலை தீண்டாமல் தடுத்திட வேண்டும். வைரமுத்த அம்பலக்காரர் வடிவு வீட்டுக்கு வந்துவிட்டால் - அதற்குப் பிறகு, அணையுடைத்த வெள்ளத்தைத் தடுப்பதற்கு எவ்வளவு கஷ்டப்பட வேண்டுமோ, அவ்வளவு கஷ்டம் கல்யாணியின் வாழ்வு பாழாவதைத் தடுப்பதற்கும் பட்டாக வேண்டும்!''

''நிலைமைகளைச் சொல்கிறாய் சுந்தரி; எனக்கும் தெரிகிறது! நிவர்த்தி செய்வதற்கு என்ன வழியிருக்கிறது - அதைச் சொல்!''

''என் இருதயத்தை எடுத்தெறிந்து விட்டுச் சொல்லுகிறேன்! நீங்கள் அதைக் கேட்பீர்களா?''

இதைச் சொல்லிவிட்டுச் சுந்தரி தேம்பித் தேம்பி அழுதாள்.

''சுந்தரி! சுந்தரி!'' என்று கூறிக்கொண்டே அவளை உலுக்கிய வாளுக்குவேலி, ''என்ன சொல்லுகிறாய்?'' என்று ஆவலுடன் கேட்டான். அவனது நாடித் துடிப்புகளின் எண்ணிக்கை கூடுதலாயிற்று. இரத்த அழுத்தத்தால் அமைதியிழந்து காணப்பட்டான். அவள் என்ன சொல்லப் போகிறாள் என்பதை அறிந்து கொண்டான் போலும்! அவள் அழுகையை நிறுத்தி விட்டு உறுதியான குரலில்-தெளிவாகச் சொன்னாள்.

''கல்யாணியைக் காப்பாற்ற வேண்டுமென்பதில் நம் இருவருக்கும் ஒரே கருத்து! அதில் மாற்றமில்லை!

அதனால் நாம் இருவரும் சேர்ந்து வடிவாம்பாளின் நிபந்தனையை நிறைவேற்றி, வைரமுத்த அம்பலக் காரரைப் பட்டமங்கலத்திற்கு அனுப்பி வைப்போம்!''

அப்படியொரு முடிவை அவள் சொல்லப் போகிறாள் என்பதை வாளுக்கு வேலி உணர்ந்தே

இருந்தான். அவனது தங்கை கல்யாணிக்காகச் சுந்தரி செய்திடத் துணிந்த தியாகத்தின் மதிப்பை அவன் கவனிக்காதவனல்ல!ஆனால் அவன் எப்படி அவளை மறப்பது? எப்படி வடிவு வீட்டுக்குப் போவது? இரத்த அழுத்தம் மேலும் கூடிற்று! அந்த வீடு வாசல் எல்லாமே அவனுக்குச் சுற்றியது போலிருந்தது! சுந்தரி அவன் கால்களைப் பிடித்துக் கொண்டு கெஞ்சினாள்.

''நம்மிடையே அரும்பிய உறவு, வெறும் உடல் கூறுகளின் பசியைத் தணிப்பதற்காக அல்ல! இரண்டு நெஞ்சங்களிடையே ஏற்பட்ட நெருக்கம்! அதனால் தானோ என்னவோ நமக்குள் இதுவரை அந்த உறவுக்கு இடமில்லாமல் போய்விட்டது! ஆனால்; நான் உங்களை என் உயிராக நேசிப்பதையும், என்னை நீங்களும் அப்படியே நேசிப்பதையும் எந்த ஒரு நிகழ்ச்சியும் தடைசெய்து விடாது!...''

''அப்படியானால் என்னை வடிவாம்பாள் வீட்டுக்குப் போகச் சொல்கிறாய்?''

''அதற்கு என்னைப் போன்ற ஒரு பெண்ணுக்கு எவ்வளவு துணிச்சல் இருக்க வேண்டும்! எல்லா வகையிலும் என்னைக் கவர்ந்த உங்களை இழப்பதற்கு இடம் கொடுத்த என் மன உறுதியைப் புகழ்வதா, சபிப்பதா என்றே தெரியவில்லை! உங்களை நான் வடிவாம்பாள் வீட்டுக்குப் போகச் சொல்லவில்லை-கல்யாணி நாச்சியாரின் கண்ணீரைத் துடையுங்கள் என்று மன்றாடுகிறேன்!''

''நீ என்னை இழப்பதற்குச் சம்மதித்து விட்டாய்! இல்லையா சுந்தரி?''

இந்த வார்த்தைகள் வேல்களாகச் சுந்தரியின் செவிகளில் நுழைந்தன.

''கல்யாணியை உயிரோடு இழப்பதற்குச் சம்மதிக்காததால்தான் நான் உங்களை இழக்கவும், நீங்கள் என்னை இழக்கவும் வேண்டுமென்கிறேன்.''

ஏதோ ஒரு முடிவுடன் - ஆனால் விளக்கிச் சொல்ல முடியாத முடிவுடன் வெளியே புறப்பட்ட வாளுக்கு வேலியின் முன்னால் சென்று, ''தயவு செய்து என்னிடம் சொல்லி விட்டுப் போங்களேன்!என்ன முடிவு செய்யப் போகிறீர்கள்!'' என்று கதறினாள் சுந்தரி.

''என் மனதிற்பட்டதைச் செய்வேன்! மன்னித்து விடு சுந்தரி; இப்போது என்னால் எதுவும் சொல்ல முடியாது! அதாவது எனக்கே சொல்லத் தெரியாது!''

வாளுக்குவேலி வாசலில் நிறுத்தப்பட்டிருந்த பெட்டி வண்டியில் போய் ஏறிக் கொண்டான். வண்டிக் காரன் திரும்பிப் பார்த்தான் எந்தப் பக்கம் போவது என்பதற்கு ஆணை கேட்பது போல!''பானேரிக்கு ஓட்டு!'' என்றான் வாளுக்குவேலி! வண்டி எடுத்த எடுப்பிலேயே பறக்கத் தொடங்கியது.

திருக்கோட்டியூர் தேரோடும் வீதிகளைக் கடந்து, வாளுக்குவேலி வண்டி ஊரின் எல்லலக்கு வருவதற்குள், எதிரே பட்டமங்கலத்துப் பெட்டி வண்டி வருவதை வாளுக்குவேலி பார்த்து விட்டான். மின்னலைவிட வேகமாகச் சில நினைவுகள் அவன் நெஞ்சில் பளிச்சிட்டன! வண்டியை நிறுத்தச் சொன்னான். நிறுத்தப்பட்ட வண்டியைத் திருக்கோட்டியூருக்கே திருப்பச் சொன்னான். பட்டமங்கலத்து வண்டியை முந்திக் கொண்டு தனது வண்டி வடிவாம்பாள் வீட்டுக்குப் போய் நிற்க வேண்டுமென்றான். அவன் உத்தரவுப்படி வண்டி திருப்பப்பட்டு வடிவாம்பாள் வீடு நோக்கி விரைந்தது.

அதுவரையில் சுந்தராம்பாளின் முடிவுக்கு ஒப்புதல் அளித்திடத் தயக்கம் காட்டிவிட்டுப் பாகனேரிக்குத் திரும்பிய அவன் மனம் மாறியதற்குக் காரணம்; எதிரே பட்டமங்கலம் வண்டி வந்ததும், அதற்குள் வைரமுத்தன் இருக்கிறான் என்பதும்தான்! வைரமுத்தன் அனுப்பி வைத்த சீர்வரிசைகளைத் தொடர்ந்து அவனே வடிவு வீடு நோக்கி வருகிறான் என்பதை நேரில் கண்டதும் வாளுக்குவேலியினால் தாங்கிக் கொள்ள முடியவில்லை.

வடிவு வீட்டு வாசலில் முந்திப் போய் நின்றது வாளுக்கு வேலியின் வண்டிதான்! வைரமுத்தன்தான் வருகிறான் என்று வடிவு மாலையுடனும், நாதமுனி வெற்றிலைத் தட்டுடனும், லலிதாங்கி சந்தனக் கிண்ண முடனும் எதிர் கொண்டு ஓடி வந்தனர். வடிவு, எதிர் பார்த்ததற்கு மாறாகவும், அவளுக்கு இரட்டிப்பு மகிழ்ச்சி ஏற்படுத்துகிற விதமாகவும் வண்டியிலிருந்து வாளுக்கு வேலி இறங்கினான்.

தாமரை மொட்டுப் போல் தனங்காட்டிக் கச்சைய ணிந்திருந்த வடிவு, ஒரு சிட்டுப் போல் பாய்ந்து வந்து வாளுக்கு வேலியின் கழுத்தில் மாலை அணிவித்து அவனைக் கூடத்திற்கு அழைத்துச் சென்றாள். வாளுக்கு வேலி, தன் முகத்தில் எந்த மாற்றத்தையும் காட்டிக் கொள்ளாமல், ''என்னையும் உன் அக்காளையும் நீ ஜெயித்து விட்டாய்!'' என்றான்.

''எல்லாம் திருக்கோட்டியூர் சௌமிய நாராயணப் பெருமாளின் அருள்தான்!'' என்று கூறிவிட்டு, ஒரு வெள்ளித்தட்டிலிருந்த ரோஜா மலர்களை எடுத்து அவனது பாதங்களில் தூவினாள்!

பழரசக் கிண்ணத்தை லலிதாங்கி எடுத்துத் தர அதனைத் தன் கையினால் வாங்கி, அவனிடம் நீட்டினாள் வடிவு! அதற்குப் பிறகு வடிவின் கண்கள் நாதமுனியின்

பக்கமும் லலிதாங்கியின் பக்கமும் திரும்பின! அவைகளின் பாஷையைப் புரிந்து கொண்ட இருவரும் அங்கிருந்து ஒதுங்கி மறைந்தனர்.

முத்துச் சொல் உதிர்த்துக் குத்தும் தனங்களை அவன் நெஞ்சில் படுமாறு கொஞ்சி, இரு கரங்களாலும் அவன் கழுத்தைப் பிணைத்தாள். வாளுக்குவேலி, அவள் கரங்களை விலக்கிவிட்டுச் சற்று நகர்ந்து நின்றான்.

''குளத்தில் இறங்கிய பிறகு குளிப்பதற்குத் தயக்கமா?''

வடிவாம்பாள் கேலியும், இன்ப போதையும் கலந்திடக் கேட்டுக்கொண்டே வாயிற்புறக் கதவை மூடிவிட்டு வரச் சென்றாள். ஒரு கதவை மூடிவிட்டு மற்றொரு கதவை மூடுவதற்குள் அந்தக் கதவை வேகமாகத் தள்ளிவிட்டு வைரமுத்தன் உள்ளே நுழைந்தான்!

வைரமுத்தன் கண்களும், வாளுக்குவேலியின் கண்களும் புராண காலத்துப் போர்க்களத்துப் அக்னி யாஸ்திரங்களாக ஒன்றோடொன்று மோதிக் கொண்டன! அந்த மோதலில் கிளம்பிய தீப்பிழம்பைக் கண்டு வடிவு வியர்த்து நின்றாள்!

''விலைமகள் என்பதை நிரூபித்து விட்டாயே! வண்டி வண்டியாகச் சீர்வரிசை, பட்டமங்கலத்திலிருந்து! வரவேற்பும் உபசரிப்பும் பாகனேரிக்கு! என்னடி கள்ளி இது திருவிளையாடல்?''

வைரமுத்தன் பொரிந்து தள்ளினான். வடிவாம்பாள் வாளுக்குவேலியைப் பார்த்துத் தைரியத்தை வரவழைத்துக் கொண்டாள்.

''யாருக்கு வேண்டும் உங்கள் சீரும் வரிசையும்! எல்லாவற்றையும் எடுத்துக் கொண்டு போங்கள். எனக்கு

வேண்டியது இதோ பாகனேரி அம்பலக்காரர்தான். அவர் இல்லாவிட்டால்தான் நீங்கள்! தேவாமிர்தமே கிடைத்துவிட்ட பிறகு தினைமாவு எதற்காக?''

வைரமுத்தன், கருடனை நாகப்பாம்பு அவமதித்த கதையைத்தான் கேட்டிருக்கிறான். அதை நேரிலேயே காண வேண்டிய நிலையில் இப்போது ஆகிவிட்டோமேயென்று சிலிர்த்தான்!

''என்னடி வேசி- ஏதேதோ கதையளக்கிறாய்?'' என்று கர்ச்சித்தான்.

''மரியாதையாகப் பேசுங்கள்! வேசி, கள்ளி, இந்த வார்த்தைகளையெல்லாம் மறுபடியும் சொன்னால்...'' என்று வடிவாம்பாள் அவனை எதிர்ப்பது போல நிமிர்ந்து நின்றாள்.

சோரம் போகாத வீரத்துக்குச் சொந்தக்காரனான வைரமுத்தனால் அதற்கு மேல் தன்னை அடக்கிக் கொள்ள முடியவில்லை. வரச் சொல்லி அழைப்பு விடுத்து, வந்த இடத்தில் வழங்கப்பட்ட அவமதிப்பு, ஏமாற்றம், வடிவின் சுடு சொற்களால் ஏற்பட்ட இரணம் - எல்லாமாகச் சேர்ந்து வழக்கமாக அவன் கடைப்பிடிக்கும் நிதானப் போக்கிற்கு விடைகொடுத்து அனுப்பிவிடவே, வடிவை நோக்கிப் பாய்ந்து, பலங்கொண்ட மட்டும் அவளது கழுத்தில் கைகளை வைத்து நெரித்தான். அவளை அவனிடமிருந்து காப்பாற்ற வாளுக்குவேலி அவன் மீது விழுந்து அந்தக் கைகள் இரண்டையும் அவளது கழுத்திலிருந்து பிரித்தெடுக்கப் பெரும்பாடுபட்டான். வாளுக்குவேலியின் வலிமை வாய்ந்த கைகளின் அடியைத் தாங்கிக் கொண்ட வைரமுத்தன், வடிவின் கழுத்தை அழுத்திய கைகளை மட்டும் விடுவித்துக் கொள்ளவே இல்லை. அதற்குள் நாதமுனியும்

லலிதாங்கியும் உரக்கக் கூச்சலிட்டுக் கொண்டு வடிவின் வீட்டிலேயிருந்து சுந்தராம்பாள் வீட்டுக்கு ஓடினார்கள். வாளுக்குவேலி, வைரமுத்தனின் முதுகுப்புறம் விழுந்து அவனது உடலை வளைத்துப் பிடித்து, மிகுந்த சிரமத்திற்கிடையே கீழே தள்ளிவிட்டான். அப்போது தான் வடிவாம்பாளின் கழுத்தை அழுத்தியிருந்த வைரமுத்தனின் கைகள் விலகின. ஆனால் அதற்குள் வடிவு?





# 41

வாழ்க்கையென்பது புள்ளி வைத்துப் போடுகிற கோலமல்ல. அள்ளித் தெளிக்கிற மாவு சிதறிக் கிடப்பதில் தோன்றுகிற சித்திரம்தான்; அதற்கென்று கணக்கு வழக்கு கட்டுப்பாடு எதுவுமே தேவையில்லை. இன்பத்தின் எல்லை எதுவரைக்கும் உண்டோ அதையும் மீறிப் பறந்து செல்கிற வலிமையில்தான் வாழ்க்கையின் முழுமையே இருக்கிறது என்று தனக்குத் தானே ஒரு தத்துவத்தை வகுத்துக் கொண்டவர்களின் வரிசையிலே சிறகடித்துப் பறக்க முனைநதபோது சிதைந்துவிட்ட ஓவியப் பறவையாகி விட்டாள் வடிவு! ஒரு கோடிக் கனவு கண்டாள் - அதற்குள் ஒரு ''கோடித் துணி'' தனக்குப் போதுமென்று சொல்வது போல் கால்களை நீட்டிப் படுத்துவிட்டாள். ஒன்று, பத்து, நூறு, ஆயிரம், இலட்சம் என உருண்டோடிய நினைவுகளால் அவள் நெஞ்சத் திரையில் வரையப்பட்ட இன்பலோகச் செயற்கைக் காட்சிகள் இருட்டு மண்டபத்துச் சொத்துக்களாக ஆகிவிட்டன.

கண்ணாடி முன்னால் ஆடையுடன் நின்றும் அஃதின்றி நின்றும் அவள் பார்த்துப் பார்த்துப் பூரித்த அங்கங்கள் எல்லாம் அசைவற்றுக் கிடந்தன. கண்ணாடியே எதிர் வந்து நின்றாலும் அதனைக் காண்பதற்கான ஒளியிழந்து விட்டன அவளது காந்தக் கண்கள்! எந்தக் கொம்பிலாவது தாவிடுவேன் என்று தழைத்துக் குலுங்கிய இளங்கொடி, நிலையற்ற நெஞ்சத்தால் இந்தக் கொடிதான் தேவையென்று

வானத்து மின்னற்கொடி மீது தாவிக் கருகியது போல் அந்தத் தங்கக் கொடி தரையினில் கிடந்தாள்!

நிலங்கிழிக்கும் நீரோடைபோல் நெளியும் இடை இனி நெளியாது. வளங்கொழிக்கும் அந்த உடல்வாகு இனிக் கலையரங்கில் ஆடாது. தொடங்கும்போதே வாழ்வை முடித்துக் கொண்ட அந்தத் தோகை மயில் தூங்கி விட்டாள்! இனி எழ மாட்டாள்!

''அய்யோ! வடிவு!'' என்று சுந்தரி, அன்புத் தங்கையின் மீது விழுந்து அழுதாள். வாளுக்குவேலி வைரமுத்தனின் மார்பில் புரண்டு கொண்டிருந்த முத்துமாலையை இழுத்துப் பிடித்தவாறு இன்னொரு கையில் கட்டாரியை ஓங்கிக் கொண்டிருந்தான்.

''என் தங்கையின் வாழ்வைக் கெடுத்தாய்! சுந்தரியின் தங்கையின் வாழ்வை முடித்தாய்... இதோ... உன் வாழ்வை!....''

அதற்குள் சுந்தரி ஓடிப்போய் வாளுக்குவேலியின் கையைப் பிடித்துக் கொண்டாள். தனது ஆத்திரத்தின் விளைவு வடிவின் உயிரையே பறித்து விட்டதே என்ற அதிர்ச்சியில் வைரமுத்தன் அப்படியே அசையாமல் நின்று விட்டான். அவன் மீது எந்தத் தவறு மில்லையென்று அவனது மனச்சாட்சி கூறிக் கொண்டிருந்தது. பட்டமங்கலத்திற்குப் பாகனேரி அம்பலக்காரரால் ஏற்பட்ட அவமானத்திற்குப் பழிவாங்கக் கல்யாணியைத் திருமணம் செய்து கொண்டு அவளை வதைக்கத் தொடங்கியது தவறா?

ஆம்; தவறு என்றுதான் அவன் சகோதரி வீரம்மாள் வாதாடினாள்.

அக்காளின் அறிவுரை கேட்டுத் திருந்தியவன். ஆதப்பனை எண்ணெய்ச் செக்கிலே கட்ட முயற்சி செய்தது தனக்குத் தெரியாதென்றும் அது உறங்காப்புலியின் வேலையென்றும் கல்யாணியிடம் சொல்லக்கூட அந்தக்

கல்யாணி இடம் தரவில்லை. இடம் தராதது மட்டுமா? தன்னைத் தொடவே கூடாது என்று கடவுள்மீது சத்தியம் செய்து விட்டாள். அந்த நேரத்தில் வடிவாம்பாள் அழைப்பு அனுப்புவானேன்? சீர்வரிசையோடு வருக என்று செய்தி சொல்வானேன்? அதுவும் வைரமுத்தனின் தவறா?

அவன் வடிவு வீட்டுக்கு வருவது தவறென்றால் வாளுக்குவேலி வந்து தடுக்க வேண்டிய இடம் பட்டமங்கலமே தவிர, அந்தக் கணிகையின் வீடல்லவே! அதிலும் தடுத்த முறையிருக்கிறதே; அது யாராவது ஒப்புக் கொள்ளக்கூடிய முறையா? வருக என்று அழைத்த வடிவு, வந்தவனின் மனம் நொந்து போகும்படி நடந்து கொண்டதை மானமுள்ள எந்த மனிதனாவது பொறுத்துக் கொள்ள முடியுமா?

வைரமுத்தனே தவறு செய்திருக்கட்டும்; வடிவாம் பாள் வீட்டுக்குச் சீர்வரிசை அனுப்பியிருக்கட்டும்; அதைத் தடுத்து நிறுத்தும் முயற்சியில் பாகனேரியின் அம்பலக்காரர் வாளுக்கு வேலி, அவ்வளவு விரசமாக நடந்து கொள்ளலாமா? மைத்துனரும் மைத்துனரும் ஒரே வீட்டில் சந்திக்கக் கூடிய சூழ்நிலை உருவாகக் காரணம் யார்? வாளுக்குவேலிதானே!

பாவம்! வாளுக்குவேலிக்குக் கல்யாணியின் கவலை! அதற்காகத் தனது கௌரவம் பாழாகிப் போனால் கூடப் பரவாயில்லையென்று வடிவு வீட்டுக்கு வந்து வைரமுத்தனை அவமானப்படுத்தியது எந்த நியாயத் திற்கு உட்பட்டது?

வைரமுத்தன், இயற்கையாகக் கொடியவனல்லன்! கொலை வெறியனுமல்லன்! பாகனேரி, பட்ட மங்கலத்துப் பகையை வளரவிடாமல் பார்த்துக் கொள்வதிலே கூட மிகுந்த எச்சரிக்கையாகத்

தானிருந்தான். கல்யாணியின் காதலால் அந்தப் பகை, இருந்த இடம் தெரியாமல் போய்விடுமென்றுதான் எதிர்பார்த்து மகிழ்ந்திருந்தான்.

ஆனால் அதற்குள் உறங்காப்புலி விஷயம் ஆரம்பமாயிற்று! அது விஷப் பகையைப் புதிதாக விளைவித்தது! அதன் தொடர்பாக அருமை அண்ணன் வல்லத்தரையனையே இழந்திட வேண்டிய அளவுக்கு அவமானம்! அந்த அவமானத்தைக் கழுவிக் கொள்ளக் கல்யாணியைத் திருமணமென்ற பலிபீடத்தில் நிறுத்தினான். பிறகு அந்தச் செயல் தவறு என உணர்ந்தான்.

அவனைப் புரிந்து கொள்ளாத குற்றம் கல்யாணியினுடையது. உறங்காப்புலியின் இடைவிடாத உபதேசம் தான் அவனை வடிவாம்பாளைப் பற்றி நினைத்துக் கொண்டே இருக்கச் செய்தது. அந்த நினைவின் காரணமாகத்தான் வடிவு அழைத்தவுடனே ஓடிவந்தான்!

கரும்பைச் சுவைக்கத்தான் வந்தான்-கழுத்தை நெரிக்கவா வந்தான்? அவன் நினைக்காதது நடந்து விட்டது. அதற்குக் காரணம் அவனல்ல! வாளுக்கு வேலிதான்! வாளுக்கு வேலிதான்!

சாணை பிடிக்கும் கத்தியில் இருந்து கிளம்பும் பொறிகளைப் போல வைரமுத்தனின் மனச்சாட்சி, வாதங்களை வாரியிறைத்தது. அசையாமல் நின்ற வைரமுத்தன், வாளுக்கு வேலியைப் பார்த்து, ''மிதிபட மிதிபடப் புழுக்கூடப் புலியாகும் என்பார்கள், தெரியுமா?'' என்றான்.

''கொலைகாரனுக்குப் பேச்சு வேறா?'' என்று வாளுக்குவேலி சினந்து கூறினான். அதற்குள் சுந்தரி அவனைத் தடுத்து ''போதும்! என் தங்கை கன்னிப்

பெண்ணாகவே போய்விட்டாள்! அவரை நீங்கள் கொலைகாரர் என்று கூறி, உங்கள் தங்கை கல்யாணி நாச்சியாரின் மாங்கல்யத்தையும் பறித்து விடாதீர்கள்!'' என்று வாளுக்குவேலியின் கால்களைப் பிடித்துக் கொண்டு கெஞ்சினாள். அழுதாள்; புலம்பினாள்.

''எனக்கு இரக்கம் காட்ட வேண்டுமென்று யாரும் யாரையும் கெஞ்ச வேண்டாம்!'' என்று வைரமுத்தன் கம்பீரமாகச் சொன்னான்.

''ஆகா! வீராதி வீரன்! அதனால்தான் ஒரு பெண்ணைக் கொலை செய்துவிட்டு வீரம் பேசுகிறான்!'' வாளுக்குவேலி ஆர்த்தெழுந்தான். வைரமுத்தன் வாளுக்கு வேலியை எதிர்க்கத் தயாரானான்.

''வேண்டாம்! தயவு செய்து போய்விடுங்கள்! உங்களால் என் தங்கை செத்தாள் என்று சத்தியமாக யாரிடமும் சொல்ல மாட்டோம்! திடீர் நெஞ்சு வலி! அதனால் இறந்துவிட்டாள் என்றே ஊராருக்குச் சொல்லுகிறோம். தங்கையை இழந்து தவிக்கும் என் மீது இரக்கம் காட்டியாவது நீங்கள் போகமாட்டீர்களா?''

வைரமுத்தனிடம் கண்ணீர் மல்க வேண்டினாள் சுந்தராம்பாள்! நெற்றியை விரலால் அழுத்திக் கொண்டு சிறிது நேரம் நின்றிருந்த வைரமுத்தன், விர்ரென்று அங்கிருந்து கிளம்பினான். பட்டமங்கலத்து வண்டி, வடிவு வீட்டு வாசலை விட்டுப் புறப்பட்டது.

கல்யாணி எங்கே தனது கணவனுடன் சமாதானத்திற்கு இறங்கி வந்துவிடப் போகிறாளோ என்ற அச்சத்தால் அவன் வடிவாம்பாள் வீட்டில் கும்மாளம் போட்டுக் கொண்டிருக்கிறான் என்ற விரிவான கதையைப் பட்டமங்கலம் அரண்மனையில் கட்டி விட்டான் உறங்காப்புலி!

''ஏ அப்பா! வடிவாம்பாளும் நம்ப அம்பலக்காரரும் தெருவிலே கைகோத்துக் கொண்டு நடந்தே

போனர்களாம்!''

''அது மாத்திரமா? கோயிலுக்குள்ளேயே போயி மாலை மாத்திக்கிட்டாங்களாம்!''

''அடுத்த மாதம் நம்ப பட்டமங்கலத்துப் பிள்ளையார் கோயில் திருவிழாவிலே வடிவாம்பாதான் நடனமாடப் போறாளாம்!''

வைரமுத்தனையும் வடிவாம்பாளையும் பற்றித் தன்னைச் சுற்றியுள்ளோர், தனது காதில் விழும்படி பேசியதைக் கேட்டு, கல்யாணி இப்போது கண் கலங்கவில்லை. அவள், தனது வாழ்வைப் பற்றி ஒரு முடிவுக்கு வந்தவிட்ட காரணத்தால், அந்த விகாரமான செய்திகள் அவளை உறுத்தவில்லை. பாகனேரியில் பிறந்தோம். பட்டமங்கலத்திற்கு வந்தோம்! உயிர் இருக்கும் வரையில் புகுந்த வீட்டில் ஒரு மரக்கட்டை போலாவது வாழ்க்கை நடத்துவோம். கொண்ட காதல், கண்ட கனவு எல்லாமே அந்த ஒரு நாள் இரவு தந்த இன்பத்தோடு மறைந்து மாய்ந்து போய்விட்டன! ''கல்யாணி சந்தோஷமாக இருக்கிறாள்'' என்று அண்ணன்கள் இருவரும் எண்ணிக் கொண்டிருந்தால் போதும்! அதுவும் எத்தனை நாளைக்கு? விவகாரங்கள் போகிற வேகத்தைப் பார்த்தால் நிலைமை இங்கு எப்படியென்பது பாகனேரிக் குடும்பத்திற்குத் தெரியத் தான் போகிறது! அதையும் சகித்துக் கொள்கிறேன் அண்ணா, என்று அவர்களைச் சமாதானப் படுத்திவிட்டு இங்கேயே கிடந்து தேய்ந்து போக வேண்டியததான்!

கல்யாணி இப்படி மனத்தைத் திடப்படுத்திக் கொண்டிருந்தாள். ஆனால் வடிவாம்பாள் - வைர முத்தனைப் பற்றிய ''வைபோக''ச் செய்திகள் அவளை அழ வைப்பதற்குப் பதிலாக, அவள் எடுத்துள்ள

முடிவுதான் சரியானது என்பதற்குச் சாட்சியங்களாக அமைந்தன.

பட்டமங்கலம் நோக்கி, வைரமுத்தன் வண்டியில் வந்து கொண்டிருந்தான். அவனது கரங்களால் கசக்கி எறியப்பட்ட கன்னி மலர் வடிவாம்பாளின் உருவம் அவன் கண்களை விட்டு மறையவே இல்லை. அவனால் இப்போது சாவதானமாகச் சிந்திப்பதற்கு முடிந்தது. உறங்காப்புலியினால் காரியங்கள் எப்படிக் கெட்டுப் போய் விட்டன என்பதை அவன் எண்ணிப் பார்த்தான். ஆனால் அந்த எண்ணத்தை அழித்து விட்டு, உறங்காப் புலிக்குப் பட்டமங்கலத்தின் மீதுள்ள பற்றும் பாசமும் வைரமுத்தனின் மனக் கண்ணில் விரிந்தன!

அவனுக்குத் தெரியாது; பட்டமங்கலத்திற்கு அதிபதியாகிவிட, உறங்காப்புலி அக்னியூ துரையுடன் பேரம் பேசிக் கொண்டிருக்கிற இரகசியம்! பாகனேரிக் குடும்பத்தைப் பழி வாங்க வேண்டுமென்பதில் உறங்காப்புலி குறியாக இருப்பதிலும் தவறவில்லை. அதைப் பொருட்டுத்தாமல் நட்புப் பாராட்டலாம் என்று அக்காளும் அவனும் நினைப்பதிலும் தவறில்லை. தங்களை நம்பி வந்துவிட்ட கல்யாணிக்காக வைர முத்தனும் வீரம்மாளும் எடுத்த முடிவு அது!

ஆனால் அந்த முடிவின்படி செயல்பட அந்தக் கல்யாணிதானே தடையாக நின்றுவிட்டாள்! அவள்தான் தனது அண்ணன் ஆதப்பனுக்கு இழைக்கப்பட்ட அவமானத்திற்காக அவசரப்பட்டு ஒரு முடிவுக்கு வந்தாள் என்றாலும் அவளைப் போலவே அவசரப்பட்டு அவனும் உடனடியாக வடிவாம்பாள் வீட்டுக்குச் சீர்வரிசைகளை அனுப்பி வைக்க வேண்டுமா? அதனால் ஏற்பட்ட விபரீதம்; ஏ! அப்பா! நினைக்கவே உடல் நடுங்குகிறதே!

தங்கை கல்யாணியின் வாழ்வில் புயல் புகுந்திட லாகாது என்றுதானே வானுக்குவேலி, வடிவு வீட்டுக்குச் சென்றான்! அந்த அண்ணன் தனது தங்கை மீது கொண்டுள்ள அன்புக்காகச் செய்த காரியத்தை நினைத்துப் பார்த்தாவது வைரமுத்தன் திருக்கோட்டியூரிலிருந்து திரும்பி வந்திருக்க வேண்டுமேயல்லாமல் வீண் வம்பாக வடிவாம்பாள் வீட்டுக்குள் நுழைந்திருக்கலாமா?

அய்யோ! ஒரு பெண்ணைக் கொன்ற பாபம்! அதற்குப் பிராயச்சித்தமே கிடையாது! இன்னொரு பெண்ணைச் சுகமாக வாழ வைத்தாலாவது அந்தப் பாபம் தீருமா? வடிவு கொல்லப்பட்டது ஊருக்குத் தெரியாது! அதை மறைப்பதற்குச் சுந்தராம்பாள் தயாராக இருப்பது ஏன்? கல்யாணிக்காக! கல்யாணிக்காக! அந்தக் கல்யாணியை எப்படியாவது சமாதானம் செய்து, மன்னிப்புக் கேட்டுக் கொண்டாவது வாழ வைப்பதுதான் வைரமுத்தனின் கடமை!

நீண்ட நேரச் சிந்தனையில் அவன் எடுத்த முடிவு மீண்டும் கல்யாணியைச் சமாதானப்படுத்த முயற்சி செய்வதுதான்!

பட்டமங்கலத்து அரண்மனை வாசலுக்கு வண்டி வரும்போது நடுநிசியாகி விட்டிருந்தது. வைரமுத்தன் வண்டியிலிருந்து இறங்கும்போது உறங்காப்புலி மட்டும் வரவேற்று உள்ளே அழைத்துச் சென்றான். காவல் வீரர்கள் இருபுறமும் நின்று வணக்கம் தெரிவித்ததைக் கூடக் கவனிக்காமல் வைரமுத்தன் நேராகக் கல்யாணியின் அறைப்பக்கம் சென்றான்.

அதைக் கண்ட உறங்காப்புலி, உதட்டைப் பிதுக்கிக் கொண்டே கூடத்தில் கிடந்த சாய்வு நாற்காலியில் இரண்டு கால்களையும் அகல விரித்து நீட்டிக் கொண்டு

சாய்ந்து விட்டான். அவன் உட்கார்ந்து விட்டதை வைரமுத்தன் பார்த்து, நல்ல வேளை! பின் தொடர்ந்து வரவில்லை, என்ற ஆறுதலுடன் கல்யாணியின் அறைக் கதவின் அருகே விரைந்து நடந்து அந்தக் கதவை மெல்லத் தட்டினான். பதில் இல்லை. ''கல்யாணி! கல்யாணி!'' என்ற கூப்பிட்டுப் பார்த்தான். நிசப்தம் குடி கொண்டிருந்தது.

வைரமுத்தனுக்குக் குழப்பம் மிகுந்தது. பலமாகக் கதவைக் தட்டவும் அவனுக்குக் கூச்சமாக இருந்தது. மனைவியிடம் மண்டியிட முயலுகிறான் என்று அரண்மனையிலிருப்போர் கேலி பேசிவிடுவார்களோ எனும் கூச்சம்தான். மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு, ''கல்யாணி!'' என்று உரக்கக் கூப்பிட்டுக் கொண்டே, கதவையும் பலமாகத் தட்டிக் கொண்டேயிருந்தான்.

அந்தச் சப்தத்தில் சற்றுத் தொலைவில் உள்ள அறையில் தூங்கிக் கொண்டிருந்த வீரம்மாள் விழித்துக் கொண்டாள். இருந்தாலும் எழுந்து வெளியே வரவில்லை. வைரமுத்தனை வெறுப்பது போலவே கல்யாணி வீரம்மாளையும் வெறுக்கிறாள் என்பது அவளுக்குத் தெரியும். அதனால் நமக்கு எதற்கு வம்பு என்று கண்களை மட்டும் திறந்து கொண்டு கட்டிலில் படுத்துக் கொண்டிருந்தாள்.

இவ்வளவு நேரம் கதவைத் தட்டியும் கூப்பிட்டும் கூடக் கல்யாணி அறையிலிருந்து பதிலே வர வில்லையே-அவள், அவனோடு பேசாவிட்டாலுங்கூட, கதவையாவது திறந்துவிட்டு வெளியே வந்து விடலாமல்லவா? வீரம்மாள் கொஞ்சம் அதிர்ச்சியுடன் யோசித்தாள்.

கூடத்துச் சாய்வு நாற்காலியில் படுத்த உறங்காப்புலி, குறட்டை விட்டுக் கொண்டிருந்தான்.

அவன் குடித்த குடிக்கு இவ்வளவு நேரம் விழித்துக் கொண்டிருந்ததே பெரிய காரியம்! நிறையக் குடித்து விட்டு வந்தான் என்பதினால்தான் அன்று வீரம்மாள் அவனைத் தனது அறைக்குள்ளே படுக்க அனுமதிக்கவில்லை.

கல்யாணியின் அறைக்குள்ளிருந்து சிறிய ஒலி கூடக் கேட்காதது வைரமுத்தனையும் திகைப்பில் ஆழ்த்தியது. கதவுகளின் இடுக்கின் வழியாகப் பார்த்தான்-வெளிச்சம் தெரிகிறதா அறைக்குள் என்று! தெரிந்து கொள்ள முடியவில்லை! காவல் வீரன் ஒருவனைக் கைதட்டி அழைத்துக் கதவுக்கு மேலே நிலைப்படியில் தாவி ஏறச் சொல்லி, சாளரத்தின் வழியாக விளக்கு எரிகிறதா, வெளிச்சமிருக்கிறதா என்று பார்க்கச் சொன்னான்.

அவன் ஆணைப்படி ஏறிப் பார்த்த அந்தக் காவல் வீரன், ''இல்லீங்க எஜமான்! ஒரே இருட்டா இருக்கு!'' என்றான். ''விளக்கு எரியவில்லை'' என்று வீரன் சொன்னது வீரம்மாளின் காதுகளில் விழுந்தது. ஒருவேளை விளக்கு அணைந்து போயிருக்குமா? வீரம்மாளின் உள்ளத்தில் இந்தக் கேள்வி எழுந்தது!

அதற்குள் கல்யாணியின் அறைக் கதவை அதிவேகமாகவும், ஆத்திரத்துடனும், ஏதோ ஓர் ஆவலுடனும் வைரமுத்தன், தனது காலால் ஓங்கி உதைத்தான். இரண்டு தடவை அவனது பலமிக்க உதைகளைத் தாங்கிக் கொண்ட அந்தக் கதவுகள், மூன்றாவது உதைக்குப் பணிந்து உடைந்து விழுந்தன! வெளிப்புறத் தூண் ஒன்றில் எரிந்து கொண்டிருந்த சிறிய தீப்பந்தத்தை வைரமுத்தன் கையில் எடுத்துக் கொண்டு அந்த அறைக்குள்ளே பாய்ந்து சென்றான்.





# 42

இருண்டு கிடந்த கல்யாணியின் அறைக்குள் வைரமுத்தன் கையில் எடுத்து வந்த தீப்பந்த வெளிச்சம் பரவியது. அவனது கண்கள் முதலில் அங்குள்ள கட்டில் மீதுதான் தாவின. அதில் கல்யாணி இல்லை. சந்தேகத்தில் தான் எடுத்த எடுப்பில் கட்டிலைப் பார்த்தான். அவள் இல்லையென்றதும் தீப்பந்த்தை உயர்த்திப் பிடித்து உத்திரத்தை நோக்கினான்.

அவன் நினைத்தவாறு எதுவும் நடக்கவில்லை. கதவுகள் உடைந்து விழுந்ததும் அவன் வேகமாக உள்ளே நுழைந்து வந்தபோது அவன் கடந்து வந்த ஒரு மூலையிலேயே அந்த அறைக்குள் கல்யாணி நின்று கொண்டிருந்ததை அவன் கடைசியாகத்தான் பார்த்தான்.

இவ்வளவு அமளிக்கும் ஆடாமல் அசையாமல் எவ்வளவு நெஞ்சு அழுத்தத்துடன் நின்று கொண்டிருக்கிறாள் என்று வியப்படைந்த வைரமுத்தன், அவளருகே சென்று, ''என்ன கல்யாணி இதெல்லாம்? எவ்வளவு நேரமாகக் கதவைத் தட்டுகிறேன்; என்னவென்று கேட்கக் கூடாதா?'' என்று கடுமையைக் கால் பாகமும் கனிவை முக்கால் பாகமும் கலந்து கேட்டான்.

''உங்களை இந்த இரவு நேரத்தில் யார் உள்ளே வரச் சொன்னது? அதுவும் எவ்வளவு நாகரிகமாக வந்திருக்கிறீர்கள்?'' கடுகடுவென்று முகத்தை வைத்துக் கொண்டு அவள் அளித்த பதில் சுளீர் சவுக்கடிகளாய் வலித்தன அவனுக்கு! அந்த வலியையும் பொருட் படுத்தாமல் அவன் அவளிடம் பேசினான்.

''மனைவியிடம் கணவன் வருவதற்குக்கூட நேரம், காலம், அனுமதி இத்தனை விதி முறைகளும் இருக்கிறதா? வெளியூர் சென்ற கணவன் இன்னும் வரவில்லையே என்று மனைவியல்லவா கால் கடுக்க வாசலில் நின்று காத்துக் கொண்டிருக்க வேண்டும்!''

''என் பெற்றோருக்கு நான் மகள்! அண்ணன்களுக்குத் தங்கை! உங்களுக்கு மனைவி! முதலிரண்டு உறவுகளும் பாசம் நிறைந்தவை! மூன்றாவது உறவு மோசம் நிறைந்தது! அதனால் நான் எடுத்த முடிவில் மாற்றமில்லை-தயவு செய்து இங்கிருந்து போய் விடுங்கள்!''

''கல்யாணி, எதையும் தீர விசாரித்து அறிவதிலே தான் தெளிவு ஏற்பட முடியும். அதற்கேற்ற பொறுமை உன்னிடத்திலே கிடையாது என்பதுதான் எனக்குள்ள கவலை!''

''நான் மிகத் தெளிவாகவே இருக்கிறேன். தெளிந்த பிறகுதான் திடமான தீர்மானத்திற்கே வந்தேன். இனிமேல் உங்களிடம் எதை நான் தீர விசாரிக்க வேண்டியிருக்கிறது? காதல் என்ற புனிதமான சொல்லைப் பயன்படுத்திப் பரம்பரைப் பகையைத் தீர்த்துக் கொள்ளவும், பழிக்குப்பழி வாங்கவும் திட்டம் தீட்டிய உங்கள் திறமையைப் பாராட்டுகிறேன். மிகவும் நன்றி; போய் வாருங்கள்!''

''ஆதப்பனை இங்கு அவமானப்படுத்திட நடந்த முயற்சிக்கும் எனக்கும் சம்பந்தமே இல்லை, கல்யாணி! அப்படியிருந்தால் அவனை அக்னியூவிடமிருந்து விடுவித்துக் கொண்டு வந்திருப்பேனா?''

''பாரதம் படித்திருக்கிறேன் நான்! பரமாத்மா கிருஷ்ணனுக்கு நவரத்தின சிம்மாசனம் போட்டு உட்கார வைத்து, அவனைப் படுகுழியில் தள்ளிக் கொன்று விடச் சதி செய்தான் சகுனி என்பது அந்தக் கதை! அங்கே கண்ணனுக்குச் சிம்மாசனம்! இங்கே என் அண்ணனுக்கு விடுதலை! சகுனிக்கும் உங்களுக்கும் நோக்கம் ஒன்றேதான்!''

''என்னைச் சகுனியோடு ஒப்பிடுகிறாயா-சபாஷ்! என் மனைவியிடமிருந்து இப்படியொரு விருது பெறுவது எனக்கு மகிழ்ச்சியேதான்!''

''சகுனிகூடச் சூதுவலை பின்னுவதில்தான் சமர்த்தன்! அவன் மாதுவலை பின்னியதாக மகாபாரதத்தில் நான் படிக்கவில்லை!''

''கல்யாணி! நீ மனத்தில் எவ்வளவு புகைச்சலை வைத்துக் கொண்டு பேசுகிறாய் என்பது எனக்குப் புரிகிறது!''

''கொழுந்துவிட்டு எரிவதற்கு முன்பும் புகைச்சல் தோன்றும்-எல்லாம் எரிந்து முடிந்து அடங்கி அணைந்துவிட்ட பிறகும் புகைந்து கொண்டிருக்கும்! அதில் இரண்டாவது நிலை என் நிலை! கல்யாணி எப்போதோ இறந்து போய்விட்டாள். இப்போது நீங்கள் அவள் கல்லறைக்கு முன்னால் நின்று பேசிக் கொண்டிருக்கிறீர்கள்! உள்ளே வந்ததும்-கட்டிலைப் பார்த்தீர்கள்-உத்திரத்தை உற்று நோக்கினீர்கள். ஏன் என்று எனக்குத் தெரியும்! பைத்தியக்காரி தற்கொலை செய்துகொண்டு பழியை நம்மீது போட்டு விடுவாளோ

என்ற பயம்! அப்படியெல்லாம் செய்து விடமாட்டேன். நான் பிறந்த வீடு தற்கொலை செய்து கொண்டு நிலைமையைச் சமாளிக்கிற கோழைகளின் கூடாரமல்ல! அந்தப் பெருமையைக் காப்பாற்றுவேன்!''

''கேலி செய்கிறாயா கல்யாணி? அணுவளவு மானம் ஊனமுற்றாலும் ஆவியினை அர்ப்பணித்து அந்த மாசினைப் போக்கிக் கொள்வேன் என்று உயிர் துறந்த என் அண்ணன் வல்லத்தரையனைக் கேலி செய்கிறாயா? பாகனேரி என்னமோ வீரர் கோட்டம் போலவும், பட்டமங்கலம் பயந்தாங்குளிகளின் கூட்டம் போலவும், உன் அண்ணன்மார்கள் ஆணவமாக நினைப்பது போலவே நீயும் நினைக்கிறாய்! பரந்த மனப்பான்மையைப் பயந்த சுபாவம் என்றும், பெருந்தன்மையைப் படுகோழைத் தனமென்றும் எண்ணிக் கொண்டு ஆட்டம் போடுகிற பாகனேரிக்கு நான் நினைத்தால் ஒரே நொடியில் பாடம் கற்பிப்பேன்!''

எப்படிப் பேசிக் கல்யாணியை அமைதிப்படுத்திட வேண்டுமென்று வழியெல்லாம் சிந்தித்துக் கொண்டு வந்தானோ அதற்கு நேர்மாறாக உணர்ச்சி வசப்பட்டுப் பேச வேண்டிய நிலைமைக்கு வைரமுத்தன், அவனையறியாமலே தள்ளப்பட்டான்.

''பாகனேரியைப் பற்றி இழிவாக ஒரு வார்த்தை பேசுவதாக இருந்தாலும்-என் முன்னே நிற்க வேண்டாம்!''

கல்யாணியும் எரியும் தீயில் நெய்யை ஊற்றினாள். வைரமுத்தன் தன்னைக் காதலிப்பது போல் நடித்து ஏமாற்றி விட்டான் என்று அவள் கொண்ட முடிவை, யாராலும் மாற்ற முடியாத அளவுக்குத் தொடர் நிகழ்ச்சிகள் வந்து விட்டன. அதனால் வைரமுத்தன் வந்த நோக்கம் நிறைவேறவில்லை.

அதுவும் அவன் எங்கிருந்து வந்திருக்கிறான்? கல்யாணியைச் சுற்றி நடைபெற்ற பிரச்சாரத்தின்படி அவன் வடிவோடு கொஞ்சி மகிழ்ந்து, கூடிக் கலந்து, ஜோடிப் புறாக்களாய்ப் பறந்து, அதன் பிறகல்லவா திருக்கோட்டியூரிலிருந்து திரும்பி வந்திருக்கிறான்! அவன்மீது மணக்கின்ற சந்தனத்தில் வடிவின் மேனியில் பூசியிருந்த சந்தனமும் சேர்ந்து மணப்பதாகத்தானே கல்யாணி கற்பனை செய்து கொண்டிருந்தாள்!

அவளது கண்டிப்பு நிறைந்ததும் கட்டளையைப் போன்றதுமான அந்த வாசகம், வைரமுத்தனைத் தடுமாற்றமடையச் செய்தது!

''பட்டமங்கலத்தைப் பற்றி இழிவாகப் பேசுகிறவர்களும் என் முன்னே நிற்கக் கூடாது!''

''அதைத்தான் நானும் சொல்லுகிறேன்; ஒருவர் முன் ஒருவர் நிற்க வேண்டாம்! இப்போதே வெளியே போய் விடுங்கள்! அதுதான் இருவருக்கும் நல்லது!''

''கல்யாணி! இது என் இடம்! என் மாளிகை! வெளியே போகச் சொல்லி உன்னை மட்டுமல்ல; உன்னைவிடப் பெரிய மகாராணியைக்கூட விரட்டுகின்ற அதிகாரம் உரிமை எல்லாமே எனக்குத்தான் உண்டு!''

''இங்கே என்னை வைத்துக் கொண்டே பழி வாங்கவும் துடிக்க விடவும் திட்டம் போட்டிருக்கிற நீங்கள், என்னை அவ்வளவு சுலபத்தில் வெளியே துரத்தி விடுவீர்களா?''

''துரத்தினால் என்ன செய்வாய்?''

''துக்கம் தாளாமல் அழுது கொண்டிருப்பேன்; அய்யோ, என்னை மன்னித்து விடுங்கள்-எங்கள் அண்ணன்களை எப்படி வேண்டுமானாலும் அவமானப் படுத்துங்கள், சகித்துக் கொள்கிறேன்-நீங்களும் நாளுக்கொரு நாட்டியக்காரி, வேளைக்கொரு விலைமாது

என்று கூத்தடியுங்கள்; அதையும் பொறுத்துக் கொண்டு என் கண்கண்ட தெய்வமே எனத் தொழுது வாழ்கிறேன் என்றெல்லாம் அக்கிரமங்களுக்கு அங்கீகாரம் வழங்கி, அடியாளுக்கும் இந்த அரண்மனையில் ஒரு மூலையில் இடம் கொடுங்கள் எனக் கெஞ்சுவேன் என எதிர் பார்க்கிறீர்களா? இந்தக் கல்யாணி வாளுக்குவேலித் தேவரின் தங்கையென்பது ஞாபகமிருக்கட்டும்!''

வைரமுத்தனின் உடலையே இரம்பம் கொண்டு இரு கூறாக அறுப்பது போலிருந்தது கல்யாணியின் பேச்சு. அமைதியிழந்து கத்தினான்.

''நீ இப்போதே இங்கிருந்து வெளியேற வேண்டும்! இது என் உத்தரவு! இனி இந்த வீட்டில் உனக்கு இடம் இல்லை!''

கல்யாணியின் முகத்தில் எந்த மாறுதலும் இல்லை! அதிர்ச்சியோ சோகமோ அவளை ஆட்கொள்ளவில்லை! அந்த உத்தரவை நிறைவேற்றத் தயாராகவே நின்று கொண்டிருந்தாள்.

''உறங்காப்புலியாரே!'' என்று வைரமுத்தன் உரக்கக் கூவிய குரல் காதைத் துளைக்கவே, அவன் தூக்கம் கலைந்து எழுந்தோடி வந்தான். ''கல்யாணியைப் பட்டமங்கலத்து வண்டியில் கொண்டுபோய் இப்போதே பாகனேரியில் விட்டு விட்டு வர வேண்டும்!''

வைரமுத்தன் சொன்னதை ஆமோதித்தான் உறங்காப்புலி!

வீரம்மாளினால் அதற்கு மேல் பொறுமையாக இருக்க முடியாத காரணத்தால் அங்கே ஓடி வந்து, ''தம்பி! இதெல்லாம் என்ன கூத்து? அம்மா கல்யாணி, நீ பேசாமல் இரு!'' என்று சப்தம் போட்டாள்.

''அண்ணி! என் முடிவை நான் முன்பே அறிவித்து விட்டேன்! அவர் முடிவையும் இன்று அறிவித்து விட்டார்! நீங்கள் எதற்காகக் குறுக்கே ஒரு 'குட்டி நாடகம்' ஆடுகிறீர்கள்? நான் வருகிறேன்! எல்லோருக்கும் வணக்கம்!''

கல்யாணி அந்த அறைப் பக்கமிருந்து நடந்து வந்து வாசலில் வண்டிக்காகக் காத்திருந்தாள். வைரமுத்தன், அவள் போவதைத் திரும்பிக்கூடப் பார்க்காமல், மேலேயுள்ள அறைக்குச் செல்லப் படிக்கட்டுகளில் ஏறினான்.

உறங்காப்புலி, வீரம்மாளிடம், ''நீயேன் கவலைப்படுகிறாய்? புருஷன் மனைவி சண்டை இப்படித்தான் இரண்டு நாளைக்கு இருக்கும். போகப் போகச் சரியாகி விடும். அடுத்த வாரம் கல்யாணியே இங்கு வரலாம்! அல்லது உன் தம்பியே பாகனேரிக்குச் சென்று கல்யாணியை அழைத்து வரலாம்'' என்று கூறிவிட்டு, கல்யாணியைத் தொடர்ந்து வாசல் பக்கம் வந்தான். அதற்குள் பெட்டி வண்டியும் வந்து நின்றது. கல்யாணி வண்டிக்குள் ஏறி உட்கார்ந்தாள். உறங்காப்புலியும் வண்டியில் ஏறப் போனான்.

''யாரும் எனக்குத் துணைக்கு வர வேண்டாம்! வண்டிக்காரன் வருவதே போதும்!'' என்றாள் கல்யாணி.

''ரொம்ப சரி!'' என்று கூறிவிட்டுக் கீழே இறங்கிய உறங்காப்புலி, வண்டிக்காரனிடம் ஏதோ கை ஜாடை காட்டவே, அவன் ஒதுங்கிக் கொண்டான்.

கல்யாணிக்குத் தெரியாமல் உறங்காப்புலியே வண்டியின் முகப்பில் உட்கார்ந்து ஓட்டத் தொடங்கினான். வண்டியின் முன்னும் பின்னும் திரைச்சீலை தொங்கியதால் உறங்காப்புலி வண்டியோட்டுவதைக் கல்யாணியால் தெரிந்து கொள்ள முடியவில்லை.

வண்டி செல்வதைப் பார்த்த வீரம்மாள் தனது அறைக்கு ஓடிச்சென்று அவசர அவசரமாக ஒரு கடிதம் எழுதினாள். அதைச் சுருட்டி, ஒரு வீரனிடம் கொடுத்து ''இதை யாருக்கும் தெரியாமல் உடனே பாகனேரியில் கறுத்த ஆதப்பனிடம் சேர்த்துவிடு!'' என்று கூறி அவனை விரட்டினாள்.

கல்யாணி செல்லும் வண்டி பட்டமங்கலம் எல்லையைக் கடப்பதற்கு முன்பே, பட்டமங்கலத்துக் குதிரையொன்றில் ஒரு வீரன் அந்த வண்டியைக் கடந்து சென்று கொண்டிருந்தான். அவன் யாராக இருக்கும்? எங்கே போகிறான்? என்ற ஆராய்ச்சியில் இறங்காமலே, உறங்காப்புலி வண்டியை ஓட்டிக் கொண்டிருந்தான். மாடுகளை அவன் அதட்டி ஓட்டவில்லை. ஒருவேளை அவன் குரல் கல்யாணிக்குப் புரிந்து விட்டால் என்ன செய்வது என்பதற்காக, வாயைத் திறக்காமலே வண்டி மாடுகளைச் சாட்டையால் அடித்து விரட்டிக் கொண்டிருந்தான்! அவனது மனைவி வீரம்மாள் கொடுத்த ஓலையை எடுத்துக் கொண்டுதான் அந்த வீரன் குதிரையில் ஓடிக் கொண்டிருக்கிறான் என்பது அவனுக்குத் தெரியாது.

பட்டமங்கலம் எல்லை கடக்கும் வரையில் திடமாக வண்டியில் அமர்ந்திருந்த கல்யாணி, அந்த எல்லையை வண்டி கடந்தபோது கண் கலங்கினாள். அவளால் அடக்க முடியாத அளவுக்கு இனம் தெரியாத ஒரு துயரம் பீறிட்டு எழுந்தது.

அம்மாவிடம் கோபித்துக் கொண்டு, 'இனிமேல் சாப்பிடவே மாட்டேன் போ' என்று கூறிவிட்டு, தாய் கெஞ்சக் கெஞ்சக் கோபத்தை அதிகமாக்கிக் கொண்டு அவளிடம் இரண்டு அடியும் வாங்கிக் கொண்டு படுத்துவிட்ட பிறகு, வயிறு பசியெடுத்துக்கிள்ள, அம்மா மறுபடியும் அருகே வந்து 'சாப்பிடு கண்ணே' யென்று கூற மாட்டாளா என எதிர்பார்த்துக் கொட்டை கொட்டையாக விழித்துக் கொண்டிருக்கும் குழந்தை, மறுபடியும் தாய் வந்து கூப்பிடும்போது கூட 'வேண்டாம் போ சோறு'

என்று மறுத்துவிட்டுப் புரண்டு படுத்துக் கொள்ளும். இன்னொரு தடவை வந்து, அழைக்க மாட்டாளா என்று தவியாய்த் தவிக்கும்; அதை வெளியிலும் காட்டிக் கொள்ளாது! அப்படியொரு வீம்பு! வெட்கம்! அந்தக் குழந்தையின் நிலைக்குக் கல்யாணி ஆளாகிவிட்டது போலவே தோன்றினாள்.

ஆயிரங் காலத்துப் பயிர் என விளக்கேற்றி வைத்து வாழ்வதற்கு வந்த சீமையில், நாட்கணக்கில் தனது வாழ்வுக்கு ஒரு முடிவு கட்டிவிட்டுத் திரும்புகிறோமே என்ற வேதனை, விழிகளில் குருதி நீராகக் கொட்டியது.

''சொல்வதைக் கேள்! தீர விசாரித்தால்தான் தெளிவு பிறக்கும்'' என்று அடிக்கடி அவர் சொன்ன போது, என்னதான் சொல்கிறார் என்று அதைப் பொறுமையாகக் கேட்காதது என் தவறுதானே! பொறுமையுடன் கேட்டிருந்தால் அவர்மீது எந்தக் குற்றமுமில்லை. அவருக்குத் தெரியாமலே வேறு யாரோ அண்ணன் ஆதப்பனைப் பழிவாங்கத் திட்டமிட்டு அவமானப் படுத்தியிருக்கிறார்கள் என்ற உண்மை ஒரு வேளை வெளிவந்திருக்குமோ? அதிலே சற்று அவசரப் பட்டுத்தான் அவர் என்னைத் தொடவே கூடாது என்று கடவுள் மீது ஆணையிட்டு விட்டேன்! அப்படியொரு அசாதாரணமான சபதம் செய்யாவிட்டால், வடிவைப் பற்றி அவர் நினைத்திருக்கவே மாட்டார்.

''இவ்வளவுக்குப் பிறகும் என் மீது அன்பு இருந்ததால்தானே கதவைத் தட்டித் தட்டிப் பார்த்துக் கடைசியில் உடைத்துக் கொண்டே உள்ளே வந்தார்! வந்தவர் என் உயிருக்கு என்ன ஆயிற்றோ என்றுதானே தவித்தார்! அப்போதுகூட நான்தான் முரட்டுத்தனமாகப் பேசிவிட்டேன். அவர் பிறந்த மண்ணைத் தாழ்த்துவது போலவும் நான் பிறந்த மண்ணை உயர்த்துவது போலவும் மறைமுகமாகப் பழித்துப் பேசியதுகூட என்னையும் மீறி வந்த ஆத்திரத்தின் விளைவுதானே!

''அந்த ஒரு நாள் இரவு-அண்ணன் ஆதப்பனை அவர் விடுவித்துக் கொண்டு வந்தாரே, அந்த இரவு எவ்வளவு பாசத்தை அமுதமாக என்மீது பொழிந்தார். அதையெல்லாம்கூட நினைத்துப் பார்க்காமல், அவர் சொல்வதைக் காது கொடுத்துக் கேட்காமலே, கர்ணகடூரமாக வார்த்தைகளைச் சிந்தி விட்டேனே! ''வெளியே போ!'' என்று அவர் என்னைப் பார்த்துக் கூறியதற்கும் நான்தானே காரணம்!

''இந்த நிலையில் நிசி வேளையில் பாகனேரி மாளிகைக்குள் நுழைந்தால் அண்ணன்கள் என்ன பாடுபடுவார்கள்! காடை கௌதாரி இருவரும்கூடத் தாங்கிக் கொள்ளமாட்டார்களே! அவ்வளவு அன்பல்லவா அவர்களுக்கு என் மேல்! ஊர்தான் என்னைப்பற்றி என்ன பேசும்? திரும்பி நான் பட்டமங்கலத்திற்கே போய் என்னதான் நடக்கிறது என்று பார்த்தால் என்ன? வீரம்மாள் அண்ணி என்னிடம் வைத்திருந்த ஆசையைக்கூட நான் அலட்சியப்படுத்தி விட்டேனே! திரும்பிச் சென்று அண்ணியின் காலில் விழுந்து என்னைக் காப்பாற்றுங்கள் என்று கேட்டால் தள்ளியா விட்டு விடுவார்கள்?''

சிந்தனையின் முடிவில் கல்யாணி ஒரு தீர்மானத்திற்கு வந்து, ''வண்டிக்காரா! வண்டியை நிறுத்து!'' என்றாள்.

''வண்டி நிறுத்தப்பட வேண்டிய இடத்தைச் சரியாகச் சொன்னாய் கல்யாணி!'' என்றவாறு உரக்கச் சிரித்துக் கொண்டே உறங்காப்புலி வண்டியை நிறுத்தினான்.

வண்டி நின்ற இடம் உறங்காப்புலியின் கேளிக்கைக் கூடமான அந்தப் பாழ்மண்டபம்!





# 43

எந்தக் கல்யாணியைத் திருமணம் செய்து கொள்ளப் பெண் கேட்டு உறங்காப்புலி உதாசீனப் படுத்தப்பட்டானோ அந்தக் கல்யாணி இப்பொழுது அவனிடம் தன்னந் தனியாகச் சிக்கிக் கொண்டு விட்டாள். பாகனேரித் தேர்த்திருவிழா முடிவுற்று வாளுக்கு வேலியுடன் திரும்பிக் கொண்டிருந்தபோது அண்ணனுடன் நடத்திய உரையாடல் கல்யாணியின் காதுகளில் இப்பொழுது ஒலித்தது.

''வல்லத்தரையனின் மைத்துனன் உறங்காப்புலியென்று ஒருவன் இருக்கிறான். அவன்தான் பாதிக்கு மேலாகப் பட்டமங்கலத்தாரைப் பாகனேரிக்குப் பகையாளியாக ஆக்கி வைத்திருப்பவன்.''

''அவனுக்கு ஏன் அண்ணா, பாகனேரி மீது அவ்வளவு வெறுப்பு?''

''அது தெரியாதா கல்யாணி உனக்கு? இந்தப் பாகனேரி அம்பலக்காரன் வாளுக்குவேலித் தேவன் தனது உயிருக்கு உயிராக நேசிக்கிற உடன்பிறப்பு, கல்யாணி நாச்சியாரை அந்த உறங்காப்புலி பெண் கேட்டுத் தூது அனுப்பினான். தூ! தூ! என்று காறித்-துப்பி அனுப்பி விட்டேன். பிறகென்ன கல்யாணி, நான் வளர்க்கும் சோலைப் பசுங்கிளியை, சொக்கத் தங்கத்தை ஒரு காண்டா மிருகத்தின் கையிலா ஒப்படைப்பேன்? இரண்டு

ஆண்டுகளுக்கு முன் அவன் பெற்ற ஏமாற்றத்தால் அவனுக்கு விளைந்த ஆத்திரத்தில் பழிவாங்கும் நெஞ்சுடன் திரிந்து கொண்டிருக்கிறான். பட்டமங்கலத்து அம்பலக்காரரின் சம்பந்தியானது மட்டுமல்ல, அங்கே அவன் குடியேறிக் கொண்டு பாகனேரிமீது பகைமூட்டுவதையே தனது தலையாய தொண்டாகக் கொண்டிருக்கிறான்.''

அண்ணனால் அன்றைக்கே அடையாளம் காட்டப்பட்ட அற்பனின் முன்னால் அவள் நின்று கொண்டிருந்தாள். கணவனையும் விரோதித்துக் கொண்டு வெளியேறி விட்டவள்-என் தங்கைக்கு ஒரு தீங்கு என்றால் ஊழித்தீயாக மாறி அந்த உன்மத்தர்களை அழிப்பேன் என்ற அண்ணனுக்கும் செய்தி எட்டாத இடத்தில் அகப்பட்டுக் கொண்டிருக்கிறாள். அதனால் உறங்காப்புலி அச்சமின்றி அடலேறு நடை போட்டுக் கொண்டே அந்தப் பாழ்மண்டபத்தில் அவளை அலட்சியமாகப் பார்த்தான்.

''கல்யாணி! ஏன் நிற்கிறாய்! இதோ கட்டிலில் உட்கார்! என்ன செய்வது? உன்னை என் கட்டிலறை மோகினியாகவே காலமெல்லாம் அமர்த்தி உன் பட்டு மேனியைத் தொட்டுதொட்டு இரசிக்கத் தாலி கட்டுகிறேன் என்று தவமிருந்து பார்த்தேன் உன் தமையனிடம்! என் தகுதி அவர் தகுதி அளவுக்கு உயர்ந்ததல்ல என்று கூறித் தட்டிக் கழித்து விட்டார். ஆனால் என் தவம் வீணாகவில்லை...தாமதமாகவாவது பக்தர்களுக்கு வரம் கொடுப்பதுதான் ஆண்டவனின் பெருமை! அந்தப் பெருமைக்குரிய பெம்மான் எப்படியோ உன்னை என் கையில் சேர்த்து விட்டார்! இந்தப் பாழடைந்த மண்டபம் உனக்குப் பிடிக்காமல் இருக்கலாம்-எனக்கு மட்டும் பிடிக்கிறதா என்ன? பஞ்சவர்ணக் கிளிகள் கொஞ்சி மகிழும் மரங்களுக்குத் தங்கத் தகட்டால் இலைகளும்,

வைரமிழைத்த கிளைகளும், வெள்ளியால் வேர்களுமா இருக்கின்றன! இல்லையே! இல்லையென்றாலும் கொஞ்சுகின்ற கிள்ளைகளால் மரத்துக்குப் பெருமை! அதைப்போல் நாம் மகிழ்ந்து கொஞ்சி இந்த மண்டபத்திற்குப் பெருமை சேர்ப்போம் கல்யாணி!''

அவன் வர்ணனையைச் சகித்துக் கொண்டு நின்ற கல்யாணி, ''சீ! ஆந்தை மனிதா! கோட்டானின் குலமே! நான் இப்போது கிளியல்லடா! புலி!'' என்று அவனை எரித்துச் சாம்பலாக்கி விடுவதைப் போலப் பார்த்தாள்!

''கல்யாணி! நான் இனியும் பொறுமையாகத்தான் கூறுகிறேன்! இது பாழ்மண்டபம் என்றாலும் பலமான பாதுகாப்பு இருக்கிறது! நீயே பார்த்தாயே சுற்றிலும் மறைந்து நிற்கும் வீரர்களை! இங்கே நீ ஒரு இன்பக்கனி! இறைவனருளால் எனக்கு வழங்கப்பட்ட ஆசைக்கனி! என் வாயில் வந்து தானாக விழுந்து தாகத்தைத் தணித்திடு!...இல்லையேல் கை நீட்டிப் பறித்துச் சுவைக்க வேண்டியிருக்கும்!''

''உறங்காப்புலி! நீ உணரக்கூடிய அளவுக்கு என்னால் எதுவும் சொல்லிட முடியாது! சொல்லச் சக்தியில்லை என்பதால் அல்ல; என்ன சொன்னாலும் உன் காதில் ஏறப்போவதில்லை என்பதால்!''

''என் காதில் ஏறாது என்கிறபோது, நீ என் கட்டிலில் ஏறி அமரவேண்டியதுதானே!''

அவள் கையைத் தொட்டு இழுத்தான். கல்யாணி அவன் கையைத் தட்டிவிட்டு ஒதுங்கிக் கொண்டாள். உறங்காப்புலி ஒரு பெரிய ஜாடியில் இருந்த மதுவை ஒரு கிண்ணத்தில் ஊற்றி உறிஞ்சிக் குடித்தான்! ''இதைவிடச் சுவையானது, போதை தரக்கூடியது உன் இதழ் தரும் மது என்பது தெரியும்! இருந்தாலும் ஒத்திகை பார்த்துக்

கொள்கிறேன்'' என்று சிரித்துக் கொண்டே கூறியவன், ''நீயும் கொஞ்சம் ஒத்திகை பார்க்கிறாயா?...இல்லை நேராக அரங்கேற்றத்தையே ஆரம்பிக்கலாமா?'' எனக் கேட்டுக் கொண்டே அவளை அணைத்திடத் தாவினான். அவள் சாதுர்யமாக விலகிக் கொள்ளவே அவனது தலை அங்கிருந்த தூண் ஒன்றில் நன்றாக மோதியது. அவன் தலையைத் தடவிக் கொள்வதற்குள், கல்யாணி அங்கே கிடந்த ஒரு கட்டாரியைக் கையிலே எடுத்து முதுகுப்புறமாக மறைத்துக் கொண்டாள்!

''கட்டாணி முத்தம் கேட்கிறேன்! நீயோ கட்டாரியைத் தூக்கிக் கொள்கிறாய்! கல்யாணி! என் கையைத் தட்டிக் கட்டளையிட்டால் எனது காவல் வீரர்களின் ஈட்டிகள் முள்ளம்பன்றி சிலிர்த்தது போல் உன் முன்னால் காட்சி தரும்! கட்டாரியைக் கீழே போடு! கட்டியணைத்து என் கன்னத்தின் பசியை முதலில் தீர்த்திடு! வா, கல்யாணி வா! வைரமுத்தன் உனக்கு வழங்க வேண்டிய இன்பத்தையெல்லாம் சேர்த்து வழங்குகிறேன்! அனுபவித்துப் பார்த்தால் பிறகு அணுப் பொழுதும் என்னை விட்டுப் பிரியமாட்டாய்! இதில் என் சுயநலம்கூட இல்லை! ''இம்'' என்றால் ஆயிரம், ''இச்'' என்றால் பதினாயிரம் முத்தங்கள் கொடுத்து என்னை நித்தமும் திணற வைக்க, கூப்பிட்ட குரலுக்குப் பல கோதைகள் இருக்கிறார்கள்-நீ பருவப் புறா! பசியோடிக்கிறாயே என்ற பொதுநல நோக்கம்தான் எனக்கு!''

இப்படிப் பேசிக் கொண்டே அவன் கல்யாணிமீது பாய்ந்து, அவள் கையிலிருந்த கட்டாரியைப் பிடுங்கிக் கொண்டான். ஓங்கி அறைந்தாள். அவளது சேலையை இழுத்துத் தனது கையில் சேலை முந்தானையைச் சுருட்டினான். அங்கிருந்த கலக்கல் மதுஜாடியை எடுத்து அவன் மீது வீசினாள். அதைத் தவிர்த்துக் கொண்ட உறங்காப்புலி, மூர்க்கத்தனமாக அவள் மீது பாய்ந்து

அவளது கழுத்தைப் பற்றிட முனைந்தான். அவள் அவனைக் காலால் உதைத்துத் தள்ளவே, அவனது முரட்டுப் பிடியில் அவளது கழுத்திலிருந்த தாலி சிக்கிக் கொண்டது. தாலியை அந்தத் தருக்கன் அறுத்து விட்டான் என்பதைக் கண்டதும் அந்தத் தமிழச்சி ஆவேசமாகக் கூச்சலிட்டு மயக்கமுற்ற நிலையில் கீழே விழுந்தாள். அந்தக் கூச்சல் கேட்டு அந்த மண்டபத்தில் குடியிருக்கும் நாய் ஒன்று பயங்கரமாகக் குரைத்தது. கீழே மயங்கிக் கிடந்த கல்யாணியையே பார்த்துக் கொண்டிருந்த உறங்காப்புலி, ஏதோ யோசித்தான்! நச்சு நினைவுகளின் அலைகள்! கல்யாணியின் தாலியைக் கையில் உருட்டிக் கொண்டே அந்த இடத்திலிருந்து சற்று நகர்ந்து சென்று ஒரு வீரனை அருகே அழைத்தான். அந்தத் தாலியை அவன் கையிலே கொடுத்துக் காதிலே ஏதோ சொன்னான். மண்டபத்து நாய் குரைத்துக் கொண்டேயிருந்தது. தாலியைப் பெற்றுக் கொண்ட வீரன், தலையை அசைத்து உறங்காப்புலியை வணங்கி விட்டுச் சென்றான். நாயின் குரைப்பு அடங்கி விட்டது. மீண்டும் மண்டபத்தைச் சுற்றி வழக்கமான ஆந்தை அலறல்-கோட்டான் சப்தம்-தவளைகளின் சங்கீதம் கேட்டுக் கொண்டிருந்தது. திடீரென்று கல்யாணி ஏறி வந்த பட்டமங்கலத்து வண்டியை யாரோ ஓட்டிக் கொண்டு போகிற சலங்கை ஒலி கேட்டது.

உறங்காப்புலி கல்யாணியின் முகத்தில் தண்ணீரைத் தெளித்தான். கோவலன் கொலையுண்ட இடத்தில் வீழ்ந்து அழுது எழுந்து நின்ற கண்ணகியைப் போல் கல்யாணி ஆக்ரோஷமாக எழுந்தாள். தாலியிருந்த கழுத்தைத் தடவிப் பார்த்துக் கொண்டாள்.

''என்ன கல்யாணி, தாலியைத் தேடுகிறாயா? அது ஒரு வேலிதானே பெண்களுக்கு! அந்த வேலியின் தடையும் இப்போது இல்லை! தைரியமாக வா! நான் தழுவத் தழுவ உன் உடல் நழுவ நழுவ அப்போதும் விடாமல் நான் தழுவத் தழுவ...எத்தனை வகை

இன்பங்கள்! அத்தனையும் சுவைத்திடக் கொடுத்து வைக்க வேண்டுமடி என் கோகிலமே!''

மீண்டும் தழுவிடத் தாவினான். அவள் ஓடினாள். மண்டபத்தைச் சுற்றிச் சுற்றி வந்தார்கள்... கல்யாணி அவன் கையில் சிக்கவில்லை! அவனும் அவளைச் சீரழிக்காமல் விடுவதில்லையென்று துரத்தினான்! அந்த மண்டபம் அதிர்ந்தது!

பாகனேரியில் ஆதப்பனை அந்த நடுநிசி நேரத்தில் அவசர காரியம் என்று தூக்கத்திலிருந்து எழுப்பச் சொல்லி, வீரம்மாள் கொடுத்த மடலைப் பட்டமங்கலத்து வீரன் கொடுத்தான்.

''தம்பி ஆதப்பனுக்கு வீரம்மாள் எழுதும் அவசர மடல்! மனத்தாங்கலின் காரணமாகக் கல்யாணி பாகனேரிக்குப் புறப்பட்டு வருகிறாள். என் கணவர் உறங்காப்புலியைப் பற்றித்தான் உனக்குத் தெரியுமே, அவரைத்தான் கல்யாணிக்குத் துணையாக அனுப்பியிருக் கிறான் வைரமுத்தன்! வழியில் எதுவும் கல்யாணிக்கு ஆபத்து நேரக்கூடும்! உடனே ஆவன செய்யவும்!''

மடலைப் படித்துவிட்டு ஆதப்பன் கொந்தளித்தான்! அண்ணன் வாளுக்குவேலியை எழுப்பிக் கடிதத்தைக் காட்டினான்! தங்கைக்கு ஒரு சிறு தீங்கு என்றாலும் ஊழித்தீயாக மாறுவேன் என்று சூளுரைத்த அண்ணன் அல்லவா? குதிரைகள் இரண்டு கொண்டு வந்து நிறுத்தப்பட்டன.

''தம்பி! நீ குறுக்கு வழியாகப் போ! நான் சாலைப் பாதையில் போகிறேன்!''

ஆதப்பனுக்கு ஆணையிட்டுவிட்டுக் குதிரையின் விலாப்புறத்தில் இரு கால்களாலும் உதைத்தான். குதிரை நாலு கால் பாய்ச்சலில் புறப்பட்டது. அவ்வாறே ஆதப்பன் குதிரையும் இறக்கை கட்டியது போல் பறந்தது.

உரிய நேரத்தில் கடிதம் போய்ச் சேர்ந்ததோ இல்லையோ என்ற சந்தேகம் வீரம்மாளுக்கு! வண்டிக்காரனை இறக்கி விட்டு விட்டு உறங்காப்புலி வண்டியோட்டத் தொடங்கிய காட்சியே அவள் வயிற்றில் புளியைக் கரைத்துக் கொண்டிருந்தது. தனது கணவனின் லீலா விநோதக் கூடத்தில் எந்த அசம்பாவிதமாவது கல்யாணிக்கு நடந்து விட்டால் என்ன செய்வது என்ற பதைப்பு வீரம்மாளை நிலை கொள்ளச் செய்யாமல் ஆக்கியது. அதனால் மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு அந்த மண்டபத்தை நோக்கி அவளும் புறப்பட்டாள்.

கல்யாணியைக் காப்பாற்ற எத்தனைத் துணைகள்! சாலை வழியாகப் பெரிய அண்ணன்! குறுக்குப் பாதையிலே சின்ன அண்ணன்! மண்டபத்தை நோக்கி அவளது அண்ணி வீரம்மாள்!

உறங்காப்புலி, மது அருந்திய வெறியிலும், கல்யாணியைக் கசக்கி எறிய வேண்டுமென்ற வெறியிலும், களைப்பில்லாமல் அவளைத் துரத்தினான். என்ன இருந்தாலும் பெண்தானே! ஓட முடியாமல் ஒரு தூணைப் பிடித்துக் கொண்டு வதங்கித் தொங்கும் கொடிபோல் ஆனாள்!'' அகப்பட்டுக் கொண்டாயா?'' என்று அவளை அணைக்கப் போன உறங்காப்புலியை வேகமாக இழுத்துக் கீழே தள்ளிவிட்டு, ''சே, நீங்கள் ஒரு மனிதனா?'' என்று கத்தினாள் வீரம்மாள்! தள்ளப்பட்ட வேகத்தில் உறங்காப்புலியின் தலை ஒரு கல்லில் மோதி மயங்கி விழுந்துவிட்டான். வீரம்மாள் உட்பட அவனைக் கவனிக்க அனைவரும் சூழ்ந்துகொண்ட நேரம் பார்த்துக் கல்யாணி அங்கிருந்து தப்பி ஓடத் தொடங்கினாள். அவளை யாரும் பார்க்கவில்லை. ஓடிப் போய்-இருட்டில் மறைந்து விட்டாள் கல்யாணி.

வாளுக்குவேலி பட்டமங்கலம் சாலையில் குதிரையில் வந்து கொண்டிருந்தபோது அவனுக்கு எதிரே

பட்டமங்கலத்துப் பெட்டிவண்டி வருவதைப்பார்த்து விட்டான். கல்யாணிதான் என்ற முடிவுடன் குதிரையில் இருந்து கீழே குதித்துக் ''கல்யாணி! கல்யாணி!'' என்று கூப்பிட்டுக் கொண்டே வண்டியின் பின்புறம் வந்தான். ஒரு கையில் தீப்பந்தத்தை வைத்துக் கொண்டு, இன்னொரு கையால் வண்டியின் திரைச்சீலையை நகர்த்தினான். வண்டிக்குள் அவன் கண்ட காட்சி! அய்யகோ! கல்யாணியின் தாலியைக் கழுத்தில் கட்டிக் கொண்டு ஒரு சொறிநாய் நின்று கொண்டிருந்தது. வாளுக்கு வேலி அந்த நாயை வெறிக்கப் பார்த்தான். நாயின் கழுத்திலிருந்த தாலியைத் தீப்பந்த ஒளியில் உற்றுப் பார்த்தான். ''கல்யாணியின் தாலி'' என்று ஒரு சீட்டு எழுதப் பட்டுத் தொங்கிக் கொண்டிருந்தது.

''கல்யாணீ!'' என்று அவன் கத்தியது அந்தப் பாதையிலிருந்த பாறைகளையும் மரங்களையும் பூகம்பம் உலுக்கியது போல் உலுக்கியது! நாயின் கழுத்தில் இருந்த தாலியைப் பறித்து எடுத்துக் கொண்டான். ''எங்கேயடா என் கல்யாணி?'' என்று வண்டியோட்டிய வீரனைக் கேட்டு, அவன் பதில் சொல்வதற்குள் அவனைத் தூக்கிச் சுழற்றி அங்குள்ள ஒரு பாறையில் அவன் உடலைச் சிதறு தேங்காய் போல உடைத்தான். வண்டியிலிருந்த நாய் அடிதாங்காமல் ஒடிற்று ஊளையிட்டுக் கொண்டே! மாடுகளை அவிழ்த்துத் துரத்தினான். பட்டமங்கலம் வண்டியைத் தீயிட்டுக் கொளுத்தினான். அந்த நெருப்பு ஜுவாலையில் ''கல்யாணி! கல்யாணி!'' என்று அவன் கத்தியது. அவனே தணற் பிழம்பாக ஆகிவிட்டதாகத் தோன்றியது.





# 44

ஆயிரம் பிரச்சினைகள் கொந்தளித்துக் குமுறினாலும் அவற்றுக்கிடையிலேயும் எந்தக் கல்யாணியின் நல்வாழ்வைத் தனது குறிக்கோளாகக் கொண்டு அவள் முகம் என்றைக்கும் மலர்ந்தே இருக்க வேண்டுமென்று தவம் கிடந்தானோ, அந்த அருமைத் தங்கையின் மாங்கல்யம்-மறவர், கள்ளர், அகம்படியர் மற்றுமுள்ள வகுப்பினரெல்லாம் குழுமியிருந்த மணவிழாப் பந்தலில் அணிவிக்கப்பட்ட மங்கல நாண்-நாயின் கழுத்தில் தொங்கவிடப்பட்டிருக்கின்ற அந்த அவமானகரமான காட்சியை வாளுக்குவேலியால் எங்ஙனம் பொறுத்துக் கொள்ள முடியும்?

களங்கம் வந்து சேர்ந்தது வீரக்கள்ளர் குலத்திற்கு மட்டுமல்லவே; அவன் அன்புக் கண்மணி, ஆசை உடன் பிறப்பு, கல்யாணியின் கதி என்ன ஆயிற்று என்றும் தெரியாமல் அல்லவா பதறினான்.

பாகனேரியின் விளக்கு பட்டமங்கலத்தில் இல்லற ஜோதியாக ஒளிகொட்டும் என்றல்லவா நம்பியிருந்தான். அந்த நம்பிக்கையில் இப்படியொரு எதிர்பாராத இடியா?

என்னதான் நேர்ந்திருக்கும் கல்யாணி நாச்சியாருக்கு? அவளை மீண்டும் உயிரோடு காணக்கூடிய வாய்ப்பே கிட்டாமற் போய்விடுமோ?

ஒரு தங்கையை அண்ணன் வளர்ப்பது போல் அல்லாமல், ஒரு தாய், தன் மகளை வளர்ப்பதுபோல் அல்லவா கல்யாணியை அவன் வளர்த்தான்!

அவளும் அப்படித்தானே அவனை நேசித்தாள்! அவன் பாசப் பிணைப்பில் கட்டுண்டு கிடந்தாள்! அந்தச் சகோதர பாசத்துக்கிடையே அதனையும் வெல்லக்கூடிய அளவுக்குக் காதலெனும் புதிய உறவு முளைத்தது; அந்த உறவும் தழைக்கட்டும்-கல்யாணியும் வைரமுத்தனுடன் வாழ்வாங்கு வாழட்டும் என்றுதான் இருவர் கரத்தையும் இணைத்து வைத்தான்...

ஆனால் இப்போது அந்த நாயின் கழுத்தில் தொங்கியது கல்யாணியின் தாலியா? இல்லை! இல்லை! பாகனேரியின் மானம், மரியாதை, கல்யாணியின் வாழ்வு எல்லாமேதான் அந்த நாயின் கழுத்தில் தொங்கவிடப் பட்டுவிட்டது... அவன் கையில் எரிந்து கொண்டிருந்தது தீப்பந்தமாக இல்லை... நெருப்புக் குழம்பை வானளாவக் கக்கிக் கொண்டிருக்கும் எரிமலை அது!

அந்த எரிமலையும் தோற்றுவிடத் தக்க வண்ணம் அவனது கண்களில் ஜுவாலை கிளம்பிக் கொண்டிருந்தது. ''கல்யாணி! கல்யாணி!'' என அலறிக் கொண்டே யிருந்தான். அந்த அலறல் அங்குள்ள மரங்களை யெல்லாம்கூட அசைத்து வீழ்த்திவிடும் புயலாக இருந்தது!

அந்தப் புயல் நடுவே வேகமாக ஒரு குதிரை ஓடி வரும் ஒலி! வாளுக்குவேலி, உடைவாளில் கையை வைத்தவாறு, கவனித்தான். குதிரையின் வேகம் கொஞ்சம் கொஞ்சமாகக் குறைந்து, அவன் முன்னால் குதிரை வந்து நின்றது! ''தம்பீ!'' என்று கதறிவிட்டான் வாளுக்குவேலி; குதிரையில் இருந்த ஆதப்பனைப் பார்த்தவுடன்!

அந்தக் குதிரையில் ஆதப்பன் மீது சோர்ந்தபடி சாய்ந்திருந்தாள் கல்யாணி! அவளைக் கண்டதும்

வாளுக்கு வேலியின் வாய் அடைத்துப்போய் விட்டது! கைகால்கள் அசைய மறுத்து விட்டன! எரிந்து கொண்டிருந்த வண்டியின் வெளிச்சத்திலும், அவன் கையிலிருந்த தீப்பந்த ஒளியிலும் ஆடாமல் குத்திட்டு நின்ற அவனது விழிகள் அவளது முகத்தையும் கழுத்தையும் ஒருசேர நோக்கிக் கொண்டிருந்தன.

கல்யாணிக்கும் அதே நிலை! உயிரற்ற உடலொன்று நிறுத்தி வைக்கப்பட்டது போல அவள் அண்ணனைப் பார்த்தபடி நின்றிருந்தாள்!

வாளுக்குவேலி இன்னும் சிறிது நேரம் அப்படியே இருந்தால் நெஞ்சு வெடித்து விடும் எனக் கருதிய கறுத்த ஆதப்பன், ''அண்ணா!'' என்றான் குரல் தழுதழுக்க!

அந்த ஒலி அவனுக்கு அசைவூட்டியது போலும்! உதடுகள் நடுங்கின! நெருப்புக் குன்றங்களில் இருந்து நீர்த்துளிகள் சொட்டின! உடல் ஆடிற்று! ''தங்கச்சி! கல்யாணி!'' வானமும் பூமியும் பிளந்தது போல இடி முழங்குமே, அதுபோலக் கத்திக்கொண்டு அவளிடம் ஓடினான். அவளோ, அவன் காலடியில் ''அண்ணா!'' என்று ஓலமிட்டவாறு விழுந்து விட்டாள்! இவளைத் தூக்கி நிறுத்திக் கொண்டே ஆதப்பனைப் பார்த்து ஆணையிட்டான்! ஆணையா அது? ஆக்ரோஷத்தோடு அறையப்பட்ட முரசங்களின் முழக்கம்; அரிமாக்கள் பல கூடி ஒரே நேரத்தில் கர்ச்சிப்பது போலக் கட்டளை பிறந்தது!

''ஆதப்பா! இனி அரை நொடியும் தாமதிக்கத் தேவையில்லை; கணவன் உயிரோடு இருக்கிறான்; கல்யாணி தாலியிழந்து வந்திருக்கிறாள்! இதற்குக் காரணம் என்ன? ஆராயத் தேவையில்லை; இந்த விளைவுக்கு யார் பொறுப்பானவர்களோ அவர்களை வேட்டையாட வேண்டுமே தவிர, விபரங்களைத் தேடி, விளக்கங்களை

நாடி ஓடவேண்டியதில்லை! பட்டமங்கலமா? பாகனேரியா? யார் வாழ்வது? அல்லது யார் அழிவது? இதுதான் இப்போது எழுந்துள்ள கேள்வி! குடும்ப விளக்குக் குப்பையிலே தூக்கி எறியப்பட்டது...குலப்பெருமை கூறும் திருமாங்கல்யம் குக்கலின் கழுத்தில் தொங்கவிடப்பட்டது! இதோ என் கல்யாணியின் தாலி சாட்சியாக உத்தரவிடுகிறேன்...துடித்துக் கொண்டிருக்கும் உன் தோளுக்கு வேலை தருகிறேன்...தொடங்கட்டும் போராட்டம் பட்டமங்கலத்தோடு!...பல்லவ மன்னரின் தளபதி பரஞ்சோதி வாதாபிலிருந்து பிள்ளையார் சிலையைத் தூக்கி வந்தான் பெற்ற வெற்றிக்கு அடையாளமாக! நாம் பெறப் போகிற வெற்றிக்கு அடையாளமாகப் பட்டமங்கலத்துப் பிள்ளையாரைப் பாகனேரிக்குத் தூக்கி வா! உம், படையுடன் புறப்படு! பட்டமங்கலத்து விநாயகருடன் பாகனேரிக்கு வா!... தம்பீ, இனிப் பொறுத்திட முடியாது என்னால்...பொறுத்தெல்லாம் போதும்...புறப்படடா என் உடன் பிறப்பே!''

எப்போது இப்படியொரு வரத்தை அண்ணன் அருளுவான் என்று காத்திருந்த கறுத்த ஆதப்பன், ''இதோ தயார் அண்ணா!'' என்று வீரம் பொங்கிடக் கூறிவிட்டுக் குதிரையில் தாவி ஏறினான். தன்னால் தானே ஏதோ விபரீதம் நடக்கப் போகிறது என உணர்ந்த கல்யாணி வாளுக்குவேலியிடம், சோர்ந்த தொனியில், ''அண்ணா... நான் சொல்வதைக் கேளுங்கள்...'' என்று ஆரம்பித்தாள்.

''கல்யாணி! நீ சும்மாயிரு! வெள்ளம் தலைக்கு மேல்! இனி எவ்வளவு உயரம் போனால் என்ன? வா போகலாம்!'' எனக்கூறி அவளைத் தனது குதிரையில் தூக்கி உட்கார வைத்துக் கொண்டு பாகனேரியை நோக்கிப் புறப்பட்டான் வாளுக்குவேலி!

அண்ணன் பிறப்பித்த ஆணை அமுத மாரியெனச் செவியிற் பாய்ந்ததாக எண்ணி, அப்போதே பாகனேரியிருந்து சில வீரர்களை அழைத்துக்கொண்டு பட்டமங்கலம் பிள்ளையார் கோயிலுக்குள் நுழைந்தான் ஆதப்பன். பட்டமங்கலத்தில் யாரும் எதிர்பாராத நேரத்தில் அந்தப் பிள்ளையார் கோயிலின் மீது ஆதப்பனின் படையெடுப்பு நடந்தது. அதனால் எதிர்ப்பேயின்றி அவன் நினைத்த காரியம் முடிந்தது. ஆனால் அதன் காரணமாக ஏற்படப் போகிற விளைவுகள் எத்தகையவைகளாக இருக்குமென்பதை ஆதப்பனும் அவனுடன் வந்த வீரர்களும் அறியாமல் இல்லை. எப்படியோ அன்றைக்கு பட்டமங்கலத்துப் பிள்ளையார் பாகனேரிக்குக் கடத்தப்பட்டு விட்டார்.

முதல் நாளிரவு தன் கணவன் கல்யாணியிடம் மூர்க்கத்தனமாக நடந்து கொண்ட செயல்களுக்காக மன்னிப்புக் கேட்கவும், அதன் தொடர்பாகப் பாகனேரியின் சீற்றம் பொங்கிப் பட்டமங்கலத்திற்கும் குறிப்பாகத் தன் தம்பி வைரமுத்தனுக்கும், கணவன் உறங்காப்புலிக்கும் தீமை ஏதும் நிகழாமல் இருக்கவும் பிரார்த்தனை செய்து கொள்ள வீரம்மாள் பிள்ளையார் கோயிலுக்குப் பூஜை நைவேத்யத் தட்டுக்களுடன் சென்றாள். அங்கே பிள்ளையாரைக் காணாமல் திடுக்கிட்டாள். அந்தச் செய்தி பட்டமங்கலம் முழுவதும் பரவியது. பாகனேரி ஆதப்பன்தான் பிள்ளையாரைத் தூக்கிக் கொண்டு போய் விட்டான் என்பதும் உறுதியாக்கப்பட்டு விட்டது.

''பட்டமங்கலத்துடன் போருக்குத் தயார் என்று ஓலை அனுப்புவதற்குப் பதில் நமது பிள்ளையாரைத் தூக்கிக் கொண்டு போயிருக்கிறார்கள். வலுவில் வந்துள்ள இந்த வாய்ப்பை வைரமுத்தன் நழுவவிட மாட்டான்!''

என்று வாளை உயர்த்திப் பிடித்துக் கொண்டு, வீரம்மாளிடம் சபதம் செய்தான் வைரமுத்தன்!

குற்றமனைத்தும் தனது கணவன் உறங்காப்புலியின் மீதுதான் என்பது தெளிவாகத் தெரிந்திருந்தும் வீரம்மாள் தனது கணவன் அவனது விபரீதப் பாதையில் வெற்றியடைய முடியாமல் தடுத்திட முனைந்தாளே தவிர, அவனைக் காட்டிக் கொடுத்துவிடத் துணியவில்லை! அதே நிலைதான் இப்போதும் அவளுக்கு! கல்யாணியைப் பாகனேரிக்கு வைரமுத்தன் துரத்திவிட்டான் என்றாலும்-அவள் கழுத்திலே தாலியற்றவளாகக் கண்ணீரும் கம்பலையுமாகச் சென்றிடக் காரணம் உறங்காப்புலியென்று வீரம்மாளுக்குத் தெரியும்! அந்த நிலையில் தனது ஆருயிர்த் தங்கையைக் காணும் எந்த அண்ணனும் இந்த முடிவைத்தான் எடுப்பான் என்பதும் அவளுக்குப் புரியும்! அனைத்தையும் மீறியவண்ணம் பதிபக்தி அவளது நாவை அசைய வொட்டாமல் தடுத்து வைத்திருக்கிறது. எனவேதான் வைரமுத்தன் வஞ்சினம் உரைத்தபோது அவள் மௌனமாக இருந்தாள்.

பரம்பரைப் பகை-இடையே காதல்-காதல் நிறைவேறுவதற்குள்ளாகப் பட்டமங்கலத்து வல்லத்தரையனுக்கும் உறங்காப்புலிக்கும் பாகனேரியில் இழைக்கப்பட்ட அவமானம்-அதற்குப் பழிவாங்க வீரம்மாளும் அவள் கணவனும் துடித்தபோது அவர்களே வியப்புறும் வண்ணம் கல்யாணியை மணக்க வைரமுத்தன் சம்மதம்- அவளை மணந்து பழிவாங்க வேண்டுமென்று அவன் திட்டம்-அந்தத் திட்டம் தீதானது என உணர்த்திய வீரம்மாளுக்கு வெற்றி-ஆனால் அந்த வெற்றி நீடிக்காமல் உறங்காப்புலியின் சதி-உண்மையைப் புரிந்து கொள்ளாமல் அவசரப்பட்ட கல்யாணி-கல்யாணி காட்டிய வெறுப்பினால் கருத்தழிந்த வைரமுத்தன்

வடிவு வீடு தேடிச் செல்லல் - கல்யாணியின் வாழ்வுக்காகத் தனது உயிரான காதலன் வாளுக்கு வேலியையே தியாகம் செய்ய முன்வந்த சுந்தரி-காதலனின் தங்கையைக் காப்பாற்ற நினைத்துத் தன் தங்கை வடிவாம்பாளையே இழந்த அவளது சோகம்-இப்படித் திசைமாறிச் சுற்றிவிட்ட நிகழ்ச்சிச் சக்கரங்கள்; இப்போது இரு நாட்டிற்குமிடையே போர் முரசங்களாக ஒலிக்கத் தொடங்கிவிட்டன.

''இதைத்தான் எதிர்பார்த்தேன்! சபாஷ்! பாகனேரியும் பட்டமங்கலமும் ஒன்றோடொன்று மோதிக் கொள்ளும் நேரமும்-மருது பாண்டியர் படையும் கோபால நாயக்கர் கூட்டமும் எமது படையிடம் வீழ்ச்சி அடையும் நேரமும் ஒன்றாகத்தான் அமையும் என்று எதிர்பார்த்தேன்! அமைய வேண்டுமென்று பிரார்த்தனை செய்தேன்! மிகச் சரியாகச் செய்து முடித்துவிட்ட உறங்காப்புலிக்கு எத்தனை சபாஷ் போட்டாலும் போதாது! என்ன வெள்ளை அய்யரே!'' என்று சிரித்துக் கொண்டே கர்னல் அக்னியூ உறங்காப்புலியின் முதுகில் தட்டிக் கொடுத்தான்.

வெள்ளை அய்யர், அக்னியூ துரையிடம் எப்படியாவது தந்திரமாகப் பேசிப் பாகனேரி பட்டமங்கலம் போராட்டத்தைத் தூண்டி விடாமல் செய்துவிட வேண்டுமென்று கருதினார்.

மருதுபாண்டியர், கோபால நாயக்கர், ஊமைத்துரை ஆகியோர் நடத்தும் போராட்டத்தை மேலும் சில நாட்கள் தாக்குப்பிடிக்க வேண்டுமானால் அவர்களுக்கு உதவியாகச் சென்றிருக்கும் பல்வேறு கள்ளர் நாட்டுப் படைகள் அந்தப் போர்க்களத்தை விட்டுத் திரும்பாமல் பார்த்துக் கொள்ள வேண்டும்!

பாகனேரியும், பட்டமங்கலமும் ஒன்றோடொன்று போர் தொடுக்கத் தொடங்கி விட்டால், விடுதலை

வீரர்களின் அணியில் இருக்கும் படைகளில் ஒரு பகுதி பாகனேரிக்கும், ஒரு பகுதி பட்டமங்கலத்திற்கும் துணையாக வந்து, பொது எதிரியான வெள்ளையனை எதிர்க்கும் வலிமை குறைக்கப்பட்டு விடும். அந்தக் காரியத்தைத்தான் கர்னல் அக்னியூ திட்டம் போட்டுச் செய்கிறான். அதற்குத் துணையாகத்தான் உறங்காப்புலி துரோகப் பணி புரிகிறான். பட்டமங்கலம் அம்பலக்காரர் பதவியல்லவா அவனுக்குப் பரிசாகக் காத்திருக்கிறது!

இந்தத் திட்டத்தை எப்படித் தகர்ப்பது? வைரமுத்தனையும் வாளுக்குவேலியையும் எப்படிக் காப்பாற்றுவது? இந்த முயற்சியில் ஈடுபடும் போது ஆங்கிலேயர் கோபமும் தன்மீது திரும்பிவிடக் கூடாது! இவ்வளவு யோசனைகளையும் செய்தவாறு வெள்ளை அய்யர், கர்னலிடம் அமைதியாகச் சொன்னார் அவரது எண்ணத்தை!

''பாகனேரியையும் பட்டமங்கலத்தையும் மோதச் செய்து பலகீனமாக்குவதால் உங்களுக்கு என்ன பலன்? உங்கள் வாக்குப்படியும் வகுத்துள்ள முறைப்படியும் விடுதலை வீரர்களை வீழ்த்திச் சிவகெங்கைச் சீமையை வசப்படுத்தப் போகிறீர்கள்! காளையார் கோயிலையும் பிடிக்கப் போகிறீர்கள்! இறுதி வெற்றி உங்களுக்கே என்று நிச்சயமாகிவிட்ட பிறகு, பாகனேரி-பட்டமங்கலம் ஆகிய நாடுகள் உங்களுக்குப் பணிந்துதானே நடக்கப் போகின்றன; அதற்குள் அவர்களை மோதவிட்டு அழிப்பானேன்?''

கர்னலுக்குக் கடுமையான கோபமே வந்துவிட்டது! ''மிஸ்டர் அய்யர்! கம்பெனியாரின் ராஜ தந்திரம் வேளைக்கொரு விதமாக மாறும்! பாகனேரி-பட்டமங்கலத்தைப் பொறுத்து முன்பு நாங்கள் எடுத்திருந்த கொள்கை ஒருவிதம்! இப்போது நாங்கள் மாற்றிக்

கொண்டிருக்கிற கொள்கை வேறு விதம்! அந்த இரண்டு நாட்டிலுமே எங்களுக்கு விசுவாசமான மனிதனாக இந்த உறங்காவிப்புலிதான் தென்படுகிறான். அதனால் உறங்காப்புலிக்கு ஏற்றாற்போல இப்போது எங்கள் திட்டங்களை மாற்றியிருக்கிறோம், இதில் குறுக்கிட்டு யோசனை சொல்லவோ, மாற்று வழி கூறவோ யாரையும் அனுமதிக்க முடியாது! மிஸ்டர் அய்யர்! நீங்கள் கூடத் திருப்பித் திருப்பிப் பாகனேரி-பட்டமங்கலம் ஒற்றுமையைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தால் உங்களைக் கூடக் கைது செய்து கொஞ்சகாலம் எங்கள் பாதுகாப்பில் வைக்க வேண்டியிருக்கும்.''

கர்னல் அக்னியூ இதைச் சொன்னதும் வெள்ளை அய்யருக்கு நடுக்கமெடுத்தது. ''சே! சே! நான் சும்மா என் மனதில் பட்டதைச் சொன்னேன். உங்கள் மனம் புண்பட்டிருந்தால் மன்னித்து விடுங்கள்! உங்கள் இஷ்டப்படி செய்யுங்கள்! உங்களை யார் என்ன செய்ய முடியும்? வெற்றித் தேவதை உங்கள் காலைச் சுற்றிக் கொண்டு திரிகிறாள்! நான் வருகிறேன்!'' என்று பல்லைக் காட்டிப் பேசிக் கொண்டே மெல்ல அதைவிட்டு வெள்ளை அய்யர் நகர்ந்து விட்டார்!

தனது திறமையினால்தான் கள்ளர் நாடுகள் இரண்டு பிரிவுகளாகிக் களம் காணப் போகின்றன என்பதைக் கர்னலுக்கு உணர்த்திய உறங்காப்புலி, பட்டமங்கலத்துப் படையுடன் இணைந்து பாகனேரியை எதிர்க்கவும், அதே சமயம் தனது ஆணைகளுக்குக் கட்டுப்பட்டு நடக்கவும் ஒரு படையைத் தனது பொறுப்பில் தந்து உதவுமாறு கர்னலிடம் கோரிக்கை வைத்தான். அந்தக் கோரிக்கை அக்னியூவினால் உடனடியாக ஏற்றுக் கொள்ளப்பட்டது.

பட்டமங்கலத்துப் பிள்ளையாரைக் கவர்ந்து சென்றிருப்பது சாதாரண விஷயமல்ல என்றும், அதனைப்

பட்டமங்கலத்து மக்கள் வேடிக்கை பார்த்துக் கொண்டிருக்கமாட்டார்கள் என்றும், வைரமுத்தன் அதற்குரிய நடவடிக்கைகளை உடனடியாக மேற்கொள்ளா விட்டால் தனது மக்களின் மதிப்பை இழந்து விடுவான் என்றும், அதனால் வைரமுத்தன் பாகனேரிமீது படையெடுப்பது நிச்சயமென்றும், இந்தப் போரில் வைரமுத்தனையும், வாளுக்குவேலியையும் தீர்த்துக் கட்டி விட்டு ஆங்கிலேயர் தரும் பரிசான அம்பலக்காரர் பட்டத்தைத் தான் பெறப் போவது உறுதியென்றும் அக்னியூ பிரபுவிடம் உறங்காப்புலி மகிழ்ச்சி பொங்கக் கூறினான்.

''உறங்காப்புலி! ஒன்றை மறந்துவிடாதே! பாகனேரியின் படைகள் தயாராவதற்குள் பட்டமங்கலத்துப் படை பாகனேரிப் பகுதிக்குள் நுழைந்துவிட வேண்டும். அதுதான் சரியான போர்த் தந்திரம்! எதிர்பாராத நேரத்தில் எதிரிகள் சுற்றி வளைத்துக் கொள்ளப்பட்டால்தான் திகைத்துத் தடுமாறிப் போவார்கள்! புரிகிறதா நான் சொல்வது?''

கர்னலின் ஆலோசனையைத் தலை தாழ்த்தி ஆமோதித்தவனாக உறங்காப்புலி விடைபெற்றுக் கொண்டான். ஆங்கிலேயக் கர்னல் அனுப்பிய படையில் ஆங்கிலேய வீரர்கள் ஓரிருவர்தான் இருந்தனர். மற்றவர்கள் அனைவரும் வெள்ளையர் படையில் சிப்பாய்களாக வேலை பார்க்கும் தமிழ் நாட்டுக்காரர்கள் தான்! தமிழர்களைத் தமது அடிமை வீரர்களாக வைத்துக் கொண்டே தலை வணங்காத் தமிழர்களை வீழ்த்துவதற்கு வெள்ளையர்கள் கையாண்ட சூழ்ச்சியை வியப்பதா? அந்தச் சூழ்ச்சிக்கு இரையாகி அவர்கள் காலடியில் சுருண்டு கிடந்த துரோகிகளை வெறுப்பதா?

நினைப்பதெல்லாம் நினைத்தபடி நடந்து வருகிறது என்ற மகிழ்ச்சியுடன் ஒரு கோப்பை மதுவை ஒரே வாயாக

உறிஞ்சிக் குடித்தான் அக்னியூ! அப்போது ஒரு ஆங்கிலேய வீரன் வியர்வை சொட்டச் சொட்ட அவன் முன்னால் ஓடிவந்து ஒரு மடலை நீட்டினான். வந்தவனின் முகத்திலும் மகிழ்ச்சியே படர்ந்திருந்தது. அக்னியூ, அந்த மடலை ஒருமுறை நோட்டமிட்டுவிட்டு, பூரிப்பால் துள்ளிக் குதித்து அவனே வாய்விட்டு உரக்கப் படித்தான். கர்னல் ஸ்ப்ரே என்பவன் எழுதிய கடிதம் அது!

சிறுவயலில் இருந்து காளையார் கோயிலுக்குப் போக ஒரு இரகசியப் பாதை இருக்கின்றது. அந்தப் பாதை மருதுப் படையினருக்கு மட்டுமே தெரியும். இப்போது கலீல் என்ற ஒரு துரோகியின் மூலம் அந்த இரகசியப் பாதையில் எப்படி நுழைவது என்பது தெரிந்து விட்டது. அந்த இரகசிய வழியாக கர்னல் ஸ்ப்ரே, தனது படைகளுடன் காளையார் கோயிலை வளைக்கப் புறப்படுகிறான். கர்னல் இன்ஸ் என்பவன் தாளாங்குடிக் கீரனூர் வழியாகக் காளையார் கோயிலைச் சூழ்ந்திடக் கிளம்புகிறான். கர்னல் அக்னியூ முத்தூர் வழியாகக் காளையார் கோயிலை நோக்கிச் சென்றிட வேண்டும். இந்த மும்முனைத் தாக்குதலின் மூலம் காளையார் கோயிலைக் கைப்பற்றுவதும், மருது வீரர்களின் படையைச் சின்னாபின்னப் படுத்துவதும் எளிது!

மடலில் இந்த விபரங்களைக் கண்ட அக்னியூ, முத்தூர் வழியாகக் காளையார் கோயிலுக்குச் சென்றிடத் தனது படைகளை ஆயத்தமாகுமாறு கட்டளையிட்டான்.







# 45

மாடுகளைக் கடத்திக் கொண்டு போவது மாட்டின் கொம்புகளை ஒடித்து எதிரியின் வீட்டு வாசலில் போடுவது-விளைந்து குலுங்கும் பயிர்களை நாசம் செய்து போருக்கு அறைகூவல் விடுவது கள்ளர் நாடுகளில் விரோதத்தைத் தீர்த்துக் கொள்ளக் கடைப்பிடிக்கும் முறைகள் என்றாலுங்கூட, போருக்கு ஆயத்தம் என்று அறிவிக்கப் பிள்ளையார் விக்ரகத்தைப் பெயர்த்தெடுத்துக் கொண்டு போவது என்பது புதுமுறை என்பது மட்டுமல்ல; பட்டமங்கலத்து மக்களைப் பெரிதும் பதட்டமடையச் செய்த காரியமாகவும் தோன்றியது!

பட்டமங்கலத்துப் பிள்ளையார் பாகனேரியில் பில்லாத்தா அம்மன் கோயிலுக்கு எதிரே வைக்கப்பட்டுப் பாகனேரி மக்கள் அனைவரும் திரண்டு வந்து பார்க்கத் தொடங்கினர்.

வைரமுத்தன் பாகனேரியுடன் போருக்குத் தயாராகிறான் என்றும், பட்டமங்கலத்துடன் நெருங்கிய தோழமை கொண்ட கள்ளர் நாட்டுப் படைகளின் உதவியை எல்லாம் கேட்டிருக்கிறான் என்றும், செய்திகள் பாகனேரிக்கு வந்து கொண்டேயிருந்தன. வாளுக்கு வேலியும் தன்னுடன் நட்புக் கொண்ட கள்ளர் நாடுகளுக்கு ஓலைகள் அனுப்பி உதவியைக் கோரும் பணியில் விறுவிறுப்புடன் ஈடுபட்டிருந்தான்.

ஆதப்பன், மேகநாதன் மற்றும் படைகளை நடத்திடும் துணைத் தளகர்த்தர்கள் பாகனேரி மாளிகைக் கூடத்தில் குழுமியிருந்தனர். அவர்களுக்கிடையே நடுநாயகமாக வாளுக்கு வேலி அமர்ந்து பட்டமங்கலத்தை எப்படி வெற்றி காண்பது என்பதற்கான வழிமுறைகளைக் கூறிக் கொண்டிருந்தான். அவன் கையொப்பமிட்டுக் கொடுத்த ஓலைகளைச் சம்பந்தப்பட்ட கள்ளர் நாடுகளுக்கு அனுப்பிட மேகநாதன் விடைபெற்றுக் கொண்டு புறப்பட்டான்.

வாளுக்குவேலி ஆதப்பனிடமும் தளகர்த்தர்களிடமும் போர்வாட்களை எடுத்துக் கொடுத்தான். அவர்கள் அவனுக்கு முன்னால் மண்டியிட்டு வணங்கி அந்த வாட்களைப் பெற்றுக் கண்களில் ஒத்திக் கொண்டார்கள்.

''எவ்வளவோ பொறுமையாக இருந்து பாகனேரிக்கும் பட்டமங்கலத்திற்கும் பகைமை மேலும் மேலும் வளராமல் இருக்கப் பாடுபட்டேன்! கள்ளர் நாடுகளின் கவனம் வேறு திசையில் திரும்பினால் விடுதலைத் தளநாயகர்களான மருது சகோதரர்களுக்கும் கோபால நாயக்கருக்கும் மறைமுகமாகச் செய்து வரும் உதவிகள் கூடச் செய்ய முடியாமல் போய் விடுமே என்று அஞ்சினேன். அதனாலேயே வலுவில் வம்புக்கு வந்த பட்டமங்கலத்து அம்பலக்காரர் வீட்டில் கல்யாணியைக் கொடுத்துச் சம்பந்தமும் செய்து கொண்டேன். ஆனால்...ஆனால் ..என்னால் தாங்கிக் கொள்ளவே முடியாத கொடுமையான அவமானத்தை எனக்கும் என் தங்கைக்கும், ஏன்-இந்த வாட்கோட்டை நாட்டுக்கும் இழைத்து விட்டது பட்டமங்கலத்துக் குடும்பம்! இதற்குப் பழிவாங்காமல் விட்டால் என் மானம் பறிபோய் விட்டதாகத்தான் பொருள்! நாயின் கழுத்தில் என் கல்யாணியின் தாலியைத் தொங்கவிட்டவர்களின் உடலைக் கூறு கூறாகப் பிளந்து நாய்க்கும் நரிக்கும்

விருந்தாக்காவிட்டால் இதோ நான் பிடித்திருப்பதற்குப் பெயர் வாளும் அல்ல! நானும் வாளுக்குவேலித் தேவனுமல்ல!''

''அண்ணா! உங்கள் அன்புத் தம்பியாம் நானும், இதோ எனது நண்பர்களும் செய்து முடிக்கக்கூடிய மிகச் சாதாரணமான காரியத்திற்குத் தாங்கள் எதற்காக இவ்வளவு பெரிய சூளுரை கூற வேண்டும்! உங்கள் விருப்பத்தை ஒரு நொடியில் முடித்திடும் ஆற்றலும் ஆண்மையும் உண்டு அண்ணா எங்களுக்கு!''

''இல்லையென்று சொல்லவில்லை ஆதப்பா! ஆனாலும் எதிரியின் பலத்தைக் குறைத்துக் கணக்கிட்டு விடக் கூடாது! பகைவரின் தாக்குதலைத் தாங்கவும் வெற்றிக்கான வழிமுறைகளை அறிந்து அவர்களை எதிர்த்துச் செல்லவுமான திறமையுடையதே சிறந்த படையாகுமெனக் குறள் குறிப்பிடுகிறது அல்லவா?''

''ஆம் அண்ணா! பழம்பெரும் படையாகவும் வீரர்கள் பலரை உடையதாகவும் பகைவரின் சேனை இருந்தாலுங்கூட அதற்குத் தலைமைதாங்கி நடத்துகிறவரின் வீரத்தையும் உறுதியையும் பொறுத்தே அதன் பெருமை அமையும் என்று அதே குறள் அறிவுறுத்தவில்லையா? அதன்படி ஆற்றலின் மொத்த வடிவான தாங்களே நமது படைக்குத் தலைமை தாங்கும்போது எதிரிகள் எம்மாத்திரம்?''

பாகனேரி மாளிகைக் கூடத்தில் போர்ப் பரணி முழங்கிக் கொண்டிருந்த போதுதான் சுந்தராம்பாளின் வண்டி வந்து மாளிகை வாசலில் நின்றது. அதிலிருந்து சுந்தராம்பாள் இறங்கி வருவதற்குள்ளாக, உள்ளேயிருக்கும் வாளுக்குவேலிக்குச் செய்தி வந்துவிட்டது.

சுந்தராம்பாள் கூடத்தைக் கடந்து ஒரு ஓரமாக மாளிகையின் உட்பகுதிக்குச் சென்று கொண்டிருந்தாள்.

என்றாலும் அவளது விழிகள், வாளுக்குவேலியைத் தரிசனம் செய்யத் தவறவில்லை. இருவர் விழிகளும் சந்தித்த போதிலும் வாளுக்குவேலி போருக்கான முன்னேற்பாடுகளை மறந்துவிடாமல் தம்பியுடனும் மற்ற தளகர்த்தர்களுடனும் கலந்து பேசிக் கொண்டு தானிருந்தான். சுந்தராம்பாள் கல்யாணியைப் பார்த்து ஆறுதல் கூற வந்திருக்கிறாள் என்பது வாளுக்குவேலிக்குத் தெரியும்.

சுந்தரியைக் கண்ட கல்யாணி, கண்ணீர்ப்பூ மரமாக நின்றாள்! யார் யாரை முதலில் தழுவிக் கொண்டு அழுதார்கள் என்று கூற இயலாவண்ணம் இருவரும் கட்டிப் பிடித்துக்கொண்டு கதறினார்கள்.

''அன்றைக்கு மணப்பெண் அலங்காரம் செய்வித்து மணவிழா மேடையில் அழைத்துப்போய் உட்கார வைத்த போது, இவ்வளவு சீக்கிரம் இப்படியொரு கண்ணைச் சுடும் காட்சியைப் பார்ப்பேன் என்று நினைக்கக்கூட இல்லையே! மாங்கல்யமும் கழுத்துமாய் திருமகளாகத் தோன்றிய அந்த மங்களகரமான நாள் எங்கே? இன்று மணாளன் உயிரோடிருந்தும் மாங்கல்யம் இழந்துவிட்டு வந்து நிற்கும் இந்த நாள் எங்கே?'' எனப் புலம்பினாள் சுந்தரி!

மழையெனக் கொட்டிக் கொண்டிருக்கும் கண்ணீரைத் துடைத்தவாறு கல்யாணி, சுந்தரியிடம் வடிவாம்பாளின் திடீர் முடிவைப் பற்றித் தனது இரங்கலைத் தெரிவித்தாள்.

''என்னம்மா செய்வது? இந்த இளம் வயதில் அதுவும் ஒரு பெண்ணுக்கு இதய நோய் இப்படிக் கொள்ளை கொண்டு போகும் என்று யார்தான் எதிர்பார்க்க முடியும்? வடிவின் இதயம் மட்டுமா வெடித்துச் சிதறியது! அந்த இதயத்தில் அவள் விதையூன்றிப் பயிரிட்டு வளர்த்த

ஆசைக் கொடியில் மலர்ந்திருந்த அற்புதமான கற்பனைப் பூக்கள் எல்லாம் கருகி உதிர்ந்துவிட்டன!'' என்று கூறிய சுந்தராம்பாள் பெருமூச்சு விட்டுக் கொண்டே ஒரு தூணில் சாய்ந்து அமர்ந்தாள்.

கல்யாணிக்கு அப்போதுகூட மனதிலே ஒரு ஆவல்! வடிவுக்கும் வைரமுத்தனுக்கும் தொடர்பு உண்டா என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டுமென்ற ஆவல்! ''வீட்டை விட்டே போடி'' என்று விரட்டி விட்டான்! வெளியில் சொல்ல முடியாத வெட்கக்கேடான சேட்டைகளையெல்லாம் சமாளித்து உறங்காப்புலியிட மிருந்து தப்பித்து வந்திருக்கிறாள். இத்தனைக்கும் காரணம் கணவன் வைரமுத்தன்தான் என்பது அவள் எண்ணம். இருந்த போதிலும் அவனுக்கும் வடிவுக்கும் தொடர்பு உண்டா என்பதை அறிந்து கொள்வதிலே ஒரு ஆர்வம்! இயல்பாகப் பெண்களுக்குரிய ஆர்வம்!

''அவருக்கும் வடிவுக்கும் ஏற்பட்ட உறவில் ஏதாவது திடீரென்று அதிர்ச்சி தரத்தக்க நிகழ்ச்சி ஏற்பட்டு, அதனால் இருதயம் வெடித்து...'' என்று கல்யாணி, சுந்தரியிடம் சந்தேகம் கேட்பது போலக் கேட்டாள்!

''வடிவுக்கும் வைரமுத்தனுக்கும் உறவே ஏற்படவில்லையே! ஏதோ உன் மீதுள்ள கோபத்தில் வடிவு வீட்டுக்குச் சீர்வரிசைகள் அனுப்பி உன்னை மிரட்டினாரே தவிர அவர் வடிவாம்பாள் வீட்டுக்கு வரவே இல்லையே; உன் பெரிய அண்ணாவும் நானும் என் வீட்டில் பேசிக் கொண்டிருந்தோம். அப்போது செய்தி வந்தது. வடிவு நெஞ்சு வலியால் துடிக்கிறாள் என்று! நாங்கள் ஓடிப் போய்ப் பார்ப்பதற்குள் வடிவு எங்களை ஏமாற்றிவிட்டுப் போய்விட்டாள்!...''

இட்டுக் கட்டிய கதைதான் சொல்லுகிறோம் என்று உணர்ந்தேதான் கல்யாணியிடம் சுந்தரி வடிவின்

மரணத்திற்குக் காரணத்தைச் சொன்னாள். வைரமுத்தன் தான் வடிவைக் கொன்றான் எனக் கூறி அவனைப் பற்றிய ஒரு விகார வடிவத்தைக் கல்யாணியின் நெஞ்சில் தீட்டுவானேன் என்று சுந்தரியைப் போன்ற ஒரு உத்தமமான பெண் நினைப்பது நியாயந்தானே! கல்யாணி நாச்சியாரின் வாழ்வில் படிந்துள்ள சோகமெனும் தூசுப்படலம் அகற்றப்பட வேண்டுமென்பதில் சுந்தரி இன்னும் அக்கறை கொண்டவளாகவே இருந்தாள்.

இருவரும் துன்பத்தைப் பகிர்ந்து கொண்டிருந்த பொழுது வாளுக்கு வேலியும் அங்கு வந்து சேர்ந்தான். சுந்தரியும் கல்யாணியும் எழுந்து நின்றார்கள்.

''கல்யாணிக்கு ஆறுதல்தான் கூற முடியுமே தவிர, இனி என் கல்யாணிக்கு வாழ்வளிக்க முடியாது சுந்தரி! இப்படியொரு முடிவு ஏற்பட்டுவிட்ட பிறகு இந்தக் கொடுமையான தீர்ப்பை, வாள்முனையை எழுத்தாணியாகக் கொண்டு, போர்முனையில் சிந்தும் இரத்தத் துளிகளால் எழுத முடியுமே தவிர, வேறு மார்க்கமிருப்பதாக எனக்கு தெரியவில்லை!'' என்றான் கம்பீரமான குரலில் வாளுக்குவேலி!

''அண்ணா! என் பொருட்டு ஒரு போராட்டமா? என் துயரம் என்னோடு முடியட்டும் அண்ணா! பாகனேரி, பட்டமங்கலம் மக்களுக்கு என்னால் எள் முனையளவு துயரமும் ஏற்பட வேண்டாம் அண்ணா!''

அழுதாள் கல்யாணி!

''அதையும் யோசிக்கத்தானே வேண்டும்! கள்ளர் நாடுகள் களம் அமைப்பதால் வெள்ளையர் கூட்டத்துக்குத் தானே கொண்டாட்டம்! போராட்டத்தைத் தள்ளிப் போட்டுவிட்டு, வெள்ளை அய்யர் போன்ற யாராவது ஒருவரை விட்டு பட்டமங்கலத்தாருடன் பேசிப் பார்க்கச்

சொன்னால் என்ன?'' என்று சுந்தராம்பாள் கருத்துத் தெரிவித்தாள்.

கல்யாணி, சுந்தரி இருவருக்கும் விளக்கமளிக்க வாளுக்குவேலி ஆரம்பிப்பதற்குள் ஆதப்பன் மிக வேகமாக உள்ளே வந்தான். மூவரும் அவனைப் பரபரப்புடன் நோக்கினர்.

''அண்ணா! நமது பாகனேரித் தேருக்குப் பட்டமங்கலத்து வீரர்கள் தீ வைத்துவிட்டார்கள்!''

''என்ன? பாகனேரிக்குள் பட்டமங்கலத்துப் படையா? எப்படி நுழைய முடிந்தது அவர்களால்?''

''ஒரு ஆங்கிலேய வீரன் தலைமையில் வந்திருக்கிறார்கள்! வழிமறித்த நமது வீரர்களிடம் வெள்ளைக்காரக் கம்பெனியாரின் படையென்று பொய் கூறியிருக்கின்றனர். நம்மவர் நம்பிவிட்டார்கள்! அதனால் அவர்கள் உள்ளே நுழைந்து திடீரெனத் தேருக்குத் தீ வைத்து விட்டார்கள்!''

''தேருக்குத் தீ! தேருக்குத் தீ! அப்படியானால் நேருக்கு நேர் மோதிட அவர்கள் முந்திக் கொண்டார்கள் என்று அர்த்தம்! ஆதப்பா! மற்ற கள்ளர் நாடுகளின் படைகள் வருவதற்காகக் காத்திருக்க வேண்டாம்! நமது படைகள் அணிவகுக்கட்டும்! பாகனேரித் தேருக்குத் தானே தீ வைத்தார்கள் தீயவர்கள். பட்டமங்கலம் ஊருக்கே தீ வைப்போம் நாம்! உதவாதினி ஒரு தாமதம்! உடனே புறப்படு! பட்டமங்கலத்துப் படைகளை விரட்டு!''

வாளுக்குவேலியின் ஆணையை நிறைவேற்ற ஆதப்பன் அங்கிருந்து சூறைக்காற்றெனக் கிளம்பினான்.

முரசுகள் அதிரும் ஒலியும், போருக்கான வாத்தியங்கள் எழுப்பும் ஒலியும் பாகனேரி முழுதும்

எதிரொலிக்க வீட்டுக்கொரு வீரர் வேலேந்தியும் வாளேந்தியும் பாகனேரி மாளிகைக்கு முன்னால் அணி வகுத்தனர்.

அருகாமையில் உள்ள கள்ளர் நாட்டுப் படைகள் எல்லாம் பாகனேரிக்குத் துணையாக வந்து சேர்ந்தன. பட்டமங்கலத்தில் வந்து குவிந்த பல்வேறு நாட்டுக் கள்ளர் படைகளும் பாகனேரி நோக்கி விரைந்து கொண்டிருந்தன.

மருது பாண்டியர்களுக்கும் கோபால நாயக்கருக்கும் உதவிடச் சென்று பொது எதிரியான ஆங்கிலேயரை எதிர்த்துப் போரிட்டுக் கொண்டிருந்த கள்ளர் நாடுகளின் படைகள் பாகனேரி அழைப்பை ஏற்று ஒரு பகுதியும், பட்டமங்கலம் அழைப்பை ஏற்று ஒரு பகுதியும், உடனடியாகத் திரும்பித் தங்களுக்குள் போரிட்டுக் கொண்டு குருதியைக் கொட்டுவதற்கு ஓடோடி வந்து கொண்டிருந்தன.

பாகனேரி மாளிகையைச் சுற்றிப் போர்ப்பறை ஓசையும், வீரர்களின் ஆரவாரக் குரலும், இடையிடையே துப்பாக்கிகளின் வேட்டுச் சத்தமும் கேட்கவே சுந்தராம்பாளும், கல்யாணியும் வாளுக்குவேலியின் கால்களைப் பிடித்துக் கொண்டு கண்ணீர் உகுத்தனர். பாகனேரித் தேரில் பரவிய தீயை அணைக்க முடியாத காரணத்தால் அந்தப் பழைய தேரின் ஆணிகள் வெடியொலி போலச் சப்தம் எழுப்பிக்கொண்டு தெறித்துக் கிளம்பின!

''இப்போதும் கேட்கிறேன் அண்ணா, இந்த யுத்தம் தேவைதானா?''

''அதைத்தான் நானும் உங்களிடம் கெஞ்சிக் கேட்கிறேன்; நீங்கள் மனது வைத்தால் இப்போது கூடப்

பாகனேரியின் பசுமை நிறைந்த பொட்டலைக் குருதி வழியும் பொட்டலாக மாற்றும் கொடுமையிலிருந்து பாதுகாக்கலாம்!''

வாளுக்குவேலியின் நரம்புகளில் இரத்தமல்ல; தீயின் ஜுவாலை பரவிக் கொண்டிருந்தது. அறுக்கப்பட்ட சேவற் கோழியின் கழுத்தைப்போலச் சிவந்திருந்தன அவன் கண்கள்! உதடு புண்படுமளவுக்குப் பல்லால் அழுத்திக் கொண்டிருந்த அவன், அவர்களைப் பார்த்துப் பதில் சொன்னான்:

''உங்கள் இருவருக்கும் சேர்த்தே பதில் கூறுகிறேன்! சமருக்குத் தோள் தட்டிவிட்ட எதிரியிடம் சமாதானக் கொடி பறக்கவிடுவது-மன்னிப்புக் கேட்பது- மண்டியிட்டுக் கெஞ்சுவது-இந்த வாக்கியங்கள் வாளுக்குவேலியின் வரலாற்றில் எழுதப்படவே கூடாது என்று வாள் ஏந்தியவன் நான்! சாவா? அல்லது வாழ்வா? வெற்றியா? அல்லது தோல்வியா? இந்தக் கேள்விகளுக்கு மட்டும் விடை காணும் இடமல்ல போர்க்களம்! மானமுள்ள மனிதனா அல்லவா என்பதற்கும் விடையளிக்கும் இடம்தான் அது என்பதை மறந்து விடாதீர்கள்! வெற்றியை என்னிடமிருந்து எவனும் பறிக்க முடியாது-அப்படியே பறிப்பதாயிருந்தாலும் வீர மரணம் என்ற பெரும் புகழை-விலை மதிக்க முடியாத கீர்த்தியை என்னிடம் கொடுத்து விட்டுத்தான் பறிக்க முடியும்! கல்யாணி! உன்னை நான் வாழ முடியாத வானம்பாடியாகச் சிறகொடித்துப் போட்டு விட்டேன்! இதோ என் சுந்தரி! அவளை வாழ்வின் வைகறைப் பொழுதில் நிற்க வைத்து மீண்டும் அவளை இருட்டு மண்டபத்திற்குள் தள்ளிவிட்டேன்! உங்கள் இருவருக்கும் நான் செய்த தவறுகளை நினைத்தால்தான் உங்களிடம் நான் மன்னிப்புக் கேட்டுக் கொள்ள வேண்டும்போல் தோன்றுகிறது!''

''அய்யோ, அப்படியெல்லாம் சொல்லாதீர்கள்!'' என்று கல்யாணியும், சுந்தரியும் அவன் பாதங்களில் மீண்டும் வீழ்ந்து கதறினார்கள். இருவரையும் இருகரம் பற்றித் தூக்கி நிறுத்தினான்.

கல்யாணியின் உச்சந்தலையைத் தனது உதட்டருகே கொண்டுவந்து முத்தமிட்டான்! அப்போது அவன் கனல் கக்கும் கண்களிலே புனல் பெருகிற்று!

''சுந்தரி!'' என்றான், அதற்குள் கல்யாணி மாடத்தில் உள்ள குங்குமச் சிமிழை எடுக்கப் போனாள்; அவனுக்குத் திலகமிட!

அவள் திரும்புவதற்குள் சுந்தரியின் கன்னத்திலே ஒரு முத்தம் பதித்தான். சுந்தரி உணர்ச்சிப் பிழம்பாக நின்றாள். கல்யாணி அவன் நெற்றியிலே திலகமிட்டாள்! சிமிழைச் சுந்தரியிடம் கொடுத்தாள். சுந்தரியும் தனது அன்புக் காதலனின் நெற்றியில் வீரத் திலகமிட்டாள்!...

வெளியே பாகனேரிப் படையும், பட்டமங்கலத்துப் படையும் மோதிக் கொள்கிற பேரொலி கேட்டது! வாளை உருவினான் வாளுக்குவேலி!...அந்த வாளுக்கு ஒரு முத்தம் கொடுத்துவிட்டு உருவிய அந்த வாளுடன் அங்கிருந்து வெளியேறினான்.





# 46

இரு தரப்புப் படையினரும் கொட்டிய குருதி வெள்ளத்தில் வீர மரணமெய்தியோரின் வெட்டுண்ட தலைகள் மிதந்த காட்சிக்குப் பிறகுதானோ என்னவோ அந்த இடத்திற்கே ''குருதி வழிப் பொட்டல்'' என்ற பெயர் வந்துவிட்டது.

கறுத்த ஆதப்பனின் தலைமையில் ஒரு படை, உறங்காப்புலி தலைமையேற்று நடத்திய படையுடன் பெரும்போர் நடத்தியது. வாளுக்குவேலியும் வைர முத்தனும் புரவிகளில் அமர்ந்தவாறு தாங்கள் தங்களின் படை வீரர்களை உத்வேகப்படுத்திக் கொண்டு போர் நடத்தினர். விண்வெளியில் வேல்கள் பறந்தன! மின்னிடும் வாட்கள் எதிரிகளின் அங்கங்களை அறுத்துச் சிவந்த நிறத்தில் காட்சியளித்துக் கொண்டிருந்தன.

பிள்ளையாரைத் திருடிப் பெரும் அவமானம் விளைவித்த பாகனேரியை அழித்தே தீரவேண்டுமென்று பட்டமங்கலத்துப் படையினரும், தேருக்குத் தீயிட்டு தீராத களங்கத்தைப் பாகனேரிக்கு ஏற்படுத்திய பட்டமங்கலத்தைப் படுநாசமாக்க வேண்டுமென்று பாகனேரி வீரர்களும் கடுமையான தாக்குதலை நடத்தினர்.

குருதிவழிப் பொட்டலில் குடல் அறுந்த உடல்கள் -குத்துண்ட வேல்களுடன் வானம் பார்த்துப் படுத்திருந்த

மானமிகு வீரர்களின் சடலங்கள்-வெட்டுண்ட கால்கள்-அறுந்து கிடக்கும் கைகள்-தலையற்ற முண்டங்கள்-திடீரென்று தங்களுக்கு நடைபெறும் மிகப் பெரும் விருந்து என்று காக்கைகளும், கழுகுகளும், நாய் நரிகளும் அந்தப் பொட்டலை வட்டமிடத் தொடங்கின.

பொழுது சாயும் வரையில் போர் நடந்தபோதிலும் பாகனேரிப் பகுதியில் நுழைந்துவிட்ட பட்டமங்கலத்து வீரர்களைத் துரத்தியடித்துப் பட்டமங்கலத்துக்கு விரட்டும் முயற்சியில் பாகனேரி வெற்றி பெறவில்லை.

அதைப் போலவே குருதிவழிப் பொட்டலைக் கடந்து பாகனேரி மாளிகைக்குள் நுழைந்து வெற்றிக் கொடி நாட்ட முடியாமல் பட்டமங்கலமும் திணறியது.

மாலைக்கதிர் மறைவதற்குச் சிறிது நேரத்திற்கு முன்பாக உறங்காப்புலியின் சூழ்ச்சித் திறனாலும், அவனிடமுள்ள பெரும்படை வலிமையினாலும் கறுத்த ஆதப்பனைச் சுற்றி வளைத்துக் கொண்டான். ஆதப்பனைக் கொன்று குவிக்க வேண்டுமென்று துப்பாக்கிகளையும் பயன்படுத்துமாறு கட்டளையிட்டான்.

ஆதப்பனின் உடலைத் துளைக்க மின்னல் வேகத்தில் பாய்ந்த குண்டுகளை அவன் சமாளித்துப் போர் புரிந்த விதமே காண்போர் மேனியைப் புல்லரிக்கச் செய்யும். தன்மீது எறியப்பட்ட குத்தீட்டிகளையும், கூர்வேல்களையும் வாளால் தடுத்து வீழ்த்தினான். தலையிலோ நெஞ்சிலோ ஊடுருவிடப் பறந்து வந்த துப்பாக்கி ரவைகளைத் தனது உடலை இப்படியும் அப்படியும் வளைப்பதின் மூலமே தவிர்த்துக் கொண்டிருந்தான்.

ஆனால் அவன் பட்டமங்கலத்துப் பட்டாளத்தினால் நாலாம்புறமும் வளைக்கப்பட்டிருந்தான். தன்னைச்

சுற்றிலும் சுழன்று கொண்டிருந்த ஏதோ ஒரு வாள் முனையில் அல்லது ஈட்டியின் நுனியில்-தனது உயிரின் முடிவு இருப்பதாக அவன் புரிந்து கொண்டான் என்றாலும் துணிவைத் துளியளவும் அவன் கைவிடவில்லை. போர்க்களத்து மரணம் மாவீரனுக்குத் தரப்படும் பூச்செண்டு என்பதைக் கறுத்த ஆதப்பன் வீரர் பள்ளியில் பால பாடமாகக் கற்றவனாயிற்றே! அதனால் உயிரைத் துரும்பாக-தூசாக-துச்சமாக மதித்து அவனைச் சூழ்ந்து போடப்பட்ட வளையத்திற்குள் பம்பரம் போலச் சுற்றிச் சுற்றி வாளை வீசினான். எதிரிகளின் படைக்கலன்களால் அவனது உடலில் பல பகுதிகளில் இரத்தம் கசிந்து கொண்டிருந்தது.

''இந்தச் சிறு கழுதையை அடித்துக் கொல்ல இவ்வளவு நேரமா?'' என்று ஆத்திரத்தோடு கேட்டுக் கொண்டு உறங்காப்புலி அந்த வளையத்திற்குள் நுழைந்ததுதான் தாமதம்; அந்த அணுப்பொழுது அதிர்ச்சியில் பட்டமங்கலத்து வீரர்கள் அவனையே பார்க்க அதுவே தக்க சமயமென்று ஆதப்பன் தனது வாளை உறங்காப்புலியின் கையில் இருந்த துப்பாக்கி மீது வீசினான். அந்தப் பயங்கரமான வீச்சில் உறங்காப்புலியின் கையில் இருந்த துப்பாக்கி மட்டுமல்ல; உறங்காப்புலியின் வலதுகர மணிக்கட்டே வெட்டுண்டு கீழே விழுந்து விட்டது!

தங்கள் படைத் தலைவனுக்கு ஏற்பட்ட நிலைகண்டு வீரர்கள் பதறியபோது-ஆதப்பன் அந்த இடத்தை விட்டு சாமர்த்தியமாகத் தன்னை விடுவித்துக் கொண்டான். கரம் இழந்து மயங்கிவிட்ட உறங்காப்புலியைப் பாசறைக்குத் தூக்கிக் கொண்டு போனார்கள் பட்டமங்கலத்து வீரர்கள்.

பிறிதோர் இடத்தில் வாளுக்கு வேலியும் வைரமுத்தனும் தூள் பறக்கும்படியாக வாட்போரில் ஈடுபட்டிருந்தார்கள். சற்றே நடுத்தர வயதுடைய வாளுக்கு

வேலியும், இளஞ்சிங்கக் குட்டியனைய வைரமுத்தனும் வாள் வீசும் தோரணையை இருபுறத்து வீரர்களும் கூடத் தங்கள் பகைமையை மறந்து விட்டுப் பார்த்துக் களித்தனர். அதற்குள் உறங்காப்புலி வெட்டுண்ட செய்தி வரவே, வைரமுத்தன் திடுக்கிட்டு நின்றான். வாளுக்கு வேலியும் தனது வாளை உறையில் போட்டுக் கொண்டு, "வைரமுத்தா! அதைப் போயக் கவனி! பொழுதும் போய் விட்டது! நாளைக்கு நிர்ணயிப்போம் மானங்காக்கும் சீமை பாகனேரியா? பட்டமங்கலமா? என்பதை!" எனச் சொல்லிவிட்டுக் கானகத்து யானை கல்லையும் முள்ளையும் கரடு முரடான பாதைகளையும் பொருட்படுத்தாமல் சுதந்திரமாக நடப்பதுபோல அந்தப் பொட்டலில் நடந்து சென்றான். எதிரே வந்த ஆதப்பனைப் பார்த்து "என்ன தம்பி! இன்றைக்கு நாம் இருந்த இடத்திலேயே இருக்கிறோம்! எதிரிகளை ஒரு அங்குலம் கூடப் பின்னோக்கித் துரத்தவில்லையே!" என ஆதங்கமுற்றான்.

"நாளை விடியட்டும் அண்ணா! பகைவர்களைப் பட்டமங்கலம் வரையில் கொண்டு போய் விட்டுவிட்டு வைரமுத்தனுக்கும் விலங்கு மாட்டி இழுத்து வருகிறேன்! இன்றைக்குப் போராட்டம் என்னைப் பொறுத்தவரையில் வெற்றிதான் அண்ணா! தங்கை கல்யாணியின் தாலியை எந்தக் கயவன் அறுத்தெறிந்து நாயின் கழுத்தில் கட்டினானோ, அவன் கையைத் துண்டித்துப் போட்டு விட்டேன்! அதோ பாருங்கள்; நாய்க்கு அந்தக் கரம் விருந்தாகிற காட்சியை!" என்று அண்ணனைப் பெருமிதமாக நோக்கினான் ஆதப்பன்!

வாளுக்குவேலி, அவனைக் கட்டித் தழுவி வாழ்த்துரைத்தான்.

பாகனேரியைச் சுற்றிப் பட்டமங்கலத்துப் படையினர் அமைத்திருந்த பாசறையொன்றில்

உறங்காப்புலி மயக்கமுற்ற நிலையில் இருந்தான். மருத்துவர்கள், அவனது இரத்தம் சேதமாகிவிடாமல் பாதுகாப்பதில் கவனமாக இருந்தார்கள். வீரம்மாளுக்குச் செய்தி கிடைத்து அவள் பட்டமங்கலத்திலிருந்து அன்றிரவே வந்து கண்ணீருங் கம்பலையுமாகக் கணவன் அருகில் அமர்ந்து கொண்டாள். வைரமுத்தன் உறங்காப்புலியின் உடல் நிலையை நேரில் வந்து விசாரித்துவிட்டு, மறுநாள் போராட்டத்தை மேலும் தீவிரமாக்குவதற்கான வழி வகைகளை ஆராய்ந்திடத் தனது பாசறைக்குப் புறப்பட்டுச் சென்றான். மருத்துவர்களின் தீவிர சிகிச்சைக்குப் பிறகு நடுநிசி வேளையின் பொழுது உறங்காப்புலி மெல்லக் கண் திறந்து பார்த்தான்.

அடுத்த நாள் போராட்டத்திற்கான ஆயத்தங்கள் குறித்து பாகனேரி மாளிகையில் நடுநிசி வரையில் ஆலோசனை நடைபெற்றது. உறங்காப்புலியின் மூலம் ஆங்கிலேயர்களிடமிருந்து துப்பாக்கி போன்ற ஆயுதங்கள் பட்டமங்கலத்திற்கு அதிகமாகக் கிடைத்திருக்கின்றன என்பதையும், அதை எப்படிச் சமாளித்து எதிரிகளைப் பாகனேரி எல்லையில் இருந்து விரட்டி, பட்டமங்கலம் வரையில் சென்று வெற்றிப் பேரிகை கொட்டுவது என்பதையும் வாளுக்குவேலி, ஆதப்பன், மேகநாதன் மற்றும் துணைத் தளகர்த்தர்கள் ஆழ்ந்து சிந்தித்தார்கள்.

அவர்கள் அவ்வாறு பெரிய பிரச்சினை குறித்து விவாதித்துக் கொண்டிருக்கும்போது கல்யாணிக்கும் சுந்தராம்பாளுக்கும் மட்டும் உறக்கம் வருமா? அவர்களும் காடை, கவுதாரி, மற்றுமுள்ள வேலைக்காரர்கள் புடைசூழ ஒரு மூலையில் அமர்ந்து விவாதத்தைக் கவனித்துக் கொண்டிருந்தார்கள். அவர்கள் முகத்தில் விசாரமே குடி கொண்டிருந்தது. முதல் நாள் மும்முரமாக நடைபெற்ற போரில் பட்டமங்கலம் படைகள் சிறிதுகூடப் பின்

வாங்கவில்லையென்பதை எண்ணியபொழுது, மறுநாள் மேலும் வலுவைச் சேர்த்துக் கொண்டுதானே தாக்கு வார்கள் என்ற அச்சம் சுந்தரிக்கும், கல்யாணிக்கும்!

விவாதங்கள் முடிவுற்று ஓய்வெடுப்பதற்காக மாளிகைக் கூடத்தை விட்டு வாளுக்குவேலியும் மற்றவர்களும் எழுந்தார்கள். வாளுக்குவேலி தனது படுக்கையறைக்குச் சென்றான். அறையில் எரிந்து கொண்டிருந்த விளக்கின் ஒளியைச் சிறிதாகக் குறைத்துவிட்டுப் படுக்கையில் சாய்ந்தவாறு யோசனையில் ஆழ்ந்திருந்த அவன் அருகே கையில் பால் கிண்ணத்துடன் காடை வந்து நின்றான். பாலை வாங்கிப் பருகிய வாளுக்குவேலி, ''கல்யாணியும் சுந்தரியும் உணவருந்தினார்களா?'' என்று கேட்டான். ''ஏதோ சாஸ்திரத்துக்குக் கொஞ்சம் சாப்பிட்டார்கள்'' என்று காடை பதில் கூறினான். ''சரி, கதவை மூடிவிட்டுப் போ!'' என்று வாளுக்குவேலி சொன்னதும் அவ்வாறே செய்து விட்டுக் காடை போய் விட்டான்.

இரவுக்குள் இன்னும் வந்து சேர வேண்டிய கள்ளர் நாட்டுப் படைகள் வராவிட்டால் நாளை நடக்கும் போராட்டத்தில் பட்டமங்கலத்தின் கையே ஓங்கிவிடும் என்று அவன் போடும் கணக்கு அவனுக்குத் தவறாகத் தெரியவில்லை. அவன் அவ்வாறு எண்ணமிட்டுக் கொண்டிருக்கும் போதே, பெரும் படையொன்று அவன் மாளிகையை நோக்கி வரும் ஒலி கேட்டது. படுக்கையில் எழுந்து உட்கார்ந்து கவனித்தான்.

சற்று நேரத்திற்கெல்லாம் மேகநாதன் அறைக்குள் வந்து ''மகிழ்ச்சிகரமான சேதி! நாம் யார் யாருக்கு ஓலை அனுப்பினோமோ, அவர்கள் எல்லாம் படைகளை அனுப்பி வைத்துக் கொண்டேயிருக்கிறார்கள். இதோ இப்போது நாலு நாட்டுப் படைகள் வந்துள்ளன என்றான்.

''அப்படியா? அவர்களுக்கு வேண்டிய தேவைகளை உடனடியாகக் கவனிக்கவும்'' எனக் கூறி மேகநாதனை அனுப்பிவிட்டுப் படுக்கையில் சாய்ந்து மெல்லக் கண்ணயர முயன்றான். உரத்த சிந்தனையும் உறக்கமும் போட்டி போட்டுக் கொண்டு இருந்தன என்றாலும் காலை முதல் போரிட்ட களைப்பு, சற்றுக் கண்களை இழுத்து மூடத்தான் செய்தது.

யாரோ அவன் கால்களை மிருதுவான கரங்களால் அமுக்கிவிடுவது போன்ற உணர்வு!

''யார்?'' என்றான்.

''உம்!'' என்ற குரல்.

சுந்தராம்பாள்தான் அவனது களைப்பினைப் போக்கிட அவன் கால்களை அமுக்கி விட்டுக் கொண்டிருந்தாள். அவனும் சற்று நேரம் அந்தச் சுகத்தில் உடல் வலியை மறந்திருந்தான். கால்களை வருடிக் கொண்டிருந்த சுந்தரியின் கைகள் அவனது புஜங்களையும் மெதுவாக அழுத்தின. விழிகள் மூடியிருந்தாலும் வாளுக்கு வேலியின் மனவிழிகள் குருதி வழிப் பொட்டல் மயான பூமியை எதிர்நிறுத்தத் தவறவில்லை!

இத்தனை உயிர்களைக் குடிக்கும் இவ்வளவு பெரிய போர் எதற்காக? சுருக்கமாகச் சொல்ல வேண்டுமானால் கல்யாணிக்காக! அந்தக் கல்யாணி வாழா வெட்டியாக அந்த மாளிகையில் கிடக்கிறாள்! வசந்தத்தை நுகர வேண்டிய வயது-வறண்ட பாலையின் சுடுமணலில் சுருண்டு விட்ட புழுப் போல ஆகி விட்டாள்! அவள் அணைந்துபோன விளக்காக அந்த அரண்மனையில் எங்கோ ஒரு மூலையில் விதியை நொந்து கொண்டு படுத்திருக்கும் போது, அவளது அண்ணனுக்கு மட்டும் அயர்வு போக்கிட அருகிலே அந்தச் சுந்தரி தேவைதானா?

சுந்தரி மட்டுமென்ன, இதயமற்றவளா? தன்னைப் போல ஒரு பெண் தணலில் விழுந்த தளிராக வதங்கிக் கிடக்கும்போது இதுவரையில் தணியாத தனது விரகதாபத்தைத் தணித்துக் கொள்ள இப்போதுதான் வேளை வந்தது என்று ஓடிவருவாளா என்ன? உடலைப் பிணைத்துச் சூடேற்றும் இன்ப உறவுக்காக அல்ல; தன் மனத்தைப் பறி கொடுத்துவிட்ட நாள் முதல் வாளுக்கு வேலியையே அவள் தனது கணவனாக வரித்துக் கொண்டிருக்கிறாள்.

அவனுடன் பேசிக் கொண்டிருப்பது-அவனுக்குப் பணிவிடைகள் செய்வது-அவனைப் பற்றி நினைத்துக் கொண்டிருப்பது-அவனுக்கு மகிழ்ச்சியென்றால் தானும் மகிழ்வது-துயரமென்றால், தானும் துவண்டு போவது-இப்படியே தனது வாழ்க்கை முழுமையும் கழிக்க அவன் தீர்க்காயுசுடன் இருந்தால் போதுமானது! அதைத் தவிர அவனிடம் உடற்சுகம் அனுபவிப்பது ஒன்றையே குறிக்கோளாகக் கொண்டிடவில்லை அவள்!

ஆரம்ப காலத்தில் அரும்பிய காதல் அப்படித்தான் மலராகக் குலுங்கியது! ஆனால் அந்த மலர் மணம் வீசுவதற்குள் எத்தனையோ இடையூறுகள்! அதனால் அவள் அந்த எண்ணத்தையே விட்டுவிட்டாள். உடற்பசிக்கு எந்த மதிப்பும் அளிக்காமல் சொல்லப்போனால் அப்படி ஒரு பசியே தோன்றாத நிலைக்குத் தன்னை மாற்றிக் கொண்டு உள்ளத்தில் அவனை வைத்துக் கொஞ்சிக் குலவினாள்.

ஆடல் அரங்கில் சந்தித்த போது இருவரும் ஒருவருக்கொருவர் சீற்றங்காட்டிப் பிரிந்தனர். திருக்கோட்டியூர் ஆலயத்தில் சந்தித்தபோதோ கலைக் கடலில் காதல் அமுதம் பொங்கியது. சுந்தரி வீட்டில் முதல் சந்திப்பில் கல்யாணியின் திருமணம் முடியுமட்டும் உடலுறவு இல்லையென்ற கட்டுப்பாடு வாளுக்கு

வேலிக்குக் குறுக்கே நின்றது. கல்யாணியின் திருமணம் முடிந்த பிறகு அடுத்த சந்திப்பில் இருவருமே ஒருவராய் உள்ளத்தில் மட்டுமன்றி உடலாலும் ஒட்டிக் கொள்ளும் வேளையில்தான் கறுத்த ஆதப்பன் கைது செய்யப்படக் கூடுமென்ற செய்தி வந்து சேர்ந்தது. இப்படித் தட்டிக்கொண்டே போய்விட்ட உடலுறவை இனி வலியச் சென்று வற்புறுத்தி அழைப்பதில்லையென்று மனப்பக்குவத்துடன்தான் சுந்தராம்பாள் பாகனேரி மாளிகையின் மூத்த மருமகளாகத் தன்னைத் தானே நினைத்துக் கொண்டாள்.

வாளுக்கு வேலியின் புஜங்களை அழுத்திப் பிடித்தவாறு அவனது அகன்ற மார்பில் தனது தலையைச் சாய்த்துக் கொண்டாள். என்ன இருந்தாலும் ஆண்மகன் தானே! சுந்தரியின் மேனி ஸ்பரிசத்தால் அவன் தேக்கு மரத் தேகத்தில் வெப்பம் பரவியது. தனது கையை அவனது முதுகில் வைத்து மெல்லத் தடவிக் கொடுத்தான்.

அவன் உடம்பு தகிப்பதைச் சுந்தரி உணர்ந்து கொண்டாள். அதற்கு மேல் அவனைச் சோதனைக்கு ஆளாக்க அவள் விரும்பவில்லை. தலையை அவன் மார்பிலிருந்து எடுத்துக்கொண்டு ''தூங்குங்கள்'' என்று அவனது புருவங்களைத் தனது விரல்களால் மென்மையாகத் தடவினாள்.

வாளுக்குவேலி, அவள் தலையைத் தன் முகத்தருகே இழுத்து, அந்தச் சிவந்த இதழ்களில் முத்தமிட உதடுகளைக் குவித்தான்.

ஆனால் சுந்தரி, அதற்கு இடம் தராமல் தன்னை விடுவித்துக் கொண்டு ''என்ன? மனத்தைக் கல்லாக்கிக் கொண்டீர்களா? தங்கச்சிலை கல்யாணி, தாலி கட்டியவன் இருந்தும் தாலியற்று இந்த மாளிகையில் வெந்து கொண்டிருப்பது நினைவில்லையா?'' எனக் கேட்டவாறு எழுந்தாள்!

''என்னை மன்னித்துவிடு சுந்தரி! நாளைக்குப் போர்க் களத்திலிருந்து திரும்பி வருவேனோ இல்லையோ- அதற்குள் உனக்கு இந்தக் குறையை வைக்கக்கூடாது என்றுதான்!''

தழுதழுத்தான் வீரன் வாளுக்குவேலி!

அதிர்ந்து போனாள் சுந்தரி! பாய்ந்து சென்று அவன் வாயைப் பொத்திக் கொண்டு ''அப்படியெல்லாம் சொல்லாதீர்கள்! ஆண்டவன் நம்மைப் பிரிக்கவே மாட்டான்! நாளை வெற்றி உங்களுக்குத்தான்!'' எனக் கண் கலங்கக் கூறினாள்.

''நாளை வெற்றி நமக்கு என்று கூறு சுந்தரி!'' என்றான் அவன்.

''நமது வெற்றிக்காகப் பில்லாத்தா கோயிலில் சென்று நாளைக் காலை முதல் நானும் கல்யாணியும் பிரார்த்தனை செய்யப் போகிறோம்'' எனக் கூறிவிட்டுச் சுந்தரி படுத்திருந்த வாளுக்கு வேலியின் பாதங்களில் முத்தமிட்டுவிட்டு அவைகளைக் கண்களிலும் ஒத்திக் கொண்டுவிட்டு அந்த அறையை விட்டு அகன்றாள்.

சுந்தரியின் துல்லியமான தூய நெஞ்சத்தை எண்ணியவாறு வாளுக்குவேலி, விழிகளை அந்த அறையின் சுவர்களில் சுழலவிட்டுக் கொண்டு படுத்திருந்தான். சுழன்று கொண்டிருந்த விழிகள் ஒரு ஓவியத்தின் மீது நிலைத்து நின்றுவிட்டன. மங்கலான வெளிச்சத்தில் அவன் அந்த ஓவியத்தையே பார்த்துக் கொண்டிருந்தான்.

புலியும் மானும் ஒரே துறையில் அருகருகே நின்று அருவியிலே தண்ணீர் குடித்துக் கொண்டிருக்கின்றன.

மிகைப்படுத்தப்பட்ட கற்பனையென்று தான் இது நாள் வரையில் அந்த ஓவியத்தைக் காணும்போதெல்லாம் எண்ணிக் கொண்டிருந்தான்.

ஆனால் இப்போது? தன்னைப் புலியாகவும் சுந்தராம்பாளை மானாகவும் நினைத்துப் பார்த்து அந்தக் கற்பனை ஓவியத்தை முற்றிலும் ஏற்றுக் கொண்டான்!

அதற்குப் பிறகு அவன் நிம்மதியாகத் தூங்கி விட்டான்! ஆனால் பட்டமங்கலத்தார் அமைத்துள்ள பாசறைகளில் ஒன்றிரண்டில் சிலர் தூங்காமலே மறுநாள் போர்க்களத்து உபாயங்களைப் பற்றி உரையாடிக் கொண்டிருந்தனர்.

நீண்ட நேரத்துக்குப் பிறகு நடுநிசியில் மயக்கம் தெளிந்து கண்விழித்த உறங்காப்புலி, வலியின் வேதனையால் முனகிக் கொண்டேயிருந்தான். அவனைத் தூங்க வைப்பதற்காக வீரம்மாள் அவன் படுக்கையின் பக்கத்தில் அமர்ந்து அவனது தலையை மெல்லக் கோதிக் கொண்டிருந்தாள்.

உறங்காப்புலிக்கு ஏதோ ஒரு பரபரப்பு! யாரையோ எதிர்பார்த்துக் கொண்டிருந்தான்! ஆனால் வீரம்மாளைப் பட்டமங்கலத்திற்கு அனுப்பி விடப் படாத பாடு பட்டான். அவளோ அவனைவிட்டு நகர மறுத்து விட்டாள். வேறு வழியில்லாமல் உறங்காப்புலி கண்களை மூடிக்கொண்டு தூங்குவதுபோல நடித்தான்.

கம்பளியொன்றை இழுத்துப் போர்த்திவிட்டு வீரம்மாள் அவனுக்கு அருகே ஒரு சிறிய கட்டிலில் படுத்துக் கொண்டாள். அவள் கண்களை மூடிக் கொண்டிருந்தாள் என்றாலும் உறங்காப்புலி ஓசையின்றிப் புரண்டு படுத்து அவள் தூங்கிவிட்டாளா என்று கூர்ந்து கவனிப்பதை அவள் அரைக் கண்ணால் பார்த்துவிட்டாள்.

வீரம்மாள் தூங்கிவிட்டாள் என்ற நம்பிக்கை வந்து விட்டது உறங்காப்புலிக்கு! இருந்தாலும் அவன் எதிர்பார்க்கிற ஆளை இன்னும் காணோமே என்ற ஆவல்

அவனை அலைக்கழித்தது. பாசறை வாசலின் படுதாவையே பார்த்துக் கொண்டு படுத்திருந்தான்; கைவிரல்களைச் சொடுக்கினான்.

பாசறை வாசல் காக்கும் வீரன் உறங்காப்புலியின் அருகே வந்தான். அவன் காதில் உறங்காப்புலி ஏதோ சொன்னான். வீரம்மாள் கவனித்தாள். கண்களை மூடிக் கொண்டாள்.

பாசறைக் காவலன் வெளியே போய்விட்டான்.

கொஞ்ச நேரம் கழித்துப் பாசறை வாசலில் ஒரு குதிரை வந்து நிற்கும் குளம்படிச் சப்தம் கேட்டது. உறங்காப்புலியின் முகம் மலர்ந்தது. வீரம்மாள் குழப்பத்தில் ஆழ்ந்தாள்.





# 47

பாசறையின் வாசல் படுதாவைத் தூக்கியவாறு பாசறைக் காவலன் வழிவிடவே, திடகாத்திரம் பொருந்திய ஒரு ஆங்கில அதிகாரி உள்ளே நுழைந்தான். அவன் கையில் ஒருபெட்டி இருந்தது. ''ஹலோ உறங்காப்புலி!'' என்று சற்று உரக்கவே கூப்பிட்டுக் கொண்டு, அவன் உள்ளே வரவும் திடுக்கிட்ட உறங்காப்புலி, அவனிடம் ஜாடைகாட்டி மெதுவாகப் பேசுமாறு இடது கையை அசைத்தான்.

வீரம்மாள் தூங்கிக் கொண்டிருக்கிறாளா என்பதையும் கவனித்துக் கொண்டான். அவனருகில் உட்கார்ந்த ஆங்கிலேய அதிகாரி, அவனது வலதுகை மணிக்கட்டு வெட்டுண்டு போனதற்காக அனுதாபம் தெரிவித்துக்கொண்டு போர்க்களத்தில் இதெல்லாம் சகஜம் என்று ஆறுதலும் கூறினான்.

உறங்காப்புலி பல்லை இளித்து நன்றி தெரிவித்துக் கொண்டான். துரோகிகள் பல்லைக் காட்டிச் சிரிக்கும்போது அதில் உயிர் இருக்காது. எருக்கம்பூ கொத்துக் கொத்தாக மலர்ந்தாலும்-மல்லிகை, முல்லை, ரோஜாக்கள் மலர்வதற்கு ஈடாக முடியுமா?

''இதோ மூவாயிரம் வராகன் பவுன் இருக்கிறது. யுத்தச் செலவுகளுக்காக கர்னல் அக்னியூ கொடுத்து வரச்

சொன்னார்! பாகனேரி, பட்டமங்கலம் இரண்டையும் ஒரே அடியாக அதம் செய்துவிட்டு நீங்கள் அம்பலக்காரர் ஆவதற்கான திட்டம் எந்த அளவில் இருக்கிறது என்ற விபரமும் கேட்டுவரச் சொன்னார்!''

இந்த வார்த்தைகள் காதில் விழுந்ததும் வீரம்மாள் தன் மனத்தைக் கட்டுப்படுத்திக் கொள்ள முடியாமல் ''அடப் பாவிகளா!'' என்று கூற வாயைத் திறந்தாள். ஆனால் அதற்குள் காரியத்தைக் கெடுத்து விடக்கூடாது. மிச்சமுள்ள சதித் திட்டத்தையும் அறிய வேண்டுமென்று எதுவும் வாய்திறந்து சொல்லாமலே கஷ்டப்பட்டு ஒரு கனைப்போடு நிறுத்திக் கொண்டு தொடர்ந்து தூங்குவது போலவே பாசாங்கு செய்தாள்.

அவள் தூங்கினாலுங்கூட அவளுக்கருகே இனி எதுவும் பேசுவது நல்லதல்ல என உணர்ந்த உறங்காப்புலி, ஆங்கிலேய அதிகாரியை அழைத்துக்கொண்டு மெதுவாக நடந்து பாசறைக்கு வெளியே சென்றான். அதிகாரி கொண்டுவந்த பெட்டி மட்டும் உறங்காப்புலியின் படுக்கையின் மீது கிடந்தது. பாசறைக்குப் பின்புறமுள்ள ஒரு பெ?ய மரத்தடியில் உறங்காப்புலி ஆங்கிலேய அதிகாரியை உட்கார வைத்துவிட்டுத் தானும் பக்கத்திலே உட்கார்ந்து கொண்டான்.

வீரம்மாள், எழுந்துவந்து பெட்டியைத் திறந்து பார்த்தாள். பளபளக்கும் பவுன் நாணயங்கள். அதில் பத்து நாணயங்களை எடுத்துப் பாசறைக் காவலனிடம் கொடுத்துவிட்டு, ''வாயைத் திறக்கக் கூடாது'' எனக் கூறிவிட்டுப் பெட்டியில் மிச்சமுள்ள பவுன்களுடன் வெளியே வந்து, உறங்காப்புலியும் ஆங்கிலேய அதிகாரியும் இரகசியம் பேசிக்கொண்டிருக்கும் மரத்துக்குப் பின்னால் மறைந்திருந்து ஒட்டுக் கேட்டாள்.

'அதிகாரியிடம் உறங்காப்புலி விபரங்களைச் சொன்னான். இடையிடையே கைவலியின் காரணமாக ''அய்யோ! அம்மா!'' என்று முனகிக் கொண்டான்.

அதிகாரிப் பிரபூ! கர்னல் அக்னியூ துரை அய்யாவிடம் சொல்லுங்கள்! அவர் காளையார் கோயிலைப் பிடித்து அந்த அயோக்கியர்கள் அடங்காப்பிடாரிகள் மருதுபாண்டியர்களைக் கைது செய்வதற்குள் நாங்கள் பாகனேரியைத் துவம்சம் செய்து, வாளுக்குவேலியையும் வைகுண்டத்திற்கு அனுப்பி விடுவோம்!

''ஆதப்பனின் தலையை வேல் கம்பில் குத்திப் பாகனேரிப் பில்லாத்தா கோயில் வாசலில் நட்டு விடுவோம்! நான் பல நாளாகக் காத்திருக்கும் பலாச்சுளையாம் கல்யாணியை எனக்காக எடுத்துக் கொண்டு அக்னியூ துரையின் சொர்க்கவாசலுக்குச் சுந்தராம்பாளை அனுப்பி வைப்பேன்!இது உறுதி!

''அது மட்டுமல்ல; வைரமுத்தன் பிரச்சினையை எப்படித் தீர்ப்பது என்பதுதான் அக்னியூ துரை மகனார்க்குப் பெரிய சந்தேகம்! பாகனேரி வீழ்கிறது நாளைக்கு! வாளுக்கு வேலியும் ஆதப்பனும் களத்திலே பலியாகிறார்கள்! பாகனேரி மாளிகை நமது கைவசமாகிறது...!

''வெற்றி முழக்கத்துடன் வைரமுத்தன் பட்டமங்கலத்திற்குத் திரும்புகிறான். வெற்றி கொண்ட பட்டமங்கலத்துப் படைக்கு அவனே தலைமை வகித்து முன்னே செல்லுமாறு ஏற்பாடு செய்யப்படுகிறது. அதில் அவன் என் பேச்சைத் தட்ட மாட்டான். வைரமுத்தனின் குதிரை முன்னே போகிறது.

''பாகனேரிக்கும் பட்டமங்கலத்துக்கும் இடையே தான் கத்தப்பட்டு! அந்தச் சாலையில் தான் பயங்கரப்

படுகுழி! காட்டில் யானை பிடிக்க அமைப்பது போன்ற படுகுழி! ஆனால் ஒன்று; யானைப் படுகுழியில் யானை சாவதில்லை! நான் அமைக்கச் சொல்லியுள்ள படுகுழியில் ஆள் விழுந்தால் விழுந்ததுதான்-மண் மூடி விடும். மரணம் அணைத்துக் கொள்ளும்! வெற்றி வீரன் வைரமுத்தனைக் கத்தப்பட்டுப் படுகுழி விழுங்கிவிடும்!

''பழியைப் பாகனேரி மீது போட்டுவிட்டு, பிறகு உங்கள் அடிமை இந்த உறங்காப்புலி அம்பலக்காரப் பட்டத்தைச் சூட்டிக் கொள்கிறான். எப்படி நான் வகுத்துள்ள திட்டம்?''

''சபாஷ்! உறங்காப்புலி, சபாஷ்! அருமையான திட்டம்! ஆனல் ஒன்று; அந்தக் கத்தப்பட்டுச் சாலையில் வேறு யாரும் பயணம் செய்ய முடியாதபடி பாதுகாக்க வேண்டுமே; இல்லாவிட்டால் யாராவது போய் விழுந்து தொலைந்து திட்டமே பாழாகிவிடுமே!''

''கவலைப்படாதீர்கள்! எனக்கு நம்பிக்கையான படை வீரர்களை அந்தப் பாதையில் நிறுத்தி, இது வெற்றிப் பவனி நடைபெறப்போகிற சாலை- அந்தப் பவனி முடிகிற வரையில் மற்றப் போக்குவரத்தே கூடாது, என்று திட்டவட்டமாகத் தெரிவிக்குமாறு பணித்து விட்டேன்! படுகுழி தயாராகிக் கொண்டிருக்கிறது.''

இருவரும் இரகசியப் பேச்சை முடித்துக்கொண்டு பாசறைக்குத் திரும்பி வந்தார்கள். ஆங்கிலேய அதிகாரி, வெளியில் இருந்தவாறு, விடைபெற்றுக் குதிரையி லேறிப் போய்விட்டான்.

உள்ளே வந்த உறங்காப்புலி, வீரம்மாளையும் காணாமல் பெட்டியையும் காணாமல் திடுக்கிட்டான். அரை நொடியில் பாசறையை விட்டு வெளியேறி அந்த இருட்டில் அவளைத் தேடிக்கொண்டு புறப்பட்டான் கையில் ஒரு துப்பாக்கியுடன்!

வீரம்மாள் பெட்டியுடன் வைரமுத்தன் பாசறைக்குள் நுழைந்தாள். அங்கே தூக்கம் பிடிக்காமல் துப்பாக்கி யொன்றில் குண்டுகளைப் போடுவதும் எடுப்பதுமாக ஆழ்ந்த சிந்தனையில் அமர்ந்திருந்தான் வைரமுத்தன்!

''என்ன அக்கா? ஏன் பதட்டம்? என் மைத்துனருக்கு ஏதாவது ஆபத்தா?''

வைரமுத்தன் திடுக்கிட்டுக் கேட்டான்.

''இல்லை தம்பீ; உனக்குத்தான் ஆபத்து! அதுவும் என் கணவரின் சதியால்!'' ஆறெனப் பெருகி ஓடிற்று கண்ணீர் அவளுக்கு!

''பதறாமல் சொல்லுக்கா!'' வைரமுத்தன், வீரனுக்கே உரிய மன வலிமையோடு, அவள் சொல்லப்போவதை நிதானமாகக் கேட்பதற்குத் தன்னைத் தயார்ப்படுத்திக் கொண்டான்.

''பதறாமல்தான் சொல்லப் போகிறேன் தம்பி! திடீரென்று அதிர்ச்சி அடையும்படி சொன்னால் உன்னால் கூட நம்ப முடியாது! அதனால் ஆதியோடந்தமாகச் சொல்கிறேன்! தம்பி வைரம்! பாகனேரி- பட்டமங்கலத்துப் பகைமைக்குத் தூபம் போட்டு வளர்த்ததும் இன்று இந்த நிலைமைக்குக் கொண்டு வந்து விட்டிருப்பதும் வேறு யாருமல்ல; என் கணவன்தான்! வெள்ளைக்கார வெறியர்களின் கையாள் அவர்! முதல் தரமான துரோகி!''

''என்ன? என்னக்கா சொல்கிறாய்?''

''உண்மையைத்தான் சொல்லுகிறேன். ஒரு முறை மருது பாண்டியர் படையை எப்படி முறியடிப்பது என்று ஆங்கிலேயர் தீட்டிய கடிதத்தை எடுத்துக்கொண்டு என் கணவர் சென்றபோது அவரை எவ்வளவோ தடுத்தேன்; கேட்கவில்லை.

''பிறகு நானும் குதிரையில் பின் தொடர்ந்து அவர் சென்ற குதிரையை வழி மறித்தேன் சுரண்டைக் காட்டில்! அப்போது என்னைக் கொல்லவே துணிந்தார் அவர். அந்தச் சமயம் அங்கு வந்த கறுத்த ஆதப்பன்தான் என்னைக் காப்பாற்றி அந்தக் கடிதத்தையும் கைப் பற்றியது. என் கணவரின் துரோகச் செயலை யாரிடமும் வெளியிட வேண்டாமென்று ஆதப்பனைக் கெஞ்சினேன். அந்தப் பண்பாளன் இதுவரையில் வெளியிடவே இல்லை.

''அதற்குப் பிறகும் கூட என் கணவர் திருந்த வில்லை. பாகனேரிக்கும் பட்டமங்கலத்திற்கும் பகையை வளர்த்துப் பரங்கியருக்குத் துணை புரிவதே அவரது இலட்சியமாகி விட்டது; அப்படிப் பகை வளர்க்கத்தான் பாகனேரி மீது நமது காளை மாட்டை ஏவி விட்டது! அதனால் வந்த விபரீதம் உனக்குத் தெரியும்.

''நீ விடுவித்துக் கொண்டு வந்த ஆதப்பனை நான் பாகனேரிக்கு அனுப்பி வைத்தேன்! ஆனால் பாதி வழியிலே அவனைக் கைது செய்து பட்டமங்கலத்துச் செக்கில் கட்டி ஓட்ட முனைந்தார். கல்யாணி நம்பும் படியாக நீதான் ஆதப்பனைப் பழி வாங்கியதாகக் கதை கட்டி விட்டார். வடிவாம்பாளிடம் போய்ப் பேசி அவளுக்குப் பொருள் கொடுத்துத் தன் வசமாக்கி அவள் மூலமே உனக்கு அழைப்பு அனுப்பச் செய்தவரும் என் கணவர்தான்!

''நீயும் வடிவும் திருக்கோட்டியூர் தெருவெல்லாம் ஆடிப்பாடித் திரிகிறீர்கள் என்று பட்டமங்கலம் அரண்மனை முழுதும் செய்தி பரப்பி, கல்யாணிக்கு உன்மீது வெறுப்பை நெருப்பாக வளர்த்ததும் என் கணவர்தான்!

''கல்யாணியைப் பாகனேரியில் கொண்டு போய் விடுமாறு என் கணவரிடம் சொன்னாய்! ஆனால் அவர்

அவளை ஒரு பாழ் மண்டபத்தில் கற்பழிக்க முனைந்து அந்த நேரத்தில் நான் குறுக்கிட்ட காரணத்தால் கல்யாணி தப்பி ஓடினாள்! ஆனால் அவள் கழுத்தில் நீ கட்டிய தாலியைக் கயவராம் என் கணவர் அறுத்துக் கொண்டது மட்டுமல்ல; அதை ஒரு நாயின் கழுத்தில் கட்டிப் பட்டமங்கலத்து வண்டியில் பாகனேரிக்கு அனுப்பி வைத்தார்!''

''அக்கா! என் தலை சுற்றுகிறது! அய்யோ! உறங்காப்புலி என்ற அந்த உன்மத்தனால் எத்தனை எத்தனை பாவங்களுக்கு நான் ஆளாக்கப்பட்டு விட்டேன்!''

''இத்துடன் முடியவில்லை தம்பி. வெள்ளைக் காரனுக்கு இந்தக் கள்ளர் சீமையைக் காட்டிக் கொடுப்பதற்காக என் கணவருக்குப் பட்டமங்கலத்து அம்பலக்காரர் பதவியே கிடைக்கப் போகிறது!''

''அதெப்படி முடியும்? நான் இருக்கும்போது?''

''நீ இருந்தால்தானே! உன்னையேதான் ஒழித்து விடச் சூழ்ச்சித் திட்டம் வகுத்து விட்டாரே என் கணவர்!''

''சூழ்ச்சித் திட்டமா?''

''ஆமாம்!'' என்று கூறிவிட்டு மீதியை வீரம்மாள் சொல்வதற்குள் ''ஆ! அய்யோ!'' என்று அலறிக் குப்புற வீழ்ந்தாள். உறங்காப்புலிதான் அவளை முதுகில் சுட்டுத் தள்ளிவிட்டான்! அடுத்த கணம், வைரமுத்தன் உறங்காப்புலியினால் பிணமாக்கப்பட்டிருப்பான்!

வெடியொலி கேட்டு மற்றப் பாசறைகளில் இருந்து வீரர்கள் ஓடி வந்தார்கள். வைரமுத்தன், தனது மெய்க்காப்பாளர்களை அமைதியாக இருக்குமாறு கண்டிப்பாகச் சைகை செய்துவிட்டு, அவனது பாசறைக் கூடாரத்தின் வாசலுக்கு வந்தான் கையில் துப்பாக்கியுடன்!

அடுத்தடுத்த கூடாரங்களில் இருந்து விரைந்து வந்த வீரர்களைப் பார்த்து வைரமுத்தன், ''ஒன்றுமில்லை! இந்தத் துப்பாக்கியை வெடித்துப் பார்த்துக் கொண்டிருந்தேன்... காலையில் போராட்டத்திற்கு உதவுமா என்பதற்காக! அவ்வளவுதான்!'' என்று கூறிக் கொண்டே ஒருமுறை ஆகாயத்தை நோக்கிச் சுட்டான். எல்லாமே வைரமுத்தன் ஆகாயத்தை நோக்கிச் சுட்டதுதான் என எண்ணிக் கொண்ட பட்டமங்கலத்துப் படைவீரர்கள், அவரவர் கூடாரத்துக்குத் திரும்பிப் போய் விட்டார்கள்.

வைரமுத்தன்,தனது மெய்க்காப்பாளர்களிடம் கூடாரத்தைச் சுற்றி எச்சரிக்கையாக இருக்குமாறும், யாரையும் உள்ளே அனுமதிக்க வேண்டாமென்றும் கூறிவிட்டு உள்ளே வந்தான். அவன் கண்கள் வீரம்மாள் வீழ்ந்து கிடக்கும் அந்தக் கொடுமையான காட்சியை நீர் உகுத்தவாறு உற்று நோக்கின.

வீரம்மாளிடம் சென்று உயிர் இருக்கிறதா என்று பார்ப்பதற்கு உறங்காப்புலியின் சவத்தைத் தாண்டிக் கொண்டுதான் போக வேண்டும். வைர முத்தன் அந்தத் துரோகியின் பிணத்தைத் தாண்டிக் கொண்டு கூடப் போகவில்லை. காலால் அலட்சியமாகத் தள்ளிவிட்டபடி தனது அன்புச் சகோதரி வீரம்மாளிடம் சென்று அவளைத் தூக்கி மடியில் சாய்த்துக் கொண்டான்.

முதுகைத் துளைத்த குண்டு நெஞ்சையும் பிளந்து கொண்டு வெளியேறியிருந்தது. குபுகுபுவென இரத்தம் பீறிட்டு வழிந்து கொண்டிருந்தது. அவள் முகத்தைத் தனது கரத்தால் பற்றிக்கொண்டு ''அக்கா! அக்கா!'' என்று ஈனசுரத்தில் அழைத்த அவன் விம்மி விம்மி அழுது விட்டான்.

வீரம்மாள் கண்களைத் திறந்து, தனது அருமைத் தம்பியைப் பார்த்தாள்.

''அந்தத் துரோகியைப் பிணமாக்கிப் போட்டு விட்டேன் அக்கா!'' என்று கதறியழுதவாறு அவளிடம் சொன்னான்.

அவள் உதடுகள் அசைந்தன ஏதோ சொல்வதற்காக! ஆனால் வார்த்தைகள் தலை நீட்டவில்லை! கண்களில் தாரை தாரையாகக் கண்ணீர் வடிந்தது. துரோகியின் சாவுக்காக அழவில்லை - கணவனின் சாவுக்காக அழாமல் இருக்க முடியுமா?

இன்னும் சில நொடிக்ளில் உயிர் பிரிவதற்குள், கத்தப்பட்டில் வைரமுத்தனைக் கொல்வதற்காக உறங்காப்புலி வெட்டி வைத்துள்ள படுகுழியைப் பற்றிச் சொல்லி விடவேண்டும் என்று வீரம்மாளுக்கு நெஞ்சு துடித்தது! பாகனேரியுடன் சமாதானம் செய்து கொண்டு கள்ளர் நாடுகளின் ஒற்றுமையைக் காத்திடுக, என்று சொல்ல வேண்டுமெனத் தவித்தாள்!

கல்யாணி நமது குலவிளக்கு-அந்த விளக்கை வெறுத்து ஒதுக்கிவிடாதே. நடந்தவைகளை மறந்து அவளைச் சந்தோஷமாக வைத்துக் குடும்பம் நடத்து எனக் கூற வேண்டுமென்று நினைத்தாள்! எல்லாம் நினைவுகளாகவே அவள் உள்ளத்திற்குள் முடங்கி விட்டன!...

ஏதோ சொல்ல அக்காள் கஷ்டப்படுகிறாள் என்பதை உணர்ந்த வைரமுத்தன் ''என்னக்கா சொல்கிறாய்? என்னக்கா?'' என்று கதறினான்.

வாய்மூலம் நினைப்பதைச் சொல்ல முடியாது என உணர்ந்து கொண்ட வீரம்மாள், அங்கே அருகிலிருந்த எழுதப்படாத மடலையும் இறகு பேனாவையும் வெறிக்கப் பார்த்தாள்.

''எழுதிக்காட்டுகிறாயா?'' என்று இறகு பேனாவை எடுத்து அவள் கையிலே கொடுத்து மடலையும் நீட்டினான்.

வீரம்மாள் அந்த மடலில் எழுதினாள்... ''சுத்தப்பட்டில் ஆபத்து-அங்குப் போக வேண்டாம்! கள்ளர் நாடுகள் ஒற்றுமையாகுங்கள்; கல்யாணியைக் கைவிட்டு விடாதே! வாழ வை!'' இவ்வளவும் எழுத வேண்டுமென்று எண்ணித்தான் 'க' என்ற எழுத்தை எழுதினாள். அடுத்த எழுத்துக்கு இறகு பேனாவை அசைப்பதற்குள் வீரம்மாளின் விரல் அசைவு நின்று விட்டது.

''அக்கா!'' என்று கத்தினான் வைரமுத்தன்! அவள் தனது பாசமுள்ள தம்பியின் மடியில் மீளாத் துயில் கொண்டு விட்டாள். அவளைத் தூக்கிக் கட்டிலில் படுக்க வைத்து அவளது பாதங்களைத் தொட்டுக் கும்பிட்டான்.

கை தட்டினான்! மெய்க்காப்பாளர் இருவர் உள்ளே வந்தனர்! ஆணையிட்டான்!

''தனித்தனியாக இரு சவப்பெட்டிகளில் இந்த உடல்களை வையுங்கள்! இந்தச் செய்தி நம்மைத் தவிர யாருக்கும் தெரியக்கூடாது! பாகனேரியை வெற்றி கொள்வதை இந்தச் செய்தி பாதித்துவிடும்! நாளை மாலை வெற்றி மாலையுடன் பட்டமங்கலம் திரும்பும் போது நம்முடன் வர வேண்டிய சவப்பெட்டிகள் இவை! பட்டமங்கலம் போய்ச் சேரும் வரையில் உறங்காப்புலியோ அல்லது என் அக்காளோ இறந்து விட்ட செய்தி பரம ரகசியம்! ஜாக்கிரதை! இரவுக்குள் பெட்டிகள் தயாராகட்டும்!''

இதைச் சொல்லிவிட்டு அக்காள் வீரம்மாளின் உடலை ஒரு வெள்ளைத் துணியினால் மூடினான்.

சிறிது நேரம் கூடாரத்திற்குள் அமைதியாக நின்றான்... பிறகு கூடாரத்தை விட்டு வெளியே வந்து

அந்த இருளில் அமைதியிழந்தவனாக நடந்து கொண்டேயிருந்தான். பாசறைக் கூடாரங்களை விட்டுச் சிறிது தொலைவு தள்ளியிருந்த ''பாலாக் கண்மாய்''க் கரையோரமிருந்த ஒரு மரத்தடியில் அமர்ந்தான்.

முதல்நாள் நடந்த போரில் சிதறிக் கிடந்த உடல்களை நாய் நரிகள் குரைத்துக் கொண்டும் ஊளையிட்டுக் கொண்டும் போட்டி போட்டுத் தின்று கொண்டிருப்பதை அந்த நள்ளிரவைக் கிழித்துக் கொண்டு கிளம்பும் பயங்கர ஒலிகள் அறிவித்துக் கொண்டிருந்தன. எவ்வளவு நேரம் தன்னை மறந்து உட்கார்ந்திருந்தான் என அவனுக்கே தெரியாது!

போர் முரசுகள் இரு தரப்பிலும் கொட்டப் படுவதைக் கேட்டுத்தான் பொழுது விடிந்துவிட்டதை வைரமுத்தன் உணர்ந்து கொண்டான் போலும்! உடனே எழுந்து அன்றைய போருக்குத் தன்னைத் தயார்ப்படுத்திக் கொள்ளப் பாசறை நோக்கி விரைந்து சென்றான்.





# 48

இளங்காலை வானத்தின் இரத்தச் சிகப்புக்கு அறைகூவல் விடுத்தவாறு குருதிவழிப் பொட்டல் அடுத்த நாள் போராட்டத்துக்குக் காரணமாகக் காட்சியளித்தது. முதல் நாளிரவு எதிர்பாராத சோகத்தின் தாக்குதலால் காயமுற்றிருந்த வைரமுத்தனின் இதயம் அடுத்த நாள் போருக்கு ஆயத்தமாவதில் சற்றுத் தயக்கமே காட்டியதால் பொழுது விடிந்ததும் விடியாததுமாகப் பாகனேரிப் படை வீரர்கள் பட்டமங்கலத்துப் பாசறைக் கூடாரங்களை விரைந்து வளைத்துக் கொண்டு யுத்தத்தைத் தொடங்கிவிட்டனர்.

வாட்கள் உராய்ந்தன! வேல்கள் பாய்ந்தன! இடையிடையே இருபுறமிருந்தும் துப்பாக்கி வேட்டுகளும் கிளம்பின!

பாகனேரியின் தேர் கொளுத்தப்பட்டதற்குப் பழி வாங்கிட முதல் நாளிரவே பட்டமங்கலத்துப் பாசறைக் கூடாரங்களைக் கொளுத்த வேண்டுமென்று கறுத்த ஆதப்பன் திட்டம் வகுத்தான் என்றாலும். இரவில் அவ்வாறு செய்தல் முறையாகாது என மேகநாதன் எடுத்துச் சொன்னதை வாளுக்குவேலியும் ஏற்றுக் கொண்டு ஆதப்பனைத் தடுத்து நிறுத்தி விட்டான்.

இரவு நேரத்தில் தடுக்கப்பட்ட அந்தக் தாக்குதலை ஆதப்பன் கதிரவன் தோன்றிய சிறிது நேரத்திற்கெல்லாம் செய்து முடித்துவிடத் தன் படை வீரர்களுடன் அந்தப் பாசறைகளை நோக்கிக் கிளம்பினான்.

ஆயுதபாணியாகப் பாசறையின் கூடாரத்தில் அவசர அவசரமாக மடல் எழுதிக் கொண்டிருந்த வைரமுத்தன், அதனை எழுதி முடித்து உறையிலிட்டு மூடி, அரக்கு முத்திரையும் வைத்து, தனது மெய்க் காப்பாளனிடம் கொடுத்து, ''உடனடியாகக் கொண்டுபோய் எப்படி யாவது கல்யாணி நாச்சியாரிடம் சேர்த்துவிடு!'' எனக் கேட்டுக் கொண்டான்.

மெய்க்காப்பாளன், அந்த மடலுடன் அந்த இடத்தை விட்டு அகன்றதும், வைரமுத்தன் தனது புரவியில் ஏறிப் போர்க்களம் நோக்கித் தட்டி விட்டான். அதற்குள் பாசறைக் கூடாரங்கள் தீப்பற்றி எரியத் தொடங்கி விட்டன. அமைதியாகவே போருக்குப் புறப்பட்ட வைரமுத்தனின் கண் எதிரே அவனது பாசறைக் கூடாரங்கள் எரிவது கண்டு வீராவேசங் கொண்டான்.

பாசறைக் கூடாரங்களில் இருந்து பட்ட மங்கலத்து வீரர்கள் தங்கள் போர்க் கருவிகளைத் தூக்கிக் கொண்டு குருதிவழிப் பொட்டல் நோக்கித் தாவினர். அந்த அலங்கோலத்திலும் வைரமுத்தன், தனது மெய்க் காப்பாளர்களிடம், ''சவப்பெட்டிகள் பத்திரம்! வேறு எங்காவது கொண்டு போய் ஒளித்து வையுங்கள்! தீக்கிரையாக்கி விடாதீர்கள்!'' என அறிவித்துவிட்டு வாளைச் சுழற்றியவாறு களம் புகுந்தான்.

பாசறைக் கூடாரங்கள் வரிசையாக எரிவதைப் பார்தது, வாளுக்குவேலி தனது புரவியில் இருந்தபடியே கலகலவென்ச் சிரித்தான்.

''கோயில் தெருக்குத் தீவைத்த கொடியவர்களே! இதோ உங்கள் கூடாரங்கள் கும்பல் கும்பலாக எரிகின்றன பாரீர்!'' என முழக்கமிட்டான்.

அதற்குள் வைரமுத்தன் படைகள், வாளுக்கு வேலியின் தலைமையில் உள்ள படைகளை நெருங்கி விடவே தீப்பொறி பறக்கும் போர் இருதரப்புப் படைகளுடே ஆரம்பமாயிற்று. இரு நாடுகளுக்கும் உதவியாகப் பல்வேறு கள்ளர் நாடுகளில் இருந்து வந்திருந்த படைகளும் மிக உக்கிரமாகப் போரிட்டன.

உறங்காப்புலியின் மூலம் பட்டமங்கலம் படைக்குக் கிடைத்திருந்த ஆங்கிலேயர்களின் போர்த் தளவாடங்களும் பாகனேரிப் படையினரால் தாக்குப் பிடிக்க முடியாத அளவுக்குப் பயன்படுத்தப் பட்டன.

சிறு சிறு வண்டிகளில் வைத்து இழுத்துக் கொண்டு போய்ப் படைவரிசையின்மீதும், கட்டிடங்கள் மீதும் தாக்குதல் நடத்திச் சீர்குலைக்கும் பீரங்கிகளைப் பட்டமங்கலத்து வீரர்கள் பாகனேரி வீரர்கள் மீது திருப்பினர்.

அந்தப் பீரங்கிகளை இயக்குகிறவர்களைக் கொன்று குவித்துக் கொண்டிருந்தான் கறுத்த ஆதப்பன்.

தனது படைவீரர்கள் ஆதப்பனால் அழிக்கப்படுவது கண்ட வைரமுத்தன், தனது புரவியை ஆதப்பன் பக்கம் செலுத்தி அவனை வளைத்துக் கொண்டு போரிட்டான்.

அதற்குள் ஏழெட்டுப் பீரங்கி வண்டிகள் பாகனேரி மாளிகையை நோக்கி விரைவாகச் செலுத்தப்பட்டன! மாளிகையைத் தரைமட்டமாக்கத்தான் அந்த ஏற்பாடு என்பதைப் புரிந்துகொண்ட வாளுக்குவேலி அந்தப் பீரங்கிப் படையினரைத் தொடர்ந்து விரைந்தான்.

மாளிகைக்குள் கல்யாணியும் சுந்தரியும் இருக்கிறார்களே! அவர்களைக் காப்பாற்ற வேண்டுமே என்றுதான் வாளுக்கு வேலி குதிரையில் பறந்தான்.

மாளிகை வாசலில் இருந்த பீரங்கிகள் வெடித்தன என்றாலும் அதில் பட்டமங்கலத்துப் பீரங்கிப் படை வீரர்கள் ஓரிருவரே மடிந்து வீழ்ந்தனர். பாகனேரிப் பீரங்கிகள் செயலிழந்து விட்டன.

பட்டமங்கலத்தாருக்கு வெள்ளையர் உதவிய பீரங்கிகளில் இருந்து குண்டுகள் கிளம்பின. பாகனேரி மாளிகையின் அகன்று உயர்ந்த சுவர்கள் இடிந்து நொறுங்கி விழுந்தன. பீரங்கிகளின் வாய்கள் மூடவே இல்லை! பாகனேரி மாளிகை தூள் தூளாயிற்று!

அந்தப் புகை மண்டலத்திற்குள் இடிபாடுகளுக்கிடையே வாளுக்கு வேலி குதிரையை ஓட்டிக் கொண்டே ''கல்யாணி! சுந்தரி!'' என்று ஓங்காரக் கூச்சலிட்டுக் கொண்டே இடிந்து பொடியாகிய மாளிகையைச் சுற்றிச் சுற்றி வந்தான்.

எவ்வளவு நேரம் அவர்களுக்காகச் செலவழிக்க முடியும்! எந்த இடிபாட்டுக்குள்ளே தனது தங்கையும் சுந்தராம்பாளும் சிக்குண்டு மடிந்திருப்பார்களோ? அதைத் தேடிக் கண்டுபிடிக்கவா இப்போது நேரம்?

மாளிகையிலிருந்து குதிரையைத் தட்டிவிட்டான்! வாளை ஓங்கிக்கொண்டே குதிரையில் அமர்ந்திருந்தான்! ஒரே வீச்சு; வைரமுத்தன் தலை கீழே உருள வேண்டும்-அந்தத் தலையை எடுத்து வந்து இடிந்து கிடக்கும் பாகனேரி மாளிகை மண்மேட்டில் உருட்டி உருட்டி உதைக்க வேண்டும்!

''கல்யாணி! தங்கைப் பாசத்தின் மீது ஆணை! சுந்தரி! நீ என்னிடமும் நான் உன்னிடமும் கொண்ட அன்பின்

மீது ஆணை! பாகனேரி மாளிகையை நாசமாக்கி உங்களையும் உயிரோடு புதைத்துவிட்ட பட்டமங்கலத் தானைக் கொல்லுவது மட்டுமல்ல; அவன் ஊரையே சாம்பலாக்கிவிட்டுத் திரும்புகிறேன்! உம்! வீரர்களே! பீரங்கிக் குண்டுகளை மலர்ச் செண்டுகளாகக் கருதி முன்னேறிக் கொண்டே இருங்கள்! எத்தனைப் பேர் செத்து விழுந்தாலும் சரி; பின் வாங்கும் பேச்சே இனி இல்லை! பிணங்களை அடுக்குவோம்! அவற்றைப் படிக்கட்டு களாக்கி நடப்போம்! எவ்வளவு நேரம் வெடிக்கும் இந்தப் பீரங்கி? வாருங்கள்.என்னோடு! வைரமுத்தனின் தலையை எடுத்துத் தருகிறேன்...குருதி வழிப் பொட்டலில் அதைப் பந்தாடி மகிழுங்கள்!''

மீசைகள் துடிக்க, தோள்கள் விம்மிட, நரம்புகள் புடைத்திட, கண்கள் கனற் கட்டிகளாய் விளங்கிட, வைரமுத்தன் ஆதப்பனுடன் போரிட்டுக் கொண்டிருக்கும் இடம்நோக்கி விரைந்தான் வாளுக்குவேலி!

''ஆதப்பா! என்னிடம் விடு அவனை! அவன் என் கையால்தான் சாக வேண்டும்!'' என்று குமுறும் எரிமலையாகப் பாய்ந்தான்.

வைரமுத்தனின் வாளும் வாளுக்கு வேலியின் வாளும் மோதிக்கொண்டன. இருவரில் ஒருவர் சாகாமல் அந்த வாட்போர் முடியாது என்கிற அளவுக்குப் பயங்கரமாக ஒருவர் வாளை ஒருவர் தடுத்து ஒருவர் மீதொருவர் மோதினர்!

''எந்தக் கல்யாணிக்கு இழைக்கப்பட்ட கொடுமைக்காகவும் அவமானத்திற்காகவும் இந்தப் போர் மூண்டதோ; அந்தக் கல்யாணியே பாகனேரி மாளிகையில் சமாதியாகி விட்டாள்-என் அன்புக்கரசி சுந்தராம்பாளும் அவளுக்குத் துணையாகச் சென்று விட்டாள்! என் மாளிகை பாகனேரி அம்பலக்காரக்

குடும்பத்தின் பரம்பரை மாளிகை தூசு மேடாகத் தோற்றமளிக்கிறது. இனியும் என்ன? இதோ, நான் சாக வேண்டும்! அல்லது நீ!''

தனது பலம் அனைத்தையும் கையிலே தேக்கி, வாளுக்குவேலி வைரமுத்தனின் தலையைக் குறி பார்த்து வாளை வீசி விட்டான்.

என்ன அற்புதமான குதிரையோ வைரமுத்தனின் குதிரை! அந்த வாள் வீச்சைத் தடுக்கத் தனது முன்னங்கால்கள் இரண்டையும் உயரத் தூக்கி, பின்னங்கால்களைத் தரையில் ஊன்றி நின்றதும் வாளுக்குவேலி வீசிய வாள் குதிரையின் கால்களைத் தான் வெட்டி எறிந்தது!

வைரமுத்தன் தப்பிவிட்டான் என்றாலும் குதிரை கீழே விழுந்துவிட்டது. அது மண்ணில் வீழ்வதற்கு முன்பே அவன் குதித்துவிட்டான். இரு கால்களையும் இழந்த அந்தப் புரவி, குருதி வழிப் பொட்டலில் புரண்டு புரண்டு உயிர்விடும் காட்சியைக் கண்டு வைரமுத்தனின் கண்கள் கொப்பளித்தன.

அந்த நேரம் வாளுக்குவேலிக்கு வாய்ப்பான நேரம். தனது குதிரையில் இருந்தவாறே வாட்போரை நடத்தி வைரமுத்தனைத் தீர்த்துக் கட்டியிருக்கலாம். இருந்தாலும் அவன் வீரனல்லவா! வீரர்க்குரிய இலக்கணத்திலிருந்து இம்மியும் வழுவிடக் கூடா தல்லவா! அங்ஙனம் வழுவுவதாயின் முதல் நாளிரவே எதிரிகளின் பாசறைகளைத் தீயிட்டுக் கருக்கி அழித்திருக்கலாமே!

போர் தொடங்கட்டும் என்று அறிவிக்கப் பட்ட மங்கலத்துப் பிள்ளையாரைக் கவர்ந்திடக் கட்டளை யிட்டான். அந்த அறிவிப்பை அறைகூவலாக ஏற்றுக் கொண்டு பட்டமங்கலம், பாகனேரித் தேருக்குத் தீ

வைத்தது. பட்டமங்கலத்துப் பாசறைக் கூடாரங்களுக்குப் பகலில் தீ மூட்டிக் களித்தது பாகனேரிப் பட்டாளம். ஆனால் பட்டமங்கலப் படையோ பரங்கியர் வழங்கிய பீரங்கிகளால் பாகனேரி அரண்மனையையே பாழாக்கிப் பழி தீர்த்துக் கொண்டது.

எனவே ஒருவரையொருவர் வீழ்த்துவதிலும் பழி வாங்குவதிலும்கூடப் போர்முறை இலக்கணம் தவறாது பார்த்துக் கொண்டதால், வீழ்ந்த குதிரையிலிருந்து வீழ்ந்த வைரமுத்தனின் மீது தனது குதிரையுடன் பாய்ந்திடாமல் வாளுக்குவேலி தன் குதிரையிலிருந்து கீழே குதித்து வைரமுத்தனுடன் வாட் போரைத் தொடர்ந்தான்.

களத்தில் கடுமையாகப் போரிட்டு எதிரிகளைத் திக்குமுக்காடச் செய்து கொண்டிருந்த கறுத்த ஆதப்பனின் காதில் பாகனேரி மாளிகை மண்மேடான செய்தியும் அந்தக் கோர நிகழ்ச்சியில் கல்யாணியும் சுந்தராம்பாளும் பலியாகிவிட்டார்கள் என்ற செய்தியும் விழுந்ததுதான் தாமதம்; ''அய்யோ கல்யாணி!'' என்று அவன் அலறி விட்டான்.

அந்த அலறல் சப்தம் காதில் விழாத தொலைவில், கல்யாணி சுந்தராம்பாளுடன் பில்லாத்தா கோயில் சன்னதியில் பாகனேரி வெற்றிக்காகப் பிரார்த்தனையில் மூழ்கியிருந்தாள். பீரங்கிக் குண்டுகளின் தாக்குதலுக்குப் பாகனேரி அரண்மனை இரையாவதற்குச் சில விநாடிகளுக்கு முன்புதான் அவர்கள் இருவரும் குளித்து முழுகிக் குங்குமத் திலகமிட்டுக் கொண்டு பில்லத்தா கோயிலுக்குப் புறப்பட்டுச் சென்றார்கள்.

அந்தச் சில விநாடிகள் தாமதித்திருப்பார்களானால் வாளுக்குவேலியும், ஆதப்பனும் எண்ணிக் கொண்டிருப் பதைப்போல உயிரோடு கல்லறையாகி விட்டிருப்பார்கள்.

ஆனால் அவர்கள் இருவரும் பீரங்கிக் குண்டுகளுக்குப் பலியாகி விட்டார்கள் என்ற நினைவுடன் தான் பாகனேரிச் சகோதரர்கள் படுகளத்தில் பகைவர்களை எதிர்கொண்டார்கள்.

கல்யாணியும் சுந்தரியும் கரம் குவித்துக் கண்களை மூடிப் பில்லாத்தாவுக்கு நேரே மண்டியிட்டு மௌனமாக நடத்திய அந்தப் பிரார்த்தனைக்குக் குருதி வழிப் பொட்டலில் மோதிடும் படைக்கலன்களின் ஓசை பின்னணியாக இருந்தது.

வாளுக்குவேலி, ஆதப்பன் இருவர் உயிருக்கும் எந்த ஆபத்தும் வரக்கூடாது. பாகனேரி வெற்றி பெற வேண்டும். பட்டமங்கலம் தோல்வியைத் தழுவிட வேண்டும். ஆனால் அந்தத் தோல்வியைத் தனக்குரிய தண்டனையாகப் பெற்றுத் தலைகுனிந்து இருந்திட வைரமுத்தன் உயிரோடு இருக்க வேண்டும்.

இப்படி அமைந்தது அவர்களின் பில்லாத்தா கோயில் பிரார்த்தனை. தாலியிழந்தாலும் தனது நெற்றிக் குங்குமத்தையும், கூந்தற் பூவையும் இழந்திடக் கல்யாணி நினைக்கக் கூடியவளா? அதனால்தான், தான் பிறந்த மண்ணுக்கு வெற்றி கிட்ட வேண்டுமெனக் கோயில் வாசலில் உருகிக் கிடந்தாள்; அதே சமயம் தன் கணவன் ஆயுளுக்கு எந்தக் குறையும் நேரக் கூடாதென்றும் பில்லத்தாவிடம் கெஞ்சித் துவண்டாள்!

சுந்தராம்பாள் பிரார்த்தனை நடனத்தைத் தொடங்கினாள். அவள் கண்கள் ஆலயத்திற்குள்ளிருக்கும் தேவியின் விக்ரகத்திடம் வெற்றிப் பிச்சை கேட்டன! 'பாகனேரிப் படை வீரர்களுக்குப் புதிய வலுவைக் கொடு தாயே!' என்பது போல அவள் அபிநயக் கரங்கள் அர்ச்சனை வேண்டி அசைந்தன!

பட்டமங்கலப் படைகள் முன்னேறுகின்றன... பாகனேரி மாளிகை பாளம் பாளமாகச் சிதறி விட்டது...

இந்தச் செய்தி சுந்தரிக்குச் செந்தீயெனச் சுட்டது... ஆடல் அரங்குகளில் நளினமாக அசைந்த அவள் தளிருடல் செங்கற் சூளையில் இருந்து உயரக் கிளம்பும் நெருப்பின் நாக்குகளைப் போல ஆலயத்து வாசலில் ஆவேசமாக ஆடியது!

பொட்டலிலோ போர் முனையில் பீரங்கிக் குண்டுகள் நூற்றுக் கணக்கான வீரர்களைப் பிளந்து எறிந்தன! தொண்டைக்குழியில் தொத்திக்கொண்ட ஈட்டிகளுடன் வீரர்கள் பலர் சாய்ந்து கொண்டே யிருந்தனர். தனது அபாரத் திறமையினாலும், அஞ்சா நெஞ்சத்தாலும் ஆதப்பன் பகைவர்களின் தலைகளைப் பனங் காய்களைப் போலச் சீவிக் கொண்டிருந்தான். வாளுக்கு வேலியும் வைரமுத்தனும் வாட்களை மோத விடும்போது சிதறிடும் தீப்பொறி மின்னொளியையும் மிஞ்சிக் கொண்டிருந்தது.

பூவிதழ் மென்மையாகத் தென்றலிலே சிலிர்ப்பது போலவும்-புன்னகை அரும்பொன்று பொன்னிற முகத்திலே மலர்வது போலவும்-ஆடக்கற்ற அந்த நடன ராணி, புயல், பூகம்பம், பொங்கிடும் பெருங் கடலெனப் பில்லாத்தாவுக்கு எதிரே ஆடினாள்! ஆடிக் கொண்டேயிருந்தாள்!

அப்போதுதான் வைரமுத்தனின் மடல் தாங்கி வந்த அந்த மெய்க்காப்பாளன் கல்யாணியிடம் ஓடோடி வந்து, ''அம்மணி! இதைப் பட்டமங்கலத்து அம்பலக்காரர் கொடுக்கச் சொன்னார்'' என்று கூறி மடலை அவள் கையில் கொடுத்துவிட்டு அங்கிருந்து வேகமாக மறைந்து விட்டான்.

அவசர அவசரமாகக் கல்யாணி அந்த மடலை உறையிலிருந்து எடுத்துப் படித்தாள். அவள் கைகள் நடுங்கிக் கொண்டிருந்தன.

''அன்பு மனைவி கல்யாணிக்கு! நான் இப்படி அழைக்கிறேனே என்று தொடக்கத்திலேயே கடிதத்தைத் தூக்கி எறிந்துவிடாதே! ஒருவரையொருவர் புரிந்து கொள்ளாமல் சூழ்நிலைகளின் காரணமாகவும் உறங்காப்புலியின் சூழ்ச்சியின் காரணமாகவும் எத்தனையோ தவறுகள் நடந்து விட்டன.

''பழிவாங்கும் எண்ணத்தை விட்டுவிட்டு, நம் வீட்டுப் படியை மிதித்த கல்யாணியைப் பாசத்துடன் நடத்துக என்று எனக்குப் பண்பாடு போதித்த அன்பு அக்காளை என் எதிரிலேயே உறங்காப்புலி கொன்று விட்டான். அவனையும் அக்கணமே தீர்த்துக் கட்டிவிட்டேன்.

''அக்னியூவிடமிருந்து நான் விடுவித்து அழைத்து வந்த ஆதப்பனை அவமானப்படுத்த முயற்சி செய்தது உறங்காப்புலி! அதைத் தடுத்து நிறுத்தச் சென்றவன்தான் நான்! ஆனால் நீ என்னை நம்பவில்லை! அந்த வெறுப்புத் தீயை மேலும் வளர்க்கவோ என்னவோ என்னை வடிவாம்பாள் வீட்டுக்கு அனுப்பத் திட்டம் தீட்டியதும் உறங்காப்புலிதான்!

''சூழ்நிலை என் நெஞ்சையும் நிலைகுலைத்தது! அதன் விளைவு என் வாழ்விலே பெருங் களங்கம்! நெருங்கக் கூடவில்லை வடிவாம்பாளை நான்! ஆனால் நீயோ உன்னை இனி நெருங்கக்கூடாது என்று எனக்கு ஆணை பிறப்பித்து விட்டாய்! அதுவும் சூழ்நிலைதான்!

''பிறந்த வீட்டுக்குப் போ என்று உன்னை இந்தப் பித்தன் அனுப்பினேன்; துணைக்கு ஒரு எத்தனைச்

சேர்த்துவிட்டு! அவன் பாழ்மண்டபத்தில் உன் வாழ்வையே பாழாக்க முனைந்தான் என்பதையும், நான் உனக்குக் கட்டிய தாலியை நாயின் கழுத்தில் கட்டி அனுப்பினான் என்பதையும் என் அக்காள் வீரம்மாள் சொல்லித்தான் தெரிந்து கொண்டேன்.

''ஒரு தங்கைக்கு ஏற்பட்ட இந்தக் கொடுமையை எந்த அண்ணனால்தான் பொறுத்துக் கொள்ள முடியும்? தங்கை சூர்ப்பனகைக்கு இழைக்கப்பட்ட அவமானத்தைத் தாங்க மாட்டாமல்தானே இராவணன் சீறி எழுந்தான். இராமாயணப் போராட்டமே நடைபெற்றது! நீ இந்த மடலைப் படிக்கும்போது நான் போர்க்களத்தில் இருப்பேன். ஒருவேளை வீர மரணம் எய்தியும் இருக்கக் கூடும்.

''கல்யாணி! நான் குருதி வழிப் பொட்டலில் வெற்றியை விரும்பவில்லை-விழுப்புண்ணுடன் கூடிய மரணத்தையே விரும்புகிறேன். வெற்றியை விரும்பாமைக்குக் காரணம் கேட்கிறாயா? நான் வெற்றி பெற்ற பிறகும் என் கல்யாணியின் அன்பைப் பெற முடியாது! ஏனென்றால் கல்யாணியின் அண்ணன் மார்களைக் கொன்றுவிட்டு அல்லது காயப்படுத்திக் கைது செய்து விட்டுத்தானே பட்டமங்கலத்து வெற்றிக் கொடி பறக்க முடியும்? அதன் பிறகு நீ என்னை ஏறெடுத்துப் பார்ப்பாயா?

''எனக்கென்று யாருமில்லை. வளர்த்து ஆளாக்கிய அண்ணன் வல்லத்தரையரை இழந்தேன்; பாவி உறங்காப்புலியின் பகை வளர்க்கும் சதியால்! வாஞ்சையுடன் என்னைப் போற்றிப் பாதுகாத்த சகோதரியை இழந்தேன்; இதய பூர்வமாக நான் காதலித்த ஏந்திழையாள் என் கல்யாணியும் என்னருகே இல்லை! இனி நான் யாருக்காக அல்லது எதற்காக வாழ வேண்டும்?

ஏதோ தவிர்க்க முடியாத போர் ஆரம்பமாகி நடக்கிறது! கடமைக்காகக் களத்தில் நிற்கிறேன், என் வாட்போர் திறமை முழுவதையும் காட்டி உன் அண்ணனுடன் மோதி விட்டு, இறுதியாக அந்த மாவீரன் கையினால் சாவதையே நான் பிறவி எடுத்த பயனாகக் கருதுகிறேன்.

''கல்யாணீ! உன்னிடம் கடைசியாக ஒரு வேண்டுகோள்... நான் களம்பட்டு வீழ்ந்த பிறகு ஒரு சொட்டு நீர் உன் கண்ணில் இருந்து என் நெற்றியில் விழுந்தால் போதும்! அக்காளின் உடல் பத்திரப்படுத்தப் பட்ட சவப்பெட்டி எனது வீரர்களால் பாதுகாக்கப்படுகிறது! எங்கள் உடல்களைப் பட்டமங்கலத்தில் எங்கள் அண்ணன் வல்லத்தரையரின் கல்லறைக்கு அருகாமையில் புதைத்து விடவும் ஏற்பாடு செய்! இதோ-நீ ஏற்றுக் கொள்வதாக இருந்தால்-என் கடைசி முத்தம்!

உன்னை மறவாத,

வைரமுத்தன்.''

கல்யாணியின் கண்ணீரால் கடிதம் நனைந்தது. சுந்தரியிடம் ஓடினாள். தலைவிரி கோலமாக ஆடிக் கொண்டிருந்த சுந்தரிக்கு முன்னால்போய் ''அண்ணீ! ஆட்டத்தை நிறுத்து! நிறுத்து!'' என்று கூச்சல் போட்டவாறு அவளைக் கட்டிப் பிடித்துக் கொண்டாள்.





# 49

கொதிக்கும் கொப்பரை நீரில் கெண்டை மீன்கள் இரண்டு நீந்துவது போல-ஆடிக் காற்று வீசும் போது அகல் விளக்கின் சுடர்கள் இரண்டு ஆடாமல் நகர்வது போல-குருதிவழிப் பொட்டல் போர்க் களத்தில் ''குத்து! வெட்டு! கொல்லு!'' என்ற பயங்கரக் கூச்சலுக் கிடையிலேயும், குண்டுகள் வெடிக்கும் பேரொலிக் கிடையிலேயும், குதிரைகளும், மனிதர்களும் குற்றுயிரும் குலை உயிருமாகக் கிடக்கும் கோரக் காட்சிகளுக் கிடையிலேயும் கல்யாணியும் சுந்தரியும் எதைப் பற்றியும் கவலை கொள்ளாமல் ஓடிக் கொண்டிருந்தார்கள். அவர்கள் பார்வை முழுதும் வாளுக்கு வேலியும் வைரமுத்தனும் வாட்போர் புரியும் இடம் எது என்பதை அறிவதிலேயே ஆர்வம் காட்டியது.

கல்யாணிக்கு எழுதிய மடலில் குறிப்பிட்டபடி தனது கடைசி நேரம் வந்துவிட்டதை வைரமுத்தன் உணர்ந்து கொண்டான். வாளுக்கு வேலியின் வாளின் முன்னால் தனது ஆற்றல் எடுபடாது என்பதைப் புரிந்து கொண்டாலும் தனது போர்த்திறம் அத்தனையும் காட்டிட வேண்டுமென்பதில் அந்த வீரன் மிகுந்த அக்கறையோடு இருந்தான்.

கோடரியை மரத்தின்மீது வீசுவதுபோல, வாளுக்கு வேலி தனது வாளைத் தூக்கி வைரமுத்தனின் வாளில் அடித்தபோது வைரமுத்தனின் கையில் அவனது வாளின்

கைப்பிடி மட்டுமே மிஞ்சி நின்றது. வைரமுத்தன் திகைத்து நின்றான்.

வாளுக்கு வேலி நினைத்திருந்தால் நிராயுத பாணியாக நின்ற அவனை ஒரே வீச்சில் ஒழித்துக் கட்டியிருக்கலாம். ஆயுதமற்ற நிலையில் வைரமுத்தன் வாளுக்குவேலியிடம் சரண் அடைவான் என எதிர்பார்த்தான்.

வைரமுத்தன் வீரச் சாவையல்லவா வேண்டி நிற்கிறான்! சரணடைவானா? மானமிகு வல்லத்தரையனின் இளவலாயிற்றே!

ஆயுதமற்றவனைக் காயப்படுத்தக் கூடாது என்று' தனது கைவாளைத் தூக்கி வைரமுத்தனிடம் எறிந்தான். அவனும் அதை வாங்கிக் கொண்டு தொடர்ந்து போரிடத் தயாரானான்.

இப்போது வாளுக்குவேலியின் கையில் எந்த ஆயுதமும் இல்லை! சுற்றிலும் பார்த்தான். எதுவும் தென்படவில்லை! அப்போதுதான் அவனுக்கு அவன் தொடையில் எதிரிகள் வீசிய வேல் ஒன்று தைத்துக் கொண்டிருப்பது தெரிந்தது! மகிழ்ச்சியுடன் அந்த வேலையே தன் தொடையிலிருந்து பிடுங்கியெடுத்து வைரமுத்தனுடன் பொருதிடப் பாய்ந்தான்.

வாளுக்குவேலியிடம் வேல்! வைரமுத்தனிடம் வாள்! வேல் சுழலும் வேகத்திற்கு அந்த வாள் ஈடு கொடுக்க முடியவில்லை. எவ்வளவு நேரம்தான் போரிடுவது? வைரமுத்தனுக்கே அலுத்துவிட்டது!

வரப்போகிற களச்சாவைச் சற்று முன்னதாகவே வரவேற்றால் என்ன, என்ற உறுதியுடன் வாளுக்கு வேலியின் வேலுக்கு நேராகத் தனது நெஞ்சைக் காட்டிக் கொண்டு, வாளை மேலே ஓங்கினான்.

வேல், வைரமுத்தனின் நெஞ்சில் பாய்வதற்குள்... ''நிறுத்துங்கள்! நிறுத்துங்கள்!'' என்று கூக்குரல் எழுப்பிக் கொண்டு கல்யாணியும் சுந்தரியும் குறுக்கே வந்து நின்றார்கள்.

வீர மறவர்கள்-கள்ளர் குல திலகங்கள்- கடும் போர்ப்புலிகள்-இருவரும் அதிர்ச்சியடைந்து அப்படியே நின்றுவிட்டார்கள்!

''கல்யாணி! சுந்தரி! நீங்கள் உயிரோடு இருக்கிறீர்களா?'' என இருவரையும் தழுவிக் கொண்டான் வாளுக்குவேலி! கல்யாணி தன்னிடமிருந்த வைரமுத்தனின் மடலை வாளுக்கு வேலியிடம் கொடுத்தாள்!

அதற்குள் குருதி வழிப் பொட்டலில் போர் ஆரவாரம் திடுமென நின்று விட்டது! வீரர்கள், வாளுக்குவேலியும் வைரமுத்தனும் இருந்த இடத்தில், குழுமிடலாயினர். தங்கை கல்யாணியும் சுந்தரியும் உயிருடன் இருப்பதை அறிந்து ஆதப்பனும் அந்த இடத்திற்கு ஓடி வந்தான்.

வைரமுத்தனின் கடிதத்தில் ஆழ்ந்திருந்த வாளுக்குவேலி, முழுவதையும் படித்து முடித்துவிட்டு அதனை ஆதப்பனிடம் கொடுத்தான். வாளுக்குவேலியின் விழிகள் பொலபொலவென நீரை உதிர்த்தன! நீர்த் திரையிட்ட கண்களோடு வைரமுத்தனைப் பார்த்தான்! அவனும் வாளுக்கு வேலியையே பார்த்துக் கொண்டு நின்றான்.

''கல்யாணீ! நீ தெய்வங்களின் மீது சத்தியம் செய்திருக்கிறாய்!...அதற்காகக் கவலைப்படாதே! நீயே ஒரு தெய்வம் என்பதால் மற்றத் தெய்வங்கள் உன்னை மன்னித்துவிடும்!...உன் அத்தான் வைரமுத்தனை ஏற்றுக் கொள்!'' என்றான் வாளுக்குவேலி!

அதற்குள் வைரமுத்தன் வாளுக்குவேலியிடம் வாழ்த்துப் பெறுவதற்காக அவன் முன்னே குனிந்தான்.

''ஓ! அதெல்லாம் கூடாது! யுத்த களத்தில் ஒருவர் முன் ஒருவர் தலை தாழ்த்தினாலே அதற்கு அர்த்தமே வேறாகி விடும்'' என்று வாளுக்குவேலி கூறிக் கொண்டே வைரமுத்தனைத் தழுவிக் கொண்டு, அவன் குனிந்து வாழ்த்துப் பெற முயன்றதைத் தடுத்து விட்டான்.

''போர்க் களத்தில் ஆண்கள்தான் ஒருவரையொருவர் வணங்கக் கூடாது! சரணாகதி என்றாகி விடும்! பெண்கள் ஆண்களை வணங்கலாம் அல்லவா? கல்யாணி! நீ உன்னுடையவர் காலிலே விழு! நான் என்னுடையவர் காலிலே விழுகிறேன்!'' என்றாள், கண்ணீரைத் துடைத்துக் கொண்டே சுந்தராம்பாள்.

இருவரும் அவரவர்க்குரிய ஆடவராம் வைரமுத்தன், வாளுக்குவேலி இருவரின் கால்களில் விழுந்து வணங்கினர்.

''தம்பி, ஆதப்பா! உன்னிடம் கொடுத்தேனே, கல்யாணியின் தாலி! பத்திரமாக இருக்கிறதா? கொடு இங்கே!'' என்று கையை நீட்டினான் வாளுக்குவேலி!

''இதோ இருக்கிறது அண்ணா!'' என்று ஆதப்பன் தன்னிடம் பாதுகாப்பாக இருந்த கல்யாணி நாச்சியாரின் தாலியை வாளுக்குவேலியின் கையில் கொடுத்தான்.

அப்போது மேகநாதன் மிக வேகமாக ஒரு குதிரையில் வந்து இறங்கி, மூச்சுவிட முடியாமல் திணறி ஒரு ஓலையை வாளுக்கு வேலியிடம் அளித்தான்.

''என்ன மேகநாதா? என்ன விசேஷம்?''

''மருது பாண்டியர்கள் ஆங்கிலேயர் கையில் சிக்கிவிட்டார்கள்! காளையார் கோயில் வெள்ளைக்காரர் வசமாகிவிட்டது! இதோ இந்த ஓலையில் எல்லா விபரங்களையும் வெள்ளை அய்யர் எழுதி அனுப்பியிருக்கிறார். ஊமைத்துரை, கோபால நாயக்கர், மற்றும் விடுதலைப் படையைச் சேர்ந்தவர்கள்

அனைவரும் கைது! இன்று பெரிய மருதுவையும் சின்ன மருதுவையும் திருப்பத்தூர் கோட்டையிலே தூக்கு மாட்டிக் கொன்று தண்டனையை நிறைவேற்றப் போகிறார்கள்!''

இதைச் சொல்லிவிட்டு மேகநாதன் ஓலமிட்டு அழுதான்! ''ஏ, வீரர் பூமியே! நீ வீழ்ந்தனையோ அடிமைப் புழுதியில்?'' எனக் கதறினான்.

வாளுக்குவேலி, ஏதோ ஒரு புதிய தெம்புடனும் நம்பிக்கையுடனும் கம்பீரமாகப் பேசினான்!

''முடியாது! மருது பாண்டியர்களைத் தூக்கிலிட அனுமதிக்க முடியாது! கள்ளர் நாட்டுப் படைகள் மருது சகோதரர்களுக்குக் கடைசி நேரத்தில் துணை நிற்காமல் நமது பகைதீர்க்க இங்கு வந்து விட்டதால் அல்லவா ஆங்கிலேயர்களின் கை ஓங்கிவிட்டது... இப்போதும் ஒன்றும் ஆகிவிடவில்லை!

''வைரமுத்தா! கறுத்த ஆதப்பா! மேகநாதா! பாகனேரி பட்டமங்கலத்துப் படைகள் என் தலைமையில் அணி வகுக்கட்டும்! திருப்பத்தூர் கோட்டை நோக்கிக் கிளம்பிடுவீர் இப்போதே! பெரிய மருது, சின்ன மருது இருவரையும் தூக்குக் கயிற்றில் இருந்து விடுவிப்போம்!

நாம் போகும் வழியெல்லாம் உள்ள ஊர்களில் இருந்து வீரர்களைத் திரட்டிச் செல்வோம்! இதோ இங்கே குருதி வழிப் பொட்டலில் இருப்போர் அனைவரும் என்னைப் பின் தொடருங்கள்!

''ஆங்காங்குள்ள போர்ப் பயிற்சி மிக்க வீரர்கள் மட்டுமல்ல; எக்குலத்தினராயினும் அனைவரும் தமிழ்க் குலம்-தலை தாழாக் குலம்-தன்மான மிக்க குலம் என்ற உணர்வோடு புறப்படட்டும்! தீரமிக்க தமிழ்க் குடிமக்களின் முற்றுகை கண்டு திருப்பத்தூரில், வெள்ளையர் திகைக்கட்டும்! அக்னியூ துரையின்

ஆணவம் அடங்கட்டும்! விடுவிப்போம் பெரிய மருதுவையும்-சின்ன மருதுவையும்; வாரீர்! வாரீர்!''

வாளுக்கு வேலி புரவியில் ஏறி அமர்ந்தான்... ''நான்தான் முன்னால் செல்வேன்! எனக்குப் பின்னால் ஒவ்வொரு அணியாக நமது படைகள் வர வேண்டும்'' என ஆணையிட்டுப் புரவியைத் தட்டி விட்டான்.

வைரமுத்தன், ஆதப்பன், மேகநாதன் மற்றுமுள்ள படைத் தளபதிகள் வாளுக்குவேலிக்குப் பின்னால் ஐம்பது அடி இடைவெளி விட்டுப் படைகளை அணிவகுத்துப் புறப்பட்டார்கள்.

சுந்தரியும், கல்யாணியும் யாரிடமும் அனுமதி பெறாமலே பாகனேரிப் பெட்டி வண்டியில் ஏறி அந்தப் படை வரிசையினைத் தொடர்ந்து சென்று கொண்டிருந்தார்கள்.

எல்லோருடைய நினைவும் திருப்பத்தூர்க் கோட்டை, பெரியமருது, சின்ன மருது, தூக்குத் தண்டனை-இவற்றைச் சுற்றியே அலைந்து கொண்டிருந்தது!

படைவரிசை பாகனேரி எல்லை கடந்து, திருப்பத்தூரை நோக்கிப் போகிற வீரமிக்க காட்சியே காட்சி!

அதோ வந்துவிட்டது ''சுத்தப்பட்டு'' என்னும் இடம்!

அய்யோ? அந்த இடத்தில்தான் வைரமுத்தனைக் கொல்வதற்கு உறங்காப்புலி சதி செய்து படுகுழி வெட்டி வைத்திருக்கிறான்.

அங்கே ஒரு குழி இருப்பது யாருக்கும் தெரியாமல் இலைகள் பரப்பிவிடப்பட்டு அதன் மீது மண்பத்தை களும் வைத்து மூடப்பட்டிருக்கிறது.

படைக்குத் தலைமையேற்றுள்ள வாளுக்குவேலி அந்தக் குழியிருப்பது தெரியாமலேயே படைகளுக்கு முன்பு ஐம்பது அடி தொலைவில் சென்று கொண்டிருக்கிறான்.

கத்தப்பட்டில் தனது கணவன் செய்துள்ள சதி வேலையை வைரமுத்தனிடம் கூறுவதற்கு முன்புதான், உறங்காப்புலி வீரம்மாளைக் கொன்றுவிட்டானே!

கத்தப்பட்டுப் பயங்கரப் படுகுழிக்கு அருகே செல்லும் போதுதான், குருதி வழிப் பொட்டலில் ஆதப்பன் தன்னிடம் கொடுத்த கல்யாணியின் தாலி, தனது கையில் இருப்பதே வாளுக்குவேலி ஞாபகத்திற்கு வருகிறது. கையைப் பிரித்து அதைப் பார்த்துக் கொள்கிறான். கல்யாணி வாழ்வில் ஒரு மறுமலர்ச்சி ஏற்படப் போவதை எண்ணி மகிழ்கிறான்.

தொடர்ந்து வரும் நீண்ட படை வரிசைக்கு முன்னால் அவன் குதிரையில் தலைமை வகித்துச் சென்றிடும் கம்பீரமே தனிதான்!

பின்னால் திரும்பினான்! ''உம்! வேகமாக வாருங்கள்! விரைவில் திருப்பத்தூர் சென்றடைந்தால்தான் மருது சகோதரர்களை மரணப்படுகுழியில் இருந்து மீட்க முடியும்! உம்! விரைவாக!'' என்று முழக்கினான்.

அம்மவோ! அந்தப் படுகுழியில் குதிரையோடு விழுந்தான்! அந்தத் திடீர்ப் பயங்கரத்தைக் கண்ட படை நிலை குலைந்து ஓடிவந்தது! அதற்குள் அந்தக் குழியை மண் மூடிக்கொண்டது!

படை வீரர்களை விலக்கிக்கொண்டு ஆதப்பன், ''அண்ணா! அண்ணா!'' என்று கத்திக் கொண்டு ஓடி வந்தான். செய்தியறிந்து கல்யாணியும் சுந்தரியும் கதறிக்கொண்டு ஓடி வந்தனர். வைரமுத்தன் இரு கைகளாலும் முகத்தில் அறைந்துகொண்டு அழுதான். மேகநாதன் மயக்கமுற்று விழுந்தான்.

அந்தப் படுகுழியின் மீது வாளுக்குவேலியின் கை மட்டும் சிறிது நீண்டிருந்தது. அந்தக் கையில் வைரமுத்தன் கல்யாணிக்குக் கட்டிய தாலி-ஆம்; மீண்டும் கட்ட வேண்டிய தாலி இருந்தது!...

அத்தனைப் படைவீரர்களும் ஓரிரு நொடியில் அந்தக் குழியைத் தோண்டி மண்ணை அகற்றி வாளுக்குவேலியை வெளியே கொண்டு வந்தனர்.

அந்தத் தென்பாண்டிச் சிங்கம் கத்தப்பட்டுப் படுகுழியில் இருந்து சவமாக வெளி வந்தான்!

இன்றைக்கும் கத்தப்பட்டில் சிலையாக நின்று கொண்டிருக்கிறான்.

- முற்றும் -

